# ஸ்ரீ சைதன்ய மகாபிரபு





ஸ்ரீ கௌடியாமடம், சென்னை-1

# ஸ்ரீசைதன்ய மகாபிரபு

ஆசிரியர் :
டாக்டர் சம்பிதானந்த தாஸ், பக்தி சாஸ்திரி
எம். ஏ ; பி. எச். டி. (லண்டன்), பார்-அட்-லா

சென்னைப் பிரதம நீதிபதி
டாக்டர் பி. வி. ராஜமன்னார்
முன்னுரையுடன்

தமிழாக்கம் :
கி. தாமோதரன்

வெளியீடு :
ஸ்ரீகௌடிய மடம்
சென்னை-14.






என் குருதேவர்

பிரபுபாத

ஸ்ரீமத் பக்தி சித்தாந்த சரஸ்வதி கோஸ்வாமி டாகுரா

அவர்களின்

புனித நினைவுக்குச் சமர்ப்பணம்

—சம்பிதானந்தா

## ஆங்கிலப் புத்தகத்தின்

# முன்னுரை

ஹிந்து தத்துவ சாஸ்திர உலகத்திலும் சமயச் சிந்தனையிலும் நடைமுறையிலும் வைஷ்ணவம் மிக முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கிறது. பரம ஆசாரியரான ஸ்ரீசங்கரர் அருளிய அத்வைதம் தற்போது உலகம் அனைத்தும் அறிந்ததாக விளங்குகிறது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக, ஹிந்து தத்துவ சாஸ்திரம் முழுவதும் அது விவரித்திருப்பதாகப் பொதுப்படையான ஓர் அபிப்பிராயம் நிலவுகிறது. ஹிந்து தத்துவ சாஸ்திரங்களிலுள்ள மற்ற முறைகளைப் பற்றி ஆராய்ந்தால்தான், உலகத்தின் தத்துவ சிந்தனைகளுக்கும் மதக் கோட்பாடுகளுக்கும் இந்தியா அளித்துள்ள மகத்தான கொடையை ஒருவர் முழுவதிலும் உணர முடியும்.

தென் இந்தியாவில் உயர்வடைந்த ஸ்ரீராமானுஜர் விசிஷ்டாத்வைதத்தை வளர்த்தார். இதுவே தென் இந்திய வைஷ்ணவ நெறி என்று வழங்கப்படுகிறது. உண்மையில் ஸ்ரீராமானுஜருக்கு முன் தோன்றிய ஆழ்வார்களுக்கே பாத்திரமாகும். ஆழ்வார்களின் பாராயணப் பாடல்களில் தாத்பரித்துள்ள பக்தியும் பல பிரத்தியேக விசேஷ அம்சங்கள் இருந்த போதிலும் வங்காள வைஷ்ணவமும் நெருங்கிய சம்பந்தம் உள்ளவை. வங்காள வைஷ்ணவத்தில் ஸ்ரீசைதன்ய மகா பிரபு ஐயமற மிக உயர்ந்த ஸ்தானம் வகிக்கிறார்.

15–ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், உண்மையான சமயநெறி மிகவும் தாழ்வுற்றிருந்த காலத்தில், வங்காளத்தில் கல்வியின் உறைவிடமாகப் புகழுடன் விளங்கிய நவத்வீபத்தில் ஸ்ரீசைதன்யர் தோன்றினார். பண்டிதராகவும் பேராசிரியராகவும் அவர் தம் வாழ்க்கையைத் தொடங்கினார். வைஷ்ணவப் பெரியாரான ஈசுவர பூரி என்பவரால் பக்தி மார்க்க தீக்ஷைப் பெற்ற பின்னரே ஸ்ரீசைதன்யருடைய வாழ்க்கையின் முக்கிய பகுதி தொடங்கியது. அன்றிலிருந்து, அவர் வாழ்க்கை சமய உணர்ச்சியும் பக்திப் பரவச நிலையும் நிறைந்த

தாகியது. இதைப் போன்ற நிலையை உலகத்தின் வேறு எந்த மத வரலாற்றிலும் காண்பது மிகவும் அரிது. உள்ளத்தைக் கவரும் ஸ்ரீசைதன்யருடைய வாழ்க்கையை, அவர் காலத்திலேயே தோன்றிய கிருஷ்ணதாச கவிராஜரின் 'ஸ்ரீசைதன்ய சரித்திராம்ருதம்' போன்ற சரித்திர நூல்களிலே காணலாம். இந்த வரலாற்று நூல்கள் யாவும் அநேகமாக வங்காள மொழியிலேயே இருப்பதால் ஸ்ரீசைதன்யரின் வாழ்க்கையையும் சாதனைகளையும் பற்றி வங்காளத்துக்கு வெளியே உள்ளவர்களுக்குப் பிரபலமாகத் தெரிந்து கொள்ள முடியாமற் போய்விட்டது. ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் வாழ்க்கையைக் குறித்து ஆங்கிலத்தில் எழுதியுள்ள இந்த நூலினுல் டாக்டர் சம்பிதானந்ததாஸ், சமயத்தில் ஆர்வம் உள்ள அன்பர்கள் அனைவருக்கும் பெரும்பணி செய்திருக்கிருர். ஸ்ரீசைதன்யரின் வாழ்க்கையில் நிகழ்ந்த முக்கியமான சம்பவங்களையோ அவருடைய சிறந்த இயல்புகளையோ விட்டு விடாமல் விரிவாகவும் அதே சமயத்தில் விஷயங்களைத் திணிக்காமலும் எளிய நடையில் மனத்தைக் கவரும் வகையில் இந்த நூலை ஆசிரியர் எழுதியிருக்கிருர். ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் வைஷ்ணவ கோட்பாடு, ஸ்ரீசைதன்யர் மேற்கொண்ட பக்திநெறி—அவருடைய அநுபூதிநிலை ஆகியவற்றை எடுத்துச் சொல்லும் இரண்டு அத்தியாயங்களை நூலுடன் இணைத்திருப்பதாலும் இந்த நூலின் பெருமை மேலும் உயர்ந்துள்ளது.

வங்காள வைஷ்ணவத்துக்கே உண்மையில் அடிப்படையான பக்திரஸம், சில சிறப்பான தனி அம்சங்களைக்கொண் டிருக்கிறது. ஹிந்து சந்நியாசிகளின் கொள்கைகளுக்கு இது முற்றும் மாறுபட்டது. அத்தகையவர்கள் பக்தியை ஒரு ரஸமாகவே கொள்வதில்லை.

லௌகிகமான மற்ற ரஸங்களைவிட, பக்தியே மிகவும் உயர்ந்த ரஸம் என்று 'உஜ்வல நீலமணி' என்னும் அருமையான நூலில் ஸ்ரீரூப கோஸ்வாமியும், 'பகவத் பக்தி ரசாயனம்' என்னும் நூலில் ஸ்ரீமதுசூதன சரஸ்வதியும் வெளியிட்டிருக்கிருர்கள். தெய்விகக் காதலின் மிக உயர்ந்த நிலையான மகாபாவ நிலைவரையில் பல படிகளையும் டாக்டர் தாஸ் தம் நூலில் குறிப்பிட்டிருக்கிருர். பகவானை அடையும் நெறியில் செல்லும் பக்தர்கள் பெறும் பல மன நிலைகளை

யும் ஐந்து 'ரதி'களையும்—ஸ்ரீசைதன்யரின் தத்துவத்தின் முக்கிய மான கருத்துக்கள்—ஆசிரியர் சுருக்கமாகக் கூறியிருக்கிறார்.

ஆசிரியரின் அறிவு புலப்படும் சுவை நிறைந்த இந்தப் புத்தகத்துக்குச் சுருக்கமான முன்னுரை எழுதும்படி டாக்டர் தாஸ் அவர்களைப் போன்ற அறிஞர் என்னைக் கேட்டுக்கொண்டதை நான் பெருமையாகவே பாராட்டுகிறேன். ஜாதி வகுப்பு பேதமற்ற சமூகத்தை நிறுவ வேண்டும் என்று இப்போது எல்லோரும் கனவு கண்டுகொண் டிருக்கும் தருணம் இது. ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் வாழ்க்கைக்கும் உபதேசங்களுக்கும் ஏற்ப வாழும் உண்மையான வைஷ்ணவனுக்கு ஜாதி வகுப்பு பேதம் கிடையாது. இத்தகைய வேளையில் இந்த நூல் வெளிவருவது மிகவும் பொருத்தமானதாகும். இறைவனை வழிபடும் பக்தர்களுக்கும் மதத்தில் அன்பு உள்ளவர் களுக்கும் இந்தப் புத்தகத்தைச் சிபாரிசு செய்கிறேன்.

ஏப்ரல் 7, 1958.<br>
சென்னை

பிரதம நீதிபதி, சென்னை ஹைக்கோர்ட்.

**பி. வி. ராஜமன்னார்**

## முகவுரை

நான் லண்டனில் 1934-35-ஆம் ஆண்டில் இருக்கும் போது ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதினேன். லண்டனில் உள்ள 'இந்தியா ஆபீஸ் லைப்ரெரி, பிரிட்டிஷ் ம்யூசியம் லைப்ரெரி' என்னும் இரண்டு பிரசித்திபெற்ற நூலகங்களில் இருந்த புத்தகங்களைப் படித்து விஷயங்களைத் தொகுக்கச் சந்தர்ப்பம் கிடைத்தது.

ஆங்கிலம் தெரிந்த அன்பர்களுக்கு, ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் வாழ்க்கையைக் குறித்து ஒரு நூல் எழுத ஸ்ரீ குருதேவர் எனக்குப் பெரிதும் தூண்டுகோலாக இருந்தார்.

பிரிட்டிஷ் ம்யூசியத்தின் ஓரியண்டல் பகுதியின் பொறுப்பாள ராக இருந்த டாக்டர் எல். டி. பார்னெட், எம். ஏ., டிலிட் என்பவரைக் கலந்து ஆலோசித்து பயனுள்ள அவருடைய யோசனை களையும் இந்த நூல் எழுதும்போது பெற்றுக் கொண்டேன்.

கிருஷ்ணதாச கவிராஜரின் "ஸ்ரீசைதன்ய சரித்திராம்ருதம்", பிருந்தாவன தாச டாகுராவின், "ஸ்ரீசைதன்ய பாகவதம்", முராரி குப்தர் சம்ஸ்கிருதத்தில் எழுதியுள்ள "ஸ்ரீசைதன்ய சரித மகா காவியம்", கவி கர்ணபுரா எழுதிய, "சைதன்ய சரித மகாகாவியம்" என்னும் சம்ஸ்கிருத நூல், இன்னும் ஸ்ரீசைதன்யரின் காலத்தி லேயே தோன்றிய மற்ற வரலாற்று நூல்களையுமே ஆதாரமாகக் கொண்டேன். இந்தப் புராதன வரலாற்று நூல்களில் சொல்லி யிருக்கும் படியே ஸ்ரீசைதன்ய மகா பிரபுவின் வாழ்க்கையை இந்தப் புத்தகத்திலும் சித்தரிக்க முயன்றிருக்கிறேன்.

இந்தப் புத்தகத்தை இவ்வளவு வருஷங்களாக ஏன் பிரசுரம் செய்யாமல் இருந்தேன் என்று வாசகர்கள் கேட்கலாம். இந்தப் புத்தகத்தை எழுத வேண்டுமென்று என்னை இடைவிடாமல் தூண்டி

வந்த என் குருநாதர், நான் லண்டனில் இருந்தபோதே, 1937-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி காலமானர். எனவே, யாருடைய சந்தோஷத்துக்காக இந்தப் புத்தகத்தை எழுதினேனே அவர் மறைந்து போனதே இந்தப் புத்தகம் பிரசுரமாவதற்கு இவ் வளவு தாமதமானதற்குக் காரணம். என் குருநாதரின் மறைவினல் பல ஆண்டுகள் என் வாழ்க்கையில் மகிழ்ச்சியை இழந்திருந்தேன். மற்றும் என்னுடைய வக்கீல் தொழில் வேறு என் நேரம் முழுவதை யும் கவர்ந்திருந்தது.

ஸ்ரீசைதன்ய மகாபிரபு தரிசித்த ஆலயங்களையும் மூர்த்தி களையும் கண்டு சேவித்துச் செல்லலாம் என்ற எண்ணத்துடன், சமீபத்தில் அக்டோபர் மாதம் நான் தென்னிந்தியாவுக்கு யாத்திரை யாக வந்திருந்தேன். அப்பொழுது ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் சரித்திரம் ஆங்கிலத்தில் வெளிவர வேண்டும் என்று பலரும் விரும்பு வதை அறிந்தேன். எனவே, அடுத்த டோல் பௌர்ணமி அன்று ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் வாழ்க்கையைக் குறித்து நான் எழுதிய ஆங்கில நூலை வெளியிடலாம் என்று தீர்மானித்தேன். அந்தப் பௌர்ணமியன்றே, ஸ்ரீசைதன்யர் தோன்றிய 471 வது ஜன்மதின மாகவும் தற்செயலாக அமைந்திருந்தது.

இந்த நூலை விரைவில் வெளியிடுவதற்கு, ஸ்ரீசைதன்ய மடத் தின் தலைவரும், ஆசாரியருமான, திரிதண்டிஸ்வாமி ஸ்ரீபாத பக்தி விலாச தீர்த்த மகராஜ் அவர்கள் எனக்கு மிகவும் ஊக்கம் தந்தார். அவருடைய இடைவிடாத தூண்டுதலால்தான் இந்தப் புத்தகம் வெளியாகிறது. சென்னை ஸ்ரீகௌடிய மடத்தின் ஸ்ரீமான் நந்துலால் பிரம்மச்சாரி அவர்களும் அவருடைய மற்ற துணைவர்களும் இந்த நூலை வெளியிடும் மகத்தான பொறுப்பை அன்புடன் ஏற்றுக் கொண்டார்கள்.

இந்த எளிய நூலுக்கு, அருமையான முன்னுரையை அன்பு கூர்ந்து தந்து உதவிய சென்னை உயர்நீதிபதி டாக்டர் பி. வி. ராஜ மன்னர் அவர்களுக்கு நான் மிகவும் கடமைப் பட்டவனவேன். என்னுடைய தென்னிந்தியச் சுற்றுப் பிரயாணத்தின்போது, 1957 அக்டோபர் 20-ஆம் தேதி அன்று அவரைச் சந்தித்துப் பேசினேன்.

ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் பக்தி உணர்ச்சியைக் குறித்து அவர் மேன்மையான மதிப்பு வைத்திருப்பதைக் கண்டு மனம் மகிழ்ந்தேன். அப்பொழுதே இந்த நூலுக்கு ஒரு முகவுரை எழுதி உதவும்படி அவரிடம் வேண்டினேன். ஆழ்ந்த அறிவு நிரம்பப்பெற்ற உயர் நீதிபதி அவர்கள், உடனே என் வேண்டுகோளை நிறைவேற்றினர்.

என்னைப் பொறுத்த வரையில், உலகத்தின் சமய வரலாற்றிலேயே, ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் வாழ்க்கைத் தனிச் சிறப்புடையது என்றே எண்ணுகிறேன். அவரைப் பகவானுகவே வைஷ்ணவர்கள் எண்ணிக் கொண்டாடுகிருர்கள். மற்றவர்கள் அவரை மதச் சீர்திருத்த வாதியாகக் கருதுகிருர்கள். பக்தி கோட்பாடு இன்று வளர்ச்சியடைந்து பூரணத் தன்மையை அடைந்திருப்பதற்கு ஸ்ரீசைதன்ய மகாபிரபு செய்துள்ள பணி மிக உயர்ந்தது என்பதை எவரும் மறுக்க முடியாது என்று துணிந்து சொல்வேன். தெய்வத்திடம் பக்தி செலுத்துவது சம்பந்தமாக அவர் சொன்னதற்கு மேலே வேறு யாராலும் எதையும் சொல்லவும் முடியாது.

ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் வாழ்க்கையை மிக விரிவாக எழுத வேண்டுமென்று நான் முயற்சி செய்யவில்லை. எல்லோரும் அறிந்து கொள்ளத்தக்க முறையில் சுருக்கமாக ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் வாழ்க்கையைத் தரவேண்டும் என்பதே என் ஒரே நோக்கம். ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் எழுதுவதில் எனக்கு உள்ள குறைகளையும் அறியாமையையும் நான் அறிவேன். வாசகர்கள் என்னுடைய குற்றங்குறைகளைப் பெருந்தன்மையுடன் புறக்கணித்து, இந்த நூலில் உள்ள நல்லனவற்றை மட்டும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். பிரபுவின் வாழ்க்கையையும் உபதேசத்தையும் படித்து வாசகர்கள் பயன் அடைவார்களானுல், இந்த நூல் எழுதிய முழுப்பயனையும் பெற்றவனுவேன்.

சம்பிதானந்த தாஸ்

ஸ்ரீ பால்குனி பௌர்ணமி,
471, சைதன்ய சகம்,
2, ராய் தெரு, கல்கத்தா.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

இந்த அருமையான நூலை, மொழி பெயர்க்க வாய்ப்பு அளித்த ஸ்ரீகௌடிய மடத்துச் செயலாளருக்கு நன்றி. இந்த நூலை மொழி பெயர்க்கும்போது எனக்கு உதவி செய்த அன்பர்களுக்கு-முக்கிய மாக-கையெழுத்துப் பிரதியை நன்கு சோதித்து, அவ்வப்போது வேண்டிய யோசனைகளைத் தெரிவித்ததுடன் திருத்தங்களையும் செய்து உதவிய ஸ்ரீ வி. டி. ராமஸ்வாமி அவர்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

—தா.

# ஸ்ரீசைதன்ய மகாபிரபு

## தொடக்க உரை

## ஸ்ரீசைதன்யரின் முன்னோர்

ஸ்ரீசைதன்யரின் சிற்றப்பாவின் புதல்வரும் சிஷ்யருமான பிரத்யுன மிஸ்ரர், 'ஸ்ரீகிருஷ்ண சைதன்யோதயாவளி' என்னும் பெயரில் ஸ்ரீசைதன்யரைக் குறித்து எழுதிய வரலாற்று நூலில், தங்களுடைய முன்னோர்களைப்பற்றிய மிகவும் நம்பகமான தகவல்களைத் தந்திருக்கிறார். மேற்கு இந்தியப் பிரதேசத்திலிருந்து மதுகர மிஸ்ரர் என்பவர், சில்ஹெட் ஜில்லாவில் வடகங்கா என்னும் இடத்தில் குடியேறினர். அதே ஜில்லாவில் காளிங்க மலைக்கு அருகே ஓடும் இக்ஷு என்னும் நதியின் கிழக்குக் கரையில் உள்ள தெற்கு டாக்கா அல்லது குப்த-பிருந்தாவனம் என்னும் இடத்தில் மதுகர மிஸ்ரரின் குமாரர்களில் ஒருவரான உபேந்திர மிஸ்ரர் வாழ்ந்து வந்தார். அவருடைய புதல்வரே ஜகந்நாத மிஸ்ரர். வியாகரணம் முதலியவைகளைக் கற்று, சம்ஸ்கிருதப் புலமை அடைந்து, நவத்வீபத்துக்கு வந்து நீலாம்வர சக்ரவர்த்தியின் புதல்வி சசி தேவியை அவர் மணம் செய்து கொண்டார்.

"சில்ஹெட்டைச் சேர்ந்த உபேந்திர மிஸ்ரர் சிறந்த அறிவாளியான வைஷ்ணவர்; செல்வர்; நல்ல குணங்கள் யாவும் பொருந்தியவர். அவருக்கு ஞானமுள்ள, கம்சாரி, பரமானந்தர், பத்மநாபர், சர்வேசுவரர், ஜகந்நாதர், ஜனார்த்தனர், திரைலோக்ய நாதர் என்னும் ஏழு குமாரர்கள் பிறந்தனர். கங்கைக் கரையில் வசிக்கவேண்டும் என்ற விருப்பத்தால், நாதியா (நவத்வீபம்) வுக்கு ஜகந்நாதர் வந்தார்" என்று 'சைதன்ய சரிதாம்ருத' என்னும் நூலில் கிருஷ்ண தாச கவிராஜர் எழுதுகிறார். உபேந்திரருக்கு ஏழு குமாரர்கள் என்றே கிருஷ்ணதாசரும் பிரத்யும்ன மிச்ரரும் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் பிரத்யும்ன மிச்ரர், உபேந்திரருக்கு ஜகந்நாதர் மூன்றாவதாகப் பிறந்தார் என்றும் குறிப்பிட்டிருக்கிறார். கிருஷ்ண தாசர் எழுதியுள்ளதை விட மிஸ்ரரின் தகவலையே நாம் ஏற்றுக் கொள்ளலாம். ஏனெனில் தம்முடைய தந்தையையும். பெரியப்பாவையும் அவர் வரிசை மாற்றி எழுதியிருக்கமாட்டார். கவிகர்ண புரா என்னும் ஆசிரியரும் தம்முடைய 'கௌர குணோதேச தீபிகா' என்னும் நூலில் உபேந்திர மிஸ்ரரை, ஸ்ரீசைதன்யரின் பாட்டனாராகவே குறிப்பிடுகிறார்.

## வம்சாவளி

மதுகர மிஸ்ரர்

உபேந்திரர்




விசுவரூபர்
சந்நியாசி—சங்கராரண்யர்

ஸ்ரீநிமாய் என்னும் ஸ்ரீகௌரங்கர்
சந்நியாசி—ஸ்ரீகிருஷ்ணசைதன்யர்

பழைய நாதியாவுக்கு அருகில் இருந்த பேல்புகுரில் வசித்து வந்த, நீலாம்வர சக்ரவர்த்தி, ஸ்ரீசைதன்யரின் தாய்வழிப் பாட்டனார். நித்தியானந்ததாசர் எழுதிய 'பிரேம விலாசம்' (கி. பி. 1700) என்னும் நூலில் உள்ளபடி, நீலாம்வர சக்ரவர்த்திக்கு யோகேசுவர பண்டிதர், ரத்னகர்பர் என்று இரண்டு குமாரர்களும் சசிதேவி (ஸ்ரீசைதன்யரின் அன்னை) பகவதி என்னும் இரண்டு குமாரிகளும் இருந்தனர். நீலாம்வர சக்ரவர்த்தியின் இரண்டாவது பெண்ணின் பெயர், பகவதி என்பது. கவி கர்ணபுராவின் 'சைதன்ய சந்திரோதயம்' என்னும் நாடகத்தின் நான்காவது அங்கத்திலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது.

நீலாம்வர சக்ரவர்த்தியின் சகோதரரின் குமாரர் ஜகந்நாதர் என்பவர், கதாதர பண்டிதரின் சீடராகி ஸ்ரீசைதன்யரின் நெறியைப் பின்பற்றினார். பூரியில் உள்ள தோதா கோபிநாதர் ஆலயத்தின் பிரதம நிர்வாகியாக இருந்த அவர் வைஷ்ணவ சமூகம் முழுவதிலும் மாமு கோஸ்வாமி (ஸ்ரீசைதன்யரின் மாமா) என்றே பிரபலமானார். நீலாம்வர சக்ரவர்த்தியின் சந்ததியார், கிழக்குப் பாகிஸ்தானில் உள்ள பரீதாபுர் ஜில்லாவில் இருக்கும் மகடோபா என்னும் இடத்தில் வசிக்கிறார்கள்.

## PUBLISHER'S NOTE

With the highest blessings of Sri Krishna Chaitanya Mahaprabhu, Whose Divine Life has been dealt within the following pages ; of His Parshada Devotee, His Divine Grace Paramahansa Paribrajakacharya Prabhupada Sri Srila Bhakti Siddhanta Saraswati Goswami Maharaj and of our Divine Master Acharyadeva His Holy Grace Tridandiswami Sri Srimad Bhakti Vilas Tirtha Goswami Maharaj, the present President-Acharya of Sri Chaitanya Math and its branches Sri Gaudiya Maths, we have been also to give shape to our long cherished desire and publish the Tamil Translation of the "Life of Sri Chaitanya Mahaprabhu" in English, by Dr. S. Das, M.A., (Cal.) Ph. D. (London) Bar-at-law, a worthy disciple of the Founder-Acharya of our Maths. Now it is hoped that it will remove a great want of the Tamil speaking people who were anxious to have in their own tongue the holiest biography and teachings of Sri Chaitanya Mahaprabhu, who was none other than the incarnated Lord Sri Krishna Himself.

Our thanks are due to Sri K. Damodaran who kindly performed the test of translating the book, and we are highly greateful to Sri V. D. Ramaswami and Sri K. Damodaran, who were gracious enough to oblige us by going through the manuscript of the translation and giving valuable suggestions ; the last, but not in any way the least,

expression of our most cordial gratitude, we give to Sri Surianarayanan of the Gnanodaya Press, who was very kind to take unexpected trouble to adjust the translation to the original treaties in English ; we also thank his brother for his trouble for good printing of the book in every way.

Now we should thank our readers at whose suggestion we embarked upon this task and our would-be readers too for giving us encouragement for undertaking the publishing of such translation work of so many valuable books of the Sri Chaitanya Mahaprabhu's cult.

# பொருளடக்கம்




ஸ்ரீ சைதன்ய மகாபிரபு

# ஸ்ரீசைதன்ய மகாபிரபு

## 1

## பிறப்பு

சக 1407-ஆம் ஆண்டு பங்குனியில், புரந்தர மிஸ்ரர் என்னும் ஜகந்நாத மிஸ்ரருக்கும் புகழ் பெற்ற ஜோதிட நிபுணரான நீலாம்வர சக்ரவர்த்தியின் அருமைப் புதல்வி சசிதேவிக்கும் பத்தாவது குழந்தையாக ஸ்ரீசைதன்யர் பிறந்தார். பங்குனி மாதம் இருபத்து மூன்ருவது நாள் பௌர்ணமியன்று கிரகண விமோசன காலத்தில் அவர் பிறந்தார். கி. பி. 1486-ஆம் வருடம் பிப்ரவரி மாதம் 18-ஆம் தேதி என்று கிறிஸ்துவ ரீதியிலும் இந்த நாளைக் கணக்கிட்டிருக்கிருர்கள். ஹரிகிருஷ்ண, ஹரிகிருஷ்ண என்ற நாம ஒலி முழக்கத்துக்கிடையே கிரகண விமோசன வேளையில் எல்லா ஹிந்துக்களும் புனிதமான நதியிலே சடங்குகளைச் செய்யும் மிகச் சிறந்த நன்னுளிலே ஸ்ரீசைதன்யர் பிறந்தார். அவருடைய பெற்ருேர்களுக்கு, முன்பு பிறந்த எட்டுப் பெண் குழந்தைகளும் சிறுவயதிலேயே காலமாகிவிட்டன. ஒன்பதாவதாகப் பிறந்த ஆண் குழந்தையே பிற்காலத்தில் சங்கராரண்ய பூரி என்னும் பெயர் பெற்ற விசுவரூபன்.

நவத்வீபத்தில் பிறந்த ஸ்ரீசைதன்யர் சிறந்த வைதீக பிராமண குடும்பத்தைச் சேர்ந்தவர். இப்பொழுது உள்ள நவத்வீபம் என்னும் பட்டணம் ஸ்ரீசைதன்யர் அவதரித்த பழைய நவ்த்வீபம் அல்ல. பாகீரதி நதியும் ஜாலங்கியும் கலக்கும் இடத்துக்கு இரண்டு மைல் மேலே இருக்கும் ஸ்ரீமாயாபுரியில் அமைந்திருந்தது புராதன நவத்வீபம். ஆனுல் இப்பொழுதுள்ள நவத்வீபம் இரண்டு நதிகளின் சங்கமத்துக்குக் கீழே அமைந்துள்ளது. வாமனபுகூர், ஸ்ரீமாயாபுரி, ஸ்ரீநாதபுரி, பாரூய்டாங்கா ஆகிய கிராமங்களும் வல்லாளருடைய பாழடைந்த அரண்மனையும் வல்லாளர் ஏரியும்

ஸ்ரீசைதன்யர் காலத்தில் நவத்வீபத்தின் காஜியாக இருந்த சந்த் காஜியின் சமாதி ஆகியவை இருக்கும் வல்லாளதிகியும், இன்னும் இவை போன்ற பழங்காலப் பெருமைக்குச் சான்ருக உள்ள சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இடங்களும் சூழ்ந்த பழைய பட்டணம் நவத்வீபம். ஸ்ரீமாயாபுரியில் ஸ்ரீசைதன்யர் பிறந்த இடத்தில் இப்பொழுது ஓர் கோயில் இருக்கிறது. வங்காளத்திலேயே இதுவே ஒரு வேளை மிகப் பெரிய கோயிலாக இருக்கலாம்.

எல்லா கிரகங்களும் சுபமான இடங்களில் இருந்த மிகவும் நல்ல முகூர்த்த நேரத்தில் ஸ்ரீசைதன்யர் பிறந்தார். இத்தகைய வேளையில் பிறந்த குழந்தை அறிவிலே சிறந்த மேதையாகவும் உலகத்தைக் காப்பாற்றுபவராகவும் இணையற்ற மத போதனையாளராகவும் இந்த யுகத்துக்கே மகாபுருஷராகவும் விளங்கப் போகிறது என்று ஜாதகத்தைக் கணித்த பிரசித்திபெற்ற நீலாம்வர சக்ரவர்த்தியும் அவருடைய துணைவரான மற்ருேர் அந்தணரும் குறிப்பிட்டார்கள். மகாபுருஷருக்கு இருக்கவேண்டிய அங்க அடையாளங்கள் அனைத்தும் ஸ்ரீசைதன்யருக்கு இருக்கின்றன என ஜாதக நிலையைப் பார்த்தும் மச்சங்களையும் குறிகளையும் கண்டும் ஜோதிட நிபுணர்கள் தெரிவித்தார்கள். ஹிந்து சோதிட நூல்களின்படி அபூர்வ மனிதர்களுக்கே அமையக்கூடிய சின்னங்களான கொடி, மின்னல், சங்கு, மீன் ஆகியவை பாதத்தில் இருந்தன. மகாபுருஷர்களுக்கே உரிய முப்பத்து இரண்டு லட்சணங்களும் அவருக்குப் பொருந்தியிருந்தன. இவை யாவும் தெய்வங்களுக்கும் ஞானிகளுக்குமே அமையும் என்று ஸ்மிருதிகாரர்களும் விக்கிரக, நூலாசிரியர்களும் சிற்பிகளும் சொல்லுவார்கள். இந்தச் சின்னங்கள் கீழ் வருமாறு: நீளமாக இருக்க வேண்டிய ஐந்து பாகங்கள்—மூக்கு, கைகள், கன்னம், கண், முழங்கால்; மெல்லியதாக இருக்க வேண்டியவை—தோல், பல், கூந்தல், உடம்பில் உள்ள ரோமம்; சிவப்பு நிறமாக இருக்க வேண்டியவை ஐந்து–கண்களின் ஓரம், குதிகால், உள்ளங்கை, உதடுகள், நகங்கள்; உயர்வாக இருக்க வேண்டியவை ஆறு—மார்பு, தோள்கள், நகம், மூக்கு, இடை, முகம்; மிகவும் குட்டையாக இருக்க வேண்டியவை மூன்று—கழுத்து, துடை, ஜனனேந்திரிய உறுப்பு; நன்ருக அகன்று இருக்க

வேண்டியவை மூன்று—இடை, முன்நெற்றி, மார்பு; ஆழமாக இருக்கவேண்டியவை மூன்று—தொப்புள், குரல், மனம்.

'அகன்ற நெற்றி, நீண்ட புருவங்கள், தாமரை இதழ் போன்ற பெரிய கண்கள், நீண்ட வளைந்த மூக்கு, பழுத்த பிம்பப் பழம் போன்ற உதடுகள், மாதுளம்பழ முத்தை நிகர்த்த பற்கள் வாய்ந்த அழகே வடிவானவர் ஸ்ரீசைதன்யர் என்றே எல்லா நூலாசிரியர்களும் குறிப்பிடுகிறார்கள். அவருடைய கழுத்திலே சங்கு போல மூன்று கோடுகள் இருக்கும்; சிங்கத்தைப் போல அவருடைய மார்பு அகன்றும் இடை குறுகியும் இருக்கும். வாழை மரத்தின் அடிப்பாகம் போல அவருடைய துடைகள் தோற்றம் அளிக்கும். அவருடைய முழங்கால்கள் யானையின் துதிக்கை போல இருக்கும். அவருடைய உயரம் அவருடைய கைகளைப் போல நாலரை மடங்கு. கீழே குனியாமலேயே தம்முடைய கைகளால் முழங்காலை அவரால் தொடமுடியும்' என்று ஸ்ரீசைதன்யரைக் குறித்து, பிருந்தாவன தாசர் தம்முடைய 'சைதன்ய பாகவதம்' என்னும் நூலின் முதல் பாடல்களில் சொல்லுகிறார். மிகவும் உயரமானவர்; வர்ணிக்க இயலாத அழகு வாய்ந்தவர்; கம்பீரமான தோற்றம் உள்ளவர். பொன் போன்ற வண்ண முடையவர். அந்தக் காரணத்தாலேயே கௌர என்ற பெயரையும் பெற்றார். தெய்விகத் தன்மைகளைக் குறிக்கும் அற்புதமான அங்க அடையாளங்களைத் தவிர, அவருடைய உள்ளமும் அறிவும் அசாதாரணமாக இருந்தன. வங்காளத்தில் இருந்த மேதைகளில் அவர் ஒளி வீசும் மாணிக்கமாக விளங்கினார்; இள வயதிலே அவரைப் போல வேறு யாருமே அறிவிற் சிறந்தவர்களாக இருக்கவில்லை. ஸ்ரீசைதன்யருடைய ஞானசக்தியிலிருந்து தோன்றிய அபரிமிதமான வசியத் தன்மையால் தூண்டப் பெற்று, மிருகத்தனமும் குரூரமும் நிறைந்த, திருத்தவே முடியாத பாபிகளான ஜகாய், மாதாய் என்னும் கொலைகாரர்கள் மனம் மாறினர். பிறரைக் கவர்ந்து தம்மிடம் லயிக்க வைக்கும் வசீகர சக்தி அவரிடம் பூரணமாக இருந்தது. பிறர்மனம் அறிந்து ஊடுருவும் மேதைத் தன்மை அவரிடம் நிறைந்திருந்தது.

ஆழ்ந்த கருணையின் உறைவிடமாகத் திகழ்ந்த அவரையே மக்கள் மற்ற சந்நியாசிகளைவிட அதிகமாக நேசித்தார்கள். உலக

இன்பங்களிலும் ஆசைகளிலும் சிறிதும் மனம் செல்லாத தம்முடைய ஒப்பற்ற மேதையினல் அரசியலிலும் நிர்வாகத்திலும் பெரிய பதவிகளே வகித்த ரூப, சநாதன, ராமானந்த ராய் போன்றவர்களேயும் ரகுநாத தாசர் போன்ற இளவரசர்களேயும் ஜகாய், மாதாய் போன்ற பொல்லாத கல் நெஞ்சர்களேயும் இன்னும் நூற்றுக்கணக்கானவர்களேயும் ஞானப் பாலால் வளர்த்தார். அன்பும் ஆத்ம போதனேயும் அவர் உள்ளத்திலிருந்து சுரந்து, பெருகி, அவரை அடைந்த அனைவரையும் ஊடுருவி ஒன்றுபடுத்தியது. ஸ்ரீசைதன்யரின் ஒவ்வொரு செயலிலும் ஒளிவீசும் அவருடைய பெருமை கலந்திருந்தது. துன்பத்தில் உழலும் மனித சமூகத்தின் நோய் தீர்க்கும் ஆத்மிக வைத்தியராக அவர் விளங்கினர். எல்லா நம்பிக்கையும் இழந்து துயரத்தில் மூழ்கியிருந்த புத்தி ராய்க்கு அந்திம வேளேயில் பாபத்திலிருந்து விடுபடும் வழிகளேத் தெரிவித்து அபயம் அளித்ததும் ஆத்ம போதனே செய்ததும் அவருடைய கருணேக்கும் அன்பு கனிந்த ஆதரவுக்கும் சான்றுகளாகும்.

எல்லோரிடமும் இரக்கம் கொள்ளும் தெய்விகத் தன்மையும் ஏராளமான சீடர்களேக் கவர்ந்த, உள்ளத்துடன் உறைந்திருந்த பெருந்தன்மையும் ஒருவிதமான மாயசக்தியும் ஆழ்ந்த கற்பனேயும் எல்லாவற்றுக்கும் மேலாக, தம்மை நெருங்கியவர்கள் அனைவரையும் கவர்ந்ததும், நாஸ்திகத்துக்குச் சரியான பதிலாக அமைந்ததுமான பக்தி உணர்ச்சி அவருடைய மகத்தான வெற்றிக்குக் காரணமாகி அவரை இக்காலத்திய மகா புருஷராக்கின. இந்தியாவின் மத நூல்களில் உயர்ந்த இடம் பெற உரிமை உள்ளவர் என்று வங்காளிகளால் நியாயமாகவே பெருமைப் படத்தக்க, ஸ்ரீசைதன்யரிடமிருந்து புதிய நோக்குப் பெற்ற உண்மையான சீடர்களே, வங்க, சம்ஸ்கிருத நூல்கள் தோன்றுவதற்கும் புதிய பண்பாடு ஒன்று உதயமாவதற்கும் காரணமானவர்கள். இதனுல்தான் ஸ்ரீசைதன்யரின் புகழ் எங்கும் பரவியிருக்கிறது என்றும் சொல்லலாம். இலக்கியத்தில் அருமையான அம்சமோ இனிமையான இசையோ எதுவாக இருந்தாலும் அவற்றை எல்லாம் ஸ்ரீசைதன்ய வைஷ்ணவத்தில் காண முடியும்.

பரம்பரை பரம்பரையாக வித்தையில் பாண்டித்யம் பெற்ற குடும்பத்தில்—உலகம் முழுவதும் பாராட்டக்கூடிய வகையில்

அறிவு நிரம்பிய இடையருத பண்பாட்டின் உயர்விடமான சர்வ கலாசாலே உள்ள பட்டணத்தில்—ஸ்ரீசைதன்யர் பிறந்தார். இந்தச் சூழ்நிலேயும் உடன் பிறந்த மேதா விலாசமும் அவரை ஈடு இணே யற்ற அறிவாளியாக்கின. அவர் வாழ்ந்த காலத்திலும் வளர்ந்த குடும்பத்திலும் பழக்கத்தில் இருந்த மத அநுஷ்டானங்கள் அல்லாமல், உணர்ச்சியும் பக்தியும் இணேந்த மதக் கோட்பாட்டைப் பின்பற்றும்படி அந்தக் காலச் சூழ்நிலே இருந்தது என்று திடமாகச் சொல்ல முடியாத போனலும் அதில் ஓரளவு உண்மை இருக்கிறது.

ஸ்ரீசைதன்யருடைய பெற்ரோர்கள் ஆழ்ந்த பக்தி உள்ளவர்கள்; தெய்வ நம்பிக்கை உள்ளவர்கள். ஆனல் அவர்கள் விஷ்ணுவையே விசேஷமாக வழிபாடு செய்பவர்கள் அல்ல. ஸ்ரீசைதன்யரோ விஷ்ணு வழிபாட்டு முறையிலே ஒரு புதிய திருப்பத்தைத் தோற்றுவித்துவிட்டார். குழந்தை பிறந்த பின்னர், தனி அறையில் சில நாட்கள் தாய்மார்கள் இருக்கும் வழக்கத்தை யொட்டி, தனி அறை புகும் தினத்தன்று ஸ்ரீசைதன்யரின் அன்னே சஸ்ட்டி தெய்வத்தையே வழிபட்டார். துர்த்தேவதைகளிலிருந்து குழந்தையைக் காப்பாற்ற வேண்டும் என்று குடும்பத்திலிருந்த மற்ற பெண்களுடன் புத்தமத தெய்வமான அபராஜிதையைப் பூசனே செய்தார். ஒரு சமயம் ஒரு மரத்தடியில் வீற்றிருந்த சஸ்ட்டி தெய்வத்துக்கு நிவேதனமாக எடுத்துச் சென்றதை ஸ்ரீசைதன்யர் தட்டிப் பறித்து உண்டுவிட்டார். இதனல் தம்முடைய புதல்வன் சஸ்ட்டியின் கடுங்கோபத்துக்கு ஆளாகாமல் இருக்க வேண்டுமே என்று ஸ்ரீசைதன்யரின் அன்னே மிகவும் பயந்துபோனர். அப்பொழுது ஸ்ரீசைதன்யரை அவர் மிகவும் கடிந்துகொண்டார். 'மரத்தின் வேருக்குத் தண்ணீர் ஊற்றுவதன் மூலம் கிளேகளும் இலேகளும் வளர்ச்சி பெறுவது போல், எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான விஷ்ணுவிடம் செலுத்தும் அன்பும் ஆராதனேயும் மற்றத் தெய்வங்களுக்குச் செய்தது போலாகும்' என்று ஸ்ரீசைதன்யர் வைஷ்ணவத்தின் பிரதான கொள்கையைத் தாயாருக்குப் பதிலாக சொன்னர் என்று லோசன தாசர் குறிப்பிடுகிருர். பின்னல், அத்வைதர் என்னும் பரம பக்தருக்கு அறியாமல் செய்த குற்றத்துக்குப் பிராயச்சித்தமாக, களங்கமற்ற அன்பும் பக்தியும் கலந்த ஸ்ரீசைதன்யரின் கொள்கைகளே

அவர் தழுவினர். வைஷ்ணவத்தின் அவசியமும் அடிப்படையுமான ஏகாதசி விரதத்தை அநுஷ்டிக்கும்படி, தம் தாயாரை ஸ்ரீசைதன்யர் வேண்டிக்கொண்டார். பொதுவாக, தாராள மனப்பான்மை நிறைந்த பெண்மணியான அவர், பிற்காலத்தில் ஸ்ரீசைதன்யரின் பக்திக் கோட்பாட்டினல் விசேஷமாகக் கவரப்பெற்றுர். ஸ்ரீசைதன் யரும் தம்முடைய அன்னையின் ஆத்ம முன்னேற்றத்தில் மிக்க அக்கறை செலுத்தினர்.

ஸ்ரீசைதன்யரையும் அவருடைய மூத்த சகோதரரையும் போல அல்லாமல் அவருடைய பெற்றோர்கள் இல்லற வாழ்க்கையில் பெரிதும் ஈடுபட்டவர்கள்; தம்முடைய புதல்வர்களேயும் இல்லறத்தை ஏற்றுக்கொள்ளச் செய்வதில் அநேக முயற்சிகள் செய்தனர். ஆனல் அவர்களோ இல்லத்தைத் துறந்து எங்கும் திரியும் சந்நி யாசிகளாகவே மாறினர்.

ஸ்ரீசைதன்யருக்கு ஐந்து அல்லது ஆறு வயசுகூட இருக்காது; அப்போது அவருடைய மூத்த சகோதரர் விசுவரூபர் உலகத்தைத் துறந்து சந்நியாசியானுர். இந்தச் சம்பவம் ஸ்ரீசைதன்யரின் மனத்திலே ஆழமாகப் பதிந்துவிட்டது. பிற்காலத்தில் அவர் தென்னிந்தியாவில் யாத்திரை செய்துகொண் டிருந்த காலத்தில் தம்முடைய தமையனுரைக் குறித்துப் பல இடங்களிலும் தேடினுர் என்றும் பம்பாய் ராஜ்யத்தில் பண்டரிபுர நதிதீரத்தில் அவர் காலமானுர் என்ற தகவலேத் தெரிந்துகொண்டார் என்றும் அவருடைய சரித்திரத்திலிருந்து அறிகிறோம். மேலும் இங்கே குறிப்பிடும் ஒரு நிகழ்ச்சியிலிருந்தும் தமையனுரின் துறவு அவர் மனத்தில் ஆழமாகப் பதிந்திருந்தது என்பது தெளிவாகிறது.

ஒரு நாள் ஸ்ரீசைதன்யர் தாம்பூலம் தரித்திருந்தபோது திடீ ரென்று அவர் மயங்கிக் கீழே விழுந்துவிட்டார். மயக்கம் தெளிந்த பின்னர், தமையனுர் விசுவரூபர் தம்மை அழைத்து சந்நியாசம் மேற்கொள்ளுமாறு வேண்டியதாகவும் அதற்கு, "பெற்றோர்களுக்கு நான் ஒருவனே மிஞ்சியிருக்கிறேன். எனக்கும் வயசோ மிகவும் குறைவு; எனக்குச் சந்நியாசத்தைப்பற்றியும் ஒன்றுமே தெரியாதே!" என்று அவரிடம் சொன்னதாகவும் ஒரு காட்சியைக் கண்டேன் என்று அருகில் இருந்தவர்களிடம் தெரிவித்தார்.

இந்த வரலாறு உண்மையானதா, கற்பனை கலந்ததா என்று விவாதிப்பது நம் நோக்கம் அல்ல. தம்முடைய மூத்த சகோதரரிடம் ஸ்ரீசைதன்யருக்கு இருந்த அபிமானம் மட்டும் இதிலிருந்து தெளிவாகிறது.

பிறக்கும்போதே ஸ்ரீசைதன்யரிடம் ஆத்ம விஷயங்களில் ஆர்வம் தோன்றியிருந்தது என்றே சொல்லவேண்டும். ஹரிநாம சங்கீர்த்தனம் நிலவியிருந்தபோது அவர் அந்த ஒலியினூடேயே மண்ணுலகத்தில் பிறந்தார். அதுதான் அவருடைய அழுகையை நிறுத்தி அமைதியையும் அளித்தது. ஹரியின் நாமத்தை உச்சரிப்பதனாலேயே உலகத்தின் இன்னல்களைப் போக்கிவிட முடியும் என்னும் உன்னத தத்துவத்தின் உறைவிடமாகவும் போதனையாளராகவும் அவர் வாழ்நாள் முழுவதும் அமைந்தது. குழந்தையாக இருந்தபோது அவருடைய அழுகையை அடக்க ஹரி ஹரி என்று சொன்னாலே போதும். இந்த அற்புதத்தையும் அவருடைய பொன் போன்ற ரோஜா நிறத்தையும் கண்ட தாதிமார்கள் அவருக்குக் 'கௌர ஹரி' என்ற பெயரையே சூட்டிவிட்டார்கள். பில்லி சூன்யங்களிலிருந்தும் துர்த்தேவதைகளிலிருந்தும் குழந்தையைப் பத்திரமாகக் காப்பாற்றுவதற்காக ஸ்ரீஅத்வைதரின் மனைவியான சீதா தேவி அவருக்கு நிமாய் என்ற பெயர் வைத்து அழைக்கலானாள். ஸ்ரீசைதன்யர் துறவு கொள்ளும் காலம் வரையில் இந்தப் பெயராலேயே எல்லோரும் அவரை அழைத்தார்கள். நிமாய் என்பது வேப்ப மரத்தைக் குறிக்கிறது. முன்பு பிறந்த எட்டுப் பெண் குழந்தைகளின் மறைவுக்குக் காரணமான யமனும் மற்றத் துர்த்தேவதைகளும் இந்தப் பெயரைக் கேட்டு விலகி நின்றுவிடும் என்று ஒரு நம்பிக்கை. அவருக்கு முதலில் விசுவம்பரன் (உலகைக் காப்பாற்றுபவன்) என்னும் பெயரைப் பாட்டனார் நீலாம்வர சக்ரவர்த்தி சோதிட நிபுணர்களைக் கலந்தாலோசித்த பின்னர் வைத்திருந்தார். அவர் பிறந்த வேளையிலிருந்து நல்ல மழை பெய்து ஏராளமாகப் பயிர் விளைந்து பஞ்சமும் பட்டினியும் அறவே நாட்டிலிருந்து அகன்று போனதால் விசுவம்பரன் என்னும் பெயர் மிகவும் பொருத்தமானது என்றே அவர் கருதினார்.

2

# குழந்தைப் பருவம்

ஸ்ரீசைதன்யரின் குழந்தைப் பருவத்தில் நிகழ்ந்த ஒவ்வொரு நிகழ்ச்சியும் தெய்விக சம்பந்தம் உள்ளதாகக்கொண்டு பக்தி சிரத்தையுடன் நூலாசிரியர்கள் குறித்திருக்கிறார்கள். எப்பொழுதுமே அவர் மிக்க சுறுசுறுப்புடன் இருந்தார்; துறுதுறுவென்று சதா எதையாவது செய்துகொண்டே யிருப்பார். நாமகரணம் செய்யும்போது குழந்தையின் முன்பு புத்தகம், நெல், சாதம், கறி, தங்கம், வெள்ளி, ஸ்ரீமத் பாகவதம் முதலியவை வைக்கப்பெற்றிருந்தன. இந்தப் பொருள்களில் எதைக் குழந்தை தொடுகிறதோ அதை ஒட்டியே அதன் எதிர்காலம் அமையும் என்பது ஐதிகம். தன் முன் இருந்த மற்றப் பொருள்களின் மேல் விருப்பம் கொள்ளாமல் நிமாயி, ஸ்ரீமத் பாகவதத்தையே எடுத்துக்கொண்டார். இதைக் கண்டு அருகில் இருந்தவர்கள் வியப்புற்று, குழந்தை எதிர்காலத்தில் மிகுந்த அறிவாளியாகவும் சாஸ்திரங்களில் தேர்ந்து, சிறந்த வைஷ்ணவராகவும் விளங்கப் போகிறது என்று சொல்லிக்கொண்டார்கள்.

தவழ்ந்து கொண்டிருக்கும் பருவத்தில் நிமாயி, ஒரு சமயம் வாலைச் சுருட்டிக்கொண்டு படுத்திருந்த நாகப்பாம்பைப் பற்றிக் கொண்டதைக் கண்டு மற்றவர்கள் அலறி நடுங்கினார்கள். ஐந்து அல்லது ஆறு வயசு இருக்கும்போதே ஆழ்ந்த தத்துவங்களைப் பற்றித் தம் தாயாருடன் நிமாயி விவாதிப்பார் என்று நூலாசிரியர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஒரு சமயம் அவருக்கு இனிய தின்பண்டங்களைத் தாயார் வழங்கினார். அவற்றை வேண்டாம் என்று தள்ளி விட்டு நிமாயி மண்ணைச் சாப்பிடத் தொடங்கினார். மண்ணுக்கும் இனிப்புப் பண்டத்துக்கும் அடிப்படையில் வித்தியாசம் எதுவும் இல்லை என்று தாயாருடன் நிமாயி வாதம் செய்தார். "இரண்டு பொருள்களுக்கும் இடையே உள்ள வித்தியாசம் உண்மையானது. ஒன்று உடலைப் பாதுகாக்கிறது; மற்றொன்று உடம்பைக் கெடுக்கிறது. வெறும் களிமண்ணில் தண்ணீரை ஊற்றினால் ஒழுகிவிடு

கிறது. சுட்ட களிமண்ணுலான கூஜாவில் தண்ணீரை ஊற்றினுல் அப்படியே இருக்கிறது. இதைப் போலவே, அரிசியும் இனிப்புப் பண்டமும் மண்ணிலிருந்து தோன்றியவையானுலும் ஒன்று உடம்பை வளர்க்கிறது; மற்றென்று உடலைக் கெடுக்கிறது. எனவே இவ்விரண்டுக்கும் இடையே உள்ள பேதம் அறிவுக் கண்களுக்குத் தெளிவாகத் தெரிகிறது'' என்று நிமாயியின் அன்னை அவருக்கு விளக்கமாக எடுத்துரைத்தார்.

மற்றெருநாள், அவருடைய வீட்டில் ஒரு பிராம்மண சந்நியாசி அதிதியாக வந்திருந்தார். அவருக்காக வைத்திருந்த சாதத்தை மும்முறை நிமாயி எடுத்து உண்டுவிட்டார். ''பாலகிருஷ்ணனின் நிவேதனத்துக்காக வைத்திருந்த உணவாயிற்றே!'' என்று சந்நி யாசி நிமாயியைக் கேட்டார். "நானே பாலகிருஷ்ணன்'' என்று சொல்லி, சந்நியாசிக்குத் தம் மெய்யுருவையும் காட்டினுர் நிமாயி.

இன்னெருநாள், அவர் அணிந்திருந்த எண்ணற்ற நகை களின்மேல் பேராசை கொண்ட இரு கள்வர்கள் அவரை எடுத்துக் கொண்டு சென்றனர். ஆனுல் அவருடைய உடல் வனப்பில் மயங்கி ஒன்றும் செய்யாமல் அப்படியே அவரைத் தந்தையின் இல்லத்தில் கொண்டு சேர்த்துவிட்டார்கள். இன்பம் பயக்கும் பார்வையும் ஒளியும் பொருந்திய நிமாயியின் ரம்மியமான தோற் றத்தில் கவர்ச்சியுற்ற எல்லோரும் அவரைத் தம் சொந்தக் குழந்தை போலக் கருதிக் கொஞ்சினுர்கள். அவருக்கு அறிவு தோன்ற ஆரம்பித்த கணத்திலிருந்தே மெல்ல மெல்ல அவருடைய மதப் பற்று வெளியே புலப்பட்டது. ஏகாதசி அன்று சமைத்த உணவைப் சாப்பிட வேண்டாம் என்றும் அன்றையதினம் உபவாசம் இருக்கவேண்டியது வைஷ்ணவர்களுடைய கடமை என்றும் வற்புறுத்திச் சொல்லி, லௌகிக காரியங்கள் எவையும் செய்யாமல் ஹரிநாம ஜபத்தை மேற்கொள்ளும்படி நிமாயி, தாயாரின் காலில் வீழ்ந்து பணிந்து வேண்டிக்கொண்டார். அவருடைய குழந்தைப் பருவத்து நிகழ்ச்சிகளையும் இளமைக் காலச் சம்பவங் களையும் தெய்வமணம் கமழும் வகையில் ரசமாகச் சொல்வது உண்டு. அவருடைய அறிவு உண்மையிலேயே அதிசயிக்கத் தக்கது. வித்தியாரம்பத்து அன்று, அட்சரங்களைப் பார்த்த மறு

கணமே அவற்றை எவ்விதப் பிழையும் இல்லாமல் நிமாயி திரும்பச் சொன்னதைக் கண்டு எல்லோரும் வியப்பில் ஆழ்ந்தார்கள் இரண்டு மூன்று நாட்களிலேயே கூட்டெழுத்துக்கள் எல்லாவற்றையும் கற்றுக் கொண்டுவிட்டார். ஸ்ரீகிருஷ்ணனுடைய நாமங்கள் எல்லாவற்றையும் தொடர்ந்து எழுதவும் தொடங்கி விட்டார். இதைத் தவிர அவருடைய இளமைப் பருவ விளையாட்டுகளிலும் பேச்சுகளிலும் இன்பமும் லளிதமும் நிறைந்திருந்தன.

அவருடைய மூத்த சகோதரர் விசுவரூபர் இயல்பிலேயே துறவு உள்ளம் கொண்டவர். வாழ்நாள் முழுவதும் மதத்துக்காகவே பிரம்மசரிய நெறியை மேற்கொள்ள விரும்பினர். அத்வைத ஆசாரியருடனேயே அவர் நாள் முழுவதும் இருந்தார்; லௌகிகக் காரியங்கள் எதைப்பற்றியும் அவர் சற்றும் லட்சியமே செய்யவில்லை. அவருக்கு மணம் செய்விக்க விடாப்பிடியாக முயற்சி நடைபெற்ற போது விசுவரூபர் உலகைத் துறந்து சந்நியாசியாகி விட்டார். எனவே, நிமாயி தனிமையில் விடப்பட்டார். பண்டிதர் விஷ்ணு தாசரின் மேற்பார்வையில் அவர் சாஸ்திர விசாரணையில் மும்முரமாக ஈடுபடலானர். வேதங்களிலும், நியாய சாஸ்திரத்திலும் விசுவரூபர் அபார பாண்டித்தியம் பெற்று விளங்கினர். மற்றும் பாகவதத்தில் அவருக்கிருந்த பயிற்சியும் சேர்ந்து இல்லற வாழ்வில் அவருக்குப் பற்றின்மையைப் புகுத்தி இறுதியில் உலகத்தைத் துறக்கத் தூண்டியது என்று தகப்பனர் ஜகந்நாதர் எண்ணினர்.

மூத்த சகோதரரைப் போலவே நிமாயியும் துறவை மேற்கொண்டு விடப் போகிருனே என்று கருதி, அவரை மேற்கொண்டு சாஸ்திரங்களைப் படிக்க வேண்டாம் என்று தகப்பனர் தடுத்தார். துறவு மனப்பான்மையைத் தரக்கூடிய சாஸ்திரங்களைப் படிக்க வொட்டாமல் தடுத்தால் அவன் இல்லற வாழ்வில் நாட்டம் கொள்வான் என்று எண்ணினர். இளமையிலே தம்முடைய மூத்த புதல்வன் சந்நியாச வாழ்வை ஏற்றுக் கொண்டதைக் கண்டு மனம் வெதும்பிய ஒரு தந்தையின் இத்தகைய செயலை இயற்கைக்கு முரணனது என்று எவரும் சொல்லத் துணியமாட்டார்கள். ஆனல் துரதிர்ஷ்டவசமாக இந்தத் தடையால் நிமாயி முன்பு இருந்ததை விட அமைதியற்றும் மனக் கொந்தளிப்புடனும் இருந்தார். ஒரு

நாள் அசுத்தம் என்று பெண்கள் எல்லோராலும் ஒதுக்கப்பட்ட உடைந்த சமையல் சட்டி பானைக் குவியல் மீது போய் அமர்ந்து விட்டார்.

"அங்கே ஏன் போய் உட்கார்ந்திருக்கிறாய்? அசுத்தத்தின்மீது இருந்ததற்காக விசேஷ பிராயச்சித்தம் செய்ய வேண்டுமே! சீக்கிரம் இறங்கி வந்துவிடேன்!" என்று நிமாயியின் தாயார் வேண்டிக்கொண்டார்.

"நான் இருக்கும் இடம் மிகவும் புனிதமானதாகும். இங்கே தான் கங்கை முதலான புண்ணிய நதிகள் வந்து சேருகின்றன. சுத்தம் அசுத்தம் என்பதெல்லாம் நாமாக எண்ணிக்கொள்ளும் கற்பனையே. சாஸ்திரங்களின் பிரகாரமும் சம்பிரதாய ரீதியிலும் அத்தகைய அசுத்தங்கள் நான் தொட்ட பிறகு சுத்தமடைந்து விடுகின்றன. விஷ்ணுவுக்கு நிவேதனமான உணவைத் தயாரித்த இந்தச் சட்டிகளில் எவ்வித அசுத்தமும் தங்கவே முடியாது. விஷ்ணுவுக்காகப் பயன்பட்ட சட்டிகள் ஒரு காலத்திலும் அசுத்தமாகா. இந்தப் புனிதமான சட்டிகள் பட்ட இடம் அனைத்துமே புனிதமாகி விடும்" என்று நிர்மலத்துக்கும் மலத்துக்கும், சுபத்துக்கும் அசுபத்துக்கும் உள்ள தத்துவ வேறுபாடுகளை எளிய வார்த்தைகளிலே நிமாய் உரைத்ததாக நூலாசிரியர்கள் சொல்கிறார்கள்.

எப்படியாவது தம்மை மீண்டும் சாஸ்திரங்களைப் படிக்கப் பெற்றோர்கள் அநுமதிக்க வேண்டும் என்ற நோக்கத்துடனேயே நிமாயி இப்படிச் செய்தார். எனவே, "என்னை மேலும் படிக்க அநுமதிக்காவிட்டால், இந்த அசுத்தமான குவியலிலிருந்து நான் கீழே இறங்கவே மாட்டேன்" என்று நிமாயி தன் தாயாரிடம் தெரிவித்தார். தங்களுடைய பிழையை உணர்ந்த பெற்றோர்களும் மீண்டும் அவரை மிக்க மகிழ்ச்சியுடன் தொடர்ந்து படிக்க அநுமதி தந்தனர்.

## 3

# கல்வி பயின்ற காலம்

நிமாயிக்கு உபநயனம் செய்யும் பருவம் வந்தது. அவருக்கு அப்பொழுது என்ன வயசு என்று தெளிவாக எந்த நூலாசிரியருமே குறிப்பிடவில்லை. ஆனல் சாஸ்திரத்துக்கும் அக்கால வழக்கத்திற்கும் ஏற்ப அவருக்கு வயசு எட்டு இருக்கலாம். வீட்டிலே கற்கவேண்டிய சாஸ்திரங்களின் அர்த்தத்தையும் பொருளையும் முற்றும் உணர்ந்த பிறகு ஸ்ரீசைதன்யர் மற்றவர்களுடன் இதர சாஸ்திரங்களைக் கற்க விரும்பினர் என்று பிருந்தாவன தாசர் குறிப்பிட்டிருக்கிறர். நவத்வீபத்தில் இருந்த பிரசித்திபெற்ற வியாகரண பண்டிதரான கங்காதாச பண்டிதரிடம் சேருவதற்கு முன்பு போதுமான அளவு விஷயங்களைத் தெரிந்துகொண்டார். நிமாயியின் அசாதாரண அறிவு, சாதுர்யமான புத்தி, இலக்கிய ருசி ஆகியவற்றைக் கண்ட சக மாணவர்களும் பேராசிரியர்களும் வியந்து கொண்டாடினர்கள். ஒளிவீசும் தோற்றம், குழந்தை போன்ற எளிமை, ஆசிரியர்களும் முதிய மாணவர்களும் பிரமிக்கும் ஆச்சரியமான தர்க்கமிடும் திறமை, ஆசிரியர்கள் எடுத்துச் சொல்லும் வியாக்கியானங்களை மறுத்துப் புதிதாகத் தாமே உரை சொல்லும் ஆற்றல் எல்லாம் அவரிடம் நிரம்பியிருந்தன. இயல்பாகவே தம்மிடம் அமைந்திருந்த தர்க்கம் செய்யும் திறமையை மேலும் விருத்தி செய்வதிலேயே அவர் அதிகக் கவனம் செலுத்தினர். மேற்படிப்புப் படித்துக் கொண்டிருந்த முராரி குப்தன், கமலகாந்தன், கிருஷ்ணநந்தன் போன்ற கங்காதாச பண்டிதரின் மாணவர்களை மட்டும் அல்லாமல் பட்டணத்திலிருந்த மற்ற மாணவர்களையும் தம்முடைய பேச்சு வன்மையால் பின்னடையச் செய்தார். வீதியிலும் சரி, கல்லூரியிலும் சரி, யாரைப் பார்த்தாலும் கல்ப வியாகரணத்தின் விருத்தி, பஞ்சி, டீக்கா ஆகியவற்றைக் குறித்து விவாதிக்கத் தொடங்கி விடுவார். அக்காலத்தில் கல்ப வியாகரணத்துக்கு துர்க்கா சின்ஹாவின் விருத்தியும், திரிலோசனதாசரின் பஞ்சியும், சுசேன வித்யாபூஷண ஆசார்யாவின் டீக்காவும் பிரசித்தியாக இருந்தன. அவருடைய

இலக்கிய அறிவு விரைவாக வளர்ச்சி பெற்றுவருவதற்கு ஏற்ப மத சம்பந்தமான விஷயங்களிலும் ஈடுபாடு விருத்தி அடைந்து வந்தது. பாகீரதி நதிக்கரையில் ஒழுங்காக நித்தியகர்மங்களை நிமாயி செய்து வந்தார்; வேளைதவருமல் விஷ்ணுவையும் வழிபட்டார். உணவு உண்ணுவதற்கு முன்பு துளசிக்குத் தண்ணீர் ஊற்றியும் வந்தார். கங்காதாசரின் கல்லூரியில் படித்துக்கொண் டிருக்கும்போதே கல்ப வியாகரணம் என்னும் நூலுக்கு ஒரு விளக்கவுரை எழுதினுர். அந்த நூல் அவருடைய புலமையைப் வெளிப்படுத்திச் சிறந்த அறிவாளி என்னும் பெயரையும் பெற்றுத் தந்தது. வங்காளம் முழுவதும் அதையே பாடபுத்தகமாகவும் ஏற்றுக் கொண்டார்கள். நிமாயியின் மகிழ்ச்சி நிறைந்த மாணவ வாழ்க்கையில் ஒரு பேரிடி போலத் திடீரென்று ஒருநாள் அவருடைய தந்தை காலமான செய்தி வந்தது. சொல்ல முடியாத சோகத்துக்குள்ளான போதிலும் விரைவில் அவர் மன அமைதி அடைந்து வருத்தத்தில் கிடந்த அன்னைக்கு ஆறுதல் கூறச் சென்ருர்.

குடும்பத்தை ஏற்று நடத்தும் பெரிய பொறுப்பு இப்பொழுது இளம் வயசினரான நிமாயியைச் சார்ந்துவிட்டது. ஆனல் அதைப் பற்றி அவர் சிறிதும் கவலை கொள்ளாமல் தம்முடைய இலக்கியப் பயிற்சியையும் தொடர்ந்து மேற்கொண்டார். தெய்வத்தின் திருவருள் துணை நிற்கும் என்ற நம்பிக்கையின்பேரில் தம்மையும் தம் தாயாரையும் பராமரித்துக் கொள்ளும் வகையில் உபகாரச் சம்பளங்களைப் பெற்றும் ஓய்வு கிடைத்த நேரங்களில் மாணவர்களுக்குப் பாடஞ் சொல்லியும் நூல்களை எழுதியும் குடும்பத்துக்கு வேண்டிய பணத்துக்கு வழி செய்து கொண்டார். குடும்ப நிர்வாகத்துக்காக அன்னை, பணம் கேட்கும்போதெல்லாம் நிமாயி, 'கிருஷ்ணன் காப்பாற்றுகிருர்; அவரே நமக்கு வழியும் காட்டுகிருர்' என்று சொல்லிக் கொண்டே இரண்டு தோலா பொன்னை அவரிடம் அளிப்பார்.

''ஸ்ரீகௌர சந்திரர் (நிமாயி) எந்தக் கேள்வியைக் கேட்டாலும் மாணவர்கள் பதில் சொல்ல முடிவதில்லை. அந்தச் சமயங்களில் தாமே சூத்திரத்தைச் சொல்லுவார். தாம் சொன்ன விளக்கத்தைக்

கண்டித்துப் புதிய உரையையும் கூறுவார். அதற்கு விளக்கம் தர எவராலும் முடியாத சமயத்தில் தாமே அதற்குச் சரியான முறையில் விளக்கம் தந்து முதலில் சொன்ன உரையை நிலைநாட்டுவார். குளிக்கும் நேரத்திலும், உண்ணும் வேளையிலும், நடந்து செல்லும் போதும் ஸ்ரீசைதன்யரின் மனம் சாஸ்திரங்களிலேயே லயித்திருந் தது. அவர், சாஸ்திரங்களை இன்பம் தரும் விளையாட்டுப் போல அலசி ஆராய்ந்து பொழுதுபோக்கி வந்தார்" என்று நிமாயி கல்வி கற்ற முறைகளைப் பற்றி, பிருந்தாவனதாசர் எழுதியிருக்கிறார்.

தம் இல்லத்துக்கு அருகில் இருந்த முகுந்த சஞ்சயன் என் னும் செல்வந்தரின் வீட்டின் விசாலமான கோயில் முற்றத்தில் நிமாயி தம்முடைய கல்லூரியைத் தொடங்கினார். இந்தச் செல்வந்தர் பிற்காலத்தில் ஸ்ரீசைதன்யரின் சீடர்களில் ஒருவராகிவிட்டார். பார்வைக்கு சற்றுக் கடினமானவராகத் தோன்றினாலும் எல்லாவற் றையும் ஐயமறக் கற்றுணர்ந்த பேராசிரியரான நிமாயி, பாடம் சொல் லித் தருவதில் நிகரற்ற திறமை வாய்ந்தவராக இருந்தார். எனவே விரைவில் அவரை நாடி ஏராளமான மாணவர்கள் வரத் தொடங்கி னார்கள். அவருடைய கல்லூரியும் நல்ல பெயருடன் வளரலாயிற்று. எந்தப் பேராசிரியருமே அவருக்குச் சமமானவராக இருக்கமுடிய வில்லை. பட்டணத்திலிருந்த எல்லா அறிஞர்களுமே இலக்கியப் புகழ்பெற்ற நவத்வீபத்தில் மிகச் சிறந்த மேதையாக, அவரைக் கருதி வந்தனர். எனவே அவருடன் வாதமிட்டுத் தோல்வியும் வெட்கமும் அடைவதை விடப் பணிந்து செல்வதே நல்லது என்று அறிஞர்கள் எண்ணி அதற்கேற்ப நடந்து கொண்டார்கள். சிறந்த அறிவாளியான நிமாயி மற்ற அறிவாளிகளுடன் கலந்து அளவளாவுவதிலும் மெத்த மகிழ்ச்சி அடைந்து வந்தார். மற்றச் சமயங்களில் மாணவர்களிடையேயும் பேசிக்கொண்டிருப்பார். அவ ருடைய கல்லூரியில் ஆயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்கள் கல்வி கற்று வந்தார்கள்.

கல்யாணம்: குற்றம் குறை சொல்ல இயலாத குணசீலரான நம் இளம் பேராசிரியர் தம் வீட்டுக்கு அருகில் வசித்துவந்த வல்லபாசாரியார் என்பவரின் பெண் லக்ஷ்மிதேவியைக் கண்டு

காதலித்தார். கங்கைக்குப் போகும் வழியில் முதல் தடவையாகச் சந்தித்தபோதே அவர்கள் இருவரும் பரஸ்பரம் அன்பு கொண்டு, ஒருவருக்காகவே மற்றவர் பிறந்திருப்பதாகவே எண்ணினர். வனமாலி சாதகா என்பவர் மணம் பேசி முடிப்பதற்காக ஸ்ரீசைதன்யருடைய தாயாரை அணுகினர். அந்த தேவி முதலில் சம்மதிக்கவில்லை. பிறகு ஸ்ரீசைதன்யரே தம் தாயாரிடம் பேசி அநுமதியை பெற்றுக் கொண்டார். பெண்ணும் அடக்கம் நிறைந்தவள்; மென்மையானவள்; இனிமை மிக்கவள். ஸ்ரீசைதன்யருடன் நடத்திய சிறிதுகால இல்லற வாழ்வில் கடமையில் தவருமலும் பிறரிடம் தயையுடனும் லக்ஷ்மிதேவி நடந்துகொண்டாள். இளமையும் புதுமையும் வனப்பும் கொண்ட லக்ஷ்மி அன்புள்ள கணவருக்கு நிறைந்த மகிழச்சியுடன் வேண்டியதைச் செய்து வந்தாள். நிமாயிக்குப் பூரண சந்தோஷத்தையும் அளித்து வந்தாள். அழகுக் கலைகளில் அவள் வல்லவளாக இருந்தாள். ஸ்வஸ்திகா, சங்கு, சக்கரம் ஆகியவற்றை வரைவதில் அவளுக்கு மிக்க ஆவல். ஸ்ரீசைதன்யரின் உருவத்தை ஒரு சமயம் லக்ஷ்மி தேவி திரைச்சீலையில் வரைந்தாள் என்று 'சைதன்ய மங்களா' என்னும் நூலில் ஜயானந்தர் எழுதியிருக்கிருர்,

அப்பொழுது நிமாயி வியாகரணத்தில் நிகரற்ற அறிவாளியாக விளங்கினர். அலங்காரத்திலும் நியாய சாஸ்திரத்திலும் புலமையின் சிகரத்தையே எட்டியிருந்தார். நியாயத்திலும் அலங்காரத்திலும் சிறந்து விளங்கிய கதாதரரையும் முகுந்தரையும் வாதத்தில் வென்ருர். மத விஷயங்களைவிட அறிவுத் துறையிலேயே அதிக ஈடுபாடு ஸ்ரீசைதன்யருக்கு இருந்ததாகத் தோன்றியது. எவராலும் வெல்லமுடியாத அவருடைய தர்க்கம் செய்யும் திறமை மட்டும் வைஷ்ணவ தர்மத்தைப் பரப்புவதில் பயன்படுமானல் என்றும் இருந்ததைவிட வைஷ்ணவ தர்மம் மகோன்னத வெற்றியைப் பெறும் என்ற ஆவலுடன் ஸ்ரீ அத்வைதர், வைஷ்ணவ தர்மத்தில் நிமாயி கலந்துகொள்ளவேண்டும் என்று தீவிரமாக விரும்பினர். ஸ்ரீசைதன்யருடைய மேதாவிலாசம் நவத்வீபம் முழுவதும் பரவியிருந்த காலத்தில் மாதவவேந்திர பூரி என்னும் வைஷ்ணவப் பெரியாரின் சீடரான ஈசுவர பூரி என்னும் பெரியார் அங்கே வந்து சேர்ந்தார். பிரசித்தி பெற்ற தர்க்க நிபுணரான வாசுதேவ சார்வ

பௌமரின் தங்கையின் கணவரும் வைஷ்ணவ தர்மத்தைப் பரப்புவதில் ஈடுபட்டிருந்த ஸ்ரீ அத்வைத ஆசார்யாவைச் சார்ந்தவருமான கோபிநாத ஆசார்யாவின் இல்லத்திலே ஈசுவர பூரி நெடுநாள் தங்கியிருந்தார். ஈசுவர பூரியைத் தினந்தோறும் கண்டு அவருடன் மத சம்பந்தமான விஷயங்களைப்பற்றி நிமாயி அளவளாவி வந்தார். ஆழ்ந்த துறவு உள்ளமும், அறிவுத் திறமையும், பக்தி பாவமும் நிறைந்த வைஷ்ணவ சந்நியாசியான ஈசுவர பூரி, நிமாயியின் மனத்தில் நிரந்தரமாகப் பதிந்துவிட்டார். இப்படி இவர்கள் அடிக்கடி சந்தித்து உரையாடியது நிமாயியின் பக்தி உணர்ச்சியைப் பெரிதும் தூண்டியது.

ராதைக்கும் கிருஷ்ணனுக்கும் இடையே இருந்த பிரேமையைக் குறித்து பக்திச் சுவை சொட்டச் சொட்ட 'கிருஷ்ண லீலாம்ருதம்' என்னும் மதுரமான ஒரு காவியம் இயற்றியிருந்தார் ஈசுவர பூரி. அந்தக் காவியத்தில் ஏதாவது இலக்கணப் பிழைகள் இருந்தால் திருத்தி, காவிய நடைக்கும் மெருகு கொடுக்கும்படி நிமாயியை, ஈசுவர பூரி கேட்டுக்கொண்டார். பக்தி உணர்ச்சி மேலிடப் பாடப்பெற்ற காவியத்தில் எவ்விதத் தவறும் இருக்காது என்றும் அதுவும் ஈசுவர பூரியைப் போன்ற பரம பக்தரால் பாடிய காவியத்தில் எப்படி இலக்கணப் பிழை இருக்கக்கூடும் என்றும் அவருடைய பக்திப் பாடல்களில் யாராவது குறை கண்டால் அது பாபச் செயலாகும் என்றும் அவரிடம் ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார்.

**திக்விஜயியை வென்றார்:** மத அறிவிலும் புலமையிலும் ஒரு பெரிய வெற்றியைப் பெறும் காலமும் நிமாயிக்கு வந்தது. அந்தக் காலத்தில் இந்தியாவிலே மிகப் பிரசித்திபெற்ற அறிவாளியான, காஷ்மீர பண்டிதர் கேசவ பட்டர், தம்முடைய திக்விஜயத்தின் போது அங்கங்கே பல பண்டிதர்களை வென்று அவர்கள் அளித்த சம்மானங்களுடனும் அபரிமிதமான செல்வத்துடனும் யானை, குதிரைகளுடனும் வெற்றி மிடுக்குடன் நவத்வீபத்துக்கும் வந்தார். திரிஹூத், டில்லி, காசி, குஜராத், விஜயநகரம், காஞ்சி, அங்க, வங்க, ஒரிசா முதலிய பல இடங்களிலிருந்து நியாயம், சாங்கியம், பதஞ்சலி யோக சூத்திரம், மீமாம்சை, வைசேஷிகம், வேதாந்தம் ஆகிய பல துறைகளிலும் புகழ்பெற்ற அறிஞர்களை எல்லாம் அவர் வாதத்தால்

தோல்வியடையச் செய்திருந்தார். ஒன்று, நவத்வீபத்தில் இருந்த அறிஞர்களில் எவர் விரும்பினாலும் ஊரார்முன் தம்முடன் தர்க்கம் செய்து அவருடைய திறமையைக் காட்டவேண்டும் அல்லது தம்முடைய மேதையை யாவரும் ஒப்புக்கொள்வதாகக் கையொப்பம் இட்டுத் தரவேண்டும் என்று நவத்வீபத்தில் இருந்த அறிஞர்கள் எல்லாருக்கும் கேசவ பட்டர் சவால் விடுத்தார். இந்தத் துணிச்சலான சவாலைக் கேட்டு நவத்வீபப் பட்டணம் முழுவதுமே அச்சமடைந்தது. ஒவ்வொரு பண்டிதர் கூட்டத்திலும் இதைப்பற்றியே கலவரத்துடன் பேச்சு எழுந்தது. நவத்வீபத்தின் பரம்பரைப் பெருமையையும் புகழையும் எப்படி நிலைநாட்டுவது என்பதே எல்லோருடைய கவலையாக இருந்தது.

காஷ்மீரப் பண்டிதருடன் போட்டியிட இளம் மேதையான ஸ்ரீ நிமாயியைத் தவிர வேறு எந்தப் பண்டிதரும் முன்வரவில்லை. அந்தச் சவாலை ஏற்கத் தமக்குத் தகுதி உண்டு என்று நிமாயியும் கருதினார். 'மமதையையும் அகங்காரத்தையும் தெய்வம் சகித்துக் கொள்ளாது' என்று நிமாயி தம் மாணவர்களிடம் சொன்னார். காஷ்மீர அறிஞருக்கும் நிமாயியுக்கும் கீழே உள்ள கவிதையின் அணி இலக்கணம் சம்பந்தமாக விவாதம் எழுந்தது.

महत्त्वं गंगायाः सततमिदमाभाति नितराम्
यदेष श्रीविष्णोश्चरणकमलोत्पत्तिसुभगा।
द्वितीया श्रीलक्ष्मीरिव सुरनरैरर्च्यचरणा
भवानीभर्तुर्या शिरसि विभवत्यद्भुतगुणा ॥

மஹத்வம் கங்கயா சததம் இதம் அபாதி நிதரம்
யதேச ஸ்ரீவிஷ்ணோ சரண கமலோத்பத்தி சுபகா
தவிதியா ஸ்ரீலக்ஷ்மிரிவ சூரனரச்சய சரண
பவாணி பர்து யசிரசி விபத்யவத்யத்புதகுண

கங்கையின் பெருமையை வர்ணிக்குமாறு நிமாயி காஷ்மீர பண்டிதரை வேண்டிக் கொண்டபோது காளமேகம் போல வெகு வேகமாக அவர் பாடிய நூறு கவிதைகளிலிருந்து நிமாயி தேர்ந்தெடுத்த கவிதையே அது. சண்டமாருதம் போலத் தாம் விரைவில் இயற்றிப் பாடிய நூறு கவிதைகளில் குறிப்பிட்ட ஒரு கவியை

மட்டும் நிமாயியினுல் எவ்வாறு நினைவில் வைத்துக்கொள்ள முடிந்தது என்று கேசவ பட்டர் மிகவும் ஆச்சரியமடைந்தார். அந்தக் கவியின் பொருள் இதுதான்.

"விஷ்ணுவின் தாமரை போன்ற பாதங்களிலிருந்து புறப்படும் பாக்கியம் பெற்ற கங்கையையும் லக்ஷ்மியாக எண்ணி அவள் பாதங்களில் தேவர்களும் மனிதர்களும் பணிகிருர்கள். அன்னை பவானியின் கணவரான சிவபெருமானின் சடைமுடியில் அமர்ந் திருக்கும் கௌரவமும் பெற்றிருக்கிருள்; பல அற்புதத் தன்மை களையும் அவள் பெற்றிருக்கிருள்."

அந்தக் கவிதையின் அணி இலக்கணத்தில் ஐந்து பிழைகள் இருப்பதை ஸ்ரீநிமாயி சுட்டிக் காட்டினர். இரண்டு இடங்களில் அவி மிசிர விதேயம்சம் என்னும் வழுவும் விருத்தமதி, வக்னகிரமம், புரட்ட என்னும் வழுக்களும் உள்ளன என்பதை ஸ்ரீநிமாய் எடுத் துரைத்தார்.

அந்தக் கவிதையின் குணதோஷங்களை எல்லா வகையிலும் விமர்சனம் செய்தபிறகு, "உயர்ந்த உணர்ச்சியும் கவிப்பண்பும் கவிதையை அணி செய்யவேண்டும். அதில் ஓர் அம்சத்தில் சிறு வழு ஏற்பட்டாலும் அழகான உடம்பில் வெண்குஷ்டம் பரவினுற் போல ஆகிவிடும்" என்று முடிவாகத் தம் கருத்தையும் நிமாயி தெரிவித்தார்.

காஷ்மீரப் பண்டிதருக்கும் நிமாயிக்கும் இடையே நிகழ்ந்த விவாதம் முழுவதையும் இங்கே விவரிக்க வேண்டிய அவசியம் இல்லை. இளம் வயசினரான நிமாயி தம் கவியில் உள்ள பிழையை எடுத்துக் காட்டியதும், தோல்வியடைந்த காஷ்மீரப் பண்டிதர் பேச்சுமூச்சற்று மௌனமாகி விட்டார். முதல் முறையாக அவ ருடைய மமதை முற்றும் அடங்கி ஒடுங்கியது. பண்டிதருடன் நிகழ்த்திய விவாதம் முழுவதிலும் நிமாயி மிகவும் அடக்கத்துடனும் பெருந்தன்மையுடனும் இருந்தார். இளமைக் காலத்தில் பிறரை வாதுக்கு அழைத்துத் தோற்கடித்து மகிழ்ச்சி அடைந்த காலத் திலும் தம்முடைய பெருந்தன்மையால், தோற்றவர்களுக்கும் சந்தோ ஷத்தைத் தந்தவர் நிமாயி. எனவே, நிமாயினுல் தோற்கடிக்கப்

பெற்ற கேசவர், தம்முடைய கவிதா சக்தியை நிமாயி மனமாரப் புகழ்ந்து பாராட்டியதைக் கண்டு உள்ளங் குளிர்ந்தார்.

"உங்களுடைய அற்புதமான கவிதையிலிருந்து, நீங்கள் சிறந்த மேதை; கவிகளுக்குள் ஒளி வீசும் மாணிக்கம் போன்றவர் என்பது தெளிவாகத் தெரிந்தது. கங்கையைப் போல உங்கள் வாக்கிலிருந்து கவிகள் பெருக்கெடுத்தோடுகின்றன. உங்களுக்குச் சமமாக நான் வேறு எந்தக் கவிஞரையும் கண்டதில்லே. பவபூதி, காளிதாசர், ஜயதேவர் ஆகியோருடைய கவிகளில் கூடச் சில வழுக் கள் இருக்கின்றன. ஆனுல் கவிச் சிறப்பைக் கவனிக்கும் போது அவை மிகவும் சாமான்யமானவையாகும். இளமை மிடுக்கால் உங் கள் கவியில் குற்றம் கண்டதைச் சிறிதும் பொருட்படுத்தாதீர்கள். நான் உங்களுடைய மாணவனுக இருக்கக்கூடத் தகுதியுள்ளவனு என்று யோசிக்கவேண்டும்" என்று கேசவ பட்டரிடம் நிமாயி தெரிவித்த பணிவான வார்த்தைகளே இங்கே சொல்லித்தான் ஆகவேண்டும்.

தோல்வியடைந்த காஷ்மீரப் பண்டிதர், மறுநாள் நிமாயியின் இருப்பிடத்துக்கு வந்து அவரைக் கண்டார்.

அப்பொழுது நிமாயி அவருக்குச் சில அறிவுரைகளேக் கூறினர். "அறிவின் லட்சியம் உலகை வெல்வது அல்ல; அறிவைக் கொண்டு ஆண்டவனேப் பணியும் போதுதான் அது நிறைவைப் பெறுகிறது. உடம்பை விட்டுப் பிரியும்போது ஒருவருடன் செல் வமோ மனிதர்களோ செல்வதில்லே. அதனுல்தான் மகாத் மாக்கள் எல்லாவற்றையும் துறந்து விடுகிருர்கள். முழு மனத் துடன் ஆண்டவனே வழிபட வேண்டும். ஒருவருடைய உள்ளமும் உடைமையும் கிருஷ்ணனுக்கு அர்ப்பணமாகும் போதுதான், அறிவு பூரணமாகிறது என்பதை நன்ருக உணரவேண்டும். அகங்கார, மமகாரங்களே விட்டு, எல்லா உயிர்களிடத்தும் அன்பு பூண்டு, கிருஷ்ணனேயே மனமார வழிபாடு செய்யவேண்டும்."

நிமாயியின் உபதேசத்தைக் கேட்டு, கேசவ பட்டர் மனம் முற் றும் மாறியது. ஸ்ரீசைதன்யரின் தொடர்பினுல் அவர் வாழ்விலே பெரிய திருப்பம் ஏற்பட்டது குறித்து, "உலகையே வென்றுவிட்

டோம் என்ற அந்தப் பிராம்மணரின் கர்வம் எங்கே போய் மறைந்தது? காஷ்மீர அந்தணர் நாணலைவிடப் பணிவுள்ளவரானுர்'' என்று பிருந்தாவனதாசர் குறிப்பிடுகிருர். ஈசுவர பூரியை நிமாயி சந்தித்த பிறகு அவர் உள்ளத்தில் பக்தி உணர்ச்சி மெல்ல மெல்ல வளர்ச்சி பெற்றதை மேலே சொன்ன சம்பவத்திலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது. கிருஷ்ணனிடம் பக்தி செலுத்துவதில் நிமாயியை மிகவும் ஈடுபடுத்திச் சில வருஷங்களிலே அவரை பரம பக்தராக்கியவர் ஈசுவர பூரியே ஆவர். கேசவர், நிம்பார்கர் பிரிவைச் சேர்ந்தவர்.

ஸ்ரீநிமாய், காஷ்மீரப் பண்டிதரை வெற்றிகொண்ட இந்தச் சம்பவம் அவருடைய கிழக்கு வங்கச் சுற்றுப்பிரயாணத்துக்குப் பிறகு நிகழ்ந்தது என்று கிருஷ்ணதாச கவிராஜர் எழுதியிருக்கிருர். ஆனுல் பிருந்தாவனதாசரோ கிழக்கு வங்கத்துக்கு நிமாயி செல்லும் முன்புதான் இந்த நிகழ்ச்சி நடந்தது என்று குறிப்பிடுகிருர்.

கேசவரைத் தோற்கடித்ததிலிருந்து, நிமாயின் புகழ் நாடெங்கும் பரவியது. அவருடைய மாணவர்களும் ஆதரவாளர்களும் பெருகினர்; பணமும் வெகுமதியும் அவர் காலடியில் குவிந்தன. தம்முடைய இல்லத்துக்கு வந்தவர்களை உபசரிப்பதிலும் தம்மை நாடி வந்தவர்களுக்கு உதவி செய்வதிலும் பிறரிடம் அன்பு செலுத்துவதிலும் அவர் வரம்பே இல்லாமல் நடந்துகொண்டார். அடையா நெடுங்கதவும் அஞ்சல் என்ற சொல்லும் உடையவராக அவர் இருந்தார். எப்பொழுதும் திறந்து கிடந்த அவர் வீட்டில் வறியவர்களும் தேவை உள்ளவர்களும் சென்று, உணவும் உடையும் பணமும் பெற்றுக் கொண்டே இருந்தார்கள். ஏழைகள் படும் இன்னலைக் கண்டு அவர் உள்ளம் பெரிதும் நைந்து உருகும். தினந்தோறும் பத்து இருபது சந்நியாசிகளை வரவேற்று எல்லாவித உபசாரங்களையும் அவர் தாராளமாகச் செய்து வந்தார்.

இப்படித் தர்மச் செயல்களில் ஈடுபட்டிருந்ததால் விரைவில் அவரிடம் இருந்த பொருள்கள் தீர்ந்து போயின. எனவே மீண்டும் தொடர்ந்து தான தர்மங்கள் செய்வதற்கு வேண்டிய போதுமான செல்வத்தைத் தேடுவதற்காக அவர் கிழக்கு வங்காளத்துக்குச்

செல்ல நேரிட்டது. "வீட்டுக்கு வந்த விருந்தாளிகளை உபசரித்து அன்னம் அளிக்காத கிருகஸ்தனை, உணர்ச்சியற்ற மிருகத்தைவிடக் கேவலமானவன் என்றே கருதுவேன்" என்று நிமாயி அடிக்கடி சொல்வது உண்டு.

கிழக்கு வங்கத்தில்: தம்மை நாடிவரும் மாணவர்களுக்குக் கல்வி போதிப்பதற்கும் மற்றவர்களுக்கு அறவுரை வழங்கவும் கல்லூரிச் செலவுகளுக்கும் வேண்டிய பொருளைச் சம்பாதிக்க இருபதாவது வயதில் நிமாயி பண்டிதர் கிழக்கு வங்காளத்தில் திக்விஜயம் செய்யலானார். போகும் வழியிலே ஜஸ்ஸூர் ஜில்லாவில் தல்காடியில் இருந்த லோகநாதர் இல்லத்துக்குச் சென்றார் என்று 'அத்வைத பிரகாசம்' என்னும் நூல் குறிப்பிடுகிறது.

அவர் சென்ற பல்வேறு இடங்களைப்பற்றி எந்த நூலாசிரியருமே எழுதவில்லை. பத்மா நதிக்கரையில் சிறிது காலம் அவர் தங்கினார் என்று முராரி குப்தர் முதலியவர்கள் எழுதியிருக்கிறார்கள். நூர்புர், ஸ்வர்ணகிராமம், பீதல், விதகியா போன்ற பல இடங்களுக்கு நிமாயி சென்றார் என்று நித்தியானந்ததாசர் தம்முடைய 'பிரேம விலாசம்' என்னும் நூலில் தெரிவித்திருக்கிறார்.

கல்ப வியாகரணத்துக்கு நிமாயி எழுதிய திப்பணி கிழக்கு வங்கம் முழுவதும் பெருமதிப்புடன் வியாகரண பாடபுத்தகமாக இருந்த காரணத்தால், அவர் சிறந்த நூலாசிரியர், அறிஞர் என்ற கீர்த்தி எங்கும் ஏற்கனவே பரவியிருந்தது. கிழக்கு வங்கத்துக்கு அவர் வந்திருக்கிறார் என்ற செய்தி பரவியதுமே நூற்றுக்கணக்கான மாணவர்கள் அவரை நாடிவந்து கல்வி கற்பதற்கு வேண்டி நின்றனர். அவர் சென்ற விடமெல்லாம் அனைவரும் உள்ளங் கனிந்த வரவேற்பு அளித்தனர். கிழக்கு வங்கத்தில் இருந்த பக்தி மிகுந்த செல்வர்கள் அவருக்குச் செல்வத்தை அள்ளித் தந்தனர்.

நிமாயியிடம் சென்று சாஸ்திரங்களில் தோன்றிய ஐயங்களை தெளிவு படுத்திக் கொள்ளும் என யாரோ ஒருவர் தெரிவித்ததாக, பிரசித்தி பெற்ற ரகுநாத பட்ட கோஸ்வாமியின் தகப்பனரான தபன மிஸ்ரர் என்னும் அந்தணர், கனவு கண்டார். 'சாத்யம், சாதனம் இரண்டையும் குறித்து மாறுபட்ட அர்த்தங்கள் சாஸ்திரங்களில்

இருக்கின்றனவே, இவற்றில் எது மேலானது' என்று தெரியாமல் திகைத்திருந்த தபன மிஸ்ரர் தாம் கண்ட கனவின்படி நிமாயியிடம் சென்று தம் ஐயத்தைப் போக்கும்படி கேட்டுக்கொண்டார். பகவானுடைய நாம சங்கீர்த்தனமே பக்தியின் மார்க்கமும் லட்சியமுமாகும் என்று அவருக்கு நிமாயி தெளிவுபடுத்தினர். மேலும் தபன மிஸ்ரருடைய ஆத்மிக வாழ்க்கை மலர்ச்சி பெறுவதற்காகக் காசிக்குச் சென்று தங்கும்படியும் நிமாயி ஆலோசனை கூறினர்.

ஸ்ரீ நிமாயியின் இளம் மனைவி லக்ஷ்மிதேவி கணவரை விட்டுப் பிரிந்திருந்ததால் ஆழ்ந்த சோகத்தில் மூழ்கிக் கிடந்தாள். அவள் தன் அன்புக் கணவரை மீண்டும் சந்திக்க இயலாதபடி விதி கொடுமை செய்துவிட்டது. நவத்வீபத்தில் எதிர்பாராதவிதமாகப் பாம்பு கடித்து அவள் இறந்துவிட்டாள். கணவருடைய விருப்பத்துக்கு ஏற்ப இரவும், பகலும் சாகும் வரையில் தம்முடைய மாமியாருக்கு அவள் பணிவிடை செய்துவந்தாள், அவள் இறந்த சம்பவம் நிமாயிக்கு எட்டவே இல்லை. ஓராண்டுக்குப் பிறகு, ஏராளமான தங்கம், வெள்ளி, ரத்தினக் கம்பளங்கள், விலை உயர்ந்த சால்வைகள், பொன்னுடை, பட்டாடைகள் முதலியவற்றைப் பெற்று வந்தபோது லக்ஷ்மிதேவியைக் காணமல் அவர் சொல்லமுடியாத வேதனைக் குள்ளானர். பழைய நதியாவைச் சேர்ந்த ஸ்ரீமாயாபுரியில் ஸ்ரீநிமாய் பிறந்த இடத்தில் உள்ள கோயிலில் தினசரி வழிபாட்டுக்காக, 64 வருஷங்களுக்கு முன்பு, லக்ஷ்மிதேவியின் உருவத்தைப் பிரதிஷ்டை செய்தார்கள்.

**இரண்டாவது கல்யாணம்:** கொஞ்சகாலத்துக்குப் பிறகு நவத்வீபத்தின் ஆஸ்தான பண்டிதரான சநாதன மிஸ்ரரின் இரண்டாவது பெண் ஸ்ரீ விஷ்ணுப்ரியை தேவியை ஸ்ரீநிமாயி மறுமணம் செய்துகொண்டார். ஸ்ரீநிமாயை ஆதரித்து வந்த செல்வர் புத்திமந்த கான என்பவர் தாமே கல்யாணச் செலவுகள் அனைத்தையும் ஏற்றுக்கொண்டார். விவாகம் வெகு விமரிசையுடன் கோலாகலமாக நடைபெற்றது. ஸ்ரீநிமாயியின் அழகைப் போலவே விஷ்ணுப்ரியையின் வனப்பும் எங்கும் பிரசித்தி பெற்றிருந்தது. அவளுடைய அன்பு, தயை, பிறருக்கு உதவி செய்யும் பண்பு

எல்லாம் போற்றத்தக்கனவாக இருந்தன. சகல நற்குணங்களும் பொருந்திய அவளிடம் தன்னலமற்ற பக்தியும் நிறைந்திருந்தது. இந்த இயல்புகள்தாம் துறவு வாழ்க்கையை மேற்கொள்ள விஷ்ணுப்பிரியைக்கு தூண்டுகோலாக அமைந்தன; வைஷ்ணவப் பெண்மணிகளிலே ஓர் ஒப்பற்ற ஸ்தானத்தையும் பெற்றுத் தந்தன.

நிமாயி மீண்டும் உற்சாகத்துடனும் புதிய வலுவுடனும் பேராசிரியர் பொறுப்பை ஏற்றுக் கல்லூரியை நிர்வகிக்கலானர். மத வழிபாடுகளின் சிறப்பையும் தூய்மையான வாழ்க்கை வாழ வேண்டிய அவசியத்தையும் அவர் வற்புறுத்தி வந்தார். நெற்றியில் ஒன்றும் அணியாமல் வகுப்புக்கு வந்த மாணவனை, 'திலகம் இட்டுக் கொள்ளாத பிராமணனின் நெற்றி. சவக்கிடங்குக்குச் சமமாகும்' என்று சொல்லி வீட்டுக்கு அனுப்பிச் சம்பிரதாயப்படி திலகமிட்டு வரும்படி நிமாயி அனுப்பினர்.

# 4

## கயை யாத்திரை

விஷ்ணுப்பிரியையை மணம் புரிந்துகொண்ட சில காலத்துக்குப் பின்னர், தம் தந்தைக்கும் மூதாதையர்களுக்கும் பிண்டம் அளித்துக் கர்மம் செய்வதற்காக நிமாயி கயைக்கு யாத்திரை சென்றார். கயையில் உள்ள விஷ்ணுவின் பாதத்தில் பிண்டத்தைச் சமர்ப்பிப்பதன் மூலம் இறந்து போனவர்களுடைய உலகத் தொடர்புகள் நீங்கி அவர்களுக்கு ஆத்ம சாந்தியும் ஏற்படும் என்பது பழம் நம்பிக்கை. நவத்வீபத்திலிருந்து வடமேற்கே 176 மைல்களுக்கு அப்பால் சீரா நதிக்கு அக்கரையில் உள்ள மந்தர மலையை அடைந்தார். அநேகமாக அவர் பர்த்துவான், பிர்ஹூம், பாகல்பூர் ஜில்லாக்களின் வழியாகவே சென்று அங்கே அடைந்திருக்கக் கூடும். பாகல்பூர் ஜில்லாவில் வங்க சப்-டிவிஷனில் மந்தரகிரி அமைந்திருக்கிறது. அங்கே உள்ள கோயிலுக்குச் சென்று மதுசூதனர் என்னும் பெயருடன் எழுந்தருளியிருக்கும் விஷ்ணுவை நிமாயி வழிபட்டார்.

இப்பொழுது ஜைனர்கள் வசம் இருக்கும் அந்தப் பழைய கோயிலிலிருந்து விக்கிரகம் அப்புறப்படுத்தப்பட்டு அருகில் உள்ள வம்சி என்னும் பட்டணத்தில் பிரதிஷ்டை செய்யப் பெற்றிருக்கிறது. ஜைனர்களின் பகைமைக்கும் குரூரமான விக்கிரக நாசகாரியான கால பஹாரனுக்கும் அங்கே திரிந்துகொண்டிருந்த மற்ற முஸ்லிம்களுக்கும் பயந்துதான் அநேகமாக அந்த விக்கிரகத்தை வேறு இடத்துக்குக் கொண்டு போய் இருக்கக்கூடும். முஸ்லிம்கள் அந்த இடத்தை ஆக்கிரமிப்பதற்கு முன் ஆட்சி செலுத்திய ராஜ சந்திர சின்ஹா முதலிய மன்னர்களின் காலத்திய சின்னங்கள் பல அங்கே சிதறிக் கிடக்கின்றன. இந்த மந்தரகிரியைத்தான் தேவர்களும் அசுரர்களும் மத்தாகக்கொண்டு பாற்கடலைக் கடைந்தார்கள் என்று பாகவத புராணத்தில் குறிப்பிடப் பெற்றிருக்கிறது. ஸ்ரீசைதன்ய மடத்தையும் கௌடியா மடத்தையும் முதல் முதல் நிறுவிய

பிரபுபாத ஸ்ரீபக்தி சித்தாந்த சரஸ்வதி டாகுர், மந்தரகிரிக்கு ஸ்ரீசைதன்யர் (நிமாயி) விஜயம் செய்த சம்பவத்தின் நினைவுச் சின்னமாக, பழைய கோயிலுக்கு மிக அருகில் வெகு அழகான கோயில் ஒன்றை அமைத்து, அதில் ஸ்ரீசைதன்யரின் பாதங்களை நிறுவியிருக்கிறார்.

மந்தரகிரியிலிருந்து சுமார் 80 மைல்களுக்கு அப்பால் பல்கு நதியின் அக்கரையில் இருந்த பூன்–பூன் என்னும் இடத்துக்கு நிமாயி கயைக்குச் செல்லும் வழியில் விஜயம் செய்தார். அவர் அப்படிச் செல்லும்போது கடுங் காய்ச்சல் அவரைப் பற்றிக்கொண்டது. அந்தணர்களின் பாதங்களைச் சுத்தம் செய்த தீர்த்தத்தை அருந்தியே அவருடைய ஜ்வரம் நீங்கிவிட்டது என்று சொல்கிறார்கள். தம்முடன் வந்த துணைவர்களின் தவறுதலை முன்பே கண்டித்த நிமாயி, பிராமணர்களின் பெருமையை அவர்களுக்கு உணர்த்துவதற்காகவே இவ்வாறு செய்தாராம்.

பூன்–பூன் என்னும் இடத்தை விட்டு நீங்கியதும் மகத ராஜ்யத்தின் பழைய தலைநகரான கிரிவிரஜா என்னும் ராஜகிருஹத்தை அடைந்தார். பழைய ராஜகிருஹத்துக்கு அருகில் இந்தப் புதிய நகரத்தை அஜாதசத்ருவின் தந்தை பிம்பிசாரன் நிர்மாணித்தான் என்று சரித்திரம் கூறுகிறது. இங்கே காலத்தாலும் கலையாலும் பழமையும் புகழும் பெற்ற ஜராசிந்துக வைதாக என்னும் மிகப் பிரபலமான சிற்பவேலைகள் பொருந்திய உன்னதமான கட்டிடங்களைக் காணலாம்.

ராஜகிருஹத்திலிருந்து நிமாயி நேரே கயைக்குச் சென்றார். அங்கே சக்கரவிதி என்னும் இடத்தில் உள்ள பிரம்ம குண்டத்தில் தந்தைக்குரிய சிரார்த்த காரியங்களைச் செய்தார். பிரம்ம குண்டத்துக்கு அருகில் உள்ள விஷ்ணுவின் பாதங்களை இன்றும் கணக்கற்ற அர்ச்சகர்கள் வழிபாடு செய்து வருகிறார்கள். புனிதமான விஷ்ணுவின் பாதங்களைப் போற்றிப் பக்தர்கள் பாடிய பக்திச் சுவை நிரம்பிய துதிகள் நிமாயியின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்துவிட்டன. அவருடைய பிற்கால வாழ்வில் தோன்றிய பெரிய மாறுதல்களுக்கு இது அடிப்படையாயிற்று.

"புனிதமான பாதங்களின் சக்தியைக் குறித்துப் பிராம்மணர்கள் போற்றிப் பாட ஆரம்பித்த உடனே ஸ்ரீ நிமாயி பக்திப் பரவசமானார். அவருடைய இரண்டு தாமரைக் கண்களிலிருந்தும் கண்ணீர் ஆறுக ஓடியது. தெய்விகம் நிறைந்த பாதங்களை பார்த்ததுமே அவர் உடல் முழுவதும் சிலிர்த்தது. உலகத்தின் பெரும்பாக்கியமாக, கௌர சந்திர (நிமாயி)ரின் உள்ளத்தில் தெய்விக அன்பும் பக்தியும் பரிணமித்தன. அவர் கண்களிலிருந்து இடைவிடாமல் கங்கை பெருக்கெடுத்தது. என்றும் கண்டிராத இந்த அதிசயத்தை எல்லாப் பிராம்மணர்களும் கண்டனர்" என்று இந்த அபூர்வ நிகழ்ச்சியைக் குறித்து, பிருந்தாவனதாசர் தம் நூலில் அழகாக வர்ணித்திருக்கிறார்.

**கயையில் உபதேசம்:** நிமாயியின் உள்ளத்தில் ஏற்கனவே பக்தி உணர்ச்சியைத் தோற்றுவித்திருந்த ஈசுவர பூரி இந்தச் சமயத்தில் அங்கே வந்து சேர்ந்தார். பக்தி வழியில் சென்றுகொண்டிருந்த நிமாயியுக்கு அவர் இறுதியாக உபதேசம் செய்யலானார். ஈசுவர பூரியை இங்கே நிமாயி எப்படி இதய பூர்வமாக வரவேற்றார் என்பதை அவருடைய வார்த்தைகளிலேதான் சொல்ல வேண்டும்.

"உங்கள் பாதகமலத்தைத் தரிசித்த கணமே நான் கயைக்கு வந்த முழுப் பயனையும் அடைந்துவிட்டேன். தீர்த்தத்திலே பிண்டங்களை அர்ப்பணித்ததும் அவற்றுக்குரிய ஆத்மாக்கள் விமோசனம் அடையும். யாரை எண்ணிப் பிண்டம் சமர்ப்பிக்கப்பட்டதோ அந்த ஆத்மா மட்டுமே விமோசனம் பெறும். ஆனால் உங்களைத் தரிசித்ததினால் என்னுடைய நூற்றுக்கணக்கான மூதாதையர்கள் எல்லாப் பாபங்களிலிருந்தும் உடனே விடுபட்டவர்களானார்கள். எனவே, உங்களுக்கு எவ்வகையிலும் இந்தத் தீர்த்தம் இணையாகாது; நீங்கள் இவை எல்லாவற்றுக்கும் மேலானவர்; எல்லா வரங்களுக்கும் நீங்கள் பிறப்பிடம்; சம்சார சாகரத்திலிருந்து என்னைத் தயை செய்து விடுதலை செய்துவிடுங்கள். இக்கணமே இந்த இடத்திலேயே என்னுடைய உள்ளத்தையும் உடலையும் உங்களுக்கு அர்ப்பணித்து விடுகிறேன். தாமரை மலர் போன்ற பாதங்களை உடைய கிருஷ்ணனின் மதுரமான அமுதபானத்தைப்

பருக வையுங்கள். இந்தப் பரிசைத் தவிர வேறு எதையும் நான் விரும்பவில்லை.''

நிமாயியின் வேண்டுகோளுக்கு இணங்க, ஈசுவர பூரி தசாக்ஷர மான கோபால மந்திரத்தை உபதேசம் செய்து தெய்வக் காதலை ஊட்டினுர். கயையில் மேலும் சில நாட்கள் நிமாயி தங்கினுர். அவருடைய தெய்வக் காதல் நாளுக்குநாள் வளர்ந்து வந்தது. தெய்வத்தைக் காணவேண்டும் என்ற ஆசை மிகுதியால் பொறுமை இழந்து தவித்தார்; தரையில் விழுந்து புரண்டு உள்ளத்தைத் தொடும்வகையில் கதறலானுர்; "கண்ணு! மணிவண்ணு! என் உயிரே! எங்கே சென்று மறைந்தாய்? என் உள்ளங்கவர்ந்த உயி ரோவியமே, என்னை விட்டு எங்கே சென்ருய்?'' என்று அவர் பிதற்றத் தொடங்கினுர். புகழையும் பெருமையையும் வசதிகளையும் தவிர்க்கமுடியாத தேவைகளையும் கூட உதறித் தள்ளிவிட்டு வாழ் நாளின் கடைசிவரையில் இந்தத் தெய்விகக் காதலிலேயே நிமாயி கட்டுண்டிருந்தார்.

அழவும் சிரிக்கவும் ஆனந்த நடனமிடவும் பாடவும் தன்மயம் இழக்கவும் செய்த 'நாம மந்திர'த்தின் வசியத்திலிருந்து நிமாயி ஒரு கணமும் விடுபடவில்லை. ''எந்த மந்திரத்தினுல் நீங்கள் என்னை இப்படி மாற்றிவிட்டீர்கள் ? அதனுடைய மகிமையை என்ன வென்று சொல்வேன்? அதைத் திரும்பத் திரும்பச் சொல்லும் போதெல்லாம் என் புத்தியை மயக்கி, சிரிக்கவும் அழவும் ஆடவும் வைத்து விடுகிறதே?'' என்று நிமாயி தம் குரு ஈசுவர பூரியையே வினவினுர்.

தெய்வ நினைவிலேயே பரவசமடையும் பக்தி நிலையை அடைந்துவிட்ட நிமாயி, உலகப் பொருள்களால் கிடைக்கும் இன் பங்களைப் பற்றிய ஆசை முற்றும் நழுவியவரானுர். ராதைக்கும் கிருஷ்ணனுக்கும் இடையே காதல் லீலைகள் நிகழ்ந்த பிருந்தா வனத்துக்கே சென்று தங்கிவிடவும் அவர் எண்ணினுர். அவருக்கு அருகில் இருந்தவர்கள் நிமாயியை பிருந்தாவனத்துக்குப் போக விடாமல் தடுத்தபோது, ''நீங்கள் எல்லோரும் உங்கள் வீட்டுக்குச் செல்லுங்கள். நான் இனிமேல் குடும்பத்துக்குத் திரும்பப் போவ

தில்லை. மதுரைக்குச் சென்று என் உயிரனைய கிருஷ்ணசந்திரனை நான் காண உறுதிகொண்டுவிட்டேன்" என்று அவர்களிடம் நிமாயி தெரிவித்துவிட்டார்.

ஒருநாள் அடக்க முடியாத தெய்விகக் காதலால் தூண்டப் பெற்ற நிமாயி, "கண்ணா, மணிவண்ணா! எங்கே உன்னைத் தேடுவேன்?" என்று புலம்பிக்கொண்டே, தன்னந்தனியே இரவில் மதுரைக்குப் புறப்படலானார். ஆனால், "தற்சமயம் உடனே நவத் வீபத்துக்கு திரும்பிவிடு" என்று ஓர் அசரீரி எழுந்து அவருடைய பிரயாணத்தைத் தடுத்துவிட்டது.

தம்முடைய சீடர்கள் பின்தொடர நிமாயி நவத்வீபத்தை நோக்கிப் புறப்படலானார். மாங்கீர், பாகல்பூர் வழியாக, இன்றைய பிஹாரில் உள்ள சந்தால் பர்கானாவைச் சேர்ந்த தும்கா ஜில்லாவில் இருக்கும் ராஜ்மஹாலுக்கு ஐந்து மைல் தொலைவில் உள்ள கனாய் நட்சாலாவை அடைந்தார். அங்கே இருந்த கிருஷ்ணன் கோயிலுக் குச் சென்று கனாய் என்னும் பெயரில் வழங்கிவரும் கிருஷ்ணனை வழி பட்டார். இப்பொழுது இந்தக் கோயில் ராமாயுத பிரிவினரிடம் இருக்கிறது. ஈசுவர பூரியிடம் உபதேசம் பெற்றதன் பயனாக, மாயக்குழலை இசைத்துக்கொண் டிருக்கும் பாலகிருஷ்ணனின் தரி சனத்தை ஸ்ரீநிமாயி அங்கே கண்டார்.

இந்த ஸ்தலத்துக்கு ஸ்ரீநிமாயி விஜயம் செய்ததன் நினைவாக, கனாய் கோயிலுக்கு அருகே, பிரபுபாத ஸ்ரீபக்தி சித்தாந்த சரஸ்வதி டாகுர், கண்கவர் வனப்பு மிக்க ஆலயம் ஒன்றை நிர்மாணித்து அதில் ஸ்ரீசைதன்யரின் பாதச் சின்னங்களை நிறுவியிருக்கிறார். கயைக்கும் கனாய்நட்சாலாவுக்கும் இடையே உள்ளதூரம் சுமார் 170 மைல்களேயாகும். கனாய்நட்சாலாவிலிருந்து தென்திசையே திரும்பி மூர்ஷிதாபாத் வழியாக நிமாயி, நவத்வீபத்துக்கு முற்றும் புதிய மனிதராக வந்து சேர்ந்தார்.

# 5

## பக்திப் பரவசம்

எல்லையற்ற காதல் மிகுதியால் இறைவனைக்காண வேண்டும் என்ற ஆவலின் முன்பு ஸ்ரீசைதன்யரின் பழைய இயல்புகள் யாவும் மறைந்துபோயின. கிருஷ்ணனின் நாமத்தை உச்சரிக்கும்போதெல்லாம் அவர் கண்களில் ஆனந்த பாஷ்பம் நிறைந்துவிடும்; அவர் உடல் புல்லரிக்கும்; பக்தி உணர்ச்சி மிகுதியால், பிரமை பிடித்தது போல எங்கேயோ அவர் பார்வை ஆழ்ந்துவிடும்; கிருஷ்ணனின் நாமத்தைத் தவிர வேறு எந்த வார்த்தையும் அவர் வாயிலிருந்து வெளிவராது. கயையில் நிமாயி மந்திரோபதேசம் பெற்ற பிறகு அவரிடத்தில் உலகப் பொருள்களிலும் இன்பத்திலும் வெறுப்பு ஏற்பட்டு ஆழ்ந்த தெய்விகக் காதல் மிகுதியாக வளர்ந்தது.

அவரிடம் தோன்றிய இந்த விசித்திரமான உணர்ச்சிகளையும் மன வேறுபாடுகளையும் உள்ளக் கோளாற்றின் விளைவுகள் என்று மக்கள் முதலில் எண்ணினார்கள். ஆனால் அவை ஆத்ம வளர்ச்சியின் சின்னங்கள் என்று விரைவிலேயே உணரத் தொடங்கினார்கள். மதச் சார்பற்ற கல்வி எதுவுமே அவருக்கு இப்பொழுது கவர்ச்சி குறைந்து கசக்கலாயிற்று. கல்வி மிடுக்கும் பகட்டும் அவருக்குச் சலித்து விட்டன.

கயையிலிருந்து திரும்பிவந்ததும் உடனே வெறும் கல்வி அறிவுக்குப் பதிலாக மதபோதனையைக் கல்லூரியில் புகுத்தினார். மாணவர்களுடைய போக்கையே மாற்றவும் விரும்பினார். மனித சமுதாயத்துக்கு ஆண்டவனுடன் நெருங்கிய சம்பந்தத்தைத் தரும் மத சம்பந்தமான கல்வியின் உயர்வை, தம் மாணவர்களுக்குத் தெளிவாக எடுத்துக் காட்டவும் எண்ணினார். தூய்மையான பக்தியின் அவசியத்தை எடுத்துச் சொல்வதே கல்வி, இலக்கியம் இவற்றின் உண்மையான பணியாக இருக்கவேண்டும் என்று நிமாயி எண்ணி, மேற்கொண்ட முயற்சியைப் பின்னால் வந்த

வைஷ்ணவ அறிஞர்களும் பின்பற்றினர். பகவானையும் அவருடைய செயல்களையும் குறிப்பிடாத வெறும் சொல்லடுக்குகளாக அமைக்காமல், சம்ஸ்கிருத இலக்கணத்தின் சூத்திரங்கள், சொற்கள், எழுத்துக்கள் முதலியவையும், விஷ்ணுவின் நாமங்களையும் லீலா விநோதங்களையும் குறிப்பிடுவதாக இருக்கும் வகையில் 'வியாகரண கௌமுதி', 'ஹரிநாமாம்ருத வியாகரணம்' என்னும் இரண்டு இலக்கண நூல்களை ஜீவ கோஸ்வாமியும் பால தேவ வித்யா பூஷணரும் இயற்றினர்கள்.

தம்முடைய புதிய முறைகளை மாணவர்கள் கிரகிக்கத் தவறியதால் நான்கு மாதங்களுக்குப் பிறகு வைகாசி மாதத்தில் கல்லூரியை நிமாயி மூடிவிட்டார். வைஷ்ணவர்களில் மிகச் சிறந்தவர் இவரே என்று அத்வைத ஆசார்யரும் அவருடைய வைஷ்ணவ பக்தர்களும் பேரார்வத்துடன் அவரை வரவேற்றனர்கள். நிறைந்த அறிவும் பரந்த உள்ளமும் வாய்க்கப் பெற்ற நிமாயியைப் போன்ற ஒருவர் வைஷ்ணவ தர்மம் நிலைக்க வழிகாட்டியாக இருக்க வேண்டிய அவசியம் அப்பொழுது நிறைய இருந்தது. அத்தகைய சமயத்திலேதான் அவர் வைஷ்ணவ பக்தர்களுடன் சேர்ந்து கொண்டார். அப்பொழுது நவத்வீபத்திலிருந்த வைஷ்ணவ விரோதிகள் மிகக் கடுமையான மதக் கண்டனங்களை வைஷ்ணவ தர்மத்துக்கு எதிராகக் கிளப்பிக்கொண்டிருந்ததால் வைஷ்ணவ பக்தர்கள் வாழவே முடியாத நிலையில் இருந்தார்கள்.

அன்றிலிருந்து, வைஷ்ணவ தர்மத்தைப் பின்பற்றுபவர்களிலே மிகுந்த பணிவும் அடக்கமும் நிறைந்தவராக நிமாயி விளங்கினர். பக்தர்களுக்குச் சேவை செய்வதே பகவானுக்குப் பணியாற்றுவதற்குச் சமமாகும் என்னும் தத்துவத்தை உலகத்துக்குத் தெரிவிப்பதற்காகவே ஸ்ரீவாசர், அத்வைதர், இன்னும் மற்றப் பக்தர்களுக்கு வேண்டிய எல்லாப் பணிவிடைகளையும் நிமாயியே செய்து வந்தார். தம்முடைய ஆசியையும் அருளையும் நாடிவந்த பக்தர்களின் திருவடித் துகளைச் சில சமயம் எடுத்து, நிமாயி தம் தலைமேல் வைத்துக்கொள்வார். இதைக் கண்டு ஸ்ரீவாசரும் அத்வைதரும் மற்றப் பக்தர்களும் நிமாயியை ஸ்ரீ கிருஷ்ணரின் அவதாரமாகக் கருதி அப்படியே வழிபடவும் தொடங்கினர்கள்.

மிகவும் சாதாரண நிலையில் வலிமையற்றிருந்த வைஷ்ணவப் பிரிவினரை, மற்ற மதத்தினரையும் மாற்றிவிடக் கூடிய பிரம்மாண்ட மான சக்தி பொருந்திய இயக்கமாக மாற்றியது, ஸ்ரீநிமாயி செய்த அற்புதச் செயலாகும். தம்முடைய மிக உயர்ந்த தன்மைகளாலும் அவற்றை வாழ்க்கையில் நடத்திக் காட்டியதாலுமே ஸ்ரீநிமாயி இந்த அதிசயத்தைச் சாதித்தார்.

அவருடைய ஒப்பற்ற குணங்களுக்கு மேலான தெய்விகக் காதலும் தூய்மையான உள்ளமும், வைஷ்ணவ தர்மத்துக்கு எதிராக இருந்தவர்களைக் கூட அவரிடம் அன்பு செலுத்தும்படி தூண்டின. தம்முடைய ஆத்மிக முடிவுகளிலிருந்து மயிரிழைகூடப் பிறழாமல் தம் கொள்கைகளையே நடை முறையில் நிமாயி பின்பற்றி வந்தார். அந்தக் காலத்தில் ஆட்சி செலுத்திய முஸ்லிம் கவர்னர்களைக்கூடச் சமாளித்து நிமாயி வெற்றி பெற்றதை எவருமே சாமான்யமான தாகச் சொல்ல மாட்டார்கள். அவருடைய மதக் கோட்பாடுகள் எவ்வித அரசியல் தொடர்பும் அற்றிருந்தது. ஆனால் பிரபல மடைந்து வந்த நிமாயியின் எளிய வழிபாட்டு முறையை நவத்வீப முஸ்லிம் நிர்வாகிகள் பலாத்காரத்தின் மூலம் எதிர்க்கத் தொடங் கினார்கள். இதைக் கண்டு நிமாயி சகிக்காமல் மக்களைத் திரட்டி ஆர்ப்பாட்டம் நடத்தி முஸ்லிம் கவர்னரைப் பணியவைத்து, தம்முடன் உடன்பாட்டுக்கு வரச் செய்தார்.

தர்க்க நிபுணர் என்ற முறையில் நவத்வீபத்திலிருந்த வறட்டு வேதாந்திகளின் வாதங்களை நிமாயி அடக்கினார். இளமைப் பரு வத்தில் அவர் மிக்க வனப்புள்ளவராகவும் அழகிய ஆடைகளை அணிந்து கொள்ளுவதில் விருப்பம் உள்ளவராகவும் இருந்தார். நுணுக்கமான கலைகளிலும் அவர் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்தார். அழகுணர்ச்சியையே நிமாயி தம் கவிதைகளிலும் பயன்படுத்தினார். அவருக்கு இயற்கையாக அமைந்திருந்த இனிய குரலால் கீர்த்தனங் களைப் பாடிக் கேட்பவர்களைத் தெய்விகக் காதல் உலகத்துக்கு அழைத்துச் செல்ல முடிந்தது. கடவுளுடன் உறவு கொள்ளுவ தற்கு ஏற்ற அருமையான சாதனம் பகவானின் பெருமையையும் நாமத்தையும் கீர்த்தனங்களாகப் பாடுவதே என்று கருதி, நிமாயி எப்பொழுதும் வைஷ்ணவ பக்தர் கூட்டத்திலேயே கலந்து பாடிக்

காலத்தைக் கழித்து வந்தார். கோல என்னும் கீர்த்தன இசையிலும் அங்க அசைவுகளுடன் கூடிய நாட்டியத்திலும் மக்கள் லயித்து உலக எண்ணங்களையும் செயல்களையும் மறந்துவிடலானார்கள்.

ஸ்ரீசைதன்யர் தோற்றுவித்து வளர்த்த கீர்த்தன சங்கீதம் பிற்காலத்தில் ஸ்ரீநிவாசர், நரோத்தமர், சியாமநந்தர் போன்ற வைஷ்ணவ பக்தர்களாலும் பின்பற்றப்பட்டது. புதுமையும் கவர்ச்சியும் நிறைந்த இந்தக் கீர்த்தன சங்கீதம் முழுவதும் பக்திமயமாகவே இருந்தது. ஸ்ரீசைதன்யர் வகைப்படுத்திய பக்தி நெறிகளைப் பூரணமாகக் கடைபிடிப்பவர்கள் கீர்த்தனங்களைப் பாடுவதன் வாயிலாகப் பக்தர்களின் உள்ளத்திலும் தெய்விகக் காதலையும் பரவச நிலையையும் தோற்றுவிக்க முடியும் எனத் தெளிவாகியது. கீர்த்தனங்களை நிமாயி பாடும் உச்சக்கட்டங்களில், கேட்பவர்களை மெய்மறக்கச் செய்தார். ஸ்ரீவாசருடைய இல்லத்தில் நிமாயி தினந்தோறும் கீர்த்தனங்களைப் பாடிவந்தார். சிலசமயங்களில் அவரே பட்டணம் முழுவதிலும் ஊர்வலமாகப் பஜனை கோஷ்டியுடன் சென்றார்.

இந்தக் கட்டத்தில்தான் நவத்வீபத்தில் ஸ்ரீநிமாயியின் கோஷ்டியுடன் இரண்டறக் கலந்த நித்தியானந்தரும் சேர்ந்து கொண்டார் நல்ல முஸ்லிம் குடும்பத்தைச் சேர்ந்தவரும் பிற்காலத்தில் ஸ்ரீசைதன்யரின் வைஷ்ணவ தர்மத்தில் கலந்து கொண்டவருமான ஹரிதாஸ் டாகுராவையும் நித்தியானந்தரையும் பட்டணத்தில் உள்ள ஒவ்வொரு வீட்டிலும் கிருஷ்ணநாமத்தைப் பரவச் செய்யும் பணியை மேற்கொள்ளுமாறு நிமாயி நியமித்தார்.

"இடைவிடாமல் கிருஷ்ணநாமத்தை உச்சரியுங்கள்; நாணலைவிட அடக்கமும் பணிவும் உள்ளவராக இருங்கள்; தங்களுக்குப் பிறர் மதிப்பும் மரியாதையும் அளிக்க வேண்டும் என்பதை எண்ணாமல் அனைவருக்கும் மரியாதை தாருங்கள்; மற்றவர்கள் தொல்லையும் கெடுதலும் தரும்போது முணுமுணுக்காத மரத்தைப்போலப் பொறுமையும் பிழையை மறந்து மன்னிக்கும் தன்மையையும் கொள்ளுங்கள்; தன்னை வெட்டும் போதும் கூடக் கடிந்து புகார் சொல்லாமலும் பிறரிடம் தண்ணீர் கேட்டு வாழ்வதைவிட நீரில்லாமல்

வாழ்ந்து அழிந்து விடுவதையே மேலாகக் கருதும் விருட்சத்தைப் போல வைஷ்ணவன் எவரிடமும் எதையும் யாசிக்கக்கூடாது''

இத்தகைய கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டே, ஸ்ரீ நிமாயியின் கட்டளைப்படி நித்தியானந்தரும் ஹரிதாசரும், வீட்டுக்கு வீடு ஹரிநாம மகிமையை எடுத்துச் சொல்லானுர்கள்.

**ஜகாய், மாதாய் இருவரையும் நல்வழிப்படுத்துதல்:** இவ்வாறு ஹரியின் நாமத்தை வீடுதோறும் ஹரிதாசரும் நித்தியானந்தரும் பரப்பிக்கொண் டிருக்கும் காலத்தில் ஒருநாள் தங்களுடைய பணியை நிறைவேற்றி விட்டு, ஸ்ரீ நிமாயியிடம் திரும்பி வரும்போது அவர்கள் இரண்டு கொலைக்காரர்களைச் சந்தித்தார்கள். ஜகாய், மாதாய் என்னும் இரண்டு சகோதரர்களான அவர்கள் இருவரும் தீங்கு செய்வதையே தொழிலாகக்கொண் டிருந்தார்கள். கொலை, களவு, விபசாரம் முதலிய எல்லாப் பாவச்செயல்களையும் அவர்கள் செய்திருந்தார்கள். தங்களைப் பார்த்ததுமே பயந்து ஓடாத சந்நியாசிகளையும் சாதுக்களையும் துரத்தியடித்து இம்சை செய்துவந்தார்கள். கொடுமைக்குப் பேர்போன இந்த இரண்டு பாபாத்மாக்களையும் திருத்தி நல்வழிப்படுத்துவது என்று நித்தியானந்தர் அப்போதே உறுதி கொண்டுவிட்டார்.

மற்ஜெரு நாள், தங்கள் காரியமாகச் சென்றுகொண் டிருக்கும் போது, கொலைகாரச் சகோதரர்கள் இருவரும் குடிவெறியில் வருவதை மீண்டும் அவர்கள் கண்டார்கள். மாதாயின் பெயரைச் சொல்லி அழைத்து, க்ஷேமலாபத்தைச் சாந்தமாக அவர்கள் விசாரித்தார்கள். அதனுல் ஆத்திரமடைந்த மாதாய், கீழே கிடந்த உடைந்த சட்டியை எடுத்து நித்தியானந்தரின் தலையின்மேல் வீசி எறிந்தான். எனவே அவர் மண்டையில் பலமான காயம் ஏற்பட்டது. ''உன் விருப்பப்படி எவ்வளவு வேண்டுமானுலும் என்னை அடி; கொன்றுவிட எண்ணினுலும் அப்படியே செய்; ஆனுலும் உன் பாபங்களையும் நீக்க வல்ல, ஹரிநாம சங்கீர்த்தனம் செய்'' என்று கருணை நிறைந்த வார்த்தைகளால் தம் காயத்தையும் மறந்து மாதாயை வேண்டினுர். காயத்திலிருந்து பெருகிய ரத்தத்தில் நித்தியானந்தர் கிடந்த காட்சியைக் கண்ட பிறகும்

கொலேகாரர்களின் நெஞ்சம் இளகவில்லே. அவர் மீது இன்னும் ஓரடி விழுந்திருக்கும்; ஆனல் அதற்குள், "வீதி வீதியாய்த் திரியும் சந்நியாசியைக் கொல்வதால் என்ன கிடைத்துவிடப் போகிறது" என்று சொல்லி ஜகாய் தன் சகோதரனேச் சட்டென்று தடுத்து நிறுத்திவிட்டான்.

இந்தச் சம்பவத்தைக் குறித்துக் கேள்விப்பட்ட ஸ்ரீநிமாயி அந்த இடத்துக்கு விரைந்து வந்தார். அப்பொழுது ரத்தப் பிரவாகத்தில் கிடந்த நித்யானந்தர் முகமலர்ச்சியுடன் கொலேகாரர்களுக்கு உபதேசம் செய்துகொண் டிருப்பதைக் கண்டார். உண்மையான வைஷ்ணவ சித்தாந்தத்துக்கு ஏற்ப, முழுப் பணிவுடனும் அஹிம்சை நெறியில் வழுவாமலும் கொலேகாரர்களிடம் ஆண்டவனின் பெருமையைத் தெரிவித்து நித்யானந்தர் அவர்களேத் திருத்தும் முயற்சியை மேற்கொண்டார். ஆனல் ஸ்ரீ சைதன்யரோ வெகுண்டு சுதர்சன சக்கரத்தை வரவழைத்துவிட்டார்; நித்தியானந்தரோ கொலேகாரர்களுக்காகப் பரிந்து பேசலானர் :

"தற்செயலாக ரத்தம் பெருக்கெடுத்துவிட்டது; எனக்கு எவ்விதத் துன்பமும் இல்லே; என்னேக் காப்பாற்ற ஜகாய் முன்வந்தான். எனவே, இவ்விருவருக்கும் விமோசனம் பெறும் வழியைக் காட்டுங்கள். எனக்கு ஒன்றும் நேரவில்லே. நான் சௌக்கியமாகத்தான் இருக்கிறேன்; என் பிரபுவே, தயை செய்து சாந்தி கொள்ளுங்கள்" என்று நித்தியானந்தர் ஸ்ரீநிமாயியை வேண்டிக் கொண்டார். அவருடைய பிரார்த்தனேயும், அற்புத சக்தி நிறைந்த ஸ்ரீநிமாயியின் கருணேயும் வீண் போகவில்லே. கொடுமையும் குரூரமும் மிகுந்த கொள்ளேக்காரர்களான ஜகாயும் மாதாயும் தங்கள் செயல்களுக்காக வருந்தி மனம் மாறினர்கள். திடீரென ஏற்பட்ட இந்த மாற்றம் அவர்களுடைய வாழ்க்கை முழுவதும் நீடித்திருந்தது. பாவத்தை எவ்வளவு தீவிரமாகச் செய்தார்களோ, அதே தீவிரத்துடன் பாவத்திலிருந்து விலகி நல்ல காரியங்களேயே செய்யலானர்கள்.

நித்தியானந்தர் கட்டளேப்படி கங்கை நதிக்கரையில் ஸ்நான கட்டம் ஒன்றை அவர்கள் நிறுவினர்கள். அங்கே நீராட

வரும் பக்தர்கள் எல்லோரிடமும் முன்பு தாங்கள் செய்த பாவச் செயல்களை மறந்துவிடும்படி பணிவுடன் இறைஞ்சி வேண்டிக் கொள்வதைத் தினசரி அலுவலாகவும் கொண்டார்கள். நாளடை வில் அவர்கள் சிறந்த சாதுக்களாகவும் வைஷ்ணவ பக்தர்களாக வும் ஆகிவிட்டார்கள். ஜகாயும் மாதாயும் திடீரென்று மனம் மாறிய சம்பவம், நவத்வீபத்திலிருந்த மக்கள் அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியதுடன், ஸ்ரீசைதன்யரின் வைஷ்ணவ சித்தாந்தத்துக்கு ஆத்ம பலத்தையும் அளித்தது. எனவே, பொதுமக்களிடையில் அவருடைய இயக்கத்துக்குச் செல்வாக்கு நாளுக்கு நாள் வளரலா யிற்று.

**நாட்டிய நாடகம்:**—வைஷ்ணவ சமூகத்தினரின் சமய வாழ்க் கையில், மதத்தை ஒட்டிய நாடகங்களை ஸ்ரீசைதன்யர் புகுத்தினர். பாகவத புராணத்தில் உள்ள ருக்மிணி கல்யாண நிகழ்ச்சிகளை அடிபடையாகக் கொண்ட நாடகத்தை (வங்காளத்திலேயே நடை பெற்ற முதல் நாடகம் என்று சொல்லலாம்) முதலில் ஸ்ரீசைதன்யர் நடத்தினர். ஸ்ரீ நிமாயியின் அண்டைவீட்டுக்காரரும் உறவினரும் சீடருமான சந்திரசேகர ஆசார்யரின் இல்லத்தில் நாடகம் நிகழ்ந் தது. நாடகத்துக்கு வேண்டிய ஆடை ஆபரணங்களையும் மேடை அலங்காரத்தையும் ஸ்ரீநிமாயியின் பணக்காரச் சீடரான சதாசிவ புத்தி மந்தகான் என்பவர் ஏற்றுக்கொண்டார். ஸ்ரீநிமாயியும் கதா தரரும் ஆடிய நடனங்களும் இனிய பாடல்களும் நாடகத்தை வெற்றிகரமாக்கின. நாடகத்தின் முதல் அங்கத்தில் தோன்றும் ரமாவாகக் கதாதரரும் ருக்மிணியாக ஸ்ரீநிமாயியும் வேஷந்தரித்து, அற்புதமாக ஆடிப் பாடி நடித்தார்கள்.

ஸ்ரீவாசரும், அத்வைதரும் முறையே நாரத முனிவராகவும், விதூஷகராகவும் தோன்றி மிகச் சிறப்பாக நடித்தார்கள். வைகுந்தத்தில் உள்ள துவாரபாலகர்களாக ஹரிதாசரும் முராரியும் வேஷம் தரித்துக் கொண்டார்கள். ஸ்ரீவாசர், அத்வைதர் ஆகிய இருவருடைய பாகங்களும் நிறைவேறிய பின்னர், ருக்மிணியாக ஸ்ரீநிமாயி மேடையில் காட்சி தந்தார். கிருஷ்ணனின் விரோதியான சிசுபாலனுக்கு ருக்மிணியை விவாகம்செய்து கொடுப்பதாக நிச்சயம் செய்திருந்த நாளுக்கு முந்திய தினம் கோயிலுக்குச் சென்று கொண்

டிருக்கும்போது தன்னைப் பலாத்காரமாக எடுத்துச் செல்லும்படி கிருஷ்ணனுக்கு ருக்மிணி கடிதம் எழுதும் கட்டம்.

அப்பொழுது பிரபலமாக இருந்த முகுந்த தத்தர் என்னும் பாடகர் முதல் பாட்டைப் பாடி நாடகத்தைத் தொடங்கிவைத்தார். அந்த மதுரமான பாட்டைக் கேட்டுப் பரவசமடைந்த ஸ்ரீநிமாயியின் தாயார் அப்படியே மயங்கி விழுந்துவிட்டார். மேடையில் ருக்மிணி தோன்றியதிலிருந்து அவள் மறையும் வரையில் மூன்றுமணி நேரம் பிடித்தது.

அதற்கு அடுத்த கட்டத்தில் ரமாவாக, கதாதரரும் அவளுடைய காதலன் சுப்ரபாவாக பிரம்மானந்தரும் தோன்றினர்கள். அவர்கள் நாரதரையும் அவருடைய துணைவர்களையும் சந்தித்தார்கள். நாரதரின் வேண்டுகோளுக்கு இணங்கி, கண்ணன் ஆடிய ராசலீலை நடனத்தை ரமா ஆடினுள். இந்தக் கட்டத்தில் அத்யாசக்தியாக ஸ்ரீநிமாயியும் பதாய்புத்தியாக நித்தியானந்தரும் தோன்றினர்கள். ஸ்ரீநிமாயியின் தோற்றமும் கிருஷ்ணனின் லீலா விநோதத்தைக் காட்டும் நாட்டியமும் மிகச் சிறப்பாக அமைந்தன. அன்றிரவு முழுவதும் நடைபெற்ற இந்த நாடகத்தைக் குறித்து, 'சைதன்ய பாகவத'த்தில் விரிவாகச் சொல்லப் பெற்றிருக்கிறது.

இந்த நாடகத்தில் இரண்டு முக்கிய அம்சங்கள் இருந்தன. ஒன்று, நாடகத்தின் கதைப் போக்குடன் கலந்த நகைச் சுவைச் சம்பவங்களும் வசனங்களும் சேர்ந்த நாடகப் பகுதி. மற்றொன்று. பாடல்கள், இசை, நடனம் ஆகியவை சேர்ந்தது. இந்தப் பகுதி தான் நாடகத்தின் முக்கால் பாகமாகும். இந்த நாடகத்தை நித்தியானந்தர், பிரம்மானந்தர் ஆகியவர்களின் துணையுடன் ஸ்ரீநிமாயியும் கதாதரரும் நடித்தார்கள். இதன் பிரதான தெய்வமாக, கோபிநாதரின் விக்கிரகத்தை வைத்துக் கொண்டார்கள். பழைய சம்ஸ்கிருத நாடக பாணியையே அநேகமாகப் பின்பற்றினர்கள்; பல அம்சங்களையும் புதிதாகச் சேர்த்துக் கொண்டார்கள். ஆனல் கிருஷ்ணனின் காதல் லீலைகளையே நாடகத்தின் கருவாக அமைத்தார்கள்.

அவர்கள் திறந்தவெளி அரங்கிலேயே நாடகத்தை அரங்கேற்றினர்கள். நாடகத்தைப் பார்க்க வந்திருக்கும் சபையோருக்குத்

தெரியாத வகையில் உடை அலங்கார அறையிலிருந்து, நடிகர்கள் மேடைக்குச் சென்றார்கள், அநேகமாக, வங்காள ஜோத்ரை என்னும் நாடகம் முதல் முதலாக இப்பொழுதுதான் அரங்கேற்றமாகிறது என்று சொல்லலாம். இதற்கு முன்பு இத்த கைய நாடகங்களின் தோற்றத்தைப் பற்றி, சரித்திர ஆதாரம் எதுவும் இல்லை என்றே தெரிகிறது. இந்த யூகம் சரியாக இருக்குமானல். சிறந்த முறையில் மெருகிடப் பெற்று, கலை நுணுக் கமும் அழகும் அமைந்த ஜோத்ரை நடனம் என்று ஸ்ரீநிமாயியும் கதாதரரும் நடித்த நாடகத்தை கூறலாம். அநேகமாக, இத்தகைய ஜோத்ரை நடனங்கள், சாதாரண மக்களின் ரசனைக்கேற்றபடி சிறந்த நாடகத் தன்மைகளோ கலை நுணுக்கமோ இல்லாமல் வெறும் இசை நாடகம் போலவேதான் அமைந்திருக்கும்.

கிருஷ்ண வழிபாட்டைச் சார்ந்தே ஜோத்ரை நடனங்கள், ஓரளவு அல்லது முழுவதுமே, வளர்த்து வந்திருக்கின்றன; வங்கா ளத்தில் உள்ள பிரபல மதச் சார்பான விழாக்கள் யாவுமே வங்காள ஜோத்ரை நடனங்களைப் பின்பற்றியே அமைந்திருக்கின்றன என்று 'வங்காளத்தின் பிரபல நாடகங்கள்' என்னும் அருமையான நூலில் டாக்டர் என். கே. சட்டோபாத்யாயா எழுதியிருப்பது உண்மை என்றே தோன்றுகிறது. இப்பொழுது நமக்குக் கிடைத் துள்ள சரித்திர ஆதாரங்களை வைத்துக் கொண்டு பார்க்கும்போது இந்தப் பிரபல நாடகத்தை முதல் முதலாகத் தோற்றுவித்தவர் ஸ்ரீநிமாயியே என்றுதான் கருத வேண்டும். கி. பி. 1510-இல் சந்நியாசம் பெறுவதற்குச் சில வருஷங்களுக்கு முன்பு அவர் இந்த நாடகத்தை அரங்கேற்றி யிருக்க வேண்டும்.

இத்தகைய நாடகத்தின் தோற்றம் வேதத்திலே, வசனமும் கவி தையுமாக அமைந்திருக்கிறது என்று சில அறிஞர்கள் எழுதியிருக்கி றார்கள் (வான்ஸ்ரோடர் வியன்ன ஓரியண்டல் ஜர்னல் வால்யூம், XXIII;) வங்காள ஜோத்ரை நடனங்களுடன் கீதகோவிந்தத்துக் குத் தொடர்பு காண்கிறார் ஜே. எல். க்ளீன் என்னும் அறிஞர். இவருடைய கருத்தை வான்ஸ்ரோடரும் ஆதரிக்கிறார். ஆனல் இந்தக் கொள்கைக்கு, சரித்திரச் சான்றுகளோ, காலக்கிரம ஆதாரமோ கிடையா.

யாத்ரா என்பதற்கு மதச் சார்பான ஊர்வலம் என்று பொருள். ஸ்ரீஜகந்நாதரின் ரத யாத்திரை, ஸ்நான யாத்திரை, ஸ்ரீகிருஷ்ண னின் தோலி யாத்திரை, குஞ்ச யாத்திரை, ஜன்ம யாத்திரை, ராஸ யாத்திரை, ஸ்ரீராமனின் விஜய யாத்திரை போன்று பல யாத்திரைகள் ஆங்காங்கு விழாக்களாக நடத்தப் பெறுகின்றன.

இத்தகைய மதச் சார்பான யாத்திரைகளை, நாடகங்களாக மாற்றி அமைத்த பெருமை ஸ்ரீநிமாயியையே சாரும். ஸ்ரீகிருஷ்ண னின் ஜன்ம யாத்திரையின் போது ஸ்ரீநிமாயி நந்தோற்சவத்தை நிகழ்த்தினர். இலங்கையில் ராவணனைக் கொன்ற பின்னர், வெற்றி யுடன் ஸ்ரீராமர் திரும்பியதை நினைவூட்டும் விஜய யாத்திரை, ராஸ யாத்திரை, தீபாவளி, உத்தான துவாதசி, மற்றும் பல விழாக்களி லும் ஸ்ரீநிமாயி இத்தகைய நாடகங்களை நடத்தினர்.

ஸ்ரீகிருஷ்ணனின் ஜன்ம யாத்திரையின் போது, ஸ்ரீசைதன்யரே விரஜையின் கோபிகையாக நாடகத்தில் தோன்றினர். அவருடைய சிஷ்யரான கன்னையா குதியா என்பவர் நந்தனாகவும் சக்கரவர்த்தி பிரதாபருத்திரனும் மற்ற முக்கியமான சிஷ்யர்களும் வெவ்வேறு பாத்திரங்களை ஏற்றும் ஜோத்ரை நாடகத்தை நடத்தினர்கள். நீண்ட கழிகளை ஏந்திக்கொண்டு, ஸ்ரீசைதன்யரும் நித்தியானந் தரும் ஆயர்களைப் போலவே நடித்தார்கள்.

விஜய யாத்திரை விழாவின் போது, ஸ்ரீசைதன்யர் ஹநுமான் வேஷத்தைத் தரித்துக்கொண்டார். ஸ்ரீசைதன்யருக்குச் சந்தோஷம் ஏற்படுவதற்காகவே, ஹீரா பஞ்சமி விழாவைச் சிறந்த முறையில் பிரதாபருத்திரன் நடத்தச் செய்தான். நமக்குக் கிடைத்துள்ள சான்றுகளிலிருந்து, வங்காள ஜோத்ரை நடனங்களின் தோற்றத் துக்கு அல்லது அதன் உறுதியான வளர்ச்சிக்கு மற்றவர்களைக் காட்டிலும் ஸ்ரீசைதன்யர் முக்கிய காரணமாக இருந்தார் என்று ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

**காஜியின் மதமாற்றம்:** அத்வைதரின் சிறிய வைஷ்ணவ கோஷ்டி, ஸ்ரீநிமாயியின் தலைமையில் மிகப் பெரிய சமூகமாக வளர்ச்சி பெற்றது. நித்யானந்தர், அத்வைதர், ஸ்ரீவாசரின் நான்கு சகோதரர்கள், சந்திரசேகரர், ஸ்ரீதரர், கதாதரர், முகுந்த தத்தர்,

வாசுதேவ தத்தர், முராரி குப்தர், சுக்லாம்வர பிரம்மசாரி, கருட பண்டிதர், கோபிநாத ஆசாரியர், வனமாலி, ஸ்ரீமான் பண்டிதர், ஹரிதாசர், பிரம்மானந்தர், புண்டரீக வித்யா நிதி, இன்னும் பல தேர்ந்தெடுத்த சீடர்களுடன் ஸ்ரீவாசரின் இல்லத்தில் கோஷ்டி கூடியது. கடல் போன்ற கூட்டத்தில் தினந்தோறும் ஸ்ரீ நிமாயி கீர்த்தனங்களைப் பாடலானர். கீர்த்தனங்களைக் கேட்க வந்தவர்களுள் ஸ்ரீநிமாயியின் தத்துவங்களை ஏற்றுக்கொண்டவர்களுடைய எண்ணிக்கை வெகு விரைவில் அதிகரிக்கத் தொடங்கியது. ஸ்ரீநிமாயி நடத்தும் கீர்த்தனையைக் கேட்கப் பலரும் விரும்பிவந்தனர். ஏழையும் செல்வந்தரும் வீட்டில் உள்ள எல்லோரும் நாம மந்திரத்தைப் பாடும்படி செய்ய வேண்டும் என்று ஸ்ரீநிமாயி கேட்டுக்கொண்டார். பணிவுக்கு அறிகுறியாகவும் பிரார்த்தனையாகவும் பற்களுக்கிடையே தர்ப்பையை வைத்துக் கொண்டு பகவான் நாமத்தின் பெருமையை ஸ்ரீநிமாயி மக்களுக்கு எடுத்துரைத்தார். மனத்தைத் தொடும்வகையில் தெய்வ வழிபாட்டுக்கு அவர் விடுத்த எளிய வேண்டுகோளுக்கு இணங்கி, நகரத்தில் உள்ள ஒவ்வொரு குடும்பத்தினரும் தினந்தோறும் வந்து கோலம், தாளம், சங்கு இவற்றுடன் நாம மந்திரங்களைப் பாடலானர்கள்.

வைஷ்ணவ இயக்கம் மேலும் பலப்படுவதற்காக ஸ்ரீநிமாயி துணிச்சலான ஒரு காரியத்தை மேற்கொண்டார். முஸ்லிம் மன்னர்களின் எதிர்ப்புக்கும் கொடுமைக்கும் அஞ்சி நெடுநாட்களாக ஹிந்துக்கள் தங்கள் உற்சவங்களையோ விழாக்களையோ மதசம்பந்தமான வைபவங்களையோ வெளிப்படையாக நடத்தாமல் இருந்தார்கள். நவத்வீபத்தில் அப்போது காஜி என்னும் முஸ்லிம் நீதிபதியாகவும் பிரதம நிர்வாகியாகவும் அதிகாரம் செலுத்திவந்தார். நவத்வீபத்தில் ஸ்ரீநிமாயியின் வைஷ்ணவ இயக்கம் நாளுக்கு நாள் பலம் பெற்று வருவதைக் கண்டு, பலாத்காரத்தைப் பிரயோகித்தாவது அதை ஒடுக்க அவர் எண்ணினர். அதற்கேற்ப வைஷ்ணவ இயக்கம் பரவுவதை எதிர்க்கும் ஹிந்துக்களும் காஜியின் கோபத்தைக் கிளறிவிட்டார்கள்.

ஒருநாள் மாலை, காஜியும் அவரைச் சேர்ந்தவர்களும் கீர்த்தனைக் கோஷ்டியைத் தாக்கி, அவர்களுடைய கோலங்களை உடைத்து,

கதவுகளைச் சின்னபின்னமாக்கினர்; கீர்த்தனங்களைப் பாடுவோர்களின் உடைமைகள் பறிமுதல்செய்யப்படும் என்றும் ஜாதிப்பிரஷ்டம் செய்யப்படுவார்கள் என்றும் கடுமையான உத்திரவையும் பிறப்பித்தார்கள். இந்தத் தாக்குதலேயும் உத்திரவையும் கண்டு நவத்வீப மக்கள் பீதியடைந்தனர். ஆனல் மத சுதந்திர உணர்ச்சியுடன் பொறுமையையும் தயையையும் பின் பற்றிவரும் ஸ்ரீநிமாயி, மக்களுக்கு ஆறுதல் வார்த்தைகளைச் சொன்னர். காஜியின் அடக்கு முறையை எதிர்த்து மக்களைத் திரட்டி, பெரிய ஆர்ப்பாட்டத்துக்கு ஏற்பாடு செய்யலானர்.

ஸ்ரீநிமாயியின் முன் இரண்டே வழிகள் தாம் இருந்தன. ஒன்று, காஜியின் உத்திரவுகளுக்குப் பணிந்து வைஷ்ணவ இயக்கத்தை விட்டுவிட வேண்டும் அல்லது பிற மதத்தை ஒறுக்கும் முறைகளை விட்டு விடும்படி காஜியை வற்புறுத்தவேண்டும். உத்திரவுகளுக்குப் பணியாமல் மிகவும் தைரியத்துடன் கீர்த்தன கோஷ்டியை நடத்திச் சென்று காஜியைச் சந்திப்பது என்று ஸ்ரீநிமாயி உறுதி கொண்டுவிட்டார்.

ஸ்ரீநிமாயியின் தீர்மானம் பட்டணம் முழுவதும் தெரியலாயிற்று. வீடுகளை அலங்கரித்து, தீபங்களால் ஒளிபெறச் செய்யும்படி எல்லோரையும் ஸ்ரீநிமாயி கேட்டுக்கொண்டார். தீவர்த்திகளுடன் கீர்த்தனக் கோஷ்டிக்குச் சாரிசாரியாக மக்கள் வந்து கலந்து கொள்ளும்படி செய்தார். காஜியின் முறையற்ற உத்திரவுகளுக்குக் கண்டனம் தெரிவிக்கும் வகையில் ஆயிரக்கணக்கில் சங்கீர்த்தனத்துடன் கோஷ்டி கோஷ்டியாக ஸ்ரீநிமாயியின் வீட்டுக்கு முன் கூடினர்கள். அஹிம்சா முறையில் ஒத்துழையாமை இயக்கமாக நாம சங்கீர்த்தன கோஷ்டிகள் பட்டணத்தின் வீதிகளில் ஊர்வலமாகச் செல்லத் தொடங்கின.

ஆயிரக் கணக்கில் குழுமிய நாம சங்கீர்த்தன கோஷ்டிகளை ஸ்ரீநிமாயி நான்கு பிரிவுகளாக வகுத்துக் கொண்டார். முன்னணி கோஷ்டிகளுக்கு ஸ்ரீ அத்வைதரையும், இரண்டாவது பிரிவுக்கு, ஏற்கனவே அமுவா முலுகா காஜியால் இன்னல்களையும் பல குரூரமான தண்டனைகளையும் அநுபவித்த ஹரிதாச டாகுரா என்னும் பக்தரை

யும், மூன்ருவது கோஷ்டிக்கு ஸ்ரீவாசரையும் தலைவர்களாக ஸ்ரீநிமாயி அமைத்தார். அந்தந்த கோஷ்டித் தலைவர்கள் பக்திப் பரவச நிலையில் நடனமாடிக்கொண்டு முன்னே செல்ல, நாம சங் கீர்த்தன கோஷ்டிகள் இசை முழக்கத்துடன் தெருவெல்லாம் அதிரச் சென்றனர். ஸ்ரீநிமாயியும் நித்தியானந்தரும் கதாதரரும் இந்தப் பிரம் மாண்டமான ஊர்வலத்தின் கடைசியில் பகவான் நாமங்களை உச் சரித்துக் கொண்டே எல்லோரையும் உற்சாகப்படுத்திக்கொண்டு சென்ருர்கள். முன்னணிக் கோஷ்டியை ஹரிதாசரே தலைமை வகித்து நடத்தினர் என்று கிருஷ்ணதாசர் தம்முடைய சைதன்ய சரித்திரத்தில் குறிப்பிட்டிருக்கிருர்.

நாம சங்கீர்த்தனக் கோஷ்டிகளின் ஊர்வலம் மிகப் பெரியதாகி விட்டதால் இன்னும் பல பிரிவுகளாகப் பிரிக்க நேரிட்டது. நெடு நாட்களாகப் பல கொடுமைகளுக்குட்பட்ட ஹிந்து சமூகத்தினர் ஊக்கமும் உணர்ச்சியும் பெறும் வகையில் ஸ்ரீநிமாயி அற்புத மான நடனமொன்றை ஆடினுர். அந்த நடனத்தைக் கண்ட மக்களுக்கு அளவற்ற உற்சாகம் ஏற்பட்டது. மதத்துக்குக் கௌரவம் குறைந்து ஆத்மிகத்துக்குச் சோதனை ஏற்பட்ட அக் காலத்தில் ஸ்ரீநிமாயியின் உத்தண்ட நடனம் மக்களுக்கு அஞ்சாத திடசித்தத்தையும் உற்சாகத்தையும் அளிக்கத் தவறவில்லை.

ஊர்வலத்தினரின் உற்சாகம் கரைகடந்து சென்றது; ஆண் டவனிடம் வைத்திருந்த பக்தி உணர்ச்சி பெருக்கெடுத்தோடியது; காஜியின் இருப்பிடத்தை நோக்கிச் செல்லச் செல்ல, கூட்டத்தினர் ஹரி ஹரி என்றும் ராமராம என்றும் உரத்த குரலில் கூவத் தொடங்கினுர்கள். சில சமயங்களில் காஜிக்கு விரோதமான கோஷங்களும் எழுந்தன; சிலர் முஷ்டியை உயர்த்தியும் கால்களால் தரையை உதைத்தும் தங்கள் உணர்ச்சியை வெளிக்காட்டினர். மத சுதந்திரத்தை வேண்டி மக்களின் கருத்தை ஒன்றுபடுத்தும் அரிய சந்தர்ப்பமாக இதை ஸ்ரீநிமாயி பயன்படுத்திக்கொண்டார். ஸ்ரீநிமாயியின் இல்லத்திலிருந்து புறப்பட்ட இந்த ஊர்வலம் பாகீ ரதி நதிக்கரையோடு. கங்காநகர் வழியாகச் சென்று சிமூலியாவை அடைந்தது. அங்கேயிருந்து காஜியின் இருப்பிடத்தை நோக்கி பிரதான பாதையிலே சென்றது.

தம்முடைய வாசலிலே மிகப் பிரம்மாண்டமான ஜனத்திரள் கூடுவதைக் கண்டு காஜி பிரமித்து விட்டார். சங்கீதத்துடன் இணைந்த இந்த ஆர்ப்பாட்டத்தின் காரணம் என்ன என்று காவலர்களை அனுப்பிக் காஜி விசாரித்தார். விஷயத்தைத் தெரிந்ததும் உடனே உள்ளே எவரையும் அநுமதிக்கக் கூடாது என்று வாயிற்கதவுகளை மூடும்படி உத்திரவிட்டார். ஆனால் காவலர்களின் முயற்சி பயன் அளிக்கவில்லை. ஸ்ரீநிமாயியின் நாமசங்கீர்த்தன கோஷ்டி காஜியின் அரண்மனைக்குள் புகுந்து விட்டது. போகும் வழியில் இருந்த மரம் செடி கொடிகள் நாசமாயின; அரண்மனையின் முன்பிருந்த அழகான தோட்டம் முழுவதும் உருக் குலைந்தது. உத்தியான இல்லங்கள் யாவும் சின்ன பின்னமாயின.

காஜியையும் அவருடைய அரண்மனையையும் தீக்கிரையாக்குங்கள் என்று ஸ்ரீநிமாயி கட்டளையிட்டதாகவும் நவத்வீபத்திலிருந்த முஸ்லிம்களை ஒழித்து விடுவதாகப் பயமுறுத்தினதாகவும் ஆனால் எந்தவிதமான ஹிம்சையையும் மேற்கொள்ளக்கூடாது என்று அவர் அருகில் இருந்தவர்கள் சொல்லித் தடுத்துவிட்டார்கள் என்றும் 'சைதன்ய பாகவதம்' சொல்கிறது. கூட்டத்திலிருந்த யாரோ சில முரடர்களே காஜியின் தோட்டத்திலும் அரண்மனைக்குள்ளும் நாசம் செய்தனர் என்று கிருஷ்ணதாச கவிராஜர் சொல்கிறார். அப்போது காஜியின் அரண்மனை வாசலில் ஸ்ரீநிமாயி அமர்ந்து காஜியைப் பேட்டி காண்பதற்காக ஒருவரை அனுப்பினார். காஜியும் மிகுந்த மரியாதையுடன் ஸ்ரீநிமாயியை வரவேற்றார்.

"உங்கள் இல்லத்துக்கு விருந்தாளியாக வந்தவருக்கு வாசல் திறவாமல் ஏன் மூடி வைத்தீர்கள்?" என்று காஜியை ஸ்ரீநிமாயி வினவினார்.

"கோபத்துடனும் ஆத்திரத்துடனும் நீங்கள் வந்ததாலேயே அப்படிச் செய்தேன்" என்று காஜி பதில் அளித்தார்.

ஸ்ரீநிமாயியின் பாட்டனார் நீலாம்பர சக்ரவர்த்தியுடன் இருந்த நெருங்கிய தொடர்பை எண்ணி காஜி, தன்னுடைய மருமகனைப் போலப் பிரியமாக ஸ்ரீநிமாயியுடன் பேசலானார்.

இருவருக்கும் இடையே பசு வதை சம்பந்தமாக விவாதம் எழுந்தது.

"பசுவின் பாலை நீங்கள் அருந்துவதால், உங்களுக்குப் பசு தாய்க்குச் சமமாகிறது. நிலத்தை உழுது பண்படுத்தி விளைச்சலுக்கு உதவுவதால் எருது தகப்பனுக்குச் சமம். அப்படியிருந்தும் நீங்கள் ஏன் அவற்றைக் கொன்று உண்ணுகிறீர்கள்? இது நியாயமா?" என்று ஸ்ரீநிமாயி கேட்டார்.

"உங்களுடைய வேதங்கள், புராணங்கள் இவற்றைப்போலவே எங்களுக்குக் குரான் புனிதமான நூல். இல்லறம், துறவறம் இரண்டையும் அது எங்களுக்குப் போதிக்கிறது. உயிருள்ளவற்றைக் கொல்வதைத் துறவு வழி மட்டுமே கண்டிக்கிறது. இல்லற வழி உயிருள்ளவைகளைக் கொல்வதை ஆமோதிக்கிறது. எனவே எங்களுடைய சாஸ்திரப்படி நாங்கள் பிராணிகளைக் கொல்வதில் பாவம் எங்கே இருக்கிறது? பசுக்களை வேள்விக்காகக் கொல்வதைக்கூட உங்கள் வேதத்தில் சொல்லியிருக்கிறது. அவ்விதமே சில ரிஷிகளும் வேள்விகள் செய்திருக்கிறார்களே!" என்று காஜி ஸ்ரீநிமாயிக்கு மறுமொழி தந்தார்.

"பசுவதை செய்வதை வேதங்கள் தடைசெய்திருக்கின்றன. ஹிந்துக்கள் எல்லோரும் அதைப் பூரணமாகப் பின்பற்றுகிறார்கள். வேதங்களிலும் புராணங்களிலும் பலியிடுவதைப்பற்றிச் சொல்லியிருப்பது உண்மையே. அவ்விதம் பலியாகக் கொடுத்த உயிர்களை மீண்டும் உயிர்ப்பிக்கும் சக்தி உள்ளவர்களே அவ்விதம் செய்துவந்தார்கள். வற்றிய வயசான பசுக்களுக்குப் புனர்வாழ்வு அளிப்பதற்காகவே அவற்றை முனிவர்கள் பலிகொடுக்கச் செய்தார்கள். இந்த முறையிலே வாயில்லாத பிராணிகள் தங்கள் இழந்த சக்தியைப் பெறமுடிந்தது. இதனால் க்ஷேமம் விளைந்ததே தவிர அழிவு ஏற்படவில்லை. உங்களால் கொல்ல முடிகிறதே தவிர புனர்ஜன்மம் அளிக்க இயலுவதில்லை. எனவே, நீங்கள் நரகத்திலிருந்து ஒருகாலும் தப்பமுடியாது" என்று ஸ்ரீநிமாயி விளக்கமாக எடுத்துரைத்தார்.

ஸ்ரீநிமாயியின் பதிலைக் கேட்டதும் பகவான் நாராயணனாகவே அவரைக் காஜி எண்ணி, வைஷ்ணவ தர்மத்தையும் தழுவி,

கிருஷ்ண, ஹரி ராம நாமங்களைக் கூறத் தொடங்கினர் என்று சொல்லப்படுகிறது.

கீர்த்தனைகளைப் பாடும் கோஷ்டியினரிடமிருந்து கோலத்தைப் பறித்துக் கிழித்து, நாம சங்கீர்த்தனத்துக்குத் தடை உத்திரவு பிறப்பித்த அன்று, நரசிம்ம மூர்த்தி இரவுச் சொப்பனத்தில் வந்து மார்பிலே உட்கார்ந்து நகங்களால் கிழித்துக்கொண்டு. "என்னுடைய கோலத்தைக் கிழித்ததுபோல உன் மார்பைப் பிளந்துவிடுவேன், என் நாம சங்கீர்த்தனத்தை நிறுத்தியதுபோல உன்னுடைய உயிர்த் துடிப்பையும் நிறுத்தச் செய்திடுவேன்" என்று கர்ஜனை செய்தார் என்று காஜி சொல்லித் தன்னுடைய மார்பிலே இருந்த நக அடையாளங்களையும் ஸ்ரீநிமாயிக்குக் காண்பித்தார்.

நாமசங்கீர்த்தனத்தைத் தடுத்து நிறுத்திய மறுகணமே திடீரென்று தங்கள் முகத்துக்கு எதிரே தீப்பிழம்பு தோன்றித் தாடி மீசையைச் சுட்டுச் சாம்பலாக்கி முகத்தையும் புண்ணாக்கிவிட்டு ஆச்சரியமாக மறைந்ததை அன்றே தம்முடைய காவலாளர்கள் தெரிவித்தாகவும் காஜி சொன்னர். அந்தமாதிரிச் சம்பவம் நேர்ந்த போது சில காவலாளர்கள் ஹரி நாமத்தைத் திரும்பத் திரும்ப உச்சரித்தார்களாம். பகவானுடைய நாமங்களான கீர்த்தனங்களை ஸ்ரீநிமாயி இயற்றி, சாஸ்திரங்களுக்கு விரோதமாகக் கீழ்ஜாதிக் காரர்களுக்குக் கற்றுக் கொடுத்துச் சிறிதும் பயமின்றிப் பாடும்படியான உரிமையை வழங்கிவிட்டார் என்று சில ஜாதி ஹிந்துக்கள் முறையிட்டனர் எனவும் ஸ்ரீநிமாயியைக் கண்டிக்கவும் கீர்த்தனங்களைப் பாடுவதை நிறுத்தவும் அவர்கள் வேண்டிக் கொண்டதாகவும் காஜி ஸ்ரீநிமாயிடம் தெரிவித்தார்.

கடைசியில், "தங்களுடைய கருணையால் என்னுடைய தீய வினைகள் யாவும் ஒழிந்து போய்விட்டன. உங்களிடம் வாழ்நாள் முழுவதும் பக்தி செலுத்தும்படியாக அருள்புரியுங்கள்" என்று காஜி ஸ்ரீநிமாயியிடம் பிரார்த்தித்துக் கொண்டார். நவத்வீபத்தில் இனி மேல் நாம சங்கீர்த்தனத்துக்குத் தடை விதிக்காதபடி தம்முடைய சந்ததியாரைக்கூடக் கட்டுப்படுத்திவிடுவதாக, ஸ்ரீநிமாயிக்கு காஜி வாக்குறுதி தந்தார். பின்னர் ஸ்ரீநிமாயியின் ஊர்வலத்திலும் காஜி

கலந்துகொண்டார். இப்பொழுதும் வாமன்புகூரில் உள்ள அந்தக் காஜியின் சமாதிக்கு ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சென்று மதிப்பும் கௌரவமும் செலுத்தி வருகிருர்கள்.

வெற்றி பெற்ற ஸ்ரீநிமாயியின் நாம சங்கீர்த்தன கோஷ்டி, சங்கு குளிப்பவர்கள், நெசவாளர்கள் ஆகியோர் வாழும் இடங்கள் வழியாகச் சென்றது. ஊர்வலம் போகும் வீதிகளின் இரு பக்கங்களிலும் வீடுகளில் விளக்குகளை ஏற்றிவைத்தனர். ஒவ்வொரு வாயிலிலும் வாழை மரங்களையும் தேங்காய்களையும் கட்டி அழகு செய்து புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்த பூரண கும்பங்களைக் கொண்டு பக்தமணிகளுக்கு வரவேற்புகள் அளிக்கப்பெற்றன. தெருவெங்கும் நீர் தெளித்துத் துப்புரவாக இருந்தது. எங்கும் நறுமணம் கமழ்ந்தது; மலர்களும் நிறைந்து கிடந்தன; ஸ்ரீநிமாயியின் மேல் எல்லாத் திசைகளிலிருந்தும் மலர்மாரி பொழிந்த வண்ணமாகவே இருந்தார்கள். அவருக்கு அணிவிக்கப் பெற்ற மலர் மாலைகளுக்குக் கணக்கே இல்லை. கடிகாச்சா, பாததங்கா, மஜிதியா போன்ற முக்கியமான இடங்கள் உட்பட பட்டணம் முழுவதும் ஊர்வலம் சென்றது.

தங்கள் மதத்தைக் காப்பாற்றிய மகானைக் கௌரவிப்பதற்காக மூலை முடுக்கிலிருந்தவர்கள் எல்லோரும் அங்கங்கே கூடிவிட்டார்கள். தங்களைக் கடந்து ஸ்ரீநிமாயி செல்லும்போது இளைஞர்களும் கிழவர்களும் ஆண்களும் பெண்களும் ஊரில் உள்ள அனைவருமே அவருக்குத் தலைவணங்கி மரியாதை செய்தார்கள். ஸ்ரீநிமாயியின் பெருமையையும் புகழையும் உலகுக்கே தெரிவித்துக் கொண்டு ஊர்வலம் ஸ்ரீநிமாயியின் இல்லத்தைக் கடைசியில் அடைந்தது. மற்றவர்களை வைஷ்ணவ தர்மத்தில் ஈடுபடுத்துவதற்காகவும் பக்தர்களிடம் உற்சாகம் குன்ருமல் இருப்பதற்காகவும் இந்தப் பெரிய ஆர்ப்பாட்ட ஊர்வலம் ஸ்ரீநிமாயியுக்குச் சிறந்த சாதனமாக அமைந்தது. அவருடைய கோட்பாடுகளைப் பின்பற்றுகிறவர்கள், ஆதாவாளர்கள் இவர்களுடைய எண்ணிக்கையையும் அந்தரங்க சுத்தியையும் இந்த மறக்கமுடியாத ஊர்வலத்திலிருந்து தெரிந்து கொள்ள முடிந்தது.

கயையிலிருந்து திரும்பிய இரண்டு வருட காலத்திலேயே, ஸ்ரீநிமாயியைத் தெய்வமாகவே எண்ணி வழிபட்ட வைஷ்ணவப் பிரி

வினர் மட்டும் அல்லாமல், நகரத்து மக்களில் அநேகமாக எல்லோருமே அவரை இந்த யுகத்தின் மகானுக எண்ணிப் பாராட்டத் தொடங்கினுர்கள். உயர்ந்த குல ஹிந்துக்களைப் போலவே தாழ்ந்த குல மக்களையும் ஸ்ரீநிமாயி சமமாகக் கருதி அன்பு பாராட்டியதே அவருடைய விரைவான வெற்றிக்குக் காரணமாகும். ஹிந்து சமூகத்தில் உயர்ந்த நிலையில் இருந்த மக்களிடையே காண இயலாத தூய்மையான வைதீக நெறியுடன் அவர் வாழ்ந்து வந்தார். தாழ்ந்தவர்கள் என்று பிறரால் சொல்லப்படும் மக்களிடையே அர்ச்சகர்கள் கொண்டிருந்த வெறுப்பு, அறிவாளிகளிடம் நிலவியிருந்த குறுகிய மனப்பான்மை இவை எதுவும் கொஞ்சமும் அவரிடம் இருக்கவில்லை. ஸ்ரீநிமாயியின் இந்த இயல்புகள் சாதாரண மக்களின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டன. மேலும் அவருடைய ஆழ்ந்த கல்வி, பண்பாடு, ரம்மியமான தோற்றம், வசீகரசக்தி, பக்தி முதலிய பண்புகளும், எல்லாவற்றையும் விட மேலான தெய்வ பக்தியும் மக்களை வெகுவாகக் கவர்ந்தன.

காஜியின் மத வெறியை எதிர்த்து வெற்றிகரமாக நடத்திய போராட்டத்திற்குப் பிறகு அவருடைய புகழ் பன்மடங்கு பெருகியது; வைஷ்ணவ இயக்கத்திலும் ஏராளமாகப் பலரும் சேரலானுர்கள். அவருடைய ஒவ்வொரு செயலிலும் பகவானுடைய தன்மையை மக்கள் காணத்தொடங்கினுர்கள். வங்காள மன்னனின் இரண்டு மந்திரிகளான சகர மல்லிகாவும் தவிரகாசாவும் ஸ்ரீநிமாயியின் பெருமையை உணர்ந்து கௌரவத்துடன் கடிதமும் எழுதினுர்கள். ஸ்ரீநிமாயியைத் தரிசித்து வழிபடுவதற்கு அநேகமாக ஸ்ரீவாசரின் இல்லத்தில்தான் சீடர்கள் கூடுவார்கள். முராரிகுப்தர், அத்வைதர், சுக்லாம்பரர் போன்றவர்களின் இல்லங்களிலும் ஸ்ரீநிமாயி தம்முடைய மச்ச, கூர்ம, நரசிம்ம அவதார வடிவங்களைப் பக்தர்களுக்குக் காட்சி தந்தார் என்று சொல்லுகிருர்கள்.

நேர்மையும் தூய்மையும் நிறைந்த வாழ்க்கை நடத்தி பகவானுடைய நாமங்களை உள்ளன்புடனும் பக்தி சிரத்தையுடனும் உச்சரிப்பதே சாலச்சிறந்தது என்பதுவே ஸ்ரீசைதன்யர் மக்களுக்குச் செய்த உபதேசமாகும். உலகம் முழுவதும் ஏற்றுக்கொள்ளக்கூடிய பொதுவான கொள்கையிலிருந்துதான் ஸ்ரீநிமாயியின் வைஷ்ணவ

தர்மத்தின் சாரம் மலர்ந்திருக்கிறது. தனிமனிதனின் வளர்ச்சியில் அவர் நம்பிக்கையுள்ளவர். ஜாதி, குல, குடும்பம் ஆகியவற்றைக் கடந்த நிலையையே அவர் நாடினர். அதனுல்தான் வறட்டு தத்துவ வாதிகளும் சுயநலமிக்க அர்ச்சகர்களும் பலாத்காரத்தை உபயோகித்தாவது அவருடைய வைஷ்ணவ தர்மத்தை எதிர்க்க முற்பட்டார்கள்.

அர்ச்சகர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள் ஆகிய எல்லோருடைய எதிர்ப்பையும் சகிக்கமுடியாமல்தான், உலகைத் துறந்து தம்மையே தியாகம் செய்து அவர்களுடைய ஒத்துழைப்பையும் ஆதரவையும் பெற ஸ்ரீநிமாயி முடிவுக்கு வந்தார். எனவே ஹிந்துக்களின் உள்ளத்தைக் கவருவதற்குச் சந்நியாசி ஆவதைத் தவிர வேறு வழி இல்லை என்பதை உணர்ந்து அவ்விதமே செய்வது என்று தீர்மானத்துக்கு வந்தார். உடனே ஸ்ரீநிமாயி முகுந்த தத்தர், கதாதர பண்டிதர் முதலியவர்களுக்குத் தம்முடைய கருத்தைத் தெரிவித்தார். இந்தச் செய்தி அவருடைய சீடர்களுக்குப் பெரிய அதிர்ச்சியைத் தந்தது. ஸ்ரீநிமாயியின் தொடர்பும் அவருக்குச் சேவை செய்யும் வாய்ப்பும் இல்லாமல் போய்விடுமே என்று அவர்கள் கலங்கினர். ஸ்ரீநிமாயி துறவை மேற்கொள்ளப் போகிருர் என்ற தகவலைக் கேட்டு அவர் அன்னை மிகுந்த சோகமெய்தினள். ஏனெனில் மூத்த புதல்வன் விசுவரூபர் குடும்பத்தைவிட்டு விலகிச் சந்நியாச மார்க்கத்தில் சென்ற பின்னர் அவருக்கு வாழ்க்கையில் நம்பிக்கை தந்து வந்தவர் ஸ்ரீநிமாயியே ஆவர். தம் அன்னைக்குப் பகவானை அடையும் வழியைக் காண்பித்துத் தக்க வகையில் ஸ்ரீநிமாயி ஆறுதலைச் சொல்லித் தேற்ற முயன்ருர்.

## 6

# ஸ்ரீநிமாயியின் துறவும் பூரி யாத்திரையும்

ஸ்ரீநிமாய் சந்நியாசம் பெற்றுக் கொண்டதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் இருந்தன. ஒன்று, அன்பு மிக்க கண்ணனிட மிருந்து பிரிந்திருப்பதை அவரால் சகிக்கமுடியாததால் குடும்ப வாழ்க்கையைத் துறக்க நேரிட்டது என்று ஸ்ரீநிமாயியே வாசுதேவ சார்வ பௌமரிடம் சொல்லியிருக்கிறார். பகவானுக்குப் பணி செய்வதில் துறவுள்ளம் அவசியம் இருக்க வேண்டும் என்னும் தம்முடைய வைஷ்ணவ தர்மத்தின் அடிப்படைக் கொள்கையைச் சீடர்களுக்கும் மற்றவர்களுக்கும் உணர்த்த வேண்டும் என்ற எண்ணம் இரண்டாவது காரணமாகும்.

துறவை மேற்கொண்டு குடும்பத்தை விட்டு வெளியே புறப்படுவதற்கு முந்திய நாள், நித்தியானந்தரை அழைத்து, தம்முடைய அன்னை, கதாதரர், சந்திரசேகரர், முகுந்தர், பிரம்மானந்தர் ஆகியவர்களுக்குத் தாம் வீட்டைவிட்டுப் போகப் போவதைத் தெரிவிக்கும்படி சொன்னார். மேலும் நவத்வீபத்திலிருந்த தம்முடைய சீடர்களுக்குக் கீழ்வரும் அறிவுரையையும் சொல்லச் செய்தார்.

"கிருஷ்ண நாம சங்கீர்த்தனம் செய்யுங்கள்; சதா கிருஷ்ணனின் பெயரையே சொல்லுங்கள், கிருஷ்ணனுக்கே பக்தி செலுத்துங்கள்; கிருஷ்ணனைப் பற்றியே பாடுங்கள்; கிருஷ்ணனைத் தவிர வேறு எதையும் நினைக்காதீர்கள்; என்னிடம் உங்களுக்கு உண்மையான அன்பு இருந்தால் கிருஷ்ணனைத் தவிர வேறு எதையும் பாடாதீர்கள். உண்ணும்போதும் உறக்கத்திலும் விழித்திருக்கும் வேளையிலும் பகலிலும் இரவிலும் கிருஷ்ணனையே எண்ணுங்கள்; கிருஷ்ணனையே பாடுங்கள்."

சந்நியாச வாழ்க்கையை மேற்கொள்வதற்கு முதல்நாள் இரவு நடுச் சாமம் வரையில் ஸ்ரீநிமாய் தன் பக்தர்களிடையே பகவானின் பெருமையைப் பற்றி உபந்நியாசம் நிகழ்த்திக்கொண் டிருந்தார்

கதாதரரும் ஹரிதாசரும் அவருடனேயே அன்றிரவைக் கழித்தார்கள்.

ிடிவதற்கு ஒன்றரைமணி நேரத்துக்கு முன் ஸ்ரீநிமாயி எழுந்திருந்து வீட்டை விட்டுப் புறப்பட்டார். அப்போது தம்முடைய அன்னை கதவருகே அமர்ந்து அழுதுகொண் டிருப்பதை அவர் கண்டார். மென்மையான வார்த்தைகளால் தேற்றி, அவருடைய லௌகிக, ஆத்மிக க்ஷேமங்களுக்குத் தாம் பொறுப்பேற்றுக் கொள்வதாக வாக்களித்து, ஸ்ரீநிமாயி விடைபெற்ருர். பூமியைப் போலப் பொறுமையுடன் நின்ற அவருடைய அன்னையின் கண்களிலிருந்து நீர் பெருக்கெடுத்தது.

ஸ்ரீநிமாயி சந்நியாசத்தை நாடி வெளியே புறப்பட்டபோது, அவருடைய பத்தினியான ஸ்ரீவிஷ்ணுப்ரியையின் உணர்ச்சிகளைப் பற்றி, லோசனதாசரையும் ஒரிய மொழியில் ஸ்ரீசைதன்ய சரிதம் எழுதிய மாதவதாசரையும் தவிர, எந்த நூலாசிரியருமே ஒன்றும் எழுதவில்லை. இந்தச் சந்தர்ப்பத்திலும் சரி, வேறு சந்தர்ப்பத்திலும் சரி, ஸ்ரீவிஷ்ணுப்ரியையின் பிரஸ்தாபமே இல்லை. ஸ்ரீசைதன்யரைப் பின்பற்றுபவர்கள் எல்லோரும் உணர்ச்சி வயப்பட்ட தன்மையை உடையவர்கள் அல்லர் ஆதலால் ஒருவேளை அவர்கள் ஸ்ரீவிஷ்ணுப்ரியையைப் பற்றி எழுதாமல்விட்டிருக்கலாம். ஒருவர், சந்நியாசம் பெற்ற பின்னர் அவருடைய மனைவியுடன் எதுவும் தொடர்புபடுத்தக் கூடாது என்று சாஸ்திரத்திலும் சம்பிரதாயத்திலும் தடுக்கப் பெற்றிருக்கிறது. ஆனுல், வங்காளத்தில் ஸ்ரீசைதன்யரின் இயக்க வளர்ச்சியில் ஸ்ரீவிஷ்ணுப்ரியைக்கு இருந்த பங்கைப் பற்றியும் அன்னுருடைய துறவைக் குறித்தும் நித்தியானந்ததாசர், நரஹரி சக்ரவர்த்தி முதலிய பிற்கால நூலாசிரியர்கள் விவரமாக எழுதியிருக்கிருர்கள். ஸ்ரீநிவாசாசார்யா என்னும் பிற்கால வைஷ்ணவத் தலைவர் ஸ்ரீவிஷ்ணுப்பிரியையைக் குறித்து வெகுவாகச் சிலாகித்துள்ளார்.

ஸ்ரீநிமாயி வீட்டை விட்டு வெளியேறும்போது, ஸ்ரீவிஷ்ணுப்ரியை கண்களில் நீர் தேங்கியபடி, அன்னையாருக்காகவும் தனக்காகவும் ஸ்ரீநிமாயி வீட்டிலேயே இருக்க வேண்டும் அல்லது

அவளையும் அழைத்துச் செல்லவேண்டும் என்று இறைஞ்சி வேண்டிக்கொண்டாள் என்றும் கண்ணனையே தெய்விகக் கணவனாக ஏற்றுக்கொண்டு அவரிடமே பக்தி செலுத்தி வழிபாடு செய் என்று சொல்லி ஸ்ரீநிமாயி அவளிடம் விடைபெற்றுக் கொண்டார் என்றும் லோசனதாசரும் மாதவதாசரும் வெகு உருக்கமாக எழுதியிருக்கிறார்கள். அவ்விதமே, உள்ளத்தில் துறவு கொண்டு தூய்மையான வைஷ்ணவ வாழ்க்கையை நடத்தி முழுமனத்துடன் ஸ்ரீவிஷ்ணுப்ரியை பகவானிடம் பக்தி செலுத்தி வந்தாள். ஸ்ரீவிஷ்ணுப்ரியையின் இத்தகைய வாழ்க்கையைச் சந்ததி சந்ததியாக மறவாமல் மக்கள் மனத்திலிருத்தி வருகிறார்கள். தாமோதர பண்டிதர், வம்சிவதானந்த டாகுரா என்னும் இருவரையும், தம்முடைய குடும்ப நிர்வாகத்தைக் கவனிக்கும்படி ஸ்ரீசைதன்யர் நியமித்தார். தாமோதரரைப் போலவே, வம்சிவதானந்த டாகுராவும் அன்னாருக்குச் சேவை செய்துவந்தார்.

காத்வாவுக்குத் தம்மை அழைத்துச் செல்லும்படியும் அங்கேயே சந்நியாசம் பெறலாம் என்றும் ஸ்ரீநிமாயியிடம் கதாதாரர் கேட்டுக்கொண்டார். ஆனால் தனியாகவே செல்ல விரும்பிய ஸ்ரீநிமாயி அவரை அடுத்த நாள் காலையில் தம்மைப் பின்தொடரும்படி தெரிவித்தார்.

தம்முடைய தாயாருக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்துவிட்டு, நவத்வீபத்திலிருந்து சில மைல்கள் தூரத்தில் கங்கையின் மேற்புறத்தில் இப்பொழுது பர்த்வான் ஜில்லாவில் சப்டிவிஷனாக இருக்கின்ற காத்வாவுக்கு ஸ்ரீநிமாய் விரைந்து சென்றார்.

ஸ்ரீநிமாயியின் சந்நியாசத்தைப் பற்றிய செய்தி காட்டுத்தீ போல நகரம் முழுவதும் பரவியது, இதைக் கேட்ட ஸ்ரீவாசரும் அத்வைதரும் மற்ற சீடர்களும் மக்களும் வருந்திப் புலம்பினார்கள். இந்தச் சம்பவத்தைக் குறித்து, பிருந்தாவனதாசர் விரிவாகத் தம் நூலில் எழுதியிருக்கிறார். ஸ்ரீநிமாயியின் வாழ்க்கையில் ஏற்பட்ட இந்த முக்கியமான மாறுதலுக்குக் காரணமாக இருந்த மாற்றுக் கொள்கையினர் கூடக் கண்ணீர் விட்டனர்; ஸ்ரீநிமாயியை வீணாக ஒறுத்துத் துறவை மேற்கொள்ளும்படி செய்துவிட்டோமே என்று, பெரிய குற்றம் புரிந்தவர்போல அவர்கள் வருந்தினார்கள். ஸ்ரீநிமாயி

யின் இந்த மகத்தான துறவு எல்லோரையும் சோகத்தில் ஆழ்த்திலுைம் எதிர்காலத்தில் வைஷ்ணவ இயக்கத்துக்கு மிகப் பெரிய வெற்றியைத் தந்தது.

முன்பே திட்டமிட்டபடி, நித்தியானந்தர், கதாதரர், பிரம்மானந்தர், சந்திரசேகரர். முகுந்ததத்தர் ஆகியோர் காத்வாவில் ஸ்ரீ நிமாயியுடன் சேர்ந்து கொண்டார்கள். சக 1432 ஆம் வருஷம் மாசிமாதம் வளர்பிறையில் உத்தராயண புண்ணிய ஆரம்ப தினத்தன்று கேசவ பாரதி என்பவரிடம் ஸ்ரீநிமாயி சந்நியாசம் பெற்றுக் கொண்டார். (கி. பி. 1510 பிப்ரவரி மாதம்) அப்பொழுது அவருக்கு இருபத்து ஐந்து வயசு பூரணமாவதற்கு ஒரு மாதம் பாக்கியிருந்தது. அவருக்குப் பிரியமான முகுந்ததத்தர், பகவந்நாம கீர்த்தனத்தைப் பாடிக்கொண்டிருக்க, ஸ்ரீநிமாயி சந்நியாச தர்மத்தை மேற்கொண்டார். தாம் முன்பே கனவில் இந்த மந்திரத்தைப் பெற்றுக் கொண்டதாகச் சொல்லியபடியே ஸ்ரீநிமாயி, கேசவ பாரதியின் காதில் மந்திரத்தை ஓதினுர். வைஷ்ணவ தர்மத்தை ஏற்கும் முன்பு தாம் பெற்ற வைஷ்ணவ மந்திரத்தையும் அவருக்கு உபதேசித்து, கேசவ பாரதியைத் தம்முடைய சீடராக்கிக் கொண்டார்.

கேசவ பாரதியைச் சங்கரர் வழியிலே வந்தவர் என்றும் எனவே அவர் மாயவாத சந்நியாசி என்றும் சிலர் கருதுகிருர்கள். வாழ்நாள் முழுவதும் சங்கரரின் மாயாவாதத்தை எதிர்த்துப் பிரசாரம் செய்த ஸ்ரீநிமாயி ஒருகாலும் மாயாவாதியிடமிருந்து சந்நியாசம் பெற்றிருக்க மாட்டார். வைஷ்ணவ மந்திரத்தையும் அந்தத் தர்மத்தையும் ஏற்றுக் கொண்ட பிறகே கேசவ பாரதியிடம் அவர் சந்நியாசம் பெற்றிருக்க வேண்டும்.

'ஞானத்தைவிடப் பக்தி உயர்ந்ததா? பக்தியைவிட ஞானம் உயர்ந்ததா?' என்று கேசவ பாரதியை ஸ்ரீநிமாயி வினவினுர். பக்தியின் பெருமையே மகத்தானது என்று அவர் விடை அளித்தார். ஹரிநாமத்தை உச்சரித்துக் கேசவ பாரதி ஆடிப் பாடி அகம் கரைந்து உணர்ச்சிப் பெருக்கினுல் தரையிலே விழுந்து புரண்டார். அவர் மாயாவாதியாக இருந்திருந்தால், கிருஷ்ண சைதன்யர் என்ற திருநாமத்தை ஸ்ரீநிமாயிக்குச் சூட்டியிருக்க

மாட்டார்; ஹரி, கிருஷ்ண என்னும் நாமங்களையும் உச்சரித்திருக்க மாட்டார். மாயாவாத சந்நியாசிகள் கிருஷ்ணனை உயர்ந்த தெய்வமாகக் கருதுவதே இல்லை. காசியில் இருந்த சங்கரர் வழிவந்த சந்நியாசிகள், வேதாந்தத்தைப் பயின்று தியானத்தில் ஈடுபாடுள்ளவர்கள் ஆதலால் ஸ்ரீசைதன்யரின் பக்தி நிறைந்த கீர்த்தன முறையை அவர்கள் அலட்சியம் செய்து வந்தார்கள்.

ஒருகால் கேசவர் சங்கரர் முறையைப் பின்பற்றுபவராக இருந்திருந்தாலும் ஸ்ரீசைதன்யர் மூலமாக வைஷ்ணவ தர்மத்தைத் தழுவி, கீர்த்தனங்களைப் பாடிப் பக்தி செய்யும் முறையை ஏற்றுக் கொண்டிருந்திருப்பார். கேசவர் பிறந்த ஸ்தலமான காத்வாவுக்கு அருகில் உள்ள காத்துந்தியில், கேசவரால் பிரதிஷ்டை செய்யப் பெற்றது என்று சொல்லப்படும் விஷ்ணு விக்கிரகத்தை இன்னும் அவருடைய சந்ததியார் பூஜை செய்து வருகிறார்கள். கேசவ பாரதியின் சகோதரரும் சீடருமான பாலபத்திரரால், பர்துவான் ஜில்லாவில் உள்ள தேனூரில் பிரதிஷ்டை செய்யப்பட்டதாகக் கருதப்படும் கோபிநாத விக்கிரகத்தை இன்னும் அவருடைய சந்ததியினரைச் சேர்ந்த பிரம்மச்சாரி குடும்பமே வழிபாடு செய்து வருகிறது. சங்கரரைச் சேர்ந்த சந்நியாசிக்கும் அவருடைய சகோதரருக்கும் கிருஷ்ண விக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்ய வேண்டிய அவசியம் ஏது?

'வாழ்நாள் முழுவதும் கேசவ பாரதி பிரம்மசாரியாகவே இருந்திருக்கக் கூடும். கேசவ பாரதியின் சந்ததியினர் என்று சொல்லப்படுபவர்கள் உண்மையில் அவருடைய புதல்வர்கள் அல்ல. உஷாபதி, நிசாபதி என்னும் பெயருள்ள பிராமணச்சீடர்களின் சந்ததியினரே' என்றும் 'வைஷ்ணவ மஞ்ஜுஷா' என்னும் நூலின் ஆசிரியர் கூறுகிறார். நாதியாவைச் சார்ந்த கலாவதி கோபாலபுரிலும் பாக்பூரைச் சார்ந்த மூர்ஷிதாபாத்திலும் இருக்கும் சிம்லாய் குடும்பத்தினரும் ஸ்ரீவரபுரைச் சார்ந்த மிதுனபுரியில் இருக்கும் பட்டாசார்யா குடும்பத்தினரும் மம்ஜோயானியிலும் கிருஷ்ணுகரிலும் உள்ள சர்க்கார் குடும்பத்தினரும் கேசவ பாரதியின் சந்ததியைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லப்பெறுகிறது.

தலையை முண்டனம் செய்து கொண்டு, ஸ்ரீநிமாயி சந்நியாசியானார். இடுப்பிலே ஒரு வஸ்திரம்; தோளிலே ஓர் அங்கவஸ்திரம்

தீர்த்தம் கொள்ளும் கமண்டலம்; சந்நியாசிகளுக்கே உரிய தண்டு. இப்படியாக ஸ்ரீசைதன்யர் சந்நியாசக் கோலத்தில் காட்சி தரலானர். உலகம் முழுவதும் கிருஷ்ண வழிபாட்டைப் பிரபலப்படுத்திக் கீர்த்தனங்களைப் பாடுவதன் மூலம் ஆத்ம சைதன்யத்தை வெளிப் படுத்தும் பணியை ஸ்ரீநிமாயி மேற்கொள்ளவிருப்பதை எண் ணியே ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் என்னும் நாமத்தை வழங்கியதாக, கேசவ பாரதி அறிவித்தார்.

சந்நியாசத்தை மேற்கொண்ட அன்று இரவு ஸ்ரீசைதன்யர் காத்வாவிலே தங்கியிருந்தார். அடுத்த நாள் கீர்த்தனங்களைப் பாடி ஆடியபடியே மெய்மறந்த நிலையில் ராடா நாட்டைச் சேர்ந்த கான கத்தில் புகுந்தார். அவருக்குச் சந்நியாச ஆசிரமம் வழங்கிய குருவும் அவரை விட்டு ஒரு கணமும் பிரிந்திருக்க இயலாத நிலை யில் ஸ்ரீசைதன்யரைப் பின் தொடர்ந்தார். வைஷ்ணவ நூலாசிரி யர்கள் ஸ்ரீசைதன்யரை எவருடைய சீடராகவும் கருதுவதில்லை. கேசவரிடமிருந்தே சந்நியாசம் பெறவேண்டும் என்று ஸ்ரீசைதன்யர் கருணை உள்ளங் கொண்டதாலேயே அவருக்குக் குருவாக, கேசவர் அமைந்தார் என்று இருவருக்கும் உள்ள தொடர்பைக் குறித்துத் தங்கள் நூல்களில் அறிஞர்கள் எழுதியிருக்கிறார்கள்.

இப்பொழுதெல்லாம் பகவத் சாந்நித்யம் பெற்றவராக ஸ்ரீ சைதன்யர் தோன்றினர். பகவத் பக்தியைத் தவிர வேறு ஒன்றுமே தெரியாத நிலையில் அவர் இருந்தார். "என் உள்ளம் கவர்ந்த செல்வனை, பிரபுவை, கண்ணனை, எங்கே காண்பேன்?" என்ற வார்த்தைகளே அவர் உதடுகளில் சதா தவழ்ந்தன. 'கிருஷ்ண கிருஷ்ண' என்று உச்சரித்துக் கொண்டே கண்களில் நீர் வழிய விடுவார். கிருஷ்ண தரிசனம் பெறுமல் வறியனுக வாழ்வது அவ ருக்குச் சித்திரவதையில் தவிப்பது போல இருந்தது. அடிக்கடி அவர் மயங்கி மயங்கி விழுந்தார். ராதையைப் போலவே கிருஷ்ண னிடம் அவர் பிரேமையும் பக்தியும் செலுத்தினர். கிருஷ்ண னுடனேயே அவர் ஒன்றிய நிலையில் இருந்தார்.

நவத்வீபத்தில் வருத்தத்தில் கிடந்த தம் குடும்பத்தினருக்கும் பக்தர்களுக்கும் தாம் வனம் புகுந்த செய்தியைச் சொல்லும்படி சந்திரசேகரர் என்பவரை ஸ்ரீசைதன்யர் அனுப்பிவைத்தார். இந்தத்

தகவலை கேட்டதும் நவத்வீபத்திலுள்ள பக்தர்களின் மனநிலையை வார்த்தைகளால் வர்ணிக்கவே முடியாது என்று பிருந்தாவனதாசர் சொல்கிறார். இதைக் கேட்டதும் ஸ்ரீ அத்வைதர் கங்கையில் விழுந்து உயிரை மாய்த்துக்கொள்ள முயன்றார். அன்னை சசி தேவியோ, உணர்வே இல்லாமல் நெடுநேரம் தரையில் கிடந்தார்; எல்லோரும் குழந்தையைப் போலத் தேம்பித் தேம்பி அழுதார்கள்; தலையிலும் மார்பிலும் சிலர் அடித்துக்கொண்டு புலம்பினர்கள்.

கேசவ பாரதி, நித்தியானந்தர், கதாதரர், முகுந்தர், பிரம்மானந்தர், வாயிற்காப்பாளராகிய கோவிந்தன் ஆகியோர் சூழ, ஸ்ரீசைதன்யர் பீர்பூம் ஜில்லாவில் உள்ள வக்ரேசுவர் வனத்தை நாடிக் கிழக்கு திசையில் செல்லலானார், "பகவத் பக்தியாலும் கமல பாதரான ஸ்ரீ முகுந்தனுக்குச் செய்யும் பணிவிடையாலும் கடக்க முடியாத சம்சார சாகரத்தைக் கடந்து சென்றுவிடுவேன்" பாகவதம்: (11.23–53) என்னும் திரிதண்டி பிக்ஷுவின் பிரசித்தி பெற்ற பாடலைப் பாடிக்கொண்டே அவர்கள் சென்றனர். பகவானின் நாமத்தைப் பரப்பியவண்ணமும் கிருஷ்ணனையே தங்கள் பிரபுவாகவும் அழியாத நிதியாகவும் கொள்ளும்படி மக்களை இறைஞ்சிக் கேட்டுக் கொண்டும் ஸ்ரீசைதன்யர் ராடா நாட்டின் வழியாகச் சென்றார். ஓர் அந்தணன் இல்லத்தில் ஸ்ரீசைதன்யர் ஓர் இரவு தங்கினர். அப்போது, உள்ளத்தைக் கவரும் அவருடைய ஆடலையும் பாடலையும் கண்ட மக்கள் அனைவரும் முற்றும் மெய் மறந்தார்கள். அன்றிரவு மற்றவர்கள் உறங்கிக்கொண் டிருக்கும் போது, ஸ்ரீசைதன்யர் எழுந்திருந்து சகாக்களை விட்டுத் தனியாகவே தம் பயணத்தை மேற்கொண்டார். காலையில் விழித்தெழுந்தவர்கள் ஸ்ரீசைதன்யரைக் காணமல் எங்கும் தேடியலைந்தார்கள். தீவிர முயற்சிக்குப் பிறகு வெகு தொலைவில் கானகத்தின் மத்தியில் "கிருஷ்ணா, கிருஷ்ணா" என்று அரற்றும் ஸ்ரீசைதன்யரின் குரலைக் கேட்டு அவரைத் தேடி கண்டுபிடித்தார்கள்.

இப்பொழுது அக்கோஷ்டி, யாத்திரையின் போக்கை மாற்றிக் கொண்டு கங்கையை நோக்கிச் சென்றது. பூரிக்குச் செல்வது என்று தீர்மானித்த ஸ்ரீசைதன்யர் பூரிக்குச் செல்வதற்கு முன்பு நவத்வீபத்தில் சோகத்தில் மூழ்கிக் கிடக்கும் தம் அன்னை

யாருக்கும் மற்றப் பக்தர்களுக்கும் தம்மை சாந்திபுரியில் சந்திக்கு மாறு தெரிவிக்கச் சொல்லி நித்தியானந்தரை அங்கே அனுப்பி வைத்தார்.

முராரி குப்தர், பிருந்தாவனதாசர் ஆகியோர் எழுதிய நூல் களில் மேற்சொன்னபடி இருக்க, நவத்வீபத்துக்குச் செய்தியுடன் சந்திரசேகரரை அனுப்பிவிட்டு, பிருந்தாவனத்துக்கே இட்டு செல் வதாகச் சொல்லிப் பக்திப் பரவச நிலையில் தம்மையே மறந்திருந்த ஸ்ரீசைதன்யரைச் சாந்திபுரிக்கு நித்தியானந்தர் அழைத்துச்சென் ருர் என்று கிருஷ்ணதாச கவிராஜர் இந்தச் சம்பவத்தைக் குறித்து எழுதியிருக்கிருர். (உண்மையில் ராடா நாட்டிலிருந்து பிருந்தா வனத்துக்குச் செல்லும் வழியில் சாந்திபுரி இல்லை.) அப்படிச் சொல்லி யிராவிட்டால் ஒருகாலும் ஸ்ரீசைதன்யர் சாந்திபுரிக்குப் போயிருக்கமாட்டார். எனவே, பிருந்தாவனதாசர் சொல்லுவது தான் மிகவும் பொருத்தம் உள்ளதாக இருக்கிறது. நித்தியானந்தரே பிருந்தாவனதாசருக்கு இந்தச் சம்பவத்தைக் குறித்துச் சொல்லி யிருப்பதால் அவர் தவறுதலாக எழுதுவதற்கு வழியே இல்லை;

நித்தியானந்தர் நவத்வீபத்துக்குச் சென்று, ஸ்ரீசைதன்யர் வீட்டைவிட்டுச் சென்றதிலிருந்து அன்ன ஆகாரங்கூட இல்லாமல் பன்னிரண்டு நாள் உபவாசம் இருக்கும் அன்னை ஸ்ரீசசிதேவியையும் மற்றவர்களையும் கண்டு ஆறுதல் சொன்னுர். அன்னையாரின் உப வாசத்தை நிறுத்தும்படி வற்புறுத்தி வேண்டி சாந்திபுரிக்கு நித்தியானந்தர் அவரை அழைத்துச் சென்ருர்.

ஹரிதாஸ் டாகுரா வாழ்ந்துவந்த பூலியா என்னுமிடத்தை ஸ்ரீசைதன்யர் அடைந்தார். ஸ்ரீசைதன்யருக்கு முன்பு தீங்கிழைத் ததை எண்ணி வருந்தி மனந்திருந்தியவர்கள் உட்பட, வயசானவர் களும் இளைஞர்களும், பெண்களும் ஆண்களுமாக ஆயிரக்கணக் கான மக்கள், வங்கத்துக்கு வாழ்வு அளிக்கவந்த மகானுக்குத் தங் கள் உள்ளம் நிறைந்த அன்பையும் கௌரவத்தையும் வழங்குவதற் காக, பூலியாவுக்குத் திரள் திரளாக விரைந்து சென்ருர்கள். 'ஸ்ரீசைதன்யரின் ஆசியைப் பெறுவதற்காக, முடமானவர்களும் கண்ணை இழந்தவர்களும் பூரண கர்ப்பிணிகளும் பூலியாவை நோக்கி ஆவலுடன் சென்ருர்கள்' என்று பிருந்தாவனதாசர் வர்

ணிக்கிருர். ஆரவாரிக்கும் கடல்போல மக்கள் அங்கே குழுமினுர்கள்; ஸ்ரீசைதன்யரைத் தரிசிக்க வேண்டும் என்ற மக்களின் ஆவல் கரை புரண்டது. மறுகரையில் அமைந்திருந்த பூலியாவுக்கு மக்களை ஏற்றிச் செல்லப் படகுகளின் எண்ணிக்கை போதவில்லை. அக்கரைக்குச் சென்ற படகுகள் திரும்பிவரும் வரையில் பொறுமையாக இருக்கக்கூட மக்களால் இயலவில்லை. கங்கை நீரில் நீந்திக்கொண்டு அக்கரையில் உள்ள பூலியாவைச் சிலர் அடைந்தனர். வேறு சிலர் மரக்கட்டைகளை வைத்துத் தெப்பமாகச் செய்து அவற்றில் ஏறிக்கொண்டு மறுகரையை அடைந்தனர்! எவ்வித வசதியும் கிடைக்காதவர்கள் வாழை மரத்தைப் பிணையாகக் கொண்டு நதியைக் கடந்தார்கள். வேறு சிலர் பெரிய தொட்டிகளைத் தெப்பமாக ஆற்றில் மிதக்கவிட்டு, கங்கைக்கு அக்கரையில் உள்ள பூலியாவை அடைந்தார்கள். இப்படி மக்கள் தங்கள் கைக்குக் கிடைத்த சாதனங்கள் எல்லாவற்றையும் பயன்படுத்திக்கொண்டு, ஸ்ரீகிருஷ்ண சைதன்யரின் தரிசனத்தைக் காண பூலியாவுக்கு விரைந்தார்கள்.

இந்தச் சமயத்தை நழுவவிட்டால் மறுசமயம், நவத்வீபத்தில் பிறந்த மகானைக் காணமுடியாது என்ற எண்ணமே மக்களின் மனத்தில் வேதனையைத் தந்தது. இதற்கிடையே சாந்திபுரியில் அத்வைதரின் இல்லத்தை ஸ்ரீசைதன்யர் அடைந்தார். ஸ்ரீசைதன்யரை மனங்கனிந்து வரவேற்ற அத்வைதர், அவருடைய திருவுருவத்தைப் பார்த்த உடனே கீழே விழுந்து பாதங்களைப் பற்றிக்கொண்டு கண்ணீர் விடத் தொடங்கினர். சசிதேவி, நித்தியானந்தர் ஆகியோர் தலைமையில் நவத்வீபத்திலிருந்து சாந்திபுரிக்கு வந்து சேர்ந்த மக்கள் சமுத்திரம் ஸ்ரீசைதன்யரைத் தரிசித்ததும் எல்லையற்ற இன்பமடைந்து சந்தோஷ ஆரவாரம் செய்தது.

முண்டனம் செய்திருந்த தலையுடனும் துண்டு வேஷ்டியுடனும் இருந்த ஸ்ரீசைதன்யரைக் கண்டதும் அன்னை ஸ்ரீசசிதேவி வருத்த மிகுதியால் கண்களில் நீர்வடிய, "என் அருமை நிமாயி, சந்நியாசி ஆனபிறகு காணவே முடியாத விசுவரூபனைப் போல நீயும் இரக்கமற்றவனுக இருந்துவிடாதே! அத்தகைய காரியத்தை நீயும் செய்தால் அது என்னைக் கொன்றேவிடும்" என்று சொல்லி அழுதார்.

"அம்மா, வருந்தாதே. இந்த உடல் என்னுடையது அல்ல. உனக்கே சொந்தமானது. உனக்குப் பட்ட கடனைப் பூர்த்தி செய்ய லட்சம் பிறவி எடுத்தாலும் போதாது. அறிந்தோ அறியாமையினாலோ நான் சந்நியாசியாகிவிட்டேன். ஆனாலும் உனக்குச் செய்யவேண்டிய கடமைகளிலிருந்து நழுவி உன்னை அலட்சியம் செய்து விடமாட்டேன். உனக்கு எங்கே விருப்பமோ அங்கேயே தங்குகிறேன். உன்னுடைய உத்திரவுகளை நிறைவேற்றுகிறேன். ஆனால் பிறந்த ஊரிலோ உறவினர்கள் உள்ள இடத்திலோ சந்நியாசிகள் வாழ்வது தர்மம் அல்ல. இந்தக் குற்றத்தைச் செய்தேன் என்ற பழி என்மேல் விழாதபடி பார்த்துக் கொள். உன்னுடைய ஆசையும் என்னுடைய தர்மமும் இணைந்து செல்லும் வகையில் நீயே ஒரு வழியை யோசித்துச் சொல்" என்று மென்மையான வார்த்தைகளால் அவருக்கு ஸ்ரீசைதன்யர் ஆறுதல் சொன்னார்.

"நீ சொல்வது உண்மையே. வீட்டிலேயே நீ தங்குவது எனக்கு இன்பம் பயக்கக்கூடிய செயல்தான். ஆனால் பிறர் பழிச்சொல் கூற இடம் தந்து மனவருத்தம் கொள்வது நல்லதல்ல. எனவே பூரியில் தங்கினால் அடிக்கடி க்ஷேமலாபம் தெரிந்துகொள்ள வசதியாக இருக்கும்" என்று ஸ்ரீசசிதேவியும் நன்கு யோசித்துப் பதில் அளித்தார்.

சாந்திபுரியிலே மேலும் பத்து நாட்கள் ஸ்ரீசைதன்யர் தங்கினார். தினந்தோறும் அவருடைய தரிசனத்துக்காக ஏராளமான பக்தர்கள் வந்தனர். ஒவ்வோர் இரவும் அவருக்குப் பிரியமான முகுந்த தத்தர், ஸ்ரீசைதன்யரின் வெவ்வேறு உணர்ச்சிகளுக்கு ஏற்பக் கீர்த்தனங்களைப் பாட, அவர் நடனமாடினார். கிருஷ்ணனை விட்டுப் பிரிந்த வேதனையைப் பொறுக்கமாட்டாமல் ராதை மனம் உருகிப் பாடும் பாவத்தில் ஸ்ரீசைதன்யர் பாடல்களைப் பாடுவார்.

"என் அருமைச் சோதரியே! என்னுடைய நிலையைக் கண்டு தயை செய்து இரக்கம் கொள். என் உடம்பை என்னவோ செய்கிறதே. அதை என்னவென்று சொல்வேன்! கண்ணன்மேல் நான் கொண்டுள்ள காதல், விஷம்போல் என் உடலையும் உள்ளத்தையும் தளரச் செய்கிறதே! இரவும் பகலும் என் உள்ளத்தைத் தகிக்

கிறதே! என் மகிழ்ச்சியே பறிபோய்விட்டதே. கனு (கிருஷ்ணன்) இருக்கும் இடம் தெரிந்தால் அங்கே பறந்தாவது சென்று விடுவேனே!" என்னும் கருத்தமைந்த பாடல்கள் கிருஷ்ணனை அடையவேண்டும் என்ற அவர் உள்ளத்தில் பொங்கிய உணர்ச்சிகளை எடுத்துக்காட்டுகிறது. பணிவு, மிடுக்கு, அசூயை, ஆனந்தம், ஹாஸ்யம், சோகம், ஏக்கம் முதலிய பல்வேறு பாவங்களைத் தோற்றுவிக்கும் உணர்ச்சிகளை எழுப்பிய கீர்த்தனங்களைக் கேட்டு அவர் பரவச மிகுதியால் உணர்விழந்து தரையில் விழுந்துவிட்டார். அடுத்தகணமே எழுந்திருந்து ஆடிப் பாடி அகம் கரையலானார்.

பத்து நாட்கள் சாந்திபுரியில் கழித்துவிட்டு, நித்தியானந்தர், ஜகதானந்தர், பண்டித தாமோதரர், முகுந்ததத்தர் ஆகியோருடன் பூரிக்கு ஸ்ரீசைதன்யர் புறப்பட்டுச் சென்றார். நித்தியானந்தர், கதாதரர், பிரம்மானந்தர், ஜகதானந்தர், முகுந்தர், கோவிந்தர் ஆகியோருடன் ஸ்ரீசைதன்யர் பூரிக்குச் சென்றார் என்றும் அங்கே தான் தாமோதரர் அவருடன் சேர்ந்துகொண்டார் என்றும் பிருந்தாவனதாசர் குறிப்பிடுகிறார். ஸ்ரீசைதன்யர் தென் இந்தியாவுக்கு விஜயம் செய்துவிட்டுப் பூரிக்குத் திரும்பிவந்தபோதே அவருடன் கதாதரர் சேர்ந்துகொண்டதாகத் தம்முடைய சைதன்ய சரிதத்தில் கிருஷ்ணதாசர் எழுதியிருக்கிறார்.

"இல்லங்கள் தோறும் பகவந்நாம சங்கீர்த்தனம் முழங்க வேண்டும். அப்பொழுதுதான் உங்களை விட்டுப் பிரியாதவனாக இருப்பேன். மீண்டும் ஒருமுறை இங்கே நான் வருவேன் அல்லது நீங்கள் எல்லோரும் பூரிக்கு வந்தால் என்னைச் சந்திக்கலாம்" என்று தன் பக்தர்களுக்குத் தெரிவித்துவிட்டு ஸ்ரீசைதன்யர் சாந்தி புரை விட்டுப் பூரிக்குப் பயணமானார்.

ஒரிஸ்ஸா மன்னன் பிரதாபருத்திரனுக்கும் வங்க நவாபு ஹூசேய்ன் ஷாவுக்கும் சண்டை நடந்துகொண்டிருந்த காரணத்தால் வழிநெடுக ஆபத்துக்கள் நிறைந்திருந்தன. இதனால் ஸ்ரீசைதன்யரைச் சாந்திபுரியை விட்டுப் புறப்படவேண்டாம் என்று அத்வைதர் தடுத்துப் பார்த்தார். ஆனால் ஸ்ரீசைதன்யர் ஆபத்து எதையும் பொருட்படுத்தவில்லை. தென்திசை நோக்கி, பாகீரதி நதிக்கரையோடு சத்திரபோகம் வழியாகப் பூரியை நோக்கி ஸ்ரீசைதன்யர்

செல்லலானர். சாக்தா, மதன்புர், காஞ்சனபாரா, நொய்ஹாட்டி. பாட்பாரா, பரக்புரி முதலிய இடங்கள் வழியாக அவர் சென்ருர். இருபத்து நான்கு பர்காஞக்களில் உள்ள பாருய்புரிக்கு அருகில் இருந்த அதிசாராவை அடைந்ததும் அங்கேயே அனந்த ஆசார்யா என்னும் அந்தணர் இல்லத்தில் கீர்த்தனேகளேப் பாடிக்கொண்டு இரவைக் கழித்தார். மீண்டும் பாகீரதி நதிக்கரையோடு தன்னுடைய பிரயாணத்தை மேற்கொண்டு, சத்திரபோகத்தை அடைந்தார். அங்கே கங்கைக்கரையில் ஒரு சிவன் கோயில் அமைந்திருந்தது. அங்கே ஸ்ரீசைதன்யர் ஸ்நானம் செய்தார். சத்திரபோகத்திலிருந்து ஒன்றரை மைல் தூரத்தில் கங்கைக்கரையில் உள்ள பதாசி என்னும் இடத்தில் இப்பொழுது அந்தச் சிவன் கோயில் இருக்கிறது. அந்தக் காலத்தில் பதாசி உட்பட்ட பெரும்பகுதி சத்திரபோகத்தின் எல்லேக்குள்ளேயே இருந்தது. கல்கத்தாவிலிருந்து தெற்கே 42 மைலில் டைமண்ட் ஹார்பர் ரெயில் பாதையில் உள்ள மதுரா புரியிலிருந்து 4½ மைல் தொலேவில் இருக்கிறது சத்திரபோகம்.

அங்கே ஸ்ரீசைதன்யர் பக்தி மிகுதியால் ஆடிப் பாடிக்கொண்டிருப்பதை, *ராமசந்திரகான் என்னும் தெற்கு வங்கத்தின் அதிபதி கண்டான். உணர்ச்சி மிகுதியால் மெய்மறந்த அவருடைய மனத்தைக் கொள்ளேகொள்ளும் ஆடலேயும் பாடலேயும் கண்டு அதிசயத்தால் பிரமித்து நின்றுவிட்டான். ஸ்ரீசைதன்யரின் அடியாருக்கு அடியாராக இனி இருக்கப்போவதாக ராமசந்திர கான், அவரிடம் தெரிவித்து வழிபாடுகளேயும் செய்து தன்னேயே அவருக்கு அர்ப்பணித்துக்கொண்டான். தெற்கு வங்கத்தின் அதிபதியே அவன் என்பதை அருகில் இருந்தவர்கள் ஸ்ரீசைதன்யரிடம் தெரிவிக்கவே, பூரிக்குப் பத்திரமாகத் தங்களே அனுப்பி வைக்கும்படி ஸ்ரீசைதன்யர் கேட்டுக்கொண்டார். வங்க, ஒரிஸ்ஸா மன்னர்களிடையே இருந்துவரும் விரோதத்தால் பூரிக்குச் செல்வதில் உள்ள இடைஞ்சல்களேயும் ஆபத்துக்களேயும் ராமசந்திரன் தெரிவித்து அந்த வழியே செல்ல எவரையும் அநுமதிக்காமல்

* ஹரிதாச டாகுராவுக்கும் நித்தியானந்தருக்கும் கொடுமைகள் இழைத்த பேனபோலேச் சார்ந்த, வைஷ்ணவ தர்மத்துக்கு எதிராக இருந்த ராமச்சந்திரன் வேறு ; இந்த அதிபதி வேறு.

இருப்பதையும் எடுத்துச் சொன்னுன். பாதைகள் எல்லாம் இரும்பு முள்வேலிகளால் தடுக்கப்பட்டிருந்தன. ஓரிடத்திலிருந்து மற்ற இடத்துக்குச் செல்லும் பிரயாணிகள் சிறைபிடிக்கப்பட்டு, ஒற்றர்கள் என்ற சந்தேகத்தின் பேரில் கொல்லப்பட்டனர்.

ஸ்ரீசைதன்யர் எதற்கும் அஞ்சினவராகத் தோற்றவில்லை. எல்லாவிதமான ஆபத்துக்களிலிருந்தும் பகவானின் சுதர்சன சக்கரம், கிருஷ்ண பக்தர்களைக் காத்துக்கொண் டிருக்கும் என்று அவர் திடமாக நம்பினுர். எனவே, பூரிக்குச் செல்லவேண்டும் என்பதை வற்புறுத்தினுர்.

ஸ்ரீசைதன்யரின் கோஷ்டியைப் பூரிக்கு அனுப்ப வேண்டிய ஏற்பாடுகளை அன்றிரவு செய்வதாக ராமசந்திரன் ஸ்ரீசைதன்யருக்கு வாக்களித்தான். அப்படிச் செல்பவர்களுக்கு ஏதேனும் விபத்து நேர்ந்தால், சண்டை நடந்துகொண் டிருக்கும்போது விரோதியின் நாட்டுக்குள் ஒரு கோஷ்டியை அனுப்பியதற்காக வங்கநவாபு, தன்னையே முழுப்பொறுப்பாளியாக்கித் தண்டிக்கக்கூடும் என்று தெரிந்திருந்தும் எந்த ஆபத்தையும் ஸ்ரீசைதன்யருக்காக ஏற்றுக் கொள்வது என்று ராமசந்திரன் உறுதிகொண்டு விட்டான்.

அன்றிரவு ஸ்ரீசைதன்யர் ஓர் பிராம்மணர் வீட்டில் உணவு கொண்டார். அந்தக் கிராம மக்களின் ஆசைதீரக் கீர்த்தனங் களைப் பாடியும் நடனமாடியும் இரவைக் கழித்தார். நதித்துறைக்குப் படகைக் கொண்டுவரும்படி ராமசந்திரன் ஏற்பாடு செய்திருந்தான். ஸ்ரீசைதன்யரும் அவருடைய கோஷ்டியினரும் படகில் ஏறிக் கொண்டார்கள்.

காலஞ்சென்ற பிரபுபாத பக்தி சித்தாந்த சரஸ்வதி கோஸ்வாமி டாகுரா அவர்கள் சத்திரபோகத்துக்கு ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்ததற்கு நினைவுச் சின்னமாக, கோபுரத்துடன் ஒரு கோயிலை இங்கே அமைத்து, அதில் ஸ்ரீசைதன்யரின் பாதவடிவங்களைப் பிரதிஷ்டை செய்திருக்கிருர்.

சத்திரபோகத்திலிருந்து பாகீரதி என்னும் ஹுக்ளி நதியைப் படகு கடந்தது. பின்னர் நதிப்போக்கில் தென்மேற்குத் திசையில், ஜேம்ஸ், முர்ரே மணற்திட்டுகள் என்று இப்பொழுதும் சொல்லப்

படும் இடத்தையும் ஹால்டி நதி கலக்கும் இடத்தையும் கடந்து, நந்திக்கிராமம், காஜ்லி முதலிய கிராமங்களுக்கு வலப்புறம் உள்ள பிரயாக் கட்டத்தைக் கோஷ்டியினர் அடைந்தார்கள். இங்கே ஸ்ரீசைதன்யர் படகைவிட்டு இறங்கி ஒரிஸ்ஸா எல்லையைக் கடந்தார். ஹுக்ளி நதியில், ஜியோகாலி, (கௌகூலி) ஹிஜ்லி என்னும் இடங்களைப் போல அக்காலத்தில் பிரயாக் கட்டமும் பிரயாணிகள் இறங்கும் துறையாக இருந்திருக்க வேண்டும்.

கங்கைக் கட்டம் என்னும் துறையில் நீராடி, சிவன் கோயிலையும் தரிசித்த பின்னர் கோஷ்டியினர் ஒரு கோயிலில் தங்கினர். சந்நியாசியான ஸ்ரீசைதன்யர் பிட்சைக்காக வெளியே சென்றார். கோஷ்டியினரின் உணவுக்கு வேண்டிய காரியங்களை, ஜகதானந்தா மேற்கொண்டார். அன்றிரவு எல்லோரும் கீர்த்தனங்களைப் பாடியும் நடனமாடியும் பொழுதைக் கழித்தார்கள்.

அடுத்த நாள் காலையில் வடமேற்குத் திசையில், ஜல்லேசுவரத்தை நோக்கி நடக்கலானார்கள். கிராமத்தை நெருங்குவதற்குக் கொஞ்ச தூரத்துக்கு முன்னால், யாத்ரீகர் வரியைக்கட்டி விட்டுத்தான் கிராமத்துக்குள் செல்லவேண்டும் என்று கோஷ்டியினரைச் சுங்கச் சாவடிக்காரன் தடுத்து நிறுத்திவிட்டான் ஸ்ரீசைதன்யரின் கடுமையான உத்திரவுக்கிணங்க பிரயாணத்தின்போது எவருமே பணத்தையோ உணவுப் பொருள்களையோ வைத்துக்கொள்வதில்லை. எனவே, அவர்கள் சுங்கம் கொடுக்க முடியாமல் அங்கேயே நின்றனர். அந்தக் கோஷ்டியில் சந்நியாசி ஒருவர் இருப்பதைக் கண்டு அவரை மட்டும் கிராமத்துக்குள் செல்ல அநுமதித்தான் சுங்கச் சாவடிக்காரன். ஏமாற்றத்துக்குள்ளான மற்ற கோஷ்டியினர் மட்டும் அங்கேயே நிற்கும்படி நேரிட்டது. எட்டடி எடுத்து வைத்துக் கிராமத்தின் எல்லைக்குள் புகுந்த ஸ்ரீசைதன்யரின் கண்களில் நீர் வடிவதைக் கண்ட சுங்கச் சாவடிக்காரன் மனம் இரங்கினான். அப்பொழுதுதான் அந்தச் சந்நியாசி யார் என்பதை அவன் தெரிந்து கொண்டான். ஏற்கனவே ஸ்ரீசைதன்யரையும் அவருடைய சீடர்களையும் குறித்து அவன் கேள்விப் பட்டிருந்ததால் அவருடைய பாதத்தில் விழுந்து தன் செய்கைக்காக மன்னிப்புக் கேட்டான்.

ஸ்ரீசைதன்யரின் கோஷ்டி ஸ்வர்ண ரேகை நதியைச் சில நாட்களில் அடைந்து, அதைக் கடந்து, ஜல்லேசுவரத்துக்கு போய்ச் சேர்ந்தது என்று பிருந்தாவனதாசர் குறிப்பிட்டிருக்கிறூர். ஆனுல் ஸ்வர்ணரேகை நதியின் கிழக்குக் கரையிலேயே ஜல்லேசுவரம் அமைந்திருக்கிறது. எனவே, கோஷ்டியினர் முதலில் ஜல்லேசுவரத்தை அடைந்த பின்னரே அநேகமாக ராஜகட்டத்தில் நதியைக் கடந்திருப்பார்கள். பதினேழாவது நூற்ருண்டைச் சேர்ந்த வான் புரூக்கின் தேசப்படத்தில்கூட, ஸ்வர்ண ரேகையின் கிழக்குக் கரையிலேதான் ஜல்லேசுவரத்தைச் சுட்டிக் காட்டியிருக்கிறூர்கள். எனவே, பிருந்தாவன தாசர் இங்கே தவறுதலாக இப்படி எழுதி விட்டார் என்றே தோன்றுகிறது.

ஜல்லேசுவரத்தை அடையும் முன்பு, அதுவரை கோஷ்டியினரின் வசதிகளைக் கவனித்து வந்த ஜகதானந்தர் அந்தப் பொறுப்பை, நித்தியானந்தரிடம் ஒப்புவித்துவிட்டு, பிட்சையை மேற்கொண்டு விட்டார். ஸ்ரீசைதன்யருக்குப் பாரமாகவும் சிரமமாகவும் இருக்கும் அளவுக்குக் கோஷ்டியினரின் எண்ணிக்கை பெருகிவிட்டது என்று நித்தியானந்தர் கருதி, கோஷ்டியை மூன்று பகுதியாகப் பிரித்து விட்டார். இதைக் கண்டு மனம் வருந்திய ஸ்ரீசைதன்யர், தன் வெறுப்பைக் காட்டுவதற்காக, தன்னந்தனியே புறப்பட்டு விட்டார். சிறிது தூரம் சென்றதும் தாமதித்து, நித்தியானந்தரை அழைத்து, சந்நியாச விதிகளுக்கு குறுக்கே வந்து மாற்றங்கள் செய்ய வேண்டாம் என்று நித்தியானந்தரிடம் தெரிவித்தார். ஆனுல் ஸ்ரீசைதன்யரிடம் நித்தியானந்தருக்கு அன்பு மிகுதியாக இருந்ததால் இந்த விஷயத்தில் அவருடைய சந்நியாச தர்மத்தை ஏற்றுக்கொள்ள அவருக்குச் சங்கடமாக இருந்தது. ஜல்லேசுவரர் கோயிலில் அன்று நாமசங்கீர்த்தனம் நடைபெற்றது; அன்று இரவை அந்தக் கிராமத்திலேயே கழித்துவிட்டு அடுத்த நாள் காலையில் கோஷ்டியினர் பயணத்தைத் தொடங்கினர்.

போகும் வழியில் அவர்கள் சாக்த சந்நியாசி ஒருவரைப் பன்ஸ்டா பாதையில் சந்தித்தார்கள். அவரிடம் ஸ்ரீசைதன்யர் சிறு வேடிக்கை ஒன்றைச் செய்தார். அந்தக் கோஷ்டியினரைச் சாக்தர்கள் என்று எண்ணிக்கொண்டு அவர்களைத் தங்கள் மடத்

துக்கு வந்து தீர்த்தம் அருந்திச் செல்லும்படி அந்தச் சந்நியாசி கேட்டுக் கொண்டார். "வரவேற்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்; நாங்கள் பின்னாலேயே மடத்துக்கு வந்து சேருகிறோம்" என்று ஸ்ரீசைதன்யர் அவரை ஏமாற்றிவிட்டு, சாக்த சந்நியாசி அந்த இடத்தை விட்டு நகர்ந்ததும், அவருடைய வேண்டுகோளைப் பரிதாபத்துடன் நினைத்துச் சிரித்துக் கொண்டே தங்கள் பிரயாணத்தைத் தொடர்ந்து ரெமூனா என்னும் இடத்தை அடைந்தார்.

மிதுனபுரி வழியாக, தாந்தன் என்னும் இடத்தை அடைந்து (போகும் பாதையின் இடதுபக்கம் தாம்போலி, பன்ஸ்ஜா என்னும் ஊர்கள் உள்ளன.) ரெமூனா, பாத்ரெக் வழியாகத் தொடர்ந்து பூரி சென்றடையும் பழைய பாதைதான் வான் புரூக்கின் தேசப் படத்திலும் குறிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீசைதன்யர் பன்ஸ்டா பாதையில் சாக்த சந்நியாசியைச் சந்தித்தது அநேகமாக இந்த மார்க்கத்தில் செல்லும்போதுதான் என்று பிருந்தாவனதாசர் குறிப்பிட்டிருக்கிறார். பிரதான பட்டணமாக இருந்த காரணத்தாலேயே அந்த இடத்துக்குப் பன்ஸ்டா பாதை என்ற பெயரும் ஏற்பட்டிருக்கலாம். பிருந்தாவனதாசர் குறிப்பிடும் பன்ஸ்டாவின் வர்ணனையிலிருந்து அது வான் புரூக்கின் தேசப் படத்தில் உள்ள பன்ஸ்ஜாவாகவே இருக்கும் எனத் தெரிகிறது.

ஸ்ரீசைதன்யரின் பரமாசாரியரான ஸ்ரீமாதவேந்திர பூரி வசித்த ரெமூனாவில் உள்ள கோபிநாதர் கோயிலுக்கு ஸ்ரீசைதன்யர் சென்றார். அங்கே எழுந்தருளியிருக்கும் கோபிநாதரைக் குறித்து ஸ்ரீமாதவேந்திர பூரி பல பாடல்கள் பாடியிருந்த காரணத்தால் அவருடைய நினைவு அங்கே எப்பொழுதும் பசுமையாக இருந்தது. மாதவேந்திர பூரியையும், அவர் பாடிய பிரசித்திபெற்ற பாடலையும் குறித்த நினைவு ஸ்ரீசைதன்யரின் நெஞ்சில் எழுந்ததுமே அவரிடம் பெரிய மாறுதல்கள் நிகழ்ந்தன.

"ஓ, நாதனே! இந்த எளியேனுக்கு இரங்குங்கள். மதுரையம் பதி இறைவா! உன்னை என்று காணப்போகிறேன்? உன் நினைவாகவே இருக்கும் என் உள்ளம், உன்னைக் காணவேண்டுமென்று பொறுமையிழந்து துடிக்கும் துடிப்பை என்னால் பொறுக்கமுடிய

வில்லை. என் காதலனே! நான் என்ன செய்வேன்?'' என்னும் கருத்தமைந்த பாடலின் நினைவு வந்ததுமே ஸ்ரீசைதன்யர் பரவச நிலையை அடைந்துவிட்டார். கோபிநாத விக்கிரகத்தைக் கண்டதும் பகவானை விட்டுப் பிரிந்திருக்கும் விரகதாபம் மேலிட்டவராய் ஸ்ரீசைதன்யர் அப்படியே மயங்கி விழுந்துவிட்டார். அவர் அருகி லிருந்த நித்தியானந்தர் உடனே அவரைத் தம்முடைய இருகரங் களாலும் ஏந்திக் கொண்டு விட்டார். உணர்ச்சி மிகுதியால் அவருடைய குரல் கம்மியது; கன்னங்களில் நீர் வழிந்தோடியது; உடல் சிலிர்த்தது; வேர்வை பெருகியது; ஸ்ரீசைதன்யர் அழுது புலம்பினர்; உணர்வற்றுச் சிலை போல நின்ருர். ஆழ்ந்த சோகம், சந்தோஷம், கருணை போன்ற பலவகை உணர்ச்சிகள் அவர் முகத்தில் மாறி மாறித் தோன்றி மறைந்தன.

பகவானுக்கு நைவேத்யமாக அர்ப்பணித்த பால் அன்னத்தை அர்ச்சகர் ஸ்ரீசைதன்யருக்கு அளித்தார். அன்றிரவு முழுவதும் அவர் கீர்த்தனைகளைப் பாடியும் ஆடியும் கழித்தார். அதிகாலையில் கோபிநாதருக்கு மங்கள ஆரத்தி எடுத்த காட்சியையும் கண்டு தரிசித்து விட்டு ஸ்ரீசைதன்யர் தம் பயணத்தை மீண்டும் தொடங்கி ஞர். பூரிக்குச் செல்லும் கௌடிய வைஷ்ணவர்கள் எவரும், ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்ததால் விசேஷ பெருமை பெற்ற கோபி நாதர் ஆலயத்துக்குச் சென்று வழிபாடு நடத்தத் தவறுவதில்லை.

ரெமூனுவுக்குப் பிறகு ஸ்ரீசைதன்யர் அறுபது மைல்களுக்கு அப்பால் உள்ள ஜாஜ்புரிக்குச் சென்ருர். கட்டாக், பாலசூர் ஜில்லாக்களுக்கு எல்லையாகச் செல்லும் வைதரணி நதியின் இடது பக்கத்தில் அது அமைந்திருக்கிறது. கயோன்ஜார் சம்ஸ்தானத் துக்கு வடமேற்கே உள்ள மலைகளிலிருந்து புறப்பட்டு, ஜாஜ்புரி வழியாகச் சென்று, பிராம்மணி நதியுடன் கலந்து தர்ம என்னும் பெயருடன் வங்கக் கடலில் வைதரணி கலக்கிறது. ஹிந்துக்கள் இந்த நதியைப் புண்ணிய நதியாகக்கருதுகிருர்கள். 'ஸ்ரீசைதன்ய பாகவதம்' என்னும் நூலிலும் வைதரணியை விசேஷமாகப் போற்றிப் எழுதப் பெற்றிருக்கிறது.

அரண்மனைகளும், கோயில்களும் நிறைந்த ஜாஜ்புரியில் எல்லா மதப்பிரிவினர்களுக்கும் உரிய சின்னங்கள் இருக்கின்றன.

ஹுசேய்ன்ஷா முதலிய முஸ்லிம் விக்கிரக விரோதிகளும் கால பஹாரனும் செய்த கொடுமைகளினல் அழிந்த கோயில்களும் தூண்களும் கை கால் முகம் பின்னமடைந்த சிலைகளும் இங்கு ஏராளமாகச் சிதறிக் கிடக்கின்றன. இந்த அலங்கோல நிலையைப் பார்த்து அவர்களுடைய அட்டகாசங்களை ஓரளவு தெரிந்து கொள்ள முடிகிறது. சில கோயில்களும் கட்டிடங்களும் சிதையாமல் இருப்பதை இன்னும் அங்கே காணலாம். அவற்றுள் நம்மைப் பொறுத்த வரையில் முக்கியமானது ஆதிவராகர் கோயில்.

ஸ்ரீசைதன்யர் வைதரணி நதியில் தசாமேத கட்டத்தில் நீராடி, இந்தக் கோயிலுக்குச் சென்று விக்கிரகத்துக்கு முன் பக்தி மிகுதியால் கீர்த்தனங்களைப் பாடியும் ஆடியும் மகிழ்ந்தார். தனியாகவே அவர் பல புண்ணிய இடங்களுக்கும் கோயில்களுக்கும் சென்று விட்டு அடுத்த நாள் கோஷ்டியினருடன் சேர்ந்து கொண்டார். வராகர் கோயிலுக்கு இடப் புறத்தில் ஓர் அழகான கோயிலை, பிரபு பாத பக்தி சித்தாந்த சரஸ்வதி டாகுரா அமைத்து அங்கே தினசரி வழிபாட்டுக்காக ஸ்ரீசைதன்யரின் பாதவடிவங்களையும் பிரதிஷ்டை செய்திருக்கிருர்.

ஜாஜ்புரியிலிருந்து நாற்பது மைல்கள் நடந்து சில தினங்களுக்குள்ளாகவே ஸ்ரீசைதன்யர் கட்டாக்கை அடைந்தார். மஹா நதியும் கட்ஜுரி நதியும் கலக்கும் இடத்தில் கட்டாக் அமைந்திருக்கிறது. ஒரிஸ்ஸாவின் பழைய தலைநகரம் இதுவே. மஹாநதியில் ஸ்ரீசைதன்யர் நீராடி, சாட்சி கோபாலர் கோயிலுக்குச் சென்று ஆனந்தமாக நடனமாடியும், கீர்த்தனங்களைப் பாடியும் நீண்டநேரம் பிரார்த்தனையில் ஈடுபட்டார். இந்த விக்கிரகத்தைக் குறித்து ஓர் சுவையான வரலாற்றைக் கிருஷ்ணதாச கவிராஜர் தம் நூலில் எழுதியிருக்கிருர்.

ராஜமகேந்திரவரத்துக்கு அருகில் உள்ள வித்யாநகரத்தைச் சேர்ந்த இரண்டு பிராம்மணர்கள் யாத்திரைக்குப் புறப்பட்டார்கள். அவர்களில் ஒருவர் முதியவர்; மற்றவர் இளையவர். பிரயாணத்தில் முதியவருக்கு வேண்டிய வசதிகளை இளையவர் நன்கு கவனித்துக் கொண்டார். தமக்கு வேண்டிய பணிவிடைகளைச் சற்றும் மனங் கோணுமல் இளைஞன் செய்துவருவதில் மகிழ்ச்சி அடைந்த

முதியவர், தம்முடைய மகளை இளையவருக்குக் கல்யாணம் செய்து கொடுப்பதாகப் பிருந்தாவனத்தில் உள்ள கோபாலர் சந்நிதியில் வாக்குறுதி அளித்தார். ஆனால் பிரயாண முடிவில், தாம் அந்த மாதிரி வாக்குறுதியே தரவில்லை என்று கிழவர் சாதித்து விட்டார். இருவருக்கும் இடையே ஏற்பட்ட சச்சரவைச் சமரசம் செய்து வைக்கப் பஞ்சாயத்தார் கூடினார்கள். பிருந்தாவனத்திலிருந்து சாட்சி சொல்லுவதற்காக, கோபாலர் வித்யாநகருக்கு நடந்தே வந்து விட்டார். இந்த அதிசயச் சம்பவத்தைக் கேள்வியுற்ற வித்யாநகர மன்னன் கோபால விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்தான். வழக்கிலே சாட்சி சொல்ல வந்த காரணத்தால் மக்கள் அந்தக் கோபாலரை, சாட்சி கோபாலர் என்றே அழைக்கலானார்கள்.

ஸ்ரீசைதன்யரின் சீடனான பிரதாபருத்திரனின் தந்தை, புருஷோத்தம தேவன் என்னும் மன்னன் வித்யாநகரின் மேல் படையெடுத்து அந்த மன்னனைத் தோல்வி அடையச் செய்து ஏராளமான செல்வங்களுடன் கட்டாக்குக்கு வந்து சேர்ந்தான். வைர பீடத்துடன் பொருந்திய சாட்சி கோபாலரையும் கூடவே புருஷோத்தம தேவன் கட்டாக்குக்கு எடுத்துச் சென்றுவிட்டான். கட்டாக்கில் உள்ள ஜகந்நாத ஆலயத்துக்கு வைர பீடத்தை மன்னன் அர்ப்பணித்து விட்டு, சாட்சி கோபாலருக்குத் தனியே ஒரு கோயிலை நிர்மாணிக்கச் செய்தான். இவ்வாறு வரலாற்றில் சிறப்பான இடம் பெற்ற சாட்சி கோபாலரைத்தான் ஸ்ரீசைதன்யர் தரிசனம் செய்தார். பின்னால் இந்த விக்கிரகம் பூரியில் உள்ள ஜகந்நாத ஆலயத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டது. கடைசியில், குர்தாவிலிருந்து பூரிக்குச் செல்லும் ரெயில் பாதையில் பூரியிலிருந்து பன்னிரண்டாவது மைலில் இருக்கும் சத்தியவதி என்னும் ஊரில் அழகான கோயிலை அமைத்து, இந்தச் சாட்சி கோபாலரைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். தினந்தோறும் இந்த ஸ்தலத்துக்கு ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் வந்து சாட்சி கோபாலரைத் தரிசித்துவிட்டுச் செல்கிறார்கள்.

ஸ்ரீசைதன்யரின் கோஷ்டி, கட்டாக்கில் இருந்த சாட்சி கோபாலர் கோயிலிலே இரவைக் கழித்துவிட்டு, அடுத்த நாள் காலையில் பிரயாணத்தைத் தொடர்ந்தது. இந்த இடத்துக்கு

ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்ததற்கு நினைவுச் சின்னமாகவும் ஸ்ரீசைதன்யரின் வைஷ்ணவ தர்மத்தைப் பரப்புவதற்காகவும் காலஞ் சென்ற பிரபுபாத பக்தி சித்தாந்த சரஸ்வதி டாகுரா இங்கே ஒரு மடத்தை நிறுவி ஸ்ரீசைதன்யரின் உருவத்தையும் பிரதிஷ்டை செய்திருக்கிறார்.

சிவன் கோயில்கள் நிறைந்த புவனேசுவரத்துக்கும் ஸ்ரீசைதன்யர் சென்று ஒருநாள் தங்கியிருந்தார். லிங்கராஜர் கோயிலுக்குக் கிழக்கிலும் ஆனந்த வாசுதேவர் கோயிலுக்கு வடக்கிலும் அமைந்திருக்கும் பிந்துசரோவரம் என்னும் குளத்தில் நீராடி வழிபாடுகளைச் செய்தார். புவனேசுவரத்தில் உள்ள எல்லா ஆலயங்களுக்கும் ஸ்ரீசைதன்யர் சென்றார். அவற்றுள் அவருடைய உள்ளங் கவர்ந்த கோயில் எது என்று நம்மால் உறுதியாகச் சொல்ல இயலவில்லை.

ஒரிஸ்ஸாவின் கோயில் கட்டிடக் கலையின் வெவ்வேறு கால வளர்ச்சியையும் வகைவகையான கோபுரங்களின் தோற்றங்களையும் அவை பூரண நிலையை அடைந்த காலத்து இருந்த அமைப்புக்களையும் புவனேசுவரத்தில் காணலாம். ஒரிஸ்ஸாவில் மட்டும் அல்ல, கிழக்கு இந்தியாவிலேயே வளர்ச்சி பெற்றுள்ள நான்குவகையான கோயில் கட்டிட அமைப்புக்களுக்கு மாதிரியான கோயில்கள் இங்கே இருக்கின்றன.

அவை, 1. பரமேசுவரர் கோயில் 2. முக்தேசுவரர் கோயில் 3. மிகப் பெரிய லிங்கராஜர் கோயில் 4. ராஜாராணி கோயில் என்னும் ஆலயங்களாகும்.

மதத்தின் பெருமையைக் காட்டும் லிங்கராஜர் கோயிலைக் கண்டு ஆனந்தம் கொண்டு ஸ்ரீசைதன்யர் அங்கே நர்த்தனமாடிப் பாடிக் களித்தார். சிற்பக் கட்டிடக் கலையைப் பொறுத்த வரையில் இந்தியா முழுவதிலுமே மிகச் சிறந்த மாதிரியாகச் சொல்லப்படும் பிரமேசுவரர் கோயில் தான், சிற்ப நுட்பம் அறிந்த ஸ்ரீசைதன்யர் கண்டு மகிழ்ந்த சிவன் கோயிலாக இருக்கும் என்று யூகிக்கலாம். இப்பொழுது ஒரிஸ்ஸா ராஜ்யத்தின் தலைநகரமாகப் புவனேசுவரம் விளங்குகிறது.

புவனேசுவரத்தில் ஒருநாள் இரவைக் கழித்துவிட்டு, மிக்க மகிழ்ச்சியுடன் கமலாபுரிக்குச் சென்று பார்கி நதியில் நீராடி, கபதே

சுவரர் கோயிலுக்குச் சென்ருர். பிருந்தாவனதாசர் எழுதியதற்கு மாருக, இங்கேதான் நித்தியாநந்ததாசர், ஸ்ரீசைதன்யரின் திருத் தண்டத்தை, மூன்ருக உடைத்தார் என்று கிருஷ்ணதாச கவிராஜர் எழுதுகிருர்.

கால்நடையாகச் சென்ருல் ஆறுமைல் தூரம் நடக்க வேண்டிய அளவு தூரத்தில் உள்ள கமலாபுரியிலிருந்தே பூரி ஜகந்நாதர் கோயில் கோபுரத்தின்மேல் உள்ள விஷ்ணு சக்கரத்தைக் காணலாம். விஷ்ணு சக்கரத்தைப் பார்த்த உடனே பக்திப் பரவச நிலையை அடைந்த ஸ்ரீசைதன்யர் உணர்ச்சி மிகுதியால் தள்ளாடித் தள்ளாடி நடந்து பூரியை அடைந்தார். சாதாரணமாக, கமலாபுரியிலிருந்து பூரிக்கு இரண்டே மணி நேரத்தில் நடந்து சென்று விடமுடியும். ஆனல் ஸ்ரீசைதன்யர் பூரியை அடைய ஒன்பது மணி நேரம் பிடித்தது என்ருல் அவர் இருந்த பரவச நிலையின் தன்மையை என்ன என்று சொல்வது?

கீர்த்தனங்களைப் பாடியும் அவற்றுக்கேற்ப, நர்த்தனமாடிக் கொண்டும், "என்னைக் கண்டதும் எல்லையற்ற கருணையினல் மாளிகையின் உப்பரிகையில் புன்னகையுடன் பால கோபாலன் நின்று காட்சி தருகிருன். அவனைப் பாருங்கள்" என்னும் கருத்து அமைந்த பாடலைச் சொல்லிக் கொண்டும் கமலாபுரியிலிருந்து அடார நல்லா என்னும் இடம் வரையில் ஸ்ரீசைதன்யர் ஐந்து மைல்கள் முதுகில் ஊர்ந்தே சென்ருர். ஸ்ரீஜகந்நாதரிடம் அவர் வைத்திருத்த பக்தி அவ்வளவு உயர்ந்த நிலையில் இருந்தது.

பூரிக்கு அருகில் ஓடும் சிறுநதிக்குக் குறுக்கே அமைந்துள்ள பாலத்தில் பதினெட்டு வளைவுகள் இருப்பதாலேயே அதற்கு அடார நல்லா என்று பெயர் ஏற்பட்டது. இங்கே வந்து சேர்ந்ததும் ஸ்ரீசைதன்யர், "ஒன்று எனக்கு முன்பே நீங்கள் எல்லோரும் ஜகந்நாதர் ஆலயம் சென்று பகவானைத் தரிசியுங்கள் அல்லது நான் மட்டும் தனியே சென்று சேவிக்க விரும்புகிறேன். ஏனெனில் பகவானைத் தனிமையில் நான் சேவிக்க விரும்புகிறேன். அப்பொழுது வேறு யாராவது என்னுடன் இருந்தால் என்னுடைய உணர்ச்சிகள் தடைப்பட்டுவிடும்!" என்று தம்முடைய சீடர்களை வேண்டிக்

கொண்டார். அவருடைய விருப்பத்தை உணர்ந்த முகுந்ததத்தர் ஸ்ரீசைதன்யரையே முன்னதாகச் செல்லும்படி கேட்டுக் கொண்டார்.

ஜகந்நாதரைக் கண்டதும் ஸ்ரீசைதன்யரின் உள்ளத்தில் விசித்திரமான உணர்ச்சிகள் தோன்றின. காதலனை விட்டுப் பல வருஷங்கள் பிரிந்த காதலி, அவனை மீண்டும் கண்டவுடன் அடக்கி வைத்திருந்த காதலுடன் ஓடிச் சென்று கட்டி அணைத்துக்கொள் வதைப் போல, ஸ்ரீசைதன்யர், பக்தி மிகுதியால் விக்கிரகத்தை அணைத்துக் கொள்வதற்காக ஓடி, மயங்கிக் கீழே விழுந்துவிட்டார். அவருடைய பரவச நிலையை அறியாத காவலர்கள், கோயில் விதிகளை மீறிவிட்டார் என்று அவரைத் தண்டிக்க முயன்றார்கள். நல்ல வேளையாக அருகில் இருந்த வாசுதேவ சார்வபௌமர் உடனே குறுக்கிட்டுத் தடுத்துவிட்டார். ஸ்ரீசைதன்யருடைய போக்கையும் அழுகையும் மூர்ச்சையாகக் கிடந்த நிலையையும் கண்டு மனங்கசிந்த சார்வபௌமர், ஸ்வாமி எழுந்தருளப் பண்ணுபவர்களின் உதவியாலும் சீடர்களின் துணையாலும், ஜகந்நாதர் கோயிலுக்கு அருகில் உள்ள தமது இல்லத்துக்கு அவரை எடுத்துச் சென்றார்.

ஸ்ரீசைதன்யர் பேச்சு மூச்சற்றுக் கிடந்தார். இருதயத் துடிப்பும் நின்று விட்டது போல இருந்தது. அவருடைய நிலையைக் கண்டு சார்வபௌமர் பயந்து விட்டார். மெல்லிய வெள்ளைத் துணியை எடுத்து மூக்கின் அருகே வைத்து, மூச்சு இருக்கிறதா என்று பார்த்தார். அந்த மெல்லிய துணி சற்று அசைந்தது. அப்பொழுது தான் சார்வபௌமரின் கவலையும் நீங்கிற்று. இவ்வளவு துல்லியமான பக்திப் பரவச நிலை சாதாரண மனிதரிடம் இருக்க முடியுமா என்று அவர் ஆச்சரியமடைந்தார்.

ஸ்ரீசைதன்யருக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த நித்தியானந்தரையும் மற்றவர்களையும், கோயிலின் சிம்மவாசல் அருகே, சார்வபௌமரின் தங்கையின் கணவரான கோபிநாத ஆசார்யர் சந்தித்து, சார்வபௌமரின் இல்லத்துக்கு அவர்களை அழைத்துச் சென்றார். கோபிநாத ஆசார்யரும் ஸ்ரீசைதன்யரின் அருமை பெருமைகளில் ஈடுபட்டவர்.

சார்வபௌமரின் இல்லத்தில் பிரக்ஞை இழந்து கிடந்த ஸ்ரீசைதன்யரை எல்லோரும் கண்டார்கள். மாலை வரையில் ஸ்ரீசைதன்யரின் பிரக்ஞை தெளியவே இல்லை. மயக்க நிலையிலிருந்து அவர் எழுந்ததும், சார்வபௌமர் எல்லோருக்கும் விருந்துபசாரம் செய்தார். ஒரிஸ்ஸாவின் மன்னன் பிரதாபருத்திரனின் ஆஸ்தான வித்வானுன வாசுதேவ சார்வபௌமர் தம் வீட்டுக்கு வந்த துறவிகளுக்கு, கிருகஸ்தர்கள் உபசாரம் செய்ய வேண்டிய சம்பிரதாயத்துக்கு ஏற்ப வகைவகையான பண்டங்களுடன் தங்கத் தட்டில் ஸ்ரீசைதன்யருக்கு உணவு அளித்தார். ஆனால் எளிய முறையில் தயாரித்த வெறும் காய்கறிகளை மட்டுமே ஸ்ரீசைதன்யர் ஏற்றுக் கொண்டார்.

## 7

# சார்வபௌமரின் சித்தாந்த மாற்றம்

அந்தக் காலத்தில் இந்தியாவின் கிழக்குப் பாகத்தில் மாயா வாதத்தைப் பின்பற்றும் அறிஞர்களிலே மிகவும் சிறந்தவராக விளங்கினவர் சார்வபௌமர். அவருடைய மைத்துனர் கோபிநாதர் ஸ்ரீசைதன்யரின் தெய்விகத் தன்மையில் தீவிர நம்பிக்கை உள்ளவர். பரமாத்மாவுக்கு உருவமோ குணமோ உண்டு என்பதையே ஏற்றுக் கொள்ளாத சார்வபௌமருக்கு, ஸ்ரீசைதன்யர் அவதார புருஷர் என்னும் கொள்கையை ஏற்றுக் கொள்வது என்பது இயலாதது. கோபிநாதருடைய தீவிர நம்பிக்கை, சார்வபௌமருக்குப் பெரிய எதிர்ப்பாக இருந்தது. அத்வைத மார்க்கத்துக்கு ஸ்ரீசைதன்யரை மாற்றிவிட வேண்டும் என்று சார்வபௌமர் மிக்க ஆவலுடன் இருந்தார். எனவே, அவருக்கு வேதாந்தம் கற்றுக் கொடுக்கத் தொடங்கினர். எந்தவிதமான அபிப்பிராயத்தையும் தெரிவிக்காமல் ஸ்ரீசைதன்யர் ஏழுநாட்கள் சார்வபௌமரிடம் வேதாந்தம் கேட்டு வந்தார்.

எட்டாவது நாளன்று, "நான் சொல்லிவருவது உங்களுக்குப் புரிகிறதா?" என்று சார்வபௌமரே ஸ்ரீசைதன்யரை விசாரித்தார். அப்பொழுதுதான் ஸ்ரீசைதன்யர் பேசலானர்.

"உபநிஷதங்களை விளக்கும் போது வியாசர் எடுத்துச் சொன்ன வேதாந்தத்தின் பொருளை நான் உணர்ந்துகொண்டேன். ஆனல் உங்களுடைய விசித்திரமான விளக்கம் புரியக் கூடியதாக இல்லை; மற்றும் வேதாந்த சூத்திரங்களின் உண்மைப் பொருளையும் மறைத்து விடுகிறது. உபநிஷத்துக்களைக் கொண்டு தான் வேதாந்தத்துக்கு விளக்கம் கூறவேண்டும். எல்லாச் சான்றுகளையும் விட ஸ்ருதி உயர்ந்தது. உங்களுடைய கற்பனை விரிவால் அதன் மதிப்பைக் குறைக்கக்கூடாது. வியாசரின் பிரம்ம சூத்திரங்கள் சூரியனைப் போலச் சுயமாக ஒளி வீசக் கூடியவை. அவற்றை

அநுமானங்களாலான பாஷ்யங்கள் என்னும் மேகங்கள் கவித்து மறைத்துவிடக் கூடாது" என்று ஸ்ரீசைதன்யர் பதில் தந்தார்.

பின்னர் வேதாந்தத்துக்குச் சங்கரர் அருளிய பாஷ்யத்தின் துணையால் சார்வபௌமர் நிலைநாட்ட முயன்ற வியாக்கியானத்தை, ஸ்ரீசைதன்யர் மறுக்கத் தொடங்கினர்.

பிரம்மம் சத்தும் அல்ல; அசத்தும் அல்ல. பரபிரம்மம் அகண்டாகாரமானது. அதில் எல்லாம் மறைந்துள்ளது. அறிகிறவன், அறிவு, அறியப்படும் பொருள் யாவும் ஒருங்கே சேர்ந்து தனி விகாரங்களை இழந்து விடுகிறது. பிரம்மம் ஒன்றே என்னும் சங்கரர் சித்தாந்தத்தில், ஈசுவரன் பரம புருஷன் என்று சொல்வது ஒவ்வாதது. ஏனெனில் பரபிரம்மம் மனம், வாக்கு, காயம் இவை மூன்றுக்கும் எட்டாதது. அப்படியிருக்கப் பரம்பொருளாக நினைப்பது ஒரு வரையறைக்கு உட்படுத்துவதாகும். புருஷ ஆகிருதியும் பரம் பொருளும் ஒன்றுக்கொன்று பொருந்தக் கூடியவை அல்ல. எனவே, எவ்வித வாசனைக்கும் அப்பாற்பட்டது; வஸ்து அல்லாததுமாகும். பிரம்மம் ஒன்றே சத்தியம், வேறு இரண்டாவது இல்லை. அதில் அசைவும் இல்லை; அசைவுக்குக் காரணமாக இருப்பதும் இல்லை. உலகம் வேறுபட்டது அல்ல; ஜீவனும் வேறுபட்டது அல்ல. எல்லாம் பிரம்மத்தில் அடக்கம். புலனுக்குத் தோன்றும் இந்த உலகம் யாவும் பிரம்மத்தின் மாயைத் தோற்றந்தான்.

இந்தியாவின் கிழக்குப் பகுதியில் காசி போன்ற அறிவாளிகள் நிறைந்த நகரங்களில் இருந்த மிகச் சிறந்த அத்வைத அறிஞர் களில் அநேகமாக ஒப்பற்றவராக விளங்கியவர் சார்வபௌமர். அப்போது வட இந்தியாவில் இருந்த புகழ்பெற்ற, பிரம்மம் ஒன்றே என்னும் கொள்கையினரான பிரகாசானந்த சரஸ்வதி, சார்வ பௌமரைப்பற்றி எவராலும் வெல்ல முடியாதவர் என்றே கருதி யிருந்தார். இத்தகைய அறிஞரின் கொள்கைகள் ஒவ்வொன்றையும் ஸ்ரீசைதன்யர் பரிசீலனை செய்தார்.

'பிரம்மம் பெரியது; எல்லாவற்றுக்கும் நாயகமானது. பலவித சக்திகளும் குணங்களும் பொருந்தியது' என்று ஸ்ரீசைதன்யர் விளக்கம் கூறினர். பிரம்மம் உருவற்றது என்னும் சார்வபௌமரின்

வாதத்தை ஸ்ரீசைதன்யர் கண்டித்தார். (நிராகாரம்) பிரம்மம் நிர் விசேஷமானது, குணங்களுக்கு அப்பாற்பட்டது என்று சில ஸ்ருதி கள் கூறுகின்றன. சாதாரண விவகார உலகத்தில் நாம் காணும் விசேஷங்களுக்கும் குணங்களுக்கும் அப்பாற்பட்டது பிரம்மம் என்று தான் அவர்கள் குறிப்பிட்டார்களே தவிர பேரின்பத்தைத் தருவ தற்கான கல்யாண குணங்களை அவர்கள் குறிப்பிடவில்லை என்று ஸ்ரீசைதன்யர் மறுத்துக் கூறினர். பிரம்மம் சச்சிதானந்த சொரூப மானது. அதாவது : சத்-உயிர்; சித்-அறிவு; ஆனந்தம்-பேரின் பம். பேரின்பம் நிலவுவதற்கு அதை நுகருபவனும் நுகரச் செய் பவனும் இருக்கவேண்டும். அத்வைத அறிஞர்கள் பேரின்பம் என்று உண்டு என்று ஒப்புக் கொள்ளும் இடத்தில், துன்பத்தி லிருந்து நீங்கிய நிலை-இல்லாத ஒன்று-என்றே கருதுகிறார்கள்.

வைஷ்ணவ அறிஞர்கள் அத்தகைய நிலை உண்டு என்றும் பரஸ்பரம் பேரின்பத்தை அளித்து அதை அநுபவிக்கும் இரண்டு வெவ்வேறு வியக்திகள் உண்டு என்றும் ஏற்றுக் கொள்ளுகிறார்கள்.

ஆத்மன் (பிரம்மம் அல்லது இறை)நிலைத்திருக்கிறது (அஸ்தி); ஒளி வீசுகிறது (பிதி); நேசிக்கிறது அல்லது திருப்திப் படுத்து கிறது (பிரிநிதி) என்று தைத்திரீய உபநிஷத் கூறுகிறது. எல்லா வகையான செயல்களுக்கும் இரட்டைத் தன்மைக்கும் இயல்புகளுக் கும் பிரம்மம் அப்பாற்பட்டது என்றால் எப்படி பிரிதி (பேரின்பம்) தர இயலும்? ஆசையினலோ குறிப்பாகத் தேவையினலோதான் எல்லா வகையான வினைகளும் ஏற்படுகின்றன. பிரம்மம் இத்தகைய குறைகளுக்கு அப்பாற்பட்டது. எனவே, அதனிடத்தில் எவ்வித வினையும் தோன்றாது என்பதே ஸ்ரீசங்கரரின் வாதம்.

பிரம்மம் நிர்விசேஷமானது, சின்மாத்திரையானது மட்டும் அல்ல; அது எல்லாவிதமான தன்மைகளையும் குணங்களையும் செயல்களையும் ஏற்றுக்கொள்வது. விவகார உலகத்தில் தனி மனித னுக்கு உள்ள குணங்கள், சக்திகளைப் போல அல்லாமல் பிரம்மத் தின் குணங்களும் சக்திகளும் எல்லையற்றவை. பரம் பொருளுக்கு இது இயல்பானது.

தன்னுடைய பார்வையாலேயே பிரம்மம் உலகத்தைச் சிருஷ்டி செய்தது என்னும் தைத்திரீய உபநிஷத்தை அவர் மேற்கோளாகக்

காட்டினர். (1. 1) பிரம்மத்துக்குக் கால்களோ, கைகளோ இல்லை. ஆனல் அது நடக்கிறது; கைகளால் பற்றுகிறது என்று ஸ்வேதாஸ்தர உபநிஷத் கூறுகிறது என்பதையும் சுட்டிக் காட்டினர். பரம் பொருளான பிரம்மத்துக்கு. உலக விவகாரத்தில் நிலவும் தேச கால வர்த்தமானங்களுக்கான குணங்களைச் சுமத்தாமல் இருப்பதற்காகவே சில ஸ்ருதிகள் பிரம்மத்தை நிர்விசேஷமாகக் குறிப்பிட்டிருக்கின்றன. பிரகிருதியின் நாயகஞன பிரம்மத்தை உலக விவகார குணங்களுக்கு உட்படாமல் அதீதமாயிருப்பதை விளக்கிக் காட்டுவதற்காகவே ஸ்ருதிகள் பிரம்மத்தை நிர்க்குணமானது என்று கூறுகின்றன.

வைஷ்ணவர்கள் கருதுவது போல, அனந்த கல்யாண குண சம்பூர்ணஞன பிரம்மம் சுயேச்சையாக லீலா விநோதங்களைச் செய்யவல்லது; ஆசையினலோ, தேவையினலோ ஏற்படும் ப்ராக்ருத குணங்களுக்கு உட்பட்டதல்ல இந்த சகுண பிரம்மம். தன்னிச்சையாக, ஆனந்தத்தின் நிறைவினல்-நிஷ்காம்யமாக, ஏற்படும் பரம் பொருளின் செயல்களே லீலைகள் எனப் பெறும். அவனுடைய எல்லையற்ற ஆனந்தத்தின் வடிகாலைத்தான் லீலைகள் என்று சொல்கிருேம். ஜீவாத்மாவின் வரையறைக்குட்பட்ட சக்திகளுக்கு மாருக, பிரம்மத்துக்கு ஆத்மிக இயல்புகள் உண்டு என்று ஸ்ரீசைதன்யர் விளக்கம் தந்தார்; இத்தகைய குணங்களைக் கொண்டிருக்கும்போது பிரம்மத்தின் இயல்புகளில் எவ்வித மாற்றமும் ஏற்படுவதில்லை. நெருப்பில் உஷ்ணம் மறைந்திருப்பது போல, சிருஷ்டி, லீலைகள், மூன்று சக்திகள் யாவும் பிரம்மத்தில் அடங்கியிருக்கின்றன.

இந்த மூன்று சக்திகளில், சித் சக்தியே, எங்கும் பரந்திருக்கும் இயல்பினல் கிருஷ்ணனைப் பகவாஞக வெளிப்படுத்தவும் சாந்தினி இயல்பினல் இறைவனின் இருக்கை, அவனுடைய அணிகள் முதலியவற்றைத் தோற்றுவிக்கவும் ஹலாதினி இயல்பால் பகவானுடைய ஆனந்தத்தை விளக்கச் செய்யவும் முக்கிய காரணங்களாகின்றன. இதுவே பகவானின் ஸ்வரூப சக்தி அல்லது அந்தரங்க சக்தி என்பதாகும்.

ஆத்மாக்களாகப் பரிணமிக்கச் செய்வது இரண்டாவது சக்தியான ததஸ்தா சக்தி. ஸ்வரூப சக்திக்கும் மாயாசக்திக்கும் இடையே இருப்பதாலேயே இதற்கு இப்பெயர் ஏற்பட்டது. பகவானுக்குக் கைங்கர்யம் செய்வது ஜீவாத்மாக்களுக்கு இயற்கை. ஆகிலும் மாயா சக்தியினுல் ஜீவாத்மாக்கள் கட்டுப்பட்டு, விவகார உலகத்தில் ஈடுபட்டு, உலக இன்ப துன்பங்களில் சுழல்கின்றன.

மூன்ருவது சக்தியான மாயாசக்தி விவகார உலகத்தில் தன்னே மாற்றிக்கொண்டு ஜீவன்களுக்கு உலக இன்ப துன்பங்களே நுகர, சூட்சும வடிவங்களேயும் தூல வடிவங்களேயும் தருகிறது. இந்த மூன்று சக்திகளும் பகவானுடன் எப்பொழுதும் பிரியாமலிருந்து கொண்டிருக்கின்றன.

பரம்பொருள் உருவம் இல்லாதது. உருவம் உள்ளதாகவோ தன்னேப் பிரகாசித்துக் கொள்ளவோ வேண்டியிருந்தால் அது தன்னேயே மாற்றிக்கொள்ள வேண்டியிருக்கிறது. சர்வ சக்தி வாய்ந்த பரம புருஷனேப் பரம் பொருள் அல்ல என்று அத்வைதிகள் நிராகரித்து, அருவமான பரம் பொருளேயே அவர்கள் ஏற்றுக் கொள்கிருர்கள். சர்வ சக்தி வாய்ந்த பரமபுருஷனே, சுத்த அத்வைதிகள் பரம்பொருள் என்று கருதாமல் இருப்பதற்குக் காரணம் இந்தப் பரம புருஷன் கால தேச வர்த்தமானத்தின் வரையறைக் குட்பட்டதாகிவிடும் என்ற ஆட்சேபமாகும். இந்தக் கொள்கையில் ஒரு சிரமம் இருக்கிறது. உலகமும் அதில் உள்ள ஜீவராசிகளும் தனிப்பட்டவைகள். அல்லது அவைகளுக்கும் நிர்விசேஷமான பரபிரம்மத்துக்கும் உறவு உண்டு என்பதை நிர்ணயிக்கும் போது சிக்கல் ஏற்படுகிறது. பால் தயிராவது போல, பரப்பிரும்மம் தன்னேயே மாற்றிக்கொண்டு உலகமாக ஆகிறது என்கிருர் சங்கரர். 'க்ஷீரவது த்ரவிய ஸ்வபாவ விசேஷாத்.'

இதில் சங்கரர் இரண்டுவிதமாகத் தம் கொள்கையையே மறுத்துக் கொள்கிருர். இந்த அசேதனமான பரபிரம்மத்துக்கே மாறுதல் கற்பிக்கிருர், தயிராவதற்குப் பால் தன்னேயே அழித்துக்கொள்வது போல. தயிர் மறுபடியும் பாலாக முடியாதே! அத்தகைய மாறுதலே, அசேதனமான 'பரம் பொருளே'யே அழித்து விடுகிறது.

இரண்டாவதாக, பால் தன்னைத் தயிராக மாற்றிக் கொள்ள வேறு உதவிகளை நாடுவது போல, பரம் பொருளும் தன்னை உலக மாக மாற்றிக்கொள்ள, தன்னைத் தவிர வேறு உதவியை மேற்கொண் டாப் போலாகும். இந்த இரண்டு காரணங்களால், பிரம்மம் ஒன்றே, வேறு ஒன்றும் இல்லை, அது அழிவில்லாதது என்பது பொய்யாகி விடுகிறது.

மாயாவாதத்தில், பரப்பிரம்மம் ஒன்றே; வேறு ஒன்றும் இருக்கமுடியாது. அப்படியிருக்க அது வேறு ஒன்ருகி, உலகத் தைச் சிருஷ்டி செய்வது முரணுகிவிடுகிறதே! உலக சிருஷ்டிக்குக் காரணம் சொல்வதற்காக, பிரம்மம் தன்னையே மாற்றிக்கொள்கிறது என்ருே, அல்லது இந்த வெறும் தோற்றமான உலகை, தான் என்று பிரம்மம் நினைத்துக் கொள்கிறது என்ருே சொல்லும் பட்சத்தில் சங்கரர் தம்முடைய அடிப்படைக் கோட்பாடுகளையே அழித்துக் கொள்ளும்படி ஆகும். ஸ்ரீசைதன்யரின் கொள்கைப்படி, சர்வசக்தி வாய்ந்த பெருமானின் சக்தியே உலகத்தின் தோற்றத்துக்குக் கார ணம். உலக சிருஷ்டியில் அவர் எவ்வித மாறுதலையும் அடைவது இல்லை. உலக சிருஷ்டி, அவருடைய சக்தியின் செயலே தவிர, அவர் அதில் சம்பந்தப்படுவது இல்லை. சூரியனின் கதிர்கள் பல இடங்களிலும் பட்டுப் பிரகாசிக்கும்போது சூரியன் எவ்விதத்திலும் பாதிக்கப்படாதது போலவே, பரம புருஷனும் பாதிக்கப்படுவதில்லை.

சங்கரர் ஒப்புக்கொள்கிறபடி, பரப்பிரம்மம் மாறுதல் அடைவ தாக இருந்தால், அதைப் பரப்பிரம்மம் என்று சொல்வதில் மதிப்பே இல்லை. நிர்விசேஷ பிரம்மத்துடன் ஒரு மாறுதல் அல்லது, முன்னுக்குப் பின் முரணுக இருக்கிறது என்னும் குற்றச்சாட்டுக்குப் பதிலாகவும் 'பிரம்மம் பார்த்தது', 'நான் பலவாக ஆகிறேன்; பின்னர் எல்லாவற்றையும் படைக்கிறேன்' (சாந்தோ: உபநிஷத் 6. 2. 3; ஐத். உபநிஷத் 1. 1. 1; பிரச்னுேபஷத் 0. 3. 4; முண்டக உபநிஷத் 1. 1. 9) என்னும் உபநிஷத வாக்கியங்களுக்கு விளக்கமாகவும் சங்கரர் இரண்டு பிரம்மங்களைக் குறிப்பிடுகிருர். ஒன்று நிர்க் குணப் பிரம்மம்; மற்றென்று சகுணப் பிரம்மம்; சின்மாத்திரையான நிர்க்குண பிரம்மம் விவகார உலகத்துக்கு அப்பாற்பட்டது. அதுவே விவகார உலகத்துடன் தொடர்பு கொள்ளும்போது, தன்னையே

சகுணப் பிரம்மமாக ஆக்கிக் கொள்கிறது. இதையே சங்கரர் ஈசுவரன் என்கிறார். இந்த ஈசுவரனுக்கு பிரம்மத்தின் இயல்பும் பிரகிருதியின் இயல்பும் உண்டு என்கிறார். எப்படி ஒரே உலகத்தைச் சேர்ந்த இரண்டு வெவ்வேறு ராஜ்யங்களாக மகதமும் விதேகமும் உள்ளனவோ, அதைப் போல ஈசுவரனும் ஜீவனும் எவ்வித பேதமும் அற்றது. ஒரேபொருளின் இரண்டு வெவ்வேறு வடிவங்கள் (சூத்திர பாஷ்யம் III ii 31.) என்று மீண்டும் சங்கரர் சொல்கிறார்.

பிரம்மத்துக்கும் உலகத்துக்கும் இடையே நிற்பது ஈசுவரன்: ஒரு பக்கம் பிரம்மத்துடனும் மறு பக்கம் விவகார உலகத்துடனும் தொடர்புடையது. உலகத்தின் காரணமாக முடிவில்லாத பிரம்மம் வரம்புள்ள ஈசுவரன் ஆகிறது. பிரம்மத்தைப் பற்றிய இந்த ஈசுவரக் கருத்து, மாயை, அவித்யை என்பவற்றைப் புகுத்துவதால் விளைந்ததாகும். பிரம்மத்தை ஈசுவரனாக மாற்ற மாயையும், ஈசுவரன் ஜீவன்களாக மாற அவித்யையும் உதவுகின்றன (வித்யாரண்யரின் பஞ்சதசி, (16–17) மாயையினால் தான் பிரம்மம் உலகமாகக் காண்கிறது. பிரம்மத்துக்கு உபாதியாக இருக்கிறது என்பதைத் தவிர, பிரம்மத்துடன் மாயையைப் பொருத்தமாக சங்கரர் காட்டவில்லை. மாயையின் தோற்றத்தில் பிரம்மம் ஜீவனாகத் தோன்றுகிறது. இது வெறும் தோற்றமே. உண்மை அல்ல. உண்மையில் போலித் தோற்றமான உலகத்தின் பார்வைக்கு இது அவசியம். மாயையிலோ, அவித்தையிலோ பிரம்மம் ஈசுவரனாகவோ ஜீவனாகவோ பிரதிபலிப்பது என்றால் மேலும் சிரமங்கள் எழுகின்றன. ஏனெனில் பிரம்மம் அருவமானது; பரிபூரணமானது, காணப்படுவதற்றது எனவே, அது பிரதிபலிக்க இயலாது. அதனுள்ளோ, அதற்கு வெளியோ மாயையும் அவித்தையும் இரண்டாவது பொருளாக இருக்கமுடியாது. அப்படி இருக்க வேண்டுமானால் பிரம்மம் ஏதாவது வகையில் தன்னுடைய பரிபூரண தன்மையை விட்டுக்கொடுக்க நேரிடும். இதற்குச் சுருக்கமாகப் பதில் அளிக்கும் வகையில் தான் குடத்தில் உள்ள காற்றும் வெளியே உள்ள காற்றும் ஒன்றே என்னும் கொள்கையை அத்வைதவாதிகள் கூறுகிறார்கள். பிருகதாரண்யக உபநிஷத்தின் (III. 4. 312) பாஷ்யத்தில் ஸ்ரீசங்கரர் இந்த 'கட ஆகாசம், மகா ஆகாசம்' என்னும் கொள்கையைக் கூறுகிறார்.

செம்மலர், வெள்ளை ஸ்படிகத்தில் சிவப்பு வண்ணத்தைத் தருவதுபோல பிரம்மத்தின் ஆத்மாக்கள் பிரதிபலிக்கின்றன. எனவே, மாயையோ, ஜீவனோ உண்மையில் இல்லை என்று கூறுவதால் பிரம்மத்தின் பரிபூரண தன்மை நிரந்தரமாக அழிந்து விடுகிறது என்று சொல்ல இயலாது. ஏனெனில் பார்க்கப்போனால் உண்மையில் ஈசுவரப் பிரம்மமோ, ஜீவ பிரம்மமோ நிர்க்குண பிரம்மமாகவே ஆகிறது.

ஒரு ஜாடி அல்லது பெட்டியின் பக்கங்களையும் அடிப்பாகத்தையும் எடுத்து விட்டால் அதன் உள்ளே இருந்த காற்று எல்லையற்ற ஆகாசத்தில் கலந்துவிடுவது போல அவித்யையின் வரம்புகள் மறையும் போது ஜீவன் பிரம்மத்துடன் லயிக்கிறது. ஜாடியில் இருந்த காற்று, வெளியே பரந்துள்ள ஆகாசத்தின் வேறு உருவம் என்று எப்படிச் சொல்ல முடியாதோ, அதைப் போலவே, ஜீவன்களும் பிரம்மத்தின் வேறு வடிவங்கள் ஆக மாட்டா. அவை பிரம்மமேயாகும். வெறும் பழுதையைப் பார்த்துப் பாம்பு என்று சொல்வது தான் மாயை.

பிரம்மம் ஜீவன் இரண்டும் முடிவில் ஐக்கியமாவதைப் பற்றி சங்கரர் ஸ்ருதியிலிருந்து, 'தத்வமஸி,' (வேதாந்த சூத்திரம் 4.1.30) 'அஹம் பிரம்மாஸ்மி' என்னும் வார்த்தைகளை எடுத்துக் காட்டுகிறார். ஈசுவரன் உள்பட, உலகத்தின் தோற்றத்தையும் அநுபவத்தையும் அவித்யை என்கிறார் சங்கரர். (பிரம்ம சூத்திர பாஷ்யம் 11.1.14). ஆனால் அது எப்படி இயலும்? பிரம்மம் ஒன்றைத் தவிர வேறு இல்லை என்னும்போது பிரம்மத்தின் மாறுதலை எப்படிக் கட்டாயமாக நம்புவது?

மாயாவாதிகள் சொல்வது என்னவென்றால், பிரம்மத்திலிருந்த எழுந்த ஈசுவரனின் வரையறைக்குட்பட்ட அனுபந்தமான மாயை சத்வகுணம் உள்ளது. ஈசுவரனுடன் சேர்ந்து அது பலவற்றைப் படைத்து, ஆத்மாக்களை தனித் தன்மையும் சுயேச்சையும் பெற்றவைகளாகத் தவறாக நம்பும்படி செய்கின்றது. தன்னுடைய அவித்யை என்னும் இயல்பால் ஆத்மாவைப் பாதிக்கிறது. அதாவது பிரம்மத்துடன் மாயை சேரும்போது ஈசுவரன் ஆகிறது. பிரம்மத்துடன் அவித்யை சேரும்போது ஜீவன் ஆகிறது.

மாயையுடன் சேர்ந்த ப்ரம்மம் (ஈசுவரன்) ராஜஸ தாமஸ குணங்களுக்கு உட்பட்டவன் அல்லன். அவித்யையுடன் சேர்ந்த பிரம்மம் (ஜீவன்) மேல் கண்ட குணங்களால் பாதிக்கப்பட்டவன் பிரகிருதி. மாயை இவற்றுடன் சேர்ந்தே பெயரையும் வடிவத்தையும் அடைகிறது. (சங்கரரின் வேதாந்த பாஷ்யம்; II. 1.6). பிரம்மம் வேறு, தான் வேறு என்கிற அவித்யையை நீக்கிக்கொள்வதே ஜீவனுக்கு மோட்சம் என்பது. பரம்பொருளான பிரம்மத்துடன் மீண்டும் ஜீவன்கள் சேருவதே மோட்சம். ஜீவன்கள் தொடர்பு கொள்ளும் மற்ற வஸ்துக்கள் யாவும் வெறும் உருவெளித்தோற்றமே; உலகமும் அத்தகையது தான். மோட்சத்தில் அறிபவனும் அறியப்படும் பொருளும் ஒன்றே.

மிகவும் உயர்வான பிரம்மம் மாயையுடன் கலந்து ஒரு படி இறங்கி ஈசுவரன் ஆகிறது என்னும் சங்கரரின் கொள்கையை ஸ்ரீசைதன்யர் கண்டித்தார். (சாந்தோக்யபநிஷத், சங்கர பாஷ்யம் III 14.2) ஈசுவரன் சுத்த ஸத்வமான சித். எனவே அவன் சத்வ குணத்துடனே மாயையுடனே ஒடுங்குகிறான் என்பது தெய்வ நிந்தைக்கு ஒப்பாகும். எல்லா உபநிஷத்துக்களும் ஈசுவரனோ, பிரம்மமோ நிர்விகாரமானது என்றே கூறுகின்றன. எனவே, உலகமும் ஜீவனும் எப்படித் தோன்றின என்று எடுத்துரைப்பதற்காக மாயாவாதிகள் பகவானை விகாரப்படுத்தக் கூடாது. ஈசுவரனுடைய சரீரம் மாறுதலுக்கு உட்பட்ட தல்ல. அது சாசுவதமானது இதை நம்பாதவர்கள் சாவை அடைவார்கள். அவர்கள் தீண்டத்தகாதவர்; பார்ப்பதற்கும் தகுதியற்றவர்கள் என்று ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார்.

சக்திகள் மாறுதலை அடையும் என்று வியாசரின் சூத்திரங்கள் கூறுகின்றன. ஆனால் உலகத்தை மேம்படுத்துவதற்காகப் பகவான் மாறுபடவேண்டிய அவசியம் இல்லை. தம்முடைய சக்தியின் செயல்களால் பகவான் எவ்வித மாறுதலும் அடைவது இல்லை. ஸ்பரிசவேதியின் ஸ்பரிசம் பட்டவை மட்டுமே பொன்னாக மாறுகின்றன தவிர, ஸ்பரிசவேதி எவ்வித மாற்றமும் அடைவது இல்லை.

"உம்முடைய அறிவின் வன்மையால் வியர்த்தமான ஒரு கொள்கையை நிலைநாட்டுகிறீர்கள்! ஸ்ரீவியாசரின் வேதாந்தத்துக்

குப் பொருளைத் திரித்துக் கூறி அவரை அவமதிக்கிறீர்கள். ஆத்மாவுடன் தங்கள் சரீரத்தை ஒன்றுபடுத்திக் காண்பவர் தவறு செய்பவர்களே. நீங்கள் நினைப்பதுபோல உலகம் மாயை அல்ல; அது உண்மையானது. எனினும் சில மாறுதல்களுக்கு உட்பட்டது. பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள வித்தியாசங்கள் உண்மையானவை. நீங்கள் கருதுவதுபோல அவை ஒன்றல்ல. பரமாத்மா மாயையின் அதிகாரி; ஜீவாத்மாவோ மாயைக்கு உட்பட்டது. இதிலேயே இரண்டுக்கும் உள்ள பேதம் அடங்கியிருக்கிறது. ஜீவனை, பரமாத்மாவின் சக்தியாகக் கீதை ஏற்கிறது. ஆனால் நீங்கள் பரமாத்மாவுடன் சேர்ந்து விடுகிறீர்கள் என்று ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார். தம்முடைய கொள்கைக்குச் சார்பாக கீதையிலிருந்து (அத் 7. 4, 5) இரண்டு சுலோகங்களை ஸ்ரீசைதன்யர் எடுத்துக் காட்டினார்: "மண், நீர், தீ, காற்று, வான், மனம், மதி, அகங்காரம் இந்த எட்டுவகையாக என் பிரகிருதி பிரிந்து தோன்றுகிறது ஓ அர்ஜுன, என் அபசார சக்தியானது ஜடம், என்னுடைய மற்றொருசக்தி ஜீவன்களாக உலகங்களில் வாழ்கின்றன."

ஸ்ரீசைதன்யரின் தத்துவப்படி, பகவானும் பகவானிடத்திலிருந்து தோன்றும் ஜீவன்களும் சூரியனிலிருந்து எழும் கிரணங்களைப் போலவும், நெருப்பிலிருந்து பொறியை போலவும் ஒன்றுக்கொன்று முற்றும் பிரிந்தவையும் அல்ல; பிரியாதிருப்பனவும் அல்ல. நெருப்பிலிருந்து ஓடும் பொறிகள் எப்படி ஒளியுடையனவோ, அப்படியே ஜீவனும். ஆனால் தீப்பொறிகளையே தீ என்று சொல்லிவிட முடியுமா? சூரியனின் கிரணங்களே சூரியனாகிவிடமுடியுமா? அதைப் போலவே ஜீவன், பரமாத்மா ஆக முடியாது. பரமாத்மா எல்லையற்றவன். மாயையின் அதிகாரி; பகிரங்கமானவன்; மாயையின் தொடர்பிலிருந்து அப்பாற்பட்டவன். ஒளியில் இருள் எப்படி இருக்கமுடியாதோ, அப்படியே பரமாத்மாவை மாயை பாதிக்கமுடியாது. ஆனால் ஜீவன் அணு அளவு. (முண்டகம் III 19. ஸ்வதே. உபநிஷத் V 8-9) எனவே, அது உபாதியாலும் மாயையாலும் பாதிக்கப்படக்கூடியது. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் இரண்டு வெவ்வேறு வஸ்துக்கள் என்று குறிப்பிடுவதால் அவை ஒன்றுக்கு ஒன்று மாறுபட்ட இரண்டு வஸ்துக்கள் என்று கருதிவிடலாகாது; உப

நிஷத்தில் கூறியுள்ள பரம்பொருள் ஒன்றே என்பதற்கு மாருன கருத்து என்று கொள்ளக்கூடாது. பரம் பொருள் சக்தி வாய்ந்தது அந்தச் சக்தியிலிருந்து வேறு சக்திகள் தோன்றி இயங்க அது இடம் தருகின்றது. பரம்பொருளின் ஜீவன்களைப் படைக்கும் ததாஸ்த சக்தியின் லீலையினுல் எழுந்த வஸ்துக்களே ஜீவன்கள். பராசக்தியான பரம்பொருளிடமிருந்து பிறந்த ஜீவனுக்கு, பரம் பொருளின் லீலைகளையும் ஆனந்தத்தையும் பங்கு கொள்ளவும் முடிகிறது.

பின்னர், ஸ்ரீசைதன்யர் மாயாவாதிகளின் சாஸ்திரபூர்வ பிரதான வாக்கியங்களான 'அஹம் பிரம்மாஸ்மி, தத்வமஸி' என்னும் ஸ்ருதி வார்த்தைகளைக் குறித்து விளக்கம் தந்தார். இவையே பிரம் மத்துடன் ஜீவனைத் தொடர்புபடுத்துகின்றன. இவை ஒரு பட்சமான அர்த்தம் உள்ளவை. எனவே வேதங்கள் பிறந்த பிரணவத்தையே எடுத்துப் பார்க்கவேண்டும். பிரணவமே ஈசுவரனின் உறைவிடம். பிரணவமே மகாவாக்கியம். இந்த மகாவாக்கியம் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள பேதத்தை எடுத்துக் கூறுகிறது. பேத அபேதங்கள் இரண்டும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கும் போது முதலில் சொல்லப்பட்டிருப்பதையே உன்னிப்பாகக் கவனிக்க வேண்டும் என்ருர் ஸ்ரீசைதன்யர். இதற்குப் பின்னர் வேதாந்தத் துக்குச் சங்கரர் எழுதிய பாஷ்யத்தில் சில வழுக்களை ஸ்ரீசைதன்யர் சுட்டிக் காட்டினுர். பிரம்மம் ஒன்றே என்னும் கொள்கையில் கரை கண்டவரான சார்வபௌமர், நய்யாயிக சாஸ்திரத்தை ஆதரித்து, தர்க்கம், நியாயம் ஆகியவற்றைக் கொண்டு ஸ்ரீசைதன்யருடன் வாதம் செய்தார். ஆனுல் வேதாந்தத்தின் தர்க்க பூர்வமான முடிவு, பகவானிடம் அன்பும் பக்தியும் கொள்வதே என்ற சித்தாந்தத்தை ஸ்ரீசைதன்யர் நிலை நாட்டினுர். அதற்கு மாறுபட்ட சார்வபௌமரின் கருத்துக்களை ஸ்ரீசைதன்யர் நிராகரித்தார். கிருஷ்ண பக்தியையும் கிருஷ்ண பிரேமையையும் லட்சியமாகக் கொண்ட சம்வந்தம், அபிதேயம், பிரயோஜனம் என்னும் மூன்று உண்மைகளையே வேதம் எடுத்துரைக்கிறது என்பதையும் ஸ்ரீசைதன்யர் சுட்டிக்காட்டினுர்.

ஸ்ரீசங்கரரின் சித்தாந்தத்தை ஏற்றுக்கொள்ள மறுத்த ஸ்ரீசைதன்யர் அவற்றைக் கண்டனம் செய்து, வேதாந்தத்தின்

அடிப்படையில் ஈசுவர தத்துவத்தை நிலைநிறுத்தினர். எனினும் தனிப்பட்ட முறையில், ஸ்ரீசங்கரரிடம் எவ்விதக் குறையையும் அவர் காணவில்லை. அவரைச் சிறந்த ஆசாரிய புருஷராகவும் ஸ்ரீசைதன்யர் மதித்தார்.

"ஜீவன்களிடமிருந்து தன்னை மறைத்துக் கொள்ளவும் அவர்களுக்குத் தன்னிடம் ஈடுபாடு ஏற்படாமல் இருப்பதற்காகவும் உலகில் போலித் தத்துவங்களைப் பரப்பி, அதனால் மக்கள் அனைவரும் எப்பொழுதும் தங்கள் தங்கள் விவகாரங்களிலேயே உழன்று முடிவில்லாத வினைப் பயன்களை ஈட்டி, லௌகிக உலகத்தை இயங்கச் செய்வதற்காகவே பகவானல் அனுப்பப்பெற்ற சிவபிரானின் அவதாரமே சங்கரர்" என்றும் ஸ்ரீசைதன்யர் கூறியிருக்கிறார்.

பாத்ம புராண ஆசிரியர் இவ்வாறு சொல்கிறார்; "பௌத்தத்தின் மாற்று வடிவமே, மாயை என்னும் போலிக் கோட்பாடு. 'பார்வதி! இந்தக் கோட்பாட்டை நானே கலியுகத்தில் பிரம்மம் வாயிலாகப் பூவுகில் பரப்பினேன்' என்று சிவபிரான் பார்வதிக்குக் கூறுகிறார்- (உத்தர காண்டம் 25–7)

மனத்தத்துவ ரீதியில் உள்ளத்தை ஊடுருவும் தன்மையாலும் பெருந்தன்மையாலும் சங்கரரிடம் ஸ்ரீசைதன்யர் கொண்ட மனோ பாவத்தையே கௌடிய வைஷ்ணவர்கள் நம்பிக்கையுடன் பின் பற்றுகிறார்கள். ஆழ்ந்து பார்க்கும்போது, சங்கரரின் மாயாவாதம் ஒரு வகையில் பௌத்தமே (பிரசன்ன பௌத்தம்) என்று தொன்று தொட்டு வைஷ்ணவர்களிடையே நிலவியுள்ள கருத்து. பக்தியின் அடிப்படைக் கொள்கையான ஈசுவரன், ஜீவன்கள் என்று தனித் தனியே இரண்டு வஸ்துக்கள் உண்டு என்பதையே பௌத்தர்களும் அத்வைத அறிஞர்களும் ஏற்றுக் கொள்வதில்லை. பரமாத்மாவையும் ஜீவாத்மாவையும் அதாவது பக்தியின் லட்சியத்தையும் அதைச் செய்பவனையும் ஏற்றுக்கொள்ளாத பௌத்தர்களும் அத்வைத அறிஞர்களும் ஒருவகையில் நாஸ்திகர்களே. சங்கரரின் மோட்சம் என்பதும் பௌத்தர்களின் நிர்வாணமும் ஏறக்குறைய ஒன்றுகவே இருக்கிறது. பரபிரும்மம் அகண்டாகாரமானது என்னும் மாயா வாதத்துக்கும் சூன்யவாதமான பௌத்தத்துக்கும் உள்ள அநேக வித்தியாசங்களைக் குறித்துச் சொல்ல இது ஏற்ற இடம் அல்ல.

பகவானுக்குச் சேவை செய்வதும், அவனிடம் ஆத்மிகக் காதல் கொள்வதும் ஜீவர்களின் சாசுவதமான கடமை என்பதையே பௌத்தர்களும் மாயாவாதிகளும் மறுக்கின்றனர். அதைப் போலவே சங்கரரின் ஈசுவரன், மாயை சம்பந்தமான கொள்கைகளும் வேத, உபநிஷத்துகளுக்குப் பொருந்தாதவை. தம்முடைய மாயாவாதக் கொள்கைக்கு உபநிஷத்துகளிலிருந்து சங்கரர் மேற்கோள்களை எடுத்துக் காட்டியுள்ளார் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனல் அவை புராதன வேத மதத்தைவிடப் புத்த மதத்துக்கே சார்புடையவையாக இருக்கின்றன. அதனல் தான் வைஷ்ணவர்கள், அத்வைதிகளையும், பௌத்தர்களையும் ஒரே வகுப்பில் சேர்ந்துவிடுகிருர்கள்.

சங்கரரின் பரமகுருவான கௌடபாதரே பௌத்தர் என்பதையும் 'மாத்யாத்மிக காரிகை' என்னும் புத்த நூலுக்கு அவர் உரை எழுதியிருக்கிருர் (இந்திய வேதாந்தம்-தாஸ்குப்தா-பக்கம் 423–428) என்பதையும் கொண்டு வைஷ்ணவர்கள் மேற்கண்டவாறு கருதுவதில் தவறு ஒன்றுமில்லை. முக்கியமாக 'விஞ்ஞானவாதம்' 'மாத்யாத்மிகம்' என்னும் பௌத்த நூல்களின் சாயல், கௌடபாதரின் நூல்களில் இருக்கிறது என்று ஸ்ரீராதாகிருஷ்ணன் தம்முடைய 'இந்திய வேதாந்தம்' என்னும் நூலில் குறிப்பிட்டிருக்கிருர் (இரண்டாம் பாகம், பக். 464)

ஸ்ரீசங்கரரின் அத்வைதத்தைப் பற்றி, தீவிர வைஷ்ணவர்கள் கொண்டிருந்த பார்வை, பாத்ம புராணம் எழுதப் பெற்ற காலத்திலும் நிலவியிருந்தது. சங்கரரின் அத்வைதம் அவைதிகமானது, பிரசன்ன பௌத்தம் என்றே சொல்லலாம் என்று அந்த நூலில் கூறியிருக்கிறது. இந்த வார்த்தைகளை எவரும் இடைச்செருகல் என்று சொல்லிவிட மாட்டார்களே ! அத்வைதத்துக்கும் புத்த மதத்துக்கும் உள்ள ஒற்றுமையை யாமுனசாரியார் 'சித்தித்ரயம்' என்னும் தம் நூலில் குறிப்பிட்டிருக்கிருர். அத்வைதவாதிகளும் பௌத்தர்களும் அறிகிறவன், அறியப்படுபவன், அறிவு என்னும் மூன்றையுமே ஒதுக்கி விட்டார்கள். இத்தகைய பேதங்கள் மாயையினல் உண்டாகின்றன என்று அத்வைதர்களும், புத்தியினல் ஏற்படுகின்றன என்று பௌத்தர்களும் சொல்கின்ருர்கள். (ஜே. ஆர். ஏ. எஸ்; 1910, பக். 132; ராதாகிருஷ்ணன் பக். 471.)

சார்வபௌமருடன் நடந்த விவாதத்தில் பரமபுருஷார்த்தமான பக்தியைப் பற்றி அவருக்கு உணர்த்த, ஸ்ரீசைதன்யர் பாகவதத்திலிருந்து மிக முக்கியமான சுலோகம் ஒன்றை எடுத்துரைத்தார். (1, 7, 10)

'காமக்ரோதங்களை வென்று ஆத்மசித்தி அடைந்து, உலக பந்தங்களிலிருந்து விடுபட்டவர்கள்கூட பகவானுடைய திருக் கல்யாண குணங்களில் ஈடுபட்டு, நிஷ்காம்யமாகவே அவனுடைய பக்தியை வேண்டுகிறார்கள்' என்னும் பொருள் அமைந்தது அந்தச் சுலோகம்.

இந்தச் சுலோகத்துக்கு விளக்கம் தரும்படி ஸ்ரீசைதன்யரை, சார்வபௌமர் வேண்டினர். ஆனால் முதலில் அவரையே விளக்கம் சொல்லும்படி ஸ்ரீசைதன்யர் கேட்டுக் கொண்டார். சாஸ்திரங் களுக்கும் தர்க்கத்துக்கும் ஏற்ப, அந்தச் சுலோகத்துக்குச் சார்வ பௌமர் ஒன்பது விதமாகப் பொருள் உரைத்தார். இதைக்கேட்ட ஸ்ரீசைதன்யர் அவருடைய அறிவுத் திறமையைப் பாராட்டினர். இதைத் தவிர இன்னும் ஒரு பொருள் இருக்கின்றது என்று ஸ்ரீசைதன்யர் சுட்டிக் காட்டினர். "அதை அறிய மிக்க ஆவலாக இருக்கிறேன்" என்று சார்வபௌமர் தெரிவித்தார்.

சார்வ பௌமர் தந்த ஒன்பது அர்த்தங்களையும் தொடாமல் ஸ்ரீசைதன்யர் 16 விதமான வெவ்வேறு பொருளை அந்தச் சுலோகத்துக்குத் தந்தார். முதலில் சுலோகத்தின் ஒவ்வொரு சொல்லின் பொருளையும் உறுதியாகச் சொன்னர். பின்னர் பிரதான சொல்லான 'ஆத்மாராம்' என்பதற்குப் பொருள் உரைத்தார்.

ஸ்ரீசைதன்யரின் மறைபொருள் அறிவையும் தத்துவ ஞானத்தையும் கண்டு சார்வபௌமர் வியந்தார். ஸ்ரீசைதன்யரின் ஒப்பற்ற மேதாவிலாசத்தின் முன் அவருடைய கர்வம் மறைந்தது; தம்முடைய அறியாமையை எண்ணி நாணமடைந்தார். ஸ்ரீசைதன்யரைப் பற்றித் தாம் கொண்டிருந்த கருத்துக்களை மாற்றிக் கொண்டார். இவ்வளவு உயர்ந்த அம்சங்கள் பகவானிடத்தில் தவிர வேறு எவரிடத்தும் குடிகொண் டிருக்காது என்றும் அவர் எண்ணினர்.

எவர் மனத்தையும் ஊடுருவும் அபூர்வமான ஸ்ரீசைதன்யரின் சக்தி அங்கே இருந்தவர்களின் உள்ளத்தைக் கவர்ந்துவிட்டது. உண்மையிலேயே அவர் தெய்வ அம்சம் பொருந்தியவர் என்று மக்கள் கருதினார்கள். ஆறு கரங்களுடன் கூடிய தம்முடைய தெய்விகத் தோற்றத்தைச் சார்வபௌமருக்கு ஸ்ரீசைதன்யர் அருளினார் என்று சொல்லப்படுகிறது. அந்த நம்பிக்கை ஒரு புறம் கிடக்கட்டும். பிரம்மம் ஒன்றே என்னும் கொள்கையினரான சார்வபௌமர் ஸ்ரீசைதன்யரின் தெய்விக அம்சத்தை ஏற்றுக் கொண்டு அதைப் பரப்புவதில் மிக்க ஆர்வம் உள்ளவர்களில் ஒருவராக மாறினார் என்பது உண்மையே.

இந்தச் சந்தர்ப்பத்தில் தான், ஸ்ரீசைதன்யரை வாழ்த்தி சார்வ பௌமர் நூறு பாட்டுகளைப் பாடினார். அதுவே ஸ்ரீசைதன்ய சதகம் என்னும் புகழ் பெற்ற நூலாகும். ஸ்ரீசைதன்யரைக் குறித்து முதல் முதலில் வரலாற்று நூல் எழுதிய ஆசிரியர்கள், இந்தப் பாடல்களைச் சில இடங்களில் குறிப்பிடுகிறார்கள்.

சார்வபௌமரின் சித்தாந்த மாற்றம் ஒரிஸ்ஸாவில் மட்டுமல்ல; இந்தியா முழுவதுமே ஸ்ரீசைதன்யரின் இயக்கத்துக்குப் பெரிய வெற்றியைத் தந்தது.

இதற்குப் பின்னர் அத்வைத–மோட்சத்தைக் குறித்துப் பிரசாரம் செய்வதை விட்டு, பக்தியின் மேன்மையைப்பற்றி சார்வபௌமர் எடுத்துரைக்கலானார். ஆரம்பத்தில் மோட்சத்தைப்பற்றி எவ்வளவு தீவிரமாக இருந்தாரோ, அவ்வளவு வன்மையாகப் பிற்காலத்தில் பக்தியைக் குறித்து அவர் பேசலானார். ஏதாவது நூலில் முக்தி என்னும் சொல் வந்தால் அதைப் பக்தி என்று மாற்றிப் படிக்கலானார். "முக்தி என்னும் சொல்லைச் சொல்லவே பயமாகவும் வெறுப்பாகவும் இருக்கிறது" என்பாராம் சார்வபௌமர்.

மாயாவாதத்துக்குத் தம் வாழ்நாளையே அர்ப்பணித்திருந்த பேராசிரியரும் மாணவருமான சார்வபௌமர் அவ்விதம் பேசியது உண்மையில் ஸ்ரீசைதன்யரின் கருணையினால் நிகழ்ந்த செயலாகும். சார்வபௌமர் வைஷ்ணவத்தை ஏற்றுக்கொண்ட பின்னர்

எல்லோரும் ஸ்ரீசைதன்யரைக் கிருஷ்ண பகவானாகவே கருதத் தொடங்கினார்கள். இரும்பைப் பொன்னாக்கிய பின்னர்தானே ஸ்பரிசவேதியின் தன்மையை உணர முடிகிறது. அதுவரையில் அதனைச் சாதாரண கல் என்று சிலர் எண்ணுவது இயல்பு தானே! ஒரிஸ்ஸாவின் ராஜகுரு காசிமிச்ரரும் இன்னும் பூரியில் இருந்த பலரும் ஸ்ரீசைதன்யரின் பாத நிழலில் தஞ்சம் அடைந்தார்கள்.



8

# தென் இந்தியாவில் யாத்திரை

சந்நியாசம் மேற்கொண்டு ஒரு மாதத்துக்குப் பின்னர், ஸ்ரீசைதன்யர் பங்குனியில் பூரியை அடைந்தார். சித்திரை மாதத்தில் சார்வபௌமருடன் வாதாடி, வைஷ்ணவ தர்மத்தைத் தழுவச் செய்தார். தம்முடைய பக்தி மார்க்கத்தைப் பரப்புவதற்காகத் தென்னிந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்வது என்று ஸ்ரீசைதன்யர் வைகாசி மாதத்தில் தீர்மானித்தார். தென்னிந்தியாவுக்குத் தாம் மட்டும் சென்று வருவதாகவும் அது வரையில் எல்லோரும் பூரியிலேயே இருக்கலாம் என்றும் நித்தியானந்தரிடமும் மற்றவர்களிடமும் ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார். நடுவழியில் ஏதாவது ஆபத்து நேரிட்டால் என்ன செய்வது என்ற எண்ணத்தினுல் அவர் தனியாகச் செல்வதை நித்தியானந்தர் ஆட்சேபித்தார். அவருடன் துணைக்கு இரண்டு பேரை அழைத்துச் செல்லும்படியும், தென்னிந்தியாவில் உள்ள இடங்களைப்பற்றி ஓரளவு விஷயம் தெரிந்த தாமே வருவதாகவும் ஸ்ரீசைதன்யரிடம் நித்தியானந்தர் தாழ்மையுடன் கெஞ்சிக் கேட்டுக்கொண்டார். நித்தியானந்தர் பன்னிரண்டாவது வயசிலிருந்து தென்னிந்தியாவின் புண்ணிய ஸ்தலங்களுக்கு எல்லாம் சென்று அங்கேயே இருபது வருடங்களைக் கழித்திருக்கிருர். எனவே, அவருக்குத் தாம் சிறந்த வழிகாட்டியாகப் பயன்பட முடியும் என்று நித்தியானந்தர் ஸ்ரீசைதன்யரிடம் எடுத்துரைத்தார்.

ஆனுல் யாருடைய துணையும் இல்லாமலே செல்வதையே ஸ்ரீசைதன்யர் வற்புறுத்தினுர். பிருந்தாவனத்துக்குப் புறப்பட்ட தம்மைச் சாந்திபுரிக்கு அவர் அழைத்துச் சென்றதாலும் தம்முடைய திரிதண்டத்தை மூன்ருக உடைத்து விட்டதாலும் நித்தியானந்தரைத் தம்முடன் அழைத்துச் செல்ல ஸ்ரீசைதன்யர் விரும்பவில்லை. ஜகந்நாத பண்டிதர் என்பவரையாவது அழைத்துச் செல்லுங்கள் என்று அவரைச் சிலர் வேண்டினர். தம் விருப்பத்துக்கு விரோதமாக, சதா அருகிலே இருந்து வேண்டிய வசதிகளை உடனுக்குடன்

செய்து வந்தவர் என்ற காரணம் காட்டி அவரையும் ஸ்ரீசைதன்யர் நிராகரித்து விட்டார். மழைக் காலத்தில் மும்முறை ஸ்ரீசைதன்யர் ஸ்நானம் செய்வதையும் வெறும் நிலத்தில் உறங்குவதையும் கடுமை யான விரதங்களுடன் இருப்பதையும் காணக் காணக் கண்ணீர் உகுக்கும் முகுந்த தத்தரையும் ஸ்ரீசைதன்யர், தம் தென்னிந்திய யாத் திரைக்கு அழைத்துச் செல்ல விரும்பவில்லை.

தம்முடைய விரத வாழ்க்கையைக் குறித்து யாரும் குறைப்படா திருப்பதற்காக ஸ்ரீசைதன்யர் தன்னந்தனியாகவே புறப்பட எண்ணினர். எனினும் நித்தியானந்தரின் வேண்டுகோள் ஓரளவு வெற்றி பெற்றது. ஸ்ரீசைதன்யரின் கமண்டலத்தையும் உடையை யும் எடுத்துக்கொள்ளவும், பிரக்ஞை இழந்த நிலையில் அவரைக் கவனித்துக் கொள்ளவும் கிருஷ்ணதாசர் என்னும் அந்தணரை, ஸ்ரீசைதன்யருடன் அனுப்புவதற்கு நித்தியானந்தர் அநுமதி பெற் றுக் கொண்டார். வேறு எந்த வகையிலும் கிருஷ்ணதாசர் தம் முடைய விரத நெறிகளுக்குக் குறுக்கே வரக்கூடாது என்று ஸ்ரீசைதன்யர் வற்புறுத்திச் சொல்லிவிட்டார்.

"தென்னிந்தியாவுக்கு யாத்திரை சென்று வரப்போகிறேன்" என்று சார்வபௌமரிடம் ஸ்ரீசைதன்யர் சொல்லிக் கொண்டார். அதைக் கேட்டு, சார்வபௌமர் மிகவும் வருத்த மடைந்தார். "முந்தைப் பிறவிகளில் நான் செய்த நற்பயனல் தங்களுடைய உற வைப் பெற்றிருக்கிறேன். ஆனல் இப்பொழுது விதி என்னை உங் களிடமிருந்து பிரிக்கிறது. மின்னலால் தாக்குண்டு என் மகன் இறந்ததனல் ஏற்பட்ட சோகத்தைக்கூட என்னல் தாங்க முடிந்தது. உங்களை விட்டுப் பிரிவதால் ஏற்படும் இந்தத் துயரத்தை எப்படிப் பொறுத்துக் கொள்வேன்!" என்று கண்களில் நீர் துளும்ப ஸ்ரீசைதன்யரின் கால்களைப் பிடித்துக்கொண்டு சார்வபௌமர் நாத் தழுதழுக்கக் கேட்டார். சார்வபௌமரின் வேண்டு கோளுக்கு இணங்கி, ஸ்ரீசைதன்யர் மேலும் சில தினங்கள் அங்கேயே தங்கி அவருடைய விருந்துபசாரங்களை ஏற்றுக் கொண்டார். ஸ்ரீசைதன்யரை, நடமாடும் தெய்வமாக எண்ணிய சார்வபௌமரும் அவருடைய மனைவியாரும் ஸ்ரீசைதன்யருக்கு உப சாரம் செய்வதில்மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தனர். அவர் குடும்பம்

முழுவதுமே ஸ்ரீசைதன்யருக்குப் பணிவிடை செய்வதில் பூரணமாக லயித்திருந்தது.

கி.பி. 1510-ஆம் ஆண்டில், ஏப்பிரல் மாதத்தில் ஸ்ரீசைதன்யர் தென்னிந்தியாவுக்கு யாத்திரை புறப்பட்டார். அவர் பூரியை விட்டுப் புறப்படுவதற்கு முன்பு, ஜகந்நாதர் ஆலயத்துக்குச் சென்று பகவானை வழிபட்டு, பக்தர்களும் சீடர்களும் பின் தொடரக் கீர்த்தனை கோஷ்டியுடன் கோயிலை வலம் வந்தார். தீர்த்த யாத்திரையின்போது ஸ்ரீசைதன்யரின் உபயோகத்துக்காக, சார்வபௌமர் நான்கு வஸ்திரங்களை அளித்தார். கோயிலிலிருந்து கடற்கரையோரமாக அலல்நாதாவை நோக்கி ஸ்ரீசைதன்யர் புறப்பட்டார்.

பகவானின் அவதாரமான ஸ்ரீசைதன்யரைத் தரிசிப்பதற்காகச் சுற்றுப்புறத்தில் உள்ள கிராமங்களிலிருந்தும் வேறு பல இடங்களிலிருந்தும் மக்கள் திரள் திரளாக அலல்நாதாவில் கூடினர். நித்தியானந்தர், கோபிநாத ஆசார்யர், இன்னும் பல சீடர்களும் பக்தர்களும் அலல்நாதாவரையில் ஸ்ரீசைதன்யருடன் சென்றார்கள். நாள் முழுவதும், மக்கள் ஒவ்வொருவராக ஸ்ரீசைதன்யரை வந்து தரிசித்து அவருடைய ஆசியைப் பெற்று, வைஷ்ணவ தர்மத்தை ஏற்ற வண்ணமாகவே இருந்தார்கள். அன்று அலல்நாதா கோயிலில் ஸ்ரீசைதன்யர் தம்முடைய கோஷ்டியுடன் ஆடியும் பாடியும் பகவானின் நினைவில் ஆழ்ந்தார்.

அலல்நாதர் கோயில், பதினொன்று அல்லது பன்னிரண்டாவது நூற்றாண்டின் சிற்பக் கலையைச் சேர்ந்த கற்கோயில். ஆழ்வார் நாதர் என்னும் சதுர்புஜ விஷ்ணு விக்கிரகத்தை ஆழ்வார் ஒருவரே இங்கே பிரதிஷ்டை செய்தார் என்று சொல்லுகிறார்கள். கோயிலுக்கு விமானமும் யோக மோகனமும் அமைந்திருக்கின்றன. ஓரளவு க்ஷீணமடைந்திருந்த இந்தப் பழங் கோயிலை, காலஞ் சென்ற பிரபுபாத பக்தி சித்தாந்த சரஸ்வதி டாகுரா ஏராளமான பொருட் செலவில் புதுப்பித்து, திருமதில்களை எழுப்பி, திறந்த வெளிக்கு அப்பால் கோயிலுக்கு முன்னால் பெரிய சிங்க வாயிலையும் அமைத்திருக்கிறார். மேலும் அவர், இந்தத் தலத்துக்கு ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்ததற்கு நினைவுச் சின்னமாக, ஒரு கோயிலை அமைத்து அதில் ஸ்ரீசைதன்யர், ராதா, கோபிநாதர் ஆகியோருடைய திரு

உருவங்களைப் பிரதிஷ்டை செய்திருப்பதுடன் ஒரு மடத்தையும் கட்டியிருக்கிறார்,

அடுத்த நாள் அலல்நாதாவை விட்டு, கிருஷ்ணதாசருடன் (இவரையே பிற்காலத்தில் காலகிருஷ்ணதாசர் என்று குறிப்பிடு கிறார்கள்) ஸ்ரீசைதன்யர் தென்னிந்திய யாத்திரையைத் தொடங் கினார். போகும் வழி முழுவதும் மக்களிடையே வைஷ்ணவ தர்மத் தையும் பக்தியையும் ஸ்ரீசைதன்யர் பரப்பிக்கொண்டே சென்றார். ஸ்ரீசைதன்யரை வரவேற்று உபசாரம் செய்தவர்கள், வைஷ்ணவ தர்மத்தில் திளைத்து, அதை மேலும் பரவச் செய்வதில் பெரிதும் ஈடு பட்டு ஆசார்யர்களாகவும் விளங்கினார்கள் என்று 'சைதன்ய சரிதம்' கூறுகிறது. சேதுவரையில் சென்ற ஸ்ரீசைதன்யர் தோல்வியையே காணாமல் வெற்றியுடன் வைஷ்ணவ தர்மத்தைப் பரப்பினார். அவருடைய தர்மத்தை ஏற்றுக் கொண்டவர்கள் மூலமாகவும் ஏராள மான பேர் வைஷ்ணவர்களானார்கள். இப்படியே ஸ்ரீசைதன்யரின் சீடர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரிக்கலாயிற்று. 'நவத்வீபத்தில் ஸ்ரீசைதன்யர் அடைந்த வெற்றியைவிட, அவர் தென்னிந்தியாவில் பெற்ற வெற்றி பல மடங்கு பெரியது என்று சொன்னால் வாசகர்களுக்கு வியப்பாகவே இருக்கும்' என்று 'சைதன்ய சரித'த்தின் ஆசிரியர் குறிப்பிடுகிறார். எந்தக் கிராமங் களின் வழியாக அவர் சென்றாரோ, அந்தக் கிராமங்களில் உள்ள அனைவரும் அவருடைய பாணியிலேயே கீர்த்தனங்களைப் பாடியும் ஆடியும் பகவானை வழிபடத் தொடங்கினார்கள்.

அலல்நாதாவை விட்டு நீங்கியதும் ஸ்ரீசைதன்யர் தரிசித்த மிக முக்கியமான ஸ்தலம் கூர்மாசலமாகும். கஞ்சம் ஜில்லாவில், ஸ்ரீகாகுளத்துக்கு ஒன்பது மைல் தொலைவிலும் தென்கிழக்கு ரெயில்வேயில் ஸ்ரீகாகுளம் ஸ்டேஷனிலிருந்து 47 மைல் தூரத்திலும் அமைந்திருக்கிறது கூர்மாசலம். அலல்நாதாவிலிருந்து 150 மைல் தூரத்தில் இருக்கும் இந்தத் தலத்துக்கு டர்ஹாம்புர், இச்சாபுர்' கினேடி, பல்கொண்டா முதலிய இடங்கள் வழியாக ஸ்ரீசைதன்யர் வந்து சேர்ந்திருப்பார் என்று தெரிகிறது. கட்டாக்கிலிருந்து கஞ்சம் செல்லுவதற்கு இதுதான் பழைய மார்க்கம். இங்கே

ஸ்ரீராமாநுஜர் பிரதிஷ்டை செய்த கூர்மதேவர் ஆலயத்துக்கு ஸ்ரீசைதன்யர் சென்ருர்.

'பூரியிலிருந்து, கூர்மாசலம் வந்து சேர்ந்த ஸ்ரீராமாநுஜர் இங்கே கோயிலில் சிவலிங்கம் இருப்பதைக்கண்டு கோயில் முன் உபவாசம் கிடந்தார்' என்று 'பிரபந்நாமிர்தம்' என்னும் ஸ்ரீராமா நுஜரின் சரித்திரம் சொல்லுகிறது. தீவிர வைஷ்ணவர்கள் சிவன் கோயில்களுக்குச் செல்லவேமாட்டார்கள். அப்படித் தப்பித் தவறிச் சென்றுவிட்டாலும் விஷ்ணுவைத் தவிர மற்றத் தெய்வ பிம்பங்களைக் கண்டு விட்டாலும் பிராயச்சித்தமாக உபவாசம் கிடப்பது சம்பிரதாயம். இந்த வழக்கத்தையொட்டி உபவாசம் இருந்த ராமாநுஜரின் கனவில் கூர்ம விஷ்ணு தோன்றி, அந்த ஊர் மக்கள் அறியாமையால் சிவன் என்று எண்ணித் தம்மை வழிபடுகிருர்கள் என்றும் உண்மையில் சங்கு, சக்கரம், தாமரையுடன் கூடிய விஷ்ணுவே அங்கே எழுந்தருளியிருப்பதாகவும் தெரிவித்தார். மேலும் சந்நிதிக்கு வந்து, தரிசனம் செய்து கொள்வதுடன் சிறிது காலம் அர்ச்சகராகவும் பணிசெய்யும்படி ராமாநுஜருக்குப் பகவான் கட்டளையிட்டார். இதிலிருந்து சிவன் கோயிலாக இருந்த கூர்மா சலத்தை ராமாநுஜர் வைஷ்ணவக் கோயிலாக மாற்றினுர் என்றே தோன்றுகிறது.

நரஹரிதீர்த்தரின் காலத்தில் இந்தக் கோயில் மாத்வ வைஷ்ணவர்களின் பராமரிப்பில் வந்தது. அப்பொழுது நரஹரி தீர்த்தர், கூர்மதேவர் கோயிலுக்கு முன்னுல் நரசிம்மர் ஆலயம் ஒன்றைக் கட்டினுர் என்று கோயில் சாசனத்திலிருந்து தெரிகிறது. கூர்மதேவரின் கோயில் கிழக்கு நோக்கியிருக்கிறது. ஆனுல் கூர்ம தேவர், மேற்குத் திசைப் பக்கமாகச் சேவை தருகிருர். இந்த அமைப்பு, பார்ப்பவர்களுக்கு விசித்திரமாகவே தோன்றும். இதற்குக் காரணமாக இங்கே ஒரு கதை வழங்குகிறது.

ஒரு சமயம், 'கிருஷ்ண கர்ணும்ருதம்' என்னும் புகழ் பெற்ற நூலை எழுதிய பில்வமங்கள டாகுரா, இந்தக் கோயிலுக்கு வந்திருந் தார். எளிமையினுலும் பணிவானுலும் அவர் இந்த மூர்த்தியை நேருக்கு நேர் நின்று தரிசிக்காமல் பின்புறமாக இருந்து சேவித்தார். இதைக் கண்ட கூர்மதேவர் உடனே கருணையுடன் தாமும் திரும்பி

அவருக்கு நேராகவே காட்சி அளித்தார். அன்றிலிருந்து கூர்ம தேவர் விக்கிரகம் அப்படியே அமைந்துவிட்டது.

இந்தப் பிரதான கோயிலுக்கு இடப் புறத்தில் நான்கு கரங்களுடன் கூடிய பில்வமங்களுக்கு ஒரு தனிக் கோயில் அமைக் கப்பெற்றிருக்கிறது. ஸ்ரீவைகுந்தத்தில் எழுந்தருளியிருக்கும் பகவான் ஸ்ரீலக்ஷ்மிநாராயணருக்குக் கைங்கரியம் செய்யும் நித்ய சூரிகள் அனைவருக்கும் நான்கு கரங்கள் உண்டு என்பது ஸ்ரீவைஷ்ணவர்களுடைய சம்பிரதாயம். எனவே, இங்கே பில்வ மங்களுக்கும் நான்கு கரங்களை அமைத்திருக்கிறார்கள். பில்வமங் களின் சமாதியின் மேலேயே இந்தக் கோயிலை எழுப்பியிருக்கிறார் கள். கூர்மதேவர் கோயிலில் ஒருபுறம் ராம, லட்சுமணர், சீதை ஆகியோருக்காக ஒரு சந்நிதியும் மறுபுறம் கோவிந்தருக்காக ஒரு சந்நிதியும் இருக்கின்றன. ராமாநுஜர், திருமங்கை ஆழ்வார் நம்மாழ்வார் ஆகியோருடைய சிலைகளும் வைக்கப் பெற்றிருக் கின்றன.

ஸ்ரீசைதன்யர் கீர்த்தனங்களைப் பாடியும் ஆடியும் பக்திப் பரவச நிலையில் இந்தக் கோயிலுக்குச் சென்றார். அவருடைய பக்திச் சிறப் பைக் கண்ட கோயில் அதிகாரிகள் மிக்க மரியாதையுடன் அவரை வரவேற்றனர். கூர்மர் என்னும் வைதிகப் பிராமணர் ஸ்ரீசைதன்யரைத் தமது இல்லத்துக்கு அழைத்துச் சென்று விருந் தளித்தார். அவருடைய பாதத்தைப் பூசித்த நீரைத் தீர்த்தமாகவும் கொண்டார், ஸ்ரீசைதன்யர் உண்டு எஞ்சிய உணவையே உட் கொண்டார். அவருடைய குடும்பம் முழுவதுமே ஸ்ரீவைஷ்ணவ தர்மத்தைத் தழுவியது. ஸ்ரீசைதன்யரிடம் அவருக்குப் பக்தி அதி கரித்தது. யாத்திரை முழுவதும் அவருக்குத் துணையாகத் தாமும் வருவதாகவும் ஒரு கணமும் பிரியாமல் இருப்பதாகவும் ஸ்ரீசைதன்ய ரிடம் கூர்மர் தெரிவித்தார். ஆனால் அவர் தம்முடன் வருவதற்கு ஸ்ரீசைதன்யர் அநுமதி தரவில்லை. அதற்குப் பதிலாக அந்த ஜில்லாவுக்கு அவரையே ஆசார்யராக நியமித்து வைஷ்ணவ தர்மத் தைப் பரப்பும்படி கட்டளையிட்டார். "வீட்டிலேயே இருந்து எப் பொழுதும் கிருஷ்ண நாமத்தைச் சொல்லிக்கொண் டிருங்கள். நீங்கள் சந்திக்கும் எல்லோருக்கும் கிருஷ்ணருடைய தத்துவத்தை

விளக்குங்கள். ஆத்மிக போதனையாளராக இருந்து இந்தப் பிர தேசத்துக்கு நன்மை செய்துகொண் டிருங்கள். இந்தச் சம்சார சாகரத்தின் துன்பங்கள் எதுவும் உங்களைப் பாதிக்கமாட்டா. நான் திரும்பிவந்ததும் என்னை மீண்டும் சந்தியுங்கள்'' என்று கூர்ம ருக்கு ஸ்ரீசைதன்யர் கட்டளையிட்டார்.

இங்கே, ஸ்ரீசைதன்யர் ஓர் அற்புதத்தை நிகழ்த்தினர். பாகவதத்தில் சிறந்த பண்டிதரான வாசுதேவர் என்பவர் ஸ்ரீசைதன்யரைத் தரிசித்துவிட்டுச் செல்வதற்காக வந்தார். குஷ்ட நோயால் பீடித்திருந்த அவரைக் கண்டதும் சிலர் அருவருப்பால், சற்று நகர்ந்துகொண்டனர். ஆனல் ஸ்ரீசைதன்யரோ அவரை அப்படியே ஆலிங்கனம் செய்தார். அடுத்த கணமே வாசுதேவ ருடைய நோய் நீங்கிப் பழைய வனப்பையும் அவர் பெற்ருர். "எப்பொழுதும் கிருஷ்ண நாமத்தையே உச்சரித்துக்கொண் டிருங்கள். கிருஷ்ணனின் தத்துவத்தைப் பரப்பி எல்லா ஆத்மாக் களையும் காப்பாற்றுங்கள். பகவான் கிருஷ்ணன் உங்களை உடனே ஏற்றுக்கொள்வார்'' என்று அவருக்கு ஸ்ரீசைதன்யர் உபதேசம் செய்தார். வாசுதேவரைக் கொடிய நோயிலிருந்து குணப்படுத்திய இந்த அற்புத நிகழ்ச்சிக்குப் பிறகு ஸ்ரீசைதன்யரை எல்லோரும் வாசுதேவாம்ருதர் என்றும் அழைக்கலானுர்கள்.

1930-ஆம் வருடம் டிசம்பர் மாதத்தில் கூர்மதேவர் கோயில் எல்லைக்குள், தென் மேற்கே, ஒரு கோயிலை அமைத்து, ஸ்ரீசைதன்யரின் பாதவடிவங்களை, பிரபுபாத பக்தி சித்தாந்த சரஸ்வதி டாகுரா பிரதிஷ்டை செய்திருக்கிருர்.

கூர்மாசலத்துக்குப் பிறகு ஸ்ரீசைதன்யர் தரிசித்த முக்கியமான ஸ்தலம் சிம்மாசலம். விசாகபட்டணத்துக்கு வடகிழக்கே ஐந்து மைல் தொலைவில் கோபாலபுரத்துக்கு வடக்கேயும் செமுதாபாலம் என்னும் ஊருக்குத் தெற்கேயும் அமைந்திருக்கிறது சிம்மாசலம். இங்கே ஸ்ரீநரசிம்மர் எழுந்தருளியிருக்கிருர். கட்டாக்கிலிருந்து கஞ்சம், விசாகப்பட்டணம் வழியாகச் சிம்மாசலத்துக்குச் சுமார் 70 மைல்தான் ஸ்ரீசைதன்யர் அநேகமாகப் பிரயாணம் செய் திருப்பார்.

சிம்மாசலத்தில் மலையில் உள்ள கோயிலை அடைய எண்ணூறு படிகள் கட்டப்பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு படியும் அரை அடி உயரம் இருக்கிறது. கோயில் கிழக்குப் பக்கமாக இருந்தபோதிலும் நரசிம்மர் மேற்குப் பக்கமே காட்சி தருகிறார். இந்தக் கோயிலில் இருக்கும் ஆண்டாளுக்கும் பூஜைகள் நடைபெறுகின்றன. வைகாசி மாதத்தில், நரசிம்மருக்குச் சந்தனக் காப்பு செய்கிறார்கள்.

இங்கே ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்ததை யொட்டி, 1930-ஆம் வருடம் டிசம்பர் மாதம் பிரபுபாத பக்தி சித்தாந்த சரஸ்வதி டாகுரா ஒரு கோயிலை அமைத்து, ஸ்ரீசைதன்யரின் பாதங்களைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார். நரசிம்மர் கோயிலுக்கு அருகிலேயே இந்தக் கோயில் இருக்கிறது. சிம்மாசலம், கூர்மாசலம் என்னும் இரண்டு தலங்களிலும் உள்ள கோயில்கள் விஜயநகர மகாராஜாவின் பராமரிப்பில் இருக்கின்றன.

ராய ராமானந்தர் சந்திப்பு: சிம்மாசலத்துக்கு அருகில் உள்ள சபரான் என்னும் இடத்தி லிருந்து, காகினிகோட்டை, எலமன்சில்லி, துனி, அரிம்போடி, ராஜநகரம் முதலிய ஊர்கள் வழியாக ராஜமகேந்திரவரத்துக்குச் சமீபத்தில் கோதாவரிக்கரையை ஸ்ரீசைதன்யர் அடைந்தார். கோதாவரி நதியைக் கடந்து அக் கரைக்குச் சென்று அமர்ந்தார். அங்கே ஒரிஸ்ஸா மன்னனின்கீழ் ராஜமகேந்திரவரத்தின் அதிபதியாக அதிகாரம் செலுத்திவந்த ராய ராமானந்தர் நதியில் நீராடுவதற்காக வந்திருந்தார்.

பூரியை விட்டு யாத்திரை புறப்பட்டபோது, ராய ராமானந்தரைச் சந்திக்கும்படி சார்வபௌமர் ஸ்ரீசைதன்யரிடம் சொல்லியிருந்தார். ஸ்ரீசைதன்யரைப் போலவே ராய ராமானந்தரின் பக்தியும் உயர்ந்த நிலையில் இருந்தது. சிறந்த வைஷ்ணவராகவும் அவர் இருந்தார். இசைக் கலைஞர்களும் பிராமணர்களுமாக ஆயிரம்பேர் சூழ கோதாவரிக் கரைக்கு நீராட வந்த அவரை ஸ்ரீசைதன்யர் உடனே அறிந்துகொண்டார். அழகும் இளமையும் பொருந்திய சந்நியாசியைக் கண்டதுமே ஹிந்து அரச குடும்பத்தினரின் வழக்கப்படி ராய ராமானந்தர் அவரை நமஸ்கரித்தார்.

"உங்கள் பெயர் ராய ராமானந்தர் தானே?" என்று அவரை ஸ்ரீசைதன்யர் விசாரித்தார்.

"ஆம். தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த துரதிர்ஷ்டசாலியான சாதாரண ஊழியன் நான்" என்று மிகவும் பணிவுடன் ராமானந்தர் பதில் தந்தார்.

உடனே உணர்ச்சி மிகுதியால் கிருஷ்ணநாமத்தைச் சொல்லியவண்ணம் அவரை ஸ்ரீசைதன்யர் ஆலிங்கனம் செய்துகொண்டார். கிருஷ்ண கிருஷ்ண என்று சொல்லிக்கொண்டே இருவரும் தரையில் விழுந்தார்கள். ராமராயரைப் போன்ற ஒரு மகாராஜர் சாதாரண சந்நியாசியின் ஸ்பரிசம் பட்ட உடனே ஏன் தம்முடைய உயர்ந்த நிலையைத் துச்சமாக எண்ணி இப்படி நடந்துகொண்டார் என்றும் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவரைத் தழுவிக்கொண்டதும் சந்நியாசி கண்ணீர் விட்டு அழுவானேன் என்றும் ராமானந்தரின் பணியாட்கள் அதிசயித்தனர்.

பரவச நிலையிலிருந்து அவர்கள் விடுபட்டு எழுந்ததும், "ராய ராமானந்தரைச் சந்திக்கும்படி என்னிடம் சார்வபௌமர் சொல்லியிருந்தார். உங்களை இவ்வளவு நாட்களாக எதிர்பார்த்திருந்தேன்" என்று ஸ்ரீசைதன்யர் அவரிடம் தெரிவித்தார்.

"பாவம் செய்தவர்களுக்கு விமோசனம் தருபவரே ! நல்வாழ்வு அளிப்பதற்காக, சுய நலம் கருதாமல், மகான்கள், தாங்களாகவே பக்தர்களுடைய இல்லங்களுக்குச் செல்லுவது இயல்பு. தாங்களே என்னை வாழ்விக்க வந்த தெய்வம்" என்று ராமானந்தர் ஸ்ரீசைதன்யருக்குப் பணிவாகப் பதில் அளித்தார். (லௌகிக காரியங்களில் உள்ளவர்களுக்கு விமோசனம் அளிப்பதற்காகவே அவர்களை மகான்கள் நாடிச் செல்வார்கள் என்பது ஹிந்துக்களின் நம்பிக்கை.)

சந்நியாசிகளுக்கு அளிக்கும் சம்பிரதாய மரியாதைக்கு ஏற்பவே, வாழ்விக்க வந்த தெய்வம் என்று ராமானந்தர் ஸ்ரீசைதன்யரைக் குறிப்பிட்டுச் சொன்னர். ஆனல் பிற்காலத்தில் இந்தச் சம்பிரதாய வார்த்தையே ராமானந்தரின் மாற்ற முடியாத உறுதியான முடிவாயிற்று.

"உங்களுடைய ஸ்பர்சத்தால் கடின நெஞ்சம் படைத்த என்னிடத்தும் பகவத் பக்தி பெருக்கெடுத்திருக்கிறது" என்று

ஸ்ரீசைதன்யர் ராமானந்தரிடம் தெரிவித்தார். பின்னர் ஸ்ரீசைதன்யர் ராமானந்தரிடம் கிருஷ்ணனுடைய பெருமைகளைக் கேட்க விரும்பினார்.

"என்னுடைய கடின உள்ளத்தின் பாப அழுக்குகளை எல்லாம் போக்குவதற்காகத் தாங்கள் இங்கே ஐந்து அல்லது ஆறு நாட்களாவது தங்க வேண்டும்" என்று ராமானந்தர் ஸ்ரீசைதன்யரை வேண்டினர்.

பின்னர் ஒரு பிராமணர், கோதாவரி நதிக்கரையில் உள்ள தம்முடைய இல்லத்துக்கு வந்து தங்கவேண்டும் என்று ஸ்ரீசைதன்யரைக் கேட்டுக் கொண்டார். ராய ராமானந்தர் மீண்டும் வந்து சந்திப்பதாகச் சொல்லிவிட்டு, வித்யா நகரத்தில் இருந்த தம்முடைய அரண்மனைக்குச் சென்றார்.

மாலையில் ஒரே ஒரு மெய்காப்பாளருடன் ராயராமானந்தர் ஸ்ரீசைதன்யர் தங்கியிருந்த வீட்டுக்கு வந்து அவரைக் கண்டு க்ஷேமலாபங்களை விசாரித்தார். பின்னர் அவர்கள் இருவரும் ம... சம்பந்தமான விஷயங்களைப் பற்றிய சம்பாஷணையில் இரவு முழுவதும் ஈடுபட்டிருந்தார்கள். அந்தச் சம்பாஷணை முழுவதையும் வெளியிட நேரமும் இடமும் இப்பொழுது இங்கே இல்லாததால் அவற்றைச் சொல்ல இயலவில்லை. ராதைக்கும் கிருஷ்ணனுக்கும் இடையே உள்ள காதலின் ரகசியத்தையும் தத்துவத்தையும் அதன் நோக்கத்தையும் எப்படி அந்தக் காதலைப் பெறுவது என்பதையும் குறித்து விரிவாக ஸ்ரீசைதன்யர் ராமானந்தரை விசாரித்தார். உடனுக்குடன் இந்த விஷயங்களைக் குறித்து ராமானந்தர் தக்க விடை அளித்தார். மேலும் பல விஷயங்களைக் குறித்துத் தொடர்ந்தாற் போலப் பல இரவுகள் இருவருக்கும் இடையே சம்பாஷணைகள் நிகழ்ந்தன. அவற்றுள், வெவ்வேறு வகையான பக்தி மார்க்கங்களுக்கும், கர்ம, ஞான மார்க்கங்களுக்கும் கௌடிய வைஷ்ணவ தத்துவத்துக்கும் இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் குறித்து நடைபெற்ற சம்பாஷணையே மிக முக்கியமானதாகும். தெய்விகக் காதலுக்குரிய தெய்வம் கிருஷ்ணன். கிருஷ்ணனுடைய ஸ்வரூப சக்தியின் உயர்ந்த தத்துவம், பரிபூரணனின் மூன்று முக்கியமான சக்திகளில் தலைமையானது. காரணம்

சொல்ல இயலாத, இயற்கையாகவே தோன்றிய கிருஷ்ண ப்ரேமையின் ஆழ்ந்த உண்மைகளைப்பற்றியே அந்தச் சம்பாஷணை அமைந்திருந்தது. மேன்மையான ராதாகிருஷ்ண காதல் நிலையை, கிருஷ்ணனுடைய காதலியின் நிலையிலிருந்து பணிவுடன் தான் அடையமுடியும். இந்த உலகத்தில் ஆண்-பெண் இருசாராரிடையே உள்ள சாதாரண காதலுக்கும் ராதா கிருஷ்ண காதல் நிலைக்கும் மிகுந்த வேறுபாடு இருக்கிறது.

கல்வி, சந்தோஷம், துக்கம், பாடல், இசை, விடுதலை, உறைவிடம் முதலியவற்றைக் குறித்து வைஷ்ணவ தர்மக் கோட்பாடுகள் என்ன என்பதைக் குறித்து இருவருக்கும் இடையே இரண்டாம் நாள் இரவு சம்பாஷணை நிகழ்ந்தது. மூன்றும் நாள் இரவு, (மகா பாவ ரஸராஜ நிலை) தம்முடைய தெய்விகமான ராதாகிருஷ்ண தோற்றத்தை ஸ்ரீசைதன்யர் ராமானந்தருக்குக் காண்பித்தார்.

பதினெரு நாட்கள் தொடர்ந்தாற்போல ஸ்ரீசைதன்யருக்கும் ராயராமானந்தருக்கும் இடையே சம்பாஷணைகள் நடந்தன. இதன் விளைவாக, தம்முடைய ராஜாங்க வாழ்க்கையிலும் செல்வத்திலும் ராமானந்தருக்கு வெறுப்பு ஏற்பட்டது. ஸ்ரீசைதன்யரை விட்டுப் பிரிய வேண்டுமே என்ற கவலையில் ராமானந்தர் ஆழ்ந்தார். கடைசி நாளன்று ஸ்ரீசைதன்யர், "உங்களுடைய பதவியைத் துறந்து, பூரிக்குச் செல்லுங்கள். நான் விரைவில் அங்கே திரும்பி வந்துசேருகிறேன். பின்னர் இருவரும் கிருஷ்ணனுடைய பெருமைகளைப் பேசி நாட்களைக் கழிப்போம்" என்று ராமானந்தரிடம் தெரிவித்தார். ஸ்ரீசைதன்யரின் மொழிகளைக் கேட்டு, ராய ராமானந்தர் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார். பகவானே ஸ்ரீசைதன்யர் வடிவில் அவதாரம் எடுத்து வந்திருப்பதாக எண்ணிய ராமானந்தர் அவ்விதமே செய்வதாகச் சம்மதம் தெரிவித்தார். ஸ்ரீசைதன்யரின் வாழ்நாள் முழுவதும் அவருடைய நம்பிக்கைக்குப் பாத்திரரான சீடராக ராமானந்தர் விளங்கினர். ஸ்வரூப தாமோதரரும் ராமராயரும் ஸ்ரீசைதன்யரின் அத்தியந்த சீடர்களாகப் பூரியில் இருந்துவந்தார்கள். அவர்கள் இருவரும் ஸ்ரீசைதன்யரின் பக்திச் செல்வத்தைப் பூரணமாக அறிந்தவர்கள்.

ஸ்ரீசைதன்யரைப் பகவானுடைய அவதாரமாக ராமானந்தர் ஏற்றுக்கொண்டு நெருங்கிய சீடரானதைத் தொடர்ந்து, மன்னன் எவ்வழி அவ்வழி மன்னுயிர் என்பதுபோல விஜயநகரத்து மக்கள் அனைவருமே வைஷ்ணவ தர்மத்தைத் தழுவினர்கள்.

கோதாவரி நதிக்கரையில் உள்ள கொவ்வூரில் ஸ்ரீசைதன்யரும் ராமானந்தரும் சந்தித்ததை நினைவூட்டும் வகையில், காலஞ்சென்ற பிரபு பாத பக்தி சித்தாந்த சரஸ்வதி டாகுரா கோஸ்பாத கட்டத் (நீராடும் துறை) தை நிறுவியிருக்கிறுர். ராஜமகேந்திரவரத்திலும் சுற்றுப்புறத்திலும் உள்ள மக்கள் புண்ணிய நாட்களிலும் விழாக் காலங்களிலும் அங்கே விசேஷமாக நீராடுகிறுர்கள். கோதாவரி நதிக்கரையில் உள்ள கொவ்வூரில் கோஸ்பாத கட்டத்துக்கு அருகே பிரபுபாதர் ஒரு மடத்தை நிறுவி அங்கே ஸ்ரீசைதன் யரின் பாதவடிவங்களைப் பிரதிஷ்டையும் செய்திருக்கிறுர். அந்த மடத்துக்கு ராமானந்த கௌடிய மடம் என்றே பெயர் வழங்குகிறது. ஸ்ரீசைதன்யரின் உருவத்துக்கும் அங்கே வழிபாடுகள் நடைபெறு கின்றன. ராயராமானந்தருக்கும் ஸ்ரீசைதன்யருக்கும் இடையே நிகழ்ந்த சம்பாஷணைகளில் பொதிந்து கிடக்கும் தத்துவங்களைப் பிரசாரம் செய்யவும் அங்கே ஏற்பாடுகள் செய்யப் பெற்றிருக் கின்றன.

வித்யாநகரத்துக்குப் பிறகு ஸ்ரீசைதன்யர் சென்ற தலங்களையும் இடங்களையும் காலக்கிரம வரிசையில் குறிப்பிடத் தம்மால் இயல வில்லை என்று வருத்தத்துடன் கிருஷ்ணதாசர் தம்முடைய சைதன்ய சரிதத்தில் குறிப்பிட்டிருக்கிறுர். வட இந்தியாவுக்கு நெடுந்தூரத்தில் உள்ள இந்த இடங்களுக்குச் சென்றிராத கிருஷ்ணதாசரால் அந்த இடங்களில் ஸ்ரீசைதன்யர் பிரயாணம் செய்யும்போது என்ன நிகழ்ந் தது என்பதையும் அப்படியே வர்ணித்து எழுத முடியவில்லை. எனவே, இனிமேல் பூகோள ரீதியில் ஸ்ரீசைதன்யர் சென்ற இடங்களைக் கவனித்துச் செல்வோம்.

வித்யாநகரைவிட்டு நீங்கி, சற்றுக் கிழக்குத் திசையில் ஸ்ரீசைதன்யர் சென்ருர்; கௌதமிகங்கையை அடைந்து அங்கே வழிபாடுகளைச் செய்தார். (ராஜமகேந்திரவரத்தில் கோதாவரி இரண்டாகப் பிரிந்து வங்கக் கடலில் கலக்கிறது. இந்தக் கிளை

நதிகளில் ஒன்ருன கௌதமிகங்கை, கரோன்ஜாவுக்கு அருகில் கோதாவரி என்னும் முனையில் கடலுடன் கலக்கிறது.) பின்னர் மசூலிப் பட்டணம் வழியாக, அநேகமாகப் பெஜவாடாவுக்கு அருகில் கிருஷ்ணு நதியைக் கடந்து ஸ்ரீசைதன்யர் மங்களகிரியை அடைந் தார். கிருஷ்ணு ஜில்லாவில் பெஜவாடாவிலிருந்து ஒருமைல் தூரத் தில் இது அமைந்திருக்கிறது. மலைமேலே இருக்கும் கோயிலுக் குச் செல்வதற்கு அறுநூறு படிகள் கட்டப்பெற்றிருக்கின்றன. இங்கே வீற்றிருக்கும் நரசிம்மருக்குப் பானக நரசிம்மர் என்று பெயர் வழங்குகிறது. சேவார்த்திகள் நிவேதனத்துக்காகக் கொண்டு வரும் பானகத்தில் பாதியை மட்டும் இந்த நரசிம்மர் ஏற்றுக்கொள் வதாலேயே பானக நரசிம்மர் என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது.

மங்களகிரிக்குப் பின்னர் குண்டுர் ஜில்லா வழியாக நிஜாம் ராஜ்யத்தின் எல்லைகளைக் கடந்து பழைய ஸ்காந்தத்துக்குச் சென்ருர். பிறகு கர்நூலிலிருந்து 70 மைல் தொலைவில் இருக்கும் ஸ்ரீசைலம் என்று அழைக்கப்படும் மல்லிகார்ஜுனம் என்னும் தலத் துக்குச் சென்ருர். அங்கே உள்ள சிவாலயத்துக்குச் சென்று அங்கே இருந்த சைவர்களை வைஷ்ணவ மதத்தை ஏற்றுக்கொள்ளச் செய்தார். பின்னர் கர்நூல் ஜில்லாவில் சர்வால் தாலூக்காவில் இருக்கும் மற்ருெரு பிரசித்தி பெற்ற நரசிம்ம ஸ்தலமான அஹோ பிலத்துக்குச் சென்ருர். இங்கே 64 தூண்களால், கோயில் கட்டப் பெற்றிருக்கிறது. அஹோபிலத்தைத் தரிசித்துவிட்டு, தென்திசைப் பக்கமாகத் திரும்பிக் கடப்பை ஜில்லாவில் பெண்ணுறு நதிக்கரை யில், கடப்பைக்குப் பத்து மைல் தூரத்தில் இருக்கும் சித்தவட்டம் என்னும் இடத்தை அடைந்தார். சித்தவட்டத்திற்குச் சென்ற பிறகு ஸ்ரீசைதன்யர் ஸ்காந்தத்தை அடைந்தார் என்று கிருஷ்ண தாச கவிராஜர் எழுதியிருப்பது சரி அல்ல. ஏனெனில் ஸ்காந்தம் சித்தவட்டத்திலிருந்து எழுநூறு மைல் தூரத்தில் நிஜாம் ராஜ்யத் தில் பானக நரசிம்மர் எழுந்தருளியுள்ள மங்களகிரியிலிருந்து மல்லிகார்ஜுனம் செல்லும் பாதைக்குச் சமீபத்தில் இருக்கிறது.

ஸ்ரீசைதன்யர், சித்தவட்டத்தில் உள்ள ராம சீதா கோயிலுக்குச் சென்ருர். ஸ்ரீராமசந்திரருடைய பக்தர் ஒருவர் அவரைத் தம் முடைய வீட்டுக்கு விருந்தாளியாக அழைத்துச் சென்று உபசாரம்

செய்தார். பின்னர் திருமடம் என்னும் தலத்துக்குச் சென்று திருவிக்கிரம விஷ்ணுவைத் தரிசித்தார். மீண்டும் சித்தவட்டத் துக்கு ஸ்ரீசைதன்யர் திரும்பியபோது ஸ்ரீராமசந்திர பக்தரைக் கிருஷ்ண பக்தராக்கினர். இங்கே மீண்டும் கிருஷ்ணதாசர். ஸ்ரீசைதன்யர் சென்ற இடங்களைத் தவறுதலாகத் தம் நூலில் குறிப் பிட்டிருக்கிறார். ஸ்ரீசைதன்யர் சித்தவட்டத்திலிருந்து தென் ஆர்க் காடு ஜில்லாவில் இருக்கும் விருத்தாசலத்திற்குச் சென்று அங்கே இருந்து திருப்பதி, திருமலை ஆகிய இடங்களுக்குச் சென்றார் என்று அவர் எழுதியிருக்கிறார். சித்தவட்டத்துக்கு பிறகு கடப்பை ஜில்லாவுக்கு மிகச் சமீபத்தில் இருக்கும் வட ஆர்க்காடு ஜில்லாவுக் குள் பிரவேசித்தார் என்பதுதான் சரி. கடப்பை, வடஆர்க்காடு, நெல்லூர் ஜில்லாக்கள் மூன்றும் சந்திக்கும் எல்லையில், நெல்லூர் ஜில்லாவில் இருக்கும் வேங்கடகிரிக்கு முதல்முதலில் ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்தார். அங்கிருந்து ஸ்ரீசைதன்யர் புறப்பட்டு, திருப் பதிக்குச் சென்றார். அங்கே நான்கு திருக்கரங்களுடன் காட்சி தரும் பாலாஜியையும் கீழ்த்திருப்பதியில் ஸ்ரீராமரையும் தரிசித்துக் கொண்டார். பின்னர் காளஹஸ்திக்குச் சென்று பிரசித்திபெற்ற வாயுலிங்கத்தையும் காளத்திநாதரையும் சேவித்துக் கொண்டார். பிறகு நகரிமலை வழியாக ஸ்ரீசைதன்யர் காஞ்சிபுரம் வந்தடைந்தார். அங்கே சிவாலயத்தில் இருந்த பல சைவ, சாக்த மதத்தினரை வைஷ்ணவ மதத்துக்குத் திருப்பினர். அங்கே இருந்து விஷ்ணு காஞ்சிக்குச் சென்று நீண்ட தோத்திரம் ஒன்றைப் பாடி வரதராஜப் பெருமாளைத் தரிசித்துக் கொண்டார். இங்கே கிருஷ்ண பக்தியில் திளைத்த வண்ணமே பலரை வைஷ்ணவ தர்மத்தை ஏற்றுக்கொள் ளச் செய்தார். இதற்கு அடுத்து ஸ்ரீசைதன்யர் சென்ற தலம் அநேமாகத் திருக்கழுக்குன்றமாக இருக்கலாம். இங்கே வேதகிரி என்னும் மலை மீது வேதகிரீசுவரர் கோயில் அமைந்திருக்கிறது. இங்கே தினந்தோறும் உச்சிக் காலத்தில் கோயில் பூசாரி அளிக்கும் பிரசாதத்தை உண்பதற்காக இரண்டு கழுகுகள் வந்து போவதால் பட்சி தீர்த்தம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது.

பட்சித் தீர்த்தத்திலிருந்து ஸ்ரீசைதன்யர் விருத்தாசலம் சென்று அங்கே இருக்கும் சிவாலயத்துக்கும் விஜயம் செய்தார்.

பின்னர் ஸ்ரீசைதன்யர் அருகில் உள்ள கிராமம் ஒன்றுக்குச் சென்று அங்கே இருந்த ஏராளமான பிராமணர்களை வைஷ்ணவ தர்மத்தைத் தழுவும்படி செய்தார். தமிழ் நாட்டின் இந்தப் பகுதியில்தான் நியாயம், மீமாம்சை, சாங்க்யம், பதஞ்சலி யோக சூத்திரம், ஸ்மிருதி, புராணம், ஆகமம் ஆகியவற்றில் பெரும்புலமை மிக்க பண்டிதர்களையும் பிரசித்தி பெற்ற மாயாவாத சந்நியாசிகளையும் ஸ்ரீசைதன்யர் சந்தித்துக் கடுமையாக விவாதித்தார்.

'தமிழ் நாட்டின் இப்பகுதியில்தான், ஸ்மிருதி, புராணங்கள், ஆகமங்கள் இவற்றில் ஆழ்ந்த பயிற்சியைப் பெற்ற அறிஞர்கள், பதஞ்சலியின் யோகசாஸ்திரத்தைப் பின்பற்றுபவர்கள், சாங்கியர்கள், மாயாவாதிகள், மீமாம்சகர்கள், நியாயத்தில் நிபுணர்கள் இன்னும் வெல்லமுடியாத பல மதத் தலைவர்கள் முதலியவர்கள் கடுமையாக ஸ்ரீசைதன்யரை எதிர்த்தார்கள். இருந்தபோதிலும் மாற்றாரின் வாதங்களை மறுத்து, தர்க்கம் செய்து வைஷ்ணவத்தின் உயர்வை வெற்றிகரமாக ஸ்ரீசைதன்யர் நிலைநாட்டினார். தோல்வியுற்ற மதத் தலைவர்கள் அனைவருக்கும் ஸ்ரீசைதன்யரின் கொள்கையை ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறு வழி இல்லாமற்போய்விட்டது. ஸ்ரீசைதன்யரின் இந்த வெற்றி தமிழ் நாடு முழுவதும் பரவியது. இந்தப் பகுதியிலே, ஒரு வனத்தில் புத்த பிக்ஷு ஒருவரும் அவருடைய சீடர்களும் ஸ்ரீசைதன்யரை, பொதுக் கூட்டம் ஒன்றிலேயே எதிர்த்து, வாதப் போருக்கு அழைத்தார்கள். கடைசியில் ஸ்ரீசைதன்யருடைய தர்க்கத் திறமைக்கு முன் அவர்கள் பணிந்தார்கள். ஆனால் அவர்கள் வைஷ்ணவ தர்ம நெறியுடன் இருந்த ஸ்ரீசைதன்யருடைய வாழ்க்கையையே மாற்றிவிடச் சதி செய்தனர். அதிர்ஷ்டவசமாகவும் ஆச்சரியமாகவும் பௌத்தர்களுடைய அந்த முயற்சிகளையும் ஸ்ரீசைதன்யர் முறியடித்தார். கடைசியில் பௌத்தர்களும் கிருஷ்ண நாமத்தை ஏற்றுக் கொண்டார்கள். ஸ்ரீசைதன்யர் பெற்ற பெரிய வெற்றிகளில் இதுவும் ஒன்றாகும்.

விருத்தாசலத்துக்கு அருகில் உள்ள இடங்களிலிருந்து, ஸ்ரீசைதன்யர் சிதம்பரத்துக்குப் போய், அங்கே உள்ள சிவாலயத்தைத் தரிசித்துவிட்டு, கொள்ளிடக் கரையில் இருக்கும் சீகாழிக்குச்

சென்றார். அங்கேயிருந்து தெற்குப் பக்கமாகச் சென்று காவேரி கடலில் கலக்கும் இடத்தையும் தரிசித்துவிட்டு, ஸ்ரீசைதன்யர் வேத வனம் சென்றார். இங்கே உள்ள அமிர்தலிங்கர் கோயிலுக்கும் வேறு பல ஆலயங்களுக்கும் சென்று சைவர்களில் பலரை வைஷ்ணவ தர்மத்துக்கு மாற்றினார். இங்கே தேவஸ்தானத்தில் இருந்த ஸ்ரீவைஷ்ணவர்களுடன் வைஷ்ணவ தர்மம் பற்றி உரை யாடிவிட்டு, தஞ்சாவூரிலிருந்து இருபதுமைல் தூரத்தில் உள்ள கும்பகோணத்துக்குப் புறப்பட்டார். பின்னர் அவர் சென்ற முக்கியமான தலம் கும்பகோணத்துக்குத் தெற்கே உள்ள பாபநாசம்.

ஸ்ரீரங்க தரிசனம்: பாபநாசத்தைத் தரிசித்துவிட்டுக் காவிரிக் கரை யோரமாக மேற்கு நோக்கிப் புறப்பட்டு, ஆவணி மாதத்தில் ஸ்ரீசைதன்யர் ஸ்ரீரங்கம் போய்ச் சேர்ந்தார். சாதுர்மாஸ்ய விரதத்தை ஏற்று ஆவணி முதல் கார்த்திகை மாதம் வரை நான்கு மாதங்கள் ஸ்ரீசைதன்யர் இங்கேயே தங்கினார்; மழைக்காலமாகிய இந்த நான்கு மாதங்களிலும் வெளியே பல இடங்களுக்கும் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது துறவிகளுக்குள்ள கடுமையான கருமங் களைச் செய்வது எளிதல்ல. எனவே, (வைஷ்ணவ) சந்நியாசிகள் இந்த மாதங்களில் வெளியே செல்வது தடைப்படுத்தப்பட்டிருக் கிறது. வேங்கடபட்டர் என்பவரும் திருமலை, பிரபோதானந்த சரஸ்வதி என்னும் அவருடைய இரண்டு சகோதரர்களும் கேட்டுக் கொண்டதற்கு இணங்கி, பட்டரின் இல்லத்திலேயே நான்கு மாதங்கள் வரை ஸ்ரீசைதன்யர் தங்கினார். 'சைதன்ய சந்திராமிர் தம்' போன்ற பிரசித்தி பெற்ற பல நூல்களை இவர்கள் இருவரும் எழுதி வைஷ்ணவ உலகத்தில் புகழ்பெற்ற ஆசிரியர்களாக விளங்கு கிறார்கள்.

இங்கேதான் இந்தியாவில் உள்ள கோயில்களிலேயே செல்வச் சிறப்பும் புகழும் வாய்ந்த ஸ்ரீரங்கநாதர் கோயில் அமைந்திருக் கிறது. லட்சக்கணக்கான யாத்ரிகர்கள் இங்கே வந்து ஸ்ரீரங்க நாதனைத் தரிசித்தவண்ணமாகவே இருக்கிறார்கள். வைஷ்ணவர் களின் பிரதான ஸ்தலம் இதுவே. ஸ்ரீரங்கத்தில் தரிசனத்துக்காக வருபவர்களுக்குத் தம்முடைய தத்துவத்தை உபதேசிக்க வேண்டு

மென்ற ஆர்வ மிகுதியே அவரை ஸ்ரீரங்கத்திலே இருக்கச் செய்தது. அவருக்கு இடம் அளித்தவர் வடகலைச் சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர். ஸ்ரீயப்பதியான ஸ்ரீமன் நாராயணனை அந்தரங்கக் காதலுடனும் பக்தியுடனும் சேவித்துவந்த வேங்கடருக்கும் அவருடைய மனைவிக்கும் தெய்விகக் காதலையும் பக்தியையும் பற்றி ஸ்ரீசைதன்யர் இடைவிடாமல் உபந்நியாசம் செய்துவந்தார். இது அவர்களிடம் பெரிய மாறுதலையும் ஏற்படுத்தியது. இதுவரையில் ஸ்ரீலக்ஷ்மி நாராயணரை வழிபட்டுவந்ததைக்கூட அவர்கள் நிறுத்திக்கொண்டு விட்டார்கள். எளிய அன்பைக் கொண்டே கிருஷ்ணனை வழிபடலாம். நாராயணரோ வைகுந்தத்தில் கம்பீரமாக வீற்றிருக்கிறார். இதனால் நாராயணனிடம் பக்தி செலுத்துவதில் பக்தனுக்கு இடைவெளி ஏற்பட்டுவிடுகிறது. தடையற்ற காதலைக்கொண்டு கிருஷ்ணனை வழிபடலாம். பிரேமைக்கு உறைவிடமான தெய்வம் கிருஷ்ணன்; பயபக்திக்குரிய கடவுள் நாராயணன். இதுவே இருவருக்கும் உள்ள வேறுபாடுகள்.

ஒருநாள் ஸ்ரீசைதன்யர் வேடிக்கையாகப் பட்டரிடம் கேட்டார். ''பட்டரே! கற்புடைய மாதர் அனைவருக்கும் முடிபோல விளங்கும் லக்ஷ்மிதேவி ஸ்ரீநாராயணனின் மார்பிலே சதா அமர்ந்திருப்பவளாயிற்றே! தம்முடைய ஆவல் மிகுதியால் வைகுந்த சுகத்தை எல்லாம் விட்டு மாட்டிடையனும் என் நெஞ்சில் உறைபவனுமான கண்ணனின் காதலை நாடி, துறவியாக வருவானேன்'' [பாகவதம்: 14. 16. 33]

இந்தக் கேள்விக்குப் பட்டர் பதில் தந்தார்: ''கிருஷ்ணனுக்கும் நாராயணனுக்கும் இடையே எவ்வித வித்தியாசமும் பாராட்டாத வகையிலேயே சில விசேஷங்கள் இருக்கின்றன. கிருஷ்ணனுடைய ரூபசௌந்தரியம் நாராயணனிடமும் இருக்கிறது. ஆனால் கிருஷ்ணனுக்கு உரிய லீலைகளை நாராயணன் வெளிப்படுத்துவதில்லை. எனவே, கிருஷ்ணனுடன் கலந்திருக்கும்போது லக்ஷ்மிதேவி கற்பு நிலையிலிருந்து பிறழாதது மட்டும் அல்ல, நாராயணனிடம் காண இயலாத ராச லீலையில் பங்கெடுத்துக்கொள்வதால் லக்ஷ்மியின் பெருமையும் அதிகமாகிறது. அப்படியிருக்கும்போது அதில் என்ன தவறு?''

"தவறு ஒன்றும் இல்லை. ஆனால் விரஜையில் உள்ள இளம் பெண்கள் மட்டுமே ராசலீலையில் கலந்துகொள்ளும் விசேஷ உரிமை உள்ளவர்களாயிற்றே! லக்ஷ்மியை அந்த நாட்டியத்தில் சேர்த்துக் கொள்ள இயலாதே" என்று மேலும் ஸ்ரீசைதன்யர் கேட்டார். [பாகவதம் 15–34]

இதைக் கேட்ட பட்டர் விடைதர இயலாமல் சற்றுத் தயங்கினார். "இந்த இடத்தில் சற்று விளக்கம் தரவேண்டும்" என்று பட்டர் ஸ்ரீசைதன்யரைக் கேட்டுக்கொண்டார். அப்படியே அவரும் பட்டருக்கு விளக்கமாக எடுத்துரைத்தார்.

"ஸ்ரீநாராயணனைவிட, ஸ்ரீகிருஷ்ணனிடம் அழகும் கவர்ச்சியும் மிகுதி. எனவே, எல்லோருடைய உள்ளங்களையும் கவர்வதுடன் தம்முடைய உள்ளத்தையும் அவர் வசீகரித்துவிடுகிறார். விரஜையில் உள்ள பெண்கள் தொலைவில் உள்ள பயபக்திக்குரிய தெய்வமாக அவரைக் கருதவில்லை. தங்களுடைய உள்ளத்தில் உறையும் காதலனாகவே அவரை எண்ணினார்கள். மைந்தனாகவும் தோழனாகவும் சமானனாகவும் எண்ணிக் கிருஷ்ணனையே அடைந்தார்கள். கிருஷ்ணனிடம் உள்ளதனைத்தும் தெய்விகக் காதல் நிரம்பப் பெற்றவையாகும். இந்த விரஜைப் பெண்களின் கருணைக்கு உட்பட்டுத்தான் இந்தக் காதல் மயமான இந்த உலகத்துக்குள் புக முடியும். இவற்றுக்குக் கட்டுப்படாத லக்ஷ்மி, இங்கே வர அநுமதிக்கப்படவில்லை. தம்மைக் காதலிக்கும் வகையில் லக்ஷ்மியின் உள் இதயத்தைக் கிருஷ்ணனால் கவரமுடிந்தது. ஆனால் விரஜையின் கன்னிகைகளின் கவனத்தைப் பெற ஸ்ரீநாராயணனால் இயலவில்லை."

ஸ்ரீசைதன்யரின் இந்த விளக்கம் பட்டரின் கருத்துக்களில் பெரிய மாறுதலை ஏற்படுத்தி வருத்தத்தையும் தந்தது. பிறகு ஸ்ரீசைதன்யர் அவரை மெல்லச் சமாதானப்படுத்தினார். கடைசியில் அவரையும் அவருடைய மனைவியையும் திருமலை, பிரபோதானந்தர் என்னும் இரண்டு சகோதரர்களையும் தம் வைஷ்ணதர்மத்தை ஏற்றுக்கொள்ளும்படி செய்தார். ஸ்ரீசைதன்யரின் தெய்விக அம்சத்தையும் கொள்கைகளையும் மிகுந்த உற்சாகத்துடன் பரப்புவதில் ஒருவராகப் பிற்காலத்தில் பிரபோதானந்தர் விளங்கினார் என்பது

இங்கே குறிப்பிடத்தக்கது. மற்றும், ஸ்ரீசைதன்யரின் கொள்கைகளுக்கு விளக்கமாகப் பல அருமையான நூல்களை எழுதிய ரூபர், சநாதனர், ஜீவர், ரகுநாத பட்டர், ரகுநாததாசர் முதலிய புகழ்பெற்ற கௌடிய வைஷ்ணவ அறிஞர்களில் ஒருவரான கோபால பட்டர், இந்த வேங்கட பட்டரின் திருக்குமாரர் என்பதையும் அவசியம் இங்கே குறிப்பிடவேண்டும்.

வைதிகப் பழக்கவழக்கங்களை உடைய வெறி பிடித்தவர்கள் நிறைந்த பிரதேசங்கள்–காடும் மலையும் காட்டு விலங்குகளும் நிறைந்த பிராந்தியங்கள்–இவற்றினிடையே பல ஆபத்துக்களைச் சமாளித்துக்கொண்டு ஓராண்டுக்காலம் பிரயாணம் செய்தார் ஸ்ரீசைதன்யர். இந்தக் காலத்தில் வித்யாநகரத்தில் ராமானந்த ராயரைப் பெற்றதும், ஆழ்ந்த அறிஞர்கள் நிறைந்த பட்டரின் குடும்பத்தை தம்முடைய வைஷ்ணவ நெறிக்குத் திருப்பியதும் மிக முக்கியமான வெற்றிகளாகும்.'' ''பல இடங்களிலிருந்தும் லட்சக் கணக்கான மக்கள் ஸ்ரீசைதன்யரைத் தரிசிப்பதற்காகக் கூட்டம் கூட்டமாக வந்து சேர்ந்தார்கள். அவரைக் கண்டதுமே வேறு எந்த நாமத்தையும் சொல்லாமல் 'கிருஷ்ண கிருஷ்ண' என்றே கோஷமிட்டார்கள். எல்லோரும் வியக்கும் வகையில் வந்திருந்தவர்கள் அனைவரும் கிருஷ்ண பக்தர்களானார்கள். ஸ்ரீரங்கத்து அந்தணர்கள் பலநாட்கள் தொடர்ந்து அவரைத் தங்கள் தங்கள் இல்லங்களுக்கு அழைத்தனர்'' என்று ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீசைதன்யர் பெற்ற வெற்றியைப் பற்றி, விமரிசையாக கிருஷ்ணதாச கவிராஜர் தம் நூலில் எழுதுகிறார்.

நான்குமாத காலம் தங்கிய பிறகு ஸ்ரீசைதன்யர் தம்முடைய பக்தர்களிடமிருந்து விடை பெற்றுக்கொண்டார். திருச்சி, திண்டுக்கல் வழியாக ரிசவ பர்வதத்துக்குப் புறப்பட்டார். இப்பொழுது மதுரை ஜில்லாவில் உள்ள பழனி என்று எல்லோராலும் வழங்கப் பெறும் மலையே ரிசவ பர்வதமாகும். தென்னிந்தியச் சுற்றுப் பிரயாணத்தின் போது சாதுர்மாஸ்ய விரதம் ஏற்று, அங்கே சிறிது காலம் தங்கியிருந்த மாதவபூரியின் சிஷ்யரான பரமானந்தபூரியை ஸ்ரீசைதன்யர் சந்தித்தார். பின்னர் பரமானந்தர், பூரிக்கும் வங்காளத்துக்கும் சென்றுவிட்டு, மீண்டும் பூரிக்குத் திரும்பி ஆயுள்

முழுவதும் ஸ்ரீசைதன்யரின் நெருங்கிய துணைவராக அங்கேயே இருந்தார்.

ரிசவ பர்வதத்தில் மூன்று நாள் தங்கிவிட்டு, ஸ்ரீசைதன்யர் ஸ்ரீசைலம் புறப்பட்டார். பழனியிலிருந்து மதுரைக்குப் போகும் வழியில் உள்ள சோழவந்தான் என்னும் ஊரையே அநேகமாக, கிருஷ்ணதாசர் குறிப்பிடுகிறார் போலும். பழனிமலைக்கு நேர் கிழக்கே உள்ள காமகோஷ்டியூரில் மதுரைக்குப் போகும் வழியில் ஸ்ரீசைதன்யர் தங்கினர் என்று கிருஷ்ணதாசர் குறிப்பிடுகிறார். மதுரைக்குக் கிழக்கே உள்ள காளையார் கோயில் அநேகமாக, காமகோஷ்டியூராக இருக்கலாம். மதுரையிலிருந்து ராமேசுவரம் போகும் வழியில் உள்ள காமகோஷ்டியூரை மதுரையைத் தரிசித்த பிறகே அவர் அடைந்திருப்பார்,

மதுரையில் ராமபக்தரான ஓர் அந்தணர் இல்லத்தில் ஸ்ரீசைதன்யர் விருந்தினராகத் தங்கினர். சீதையை ராவணன் அபகரித்துச் சென்றுவிட்டானே என்ற வருத்தத்தில் அவர் உண்ணு விரதம் இருந்தார். "பரிபூரண ஆத்மாவின் பிரதிநிதியான சீதையின் முன்பு எந்தச் சக்திக்கும் வலிமை ஒன்றும் கிடையாது. ராவணன் நெருங்கிய உடனே சீதை மறைந்து பதிலாக மாய சீதையே இருந்தாள். அவளைத்தான் ராவணன் அபகரித்துச் சென்றான். ராவணன் மரணத்துக்குப் பிறகு, சீதை அக்னிப் பிரவேசம் செய்த போது மாய சீதை மறைந்து ராமர் முன் நிஜ சீதை தோன்றினுள்" என்று சொல்லி அவருக்கு ஸ்ரீசைதன்யர் ஆறுதல் கூறினர்.

வைகை என்னும் கிராதமாலா நதியில் நீராடிய பிறகு மதுரையைத் தரிசித்துவிட்டு, அநேகமாக காமகோஷ்டிபுரம் வழியாக, ஸ்ரீசைதன்யர் தர்ப்பசயனம் வந்தடைந்தார். ராமநாதபுரத்துக்கு ஏழுமைல் கிழக்கே கடற்கரையை ஒட்டி அமைந்துள்ளது தர்ப்பசயனம். இங்கே சீதாலக்ஷ்மி சமேதரான ஸ்ரீராமசந்திர மூர்த்திக்கு ஓர் ஆலயம் இருக்கிறது. ராமேசுவரம், தனுஷ்கோடி, சேது முதலிய இடங்களுக்குச் செல்லும் முன் அவர் மகேந்திரமலையில் பரசுராமரைத் தரிசித்தார். இலங்கைக்கு வெகு சமீபமாக, மன்னர் வளைகுடாவில் அமைந்துள்ளது ராமேசுவரம் என்னும் தீவு. ராமேசுவரத்துக்கு 12 மைல் தென் கிழக்கே உள்ளே தனுஷ்கோடி

யில் நீராடிவிட்டு, ராமேசுவரத்தில் உள்ள ஸ்ரீராமலிங்கத்தைத் தரிசனம் செய்துகொண்டார்.

அந்த ஆலயத்தில், கூர்மபுராணத்திலிருந்து சீதாபஹரணப் பகுதியைச் சில அந்தணர்கள் படித்துக்கொண் டிருந்ததை ஸ்ரீசைதன்யர் கேட்டார். அந்தப் பகுதியைப் புதியதாக ஓலையில் எழுதி, அவர்களிடம் கொடுத்து மூலப் பிரதியை ஸ்ரீசைதன்யர் தாம் வைத்துக் கொண்டார். ராமரைவிட்டுப் பிரிந்த சீதையின் துக்கத்தை நினைந்து நினைந்து மதுரையில் வருந்திப் புலம்பிக் கொண்டிருந்த அந்தணருக்குத் தாம் சொன்ன விளக்கத்தை உறுதிப்படுத்தி, அவருடைய மனத்தை மாற்றுவதற்குச் சான்றாகவே ஸ்ரீசைதன்யர் மூலப் பிரதியையே பெற்றுக் கொண்டார். அன்று இரவு அவர் மதுரைக்குச் சென்று இரவை அங்கே கழித்தார். அடுத்த நாள் அவர் தெற்கு நோக்கித் தம்முடைய யாத்திரையைத் தொடங்கினார். திருநெல்வேலி ஜில்லாவில் உள்ளது தாம்பிரபரணி. திருநெல்வேலிக்கு வடக்கே, சித்ரா நதிக்குத் தெற்கே உள்ள தென் காசியை அடைந்தார். அந்தத் தலத்தைத் தரிசனம் செய்த பின்னர் ஸ்ரீசைதன்யர் தாம்பிரபரணி நதிக்கரையை அடைந்தார். திருவாங்கூர் ராஜ்யத்தில் உள்ள மலைகளில் உற்பத்தியாகி, திருநெல்வேலி ஜில்லாவில் பாய்ந்து தாம்பிரபரணி, மன்னார் வளைகுடாவில் சங்கமமாகிறது. தென்காசிக்கு அடுத்து ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்தது பிரபல வைஷ்ணவ ஸ்தலமான ஸ்ரீவைகுண்டம். பின்னர் ஆழ்வார் திருநகரியை ஸ்ரீசைதன்யர் அடைந்தார். இந்த ஸ்தலம் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து நான்குமைல் தொலைவில்தான் இருக்கிறது. அங்கே உள்ள பெருமாளையும் ஆழ்வாரையும் ஸ்ரீசைதன்யர் தரிசித்து மனம் மகிழ்ந்தார்.

ஆழ்வார்திருநகரியிலிருந்து திருவாங்கூர் ராஜ்யத்தின் தென்கோடியில் உள்ள நாகர்கோயிலுக்கு அருகே உள்ள குற்றாலத்துக்கு ஸ்ரீசைதன்யர் சென்றார் என்றும் பிறகு திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள தென்காசிக்குச் சென்று விட்டுப் பின்னர் குற்றாலத்துக்குச் சமீபமாக உள்ள கஜேந்திரமோட்சம், பணகுடி முதலிய இடங்களை அவர் தரிசித்தார் என்றும் கிருஷ்ணதாசர் தம்முடைய நூலில் குறிப்பிட்டிருக்கிறார். இந்தப் பகுதிகளில் ஸ்ரீசைதன்யர் யாத்திரைசெய்த

ஸ்தலங்கள் ஒவ்வொன்றும் எங்கே அமைந்திருக்கின்றன என்பது கிருஷ்ணதாச கவிராஜ் அவர்களுக்குத் தெளிவாகத் தெரிந்திருக்கும் என்று சொல்வதற்கு இயலாது. இந்த இடங்கள் யாவும் அவருக்கு முன்பின் அறிமுகமில்லாதவை. எனவேதான் தம்முடைய நூலில் ஸ்ரீசைதன்யர் சென்ற தலங்களைப்பற்றி அவர் குறிப்பிடும் போது சற்றும் பொருத்தம் இல்லாமல் இருக்கிறது.

மதுரையிலிருந்து வரும் வழியிலேயே திருநெல்வேலிக்கு வடக்கே உள்ள திலகாஞ்சியைக் கடந்தே சென்ற ஸ்ரீசைதன்யர், மீண்டும் குற்றாலத்திலிருந்து, கஜேந்திரமோட்சம், அகஸ்தியமலை, பணகுடி, கன்னியாகுமரி முதலிய அருகில் உள்ள இடங்களைப் பார்க்காமல் திலகாஞ்சிக்கு மீண்டும் சென்றிருக்கமாட்டார். அநேகமாக அவர் ஆழ்வார்திருநகரியிலிருந்தே அகஸ்தியமலை, பணகுடி, குற்றாலம், கஜேந்திர மோட்சம், கன்னியாகுமரி முதலிய இடங்களுக்குச் சென்றிருப்பார். மலய பர்வதத்தின் தென் எல்லையில் உள்ள அகஸ்தியமலைக்குச் சென்று அகஸ்தியர் மேல் தோத்திரங்களைப் பாடி மகிழ்ந்தார் ஸ்ரீசைதன்யர். பின்னர் பணகுடிக்குச் சென்று சீதாலட்சுமி சமேதரான ஸ்ரீராமசந்திர மூர்த்தியை வழிபட்டார். திருநெல்வேலியிலிருந்து திருவனந்தபுரத்துக்குப் போகும் பாதையில் சுமார் 30 வது மைலில் உள்ள இந்த வைணவக் கோயில் சைவக் கோயிலாக மாற்றப்பட்டது. நாகர்கோயிலுக்கு அருகே உள்ள சியர்த்தலை என்னும் ஊருக்குச் செல்லும் முன்பு ஸ்ரீசைதன்யர் எங்கனூர் என்னும் தலத்துக்குச் சென்று ஸ்ரீராமலட்சுமணர்களைச் சேவித்துக் கொண்டார். பின்னர் சியர்த்தலைக்கும் சென்று அங்கே வீற்றிருக்கும் சீதாலக்ஷ்மி சமேதரான ஸ்ரீராமசந்திரமூர்த்தியை வழிபட்டார். பின்னர் ஸ்ரீசைதன்யர் கஜேந்திர மோட்சம் என்னும் தலத்துக்குச் சென்று அங்கே எழுந்தருளியுள்ள ஸ்ரீவிஷ்ணுவைத் தரிசித்தார். நாகர் கோயிலிலிருந்து 2 மைல் தூரத்தில் இருக்கும் இந்தத் தலத்தின் கோயில் இப்பொழுது சைவர்களின் பொறுப்பில் இருக்கிறது. கடைசியாக இந்திய தீபகற்பத்தின் தென்கோடியில் உள்ள கன்னியாகுமரியை ஸ்ரீசைதன்யர் வந்தடைந்தார். பின்னர் மேற்குக் கடற்கரையோரமாக வடக்கு நோக்கித் தமது யாத்திரையை மேற்கொண்டார். இன்று கேரள ராஜ்யமாக விளங்கும் திருவாங்கூர்

ராஜ்யத்திற்குச் சென்று மாலவார் வழியாக ஸ்ரீசைதன்யர் மைசூர் ராஜ்யத்தை அடைந்த தலயாத்திரை மார்க்கங்களை இனிக் கவனிப்போம்.

கன்னியாகுமரியிலிருந்து ஸ்ரீசைதன்யர், திரும்பி திருநெல்வேலியிலிருந்து 44 மைல் தெற்கே உள்ள தமலகார்த்திகா என்னும் தலத்துக்குச் சென்று கார்த்திகேயனைக் கண்டு தொழுதார். பின்னர் வேதபாணி என்னும் தலத்துக்குச் சென்றார். ஸ்ரீராமசந்திரமூர்த்தி கோயில் கொண்டுள்ள இந்த வேதபாணி என்னும் தலம் தோபல் தாலூகாவில் நாகர்கோயிலுக்கு அருகே இன்றும் இருக்கிறது. பின்னர் திருவனந்தபுர ராஜ்யத்தின் வழியாகச் செல்லும் பயஸ்வினி என்னும் திருவட்டாறு நதிக்கரையோரமாக ஸ்ரீசைதன்யர் தம்முடைய யாத்திரையைத் தொடங்கினர். திருவனந்தபுரம் ஜில்லாவில் திருவட்டாற்றங்கரையில் அமைந்துள்ள ஆதிகேசவர் சந்நிதியைக் கண்டு பக்தியுடன் நீண்டநேரம் பிரார்த்தித்தார். மேலும் அங்கே நாம சங்கீர்த்தனமும் நிகழ்ந்தது. அதிசயிக்கத்தக்க முறையில் பிரசித்திபெற்ற பிரம்ம சம்ஹிதை(ஐந்தாவது அத்தியாயம்) ஸ்ரீசைதன்யருக்குக் கிடைத்தது. பிறகு ஸ்ரீசைதன்யர் திருவனந்தபுரம் சென்று அனந்த பத்மநாபனை வழிபட்டார்; வர்க்கலைக்குச் சென்று ஜனார்த்தனரையும் தரிசித்துக்கொண்டார். பின்னர் மேலும் வடக்கு நோக்கிச் சென்று மாலவார் பிரதேசத்தை அடைந்தார். இங்கே துரதிர்ஷ்ட சம்பவம் ஒன்று நிகழ்ந்துவிட்டது. நாடோடியாகத் திரியும் பட்டதாரி என்று வழங்கும் குறத்திகள் கூட்டம் ஒன்று (சில நூல்களில் பட்டமாரி என்று இவர்களைத் தவருகக் குறிப்பிட்டிருக்கிருர்கள்) ஸ்ரீசைதன்யரின் துணைவரான கிருஷ்ணதாசரை, ஓர் இளம் பெண்ணைக் காட்டிக் கவர்ந்து சென்றுவிட்டார்கள். (ஸ்ரீசைதன்யரின் வரலாற்றை எழுதிய கிருஷ்ணதாச கவிராஜர் வேறு; இவர் வேறு) தம்முடைய துணைவரை விடுதலை செய்துவிடும்படி வேண்டிய ஸ்ரீசைதன்யரை அடிக்கவும் அந்தக் குறத்திகள் கூட்டம் முயன்றது. நல்லவேளையாக அப்படி ஒன்றும் நேரவில்லை. அசம்பாவிதமான நிகழ்ச்சிகளோ அடிதடியோ இல்லாமலேயே குறத்திக்கூட்டம் கிருஷ்ணதாசரை இழுத்துச் சென்றுவிட்டது.

மாலவாருக்கு மேற்கே உள்ள மத்ஸதீர்த்தம்—அநேகமாக இது இன்றைய மாஹியாக இருக்கலாம்—என்னும் தலத்துக்கும் ஸ்ரீசைதன்யர் சென்றார் என்றே தோன்றுகிறது. பின்னர் வட கிழக்குத் திசையில் திரும்பி, ஸ்ரீசங்கரர் ஸ்தாபித்த பிரசித்தி பெற்ற நான்கு மடங்களில் ஒன்றாக அமைந்துள்ள சிங்கேரியைத் தரிசிக்க ஸ்ரீசைதன்யர் எண்ணியிருந்தார். எனவே, தென் கன்னட ஜில்லாவின் தெற்குப்பகுதி வழியாகச் சென்றார். மைசூரில் உள்ள ஹரிஹரபுரம் என்னும் ஊருக்குச் சுமார் ஏழுமைல் தொலைவில் கதுரா ஜில்லாவில் துங்கபத்திரை நதிக்கரையில் சிங்கேரி இருக்கிறது. நேராக மேற்கு நோக்கிப் பிரயாணம் செய்து வந்த ஸ்ரீசைதன்யர், தென்கன்னடம் ஜில்லாவின் தலைநக ரான மங்களூரிலிருந்து 36 மைல் வடக்கே கடற்கரையோரமாக இருக்கும் உடுப்பியை அடைந்தார். இங்கே மத்வாசாரியாரால் ஸ்தாபிக்கப் பெற்ற புகழ்பெற்ற பாலகிருஷ்ண மூர்த்தியைத் தரிசித் தார். மத்வப் பிரிவைச் சேர்ந்தவர்களின் தலைமைப் பீடமான உடுபியில், அந்த மடத்தின் அதிபதியோடு ஸ்ரீசைதன்யர் வாதம் செய்தார். ஸ்ரீசைதன்யருடன் வாதிட்ட மடாதிபதியின் பெயரை கிருஷ்ணதாச கவிராஜர் தம்முடைய நூலில் குறிப்பிடவில்லை. எனினும், மத்வருக்குப் பின்னர் 13 வது பட்டத்துக்கு வந்து சகம் 1424-லிருந்து (கி. பி. 1511) சகம் 1471 வரையில் (கி. பி. 1471) பட்டத்திலிருந்த ஸோதி மடத்தின் தலைவரான ஸ்ரீவாதிராஜ தீர்த்தர் என்பவரே, ஸ்ரீசைதன்யருடன் தத்துவ விசாரணை செய்தவர் என்று எட்டு பிரதான மத்வ மடங்களில் ஒன்றான ஸோதி மடத்தின் குருபரம்பரை வரலாற்றிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது.

உடுபியை விட்டு நீங்கிய பின்னர் ஸ்ரீசைதன்யர் வடக்கு நோக் கிப் புறப்பட்டு, வட கன்னட ஜில்லாவை அடைந்தார். அங்கே பால்குவதீர்த்தம், திரித கூபம், சூர்பாரக தீர்த்தம், கோகரணம், த்வைபாயணி, அப்சர தீர்த்தம் முதலிய இடங்களுக்கு விஜயம் செய்தார். காம்ட் என்னும் இடத்துக்கு வடக்கே, கங்காவால், தந்தி என்னும் இரு நதிகளும் கடலில் சங்கமமாகும் இடத்துக்கு அருகில் உள்ள சிறு தீபகர்ப்பமே கோகர்ணம். இதே ஜில்லாவில் கோகர்

ணத்திலிருந்து கோல்ஹாபூர் செல்லும் பாதையில் காலி நதிக் கரையில் அமைந்துள்ள சுபாவே சூர்பாரகாவாக இருக்கலாம்.

பின்னர் ஸ்ரீசைதன்யர் கோல்ஹாபூர் வந்தடைந்தார். இந்த நகரைச் சுற்றி, வடக்கே சதாராவும் தெற்கிலும் கிழக்கிலும் பெல்காம் ஜில்லாவும் மேற்கே ரத்னகிரி குன்றும் எல்லைகளாக அமைந் துள்ளன. இங்கே ஸ்ரீசைதன்யர் லக்ஷ்மி, கணேசர், பார்வதி முதலிய கோயில்களுக்கு விஜயம் செய்தார். பிறகு வடகிழக்குத் திசைநோக்கிப் புறப்பட்டு, ஷோலாபூருக்கு 38 மைல் தொலைவில் உள்ள பண்டரிபுரத்தை ஸ்ரீசைதன்யர் அடைந்தார். இங்கே உள்ள புகழ்பெற்ற ஸ்ரீவிட்டலநாதர் கோயிலுக்குச் சென்றார். ஸ்ரீசைதன்ய ருக்கும் மத்வரின் தத்துவத்துக்கும் இடையே தம்முடைய ஆழ்ந்த பக்தி மிகுதியால் பிணைப்பு ஏற்படுத்திய மாதவபூரி என்னும் பெரியவரின் சிஷ்யரான ஸ்ரீரங்கபூரியை ஸ்ரீசைதன்யர் சந்தித்தார் ஸ்ரீசைதன்யர் பிறப்பதற்கு முன்போ அல்லது அவருடைய இள மைக் காலத்திலோ ரங்கபூரி நவத்வீபத்துக்குச் சென்று விருந்தின ராகத் தங்கியிருந்திருக்கிறார். தம்மை மிக்க அன்புடனும் தாராள மாகவும் உபசரித்த சசிதேவியே, ஸ்ரீசைதன்யரின் அன்னை என்பதை அறியாமலே, ஸ்ரீசசிதேவியை வெகுவாகப் பாராட்டினார். ஸ்ரீசசி தேவியின் புகழ் பெற்ற மைந்தன் இளமையிலேயே சங்கராரண்ய பூரி என்னும் பெயரில் சந்நியாசம் பெற்றுக் கடைசியில் பண்டரி புரத்தில் காலமானார் என்று ஸ்ரீரங்கபூரி, ஸ்ரீசைதன்யரிடம் சொல்லிக் கொண்டே வந்தார். அவர் சொல்வதற்குக் குறுக்கிட்டு எதுவும் சொல்லாமல் கடைசியில் ஸ்ரீசைதன்யர் தாம் யார் என்று அவரிடம் வெளியிட்டார்.

பின்னர் அவர் அங்கேயே நான்கு தினங்கள் தங்கியிருந்தார். ஸ்ரீவிட்டலநாதருக்கு வழிபாடுகள் செய்த ஓர் அந்தணர் ஸ்ரீசைதன்யரைக் கவனித்துக் கொண்டார். ஸ்ரீசைதன்யர் அவருக் குப் பக்தி மதத்தின் பெருமையையும் தத்துவத்தையும் உபதேசித் தார். ஸ்ரீசைதன்யரின் வாழ்வும் உபதேசங்களும் மராட்டிய பக்தி இலக்கியத்தில் பிரதிபலித்திருப்பதை, துகாராமின் பக்திப் பாடல் களிலிருந்து காணமுடிகிறது.

பண்டரிபுரத்தைத் விட்டு நீங்கியதும் ஸ்ரீசைதன்யர் கிருஷ்ணு-வேண்வா என்னும் நதிக்கரைகளில் இருந்த பல தலங்களுக்கும் கோயில்களுக்கும் விஜயம் செய்தார். வேண்வா என்பது பீமா நதியைக் குறிப்பிடுவதாகும். கிருஷ்ணு, பீமா என்னும் இரு நதிகளுக்கும் இடையே உள்ள பிரதேசத்தையே கிருஷ்ணதாச கவிராஜர் கிருஷ்ண வேண்வா என்று நூலில் குறிப்பிட்டிருக்கிறுர் எனத் தோன்றுகிறது. ஷோலாபூருக்கு மேற்கே கிருஷ்ணு-பீமா நதிகளுக்கிடையில் நீடால், வாலா, சுல்பா முதலிய பகுதிகளைக் கொண்ட பிரதேசத்தையே அவர் கருதுகிறுர். இந்தப் பிரதேசத்திலேதான் பில்வமங்கள டாகுரா இயற்றிய பிரசித்திபெற்ற கிருஷ்ணு கர்ணும்ருதம் என்னும் பக்தி ரசம் ததும்பும் நூல் ஸ்ரீசைதன்யருக்குக் கிடைத்தது. பிற்காலத்தில், கிருஷ்ணனைவிட்டுப் பிரிந்ததனுல் ஸ்ரீசைதன்யருக்கு ஏற்பட்ட விரகதாபத்தைக் கிருஷ்ண கர்ணும்ருத பாடல்களே பெரிதும் தணித்து அமைதியை நல்கின.

பின்னர், ஸ்ரீசைதன்யர் தபதி நதிக்கரையை வந்தடைந்தார். மேலும் வடக்கு நோக்கி, புரோச் பகுதியில் உள்ள மஹிஷ்மதி வரை அவர் சென்றுர். பிறகு நர்மதைக் கரையை அடைந்து, அதன் இருபுறமும் அமைந்துள்ள பல தலங்களுக்கு விஜயம் செய்தார். இந்த ஸ்தலங்களின் பெயர்களைத் தம்முடைய நூலில் கிருஷ்ணதாச கவிராஜர் குறிப்பிடவில்லை. நர்மதை நதிக்கரையிலிருந்து ஸ்ரீசைதன்யர் தென்கிழக்காகச் சென்று, தனுஷ்தீர்த்தம், நிர்விந்தா நதி, ரிஷ்யமுக பர்வதம் முதலிய இடங்களை அடைந்தார். கிருஷ்ணதாசர் குறிப்பிடும் தனுஷ் தீர்த்தம் இப்பொழுது டாமன் என்று வழங்கும் துறைமுகப் பட்டினமாகவே இருக்கலாம் என்று தோன்றுகிறது. தண்டகாரண்யத்துக்கு மேற்கே அமைந்திருக்கிறது டாமன்.

இந்தத் தலத்துக்குப் பிறகு ஸ்ரீசைதன்யர் தண்டகாரண்யத்துக்குச் சென்றுர். தண்டகாரண்யம் வெகு தூரத்துக்கு வெகு தூரம் அடர்ந்து பரவியிருந்த காடு. வடக்கே காந்தேஷ், தெற்கே ஆமது நகரம், மற்றும் நிஜாமின் பழைய ராஜ்யத்தின் மேற்குப் பகுதியைச் சார்ந்த கோதாவரி நதிக் கரைப் பகுதி, நாசிக், ஔரங்காபாத் ஆகிய இடங்களில் எல்லாம் பரவியிருந்தது தண்ட

காரண்யம். இந்தப் பரந்த கானகப் பிரதேசத்தில் ஸ்ரீசைதன்யர் பல இடங்களுக்குச் சென்ருர். அவற்றுள் பம்பா ஏரி, பஞ்சவடி, நாசிக்கில் உள்ள திரியம்பக சிவபெருமான் ஆலயம் ஆகியவை மிக முக்கியமானவை. நாசிக், வாஸர் என்னும் இரண்டு இடங்களுக்கும் வடக்கே உள்ள பிம்பிட் கிராமமே பம்பா ஏரியாக இருந்திருக்கும் என்று தோன்றுகிறது. நாஸிக் அருகே உள்ள கானகமே பஞ்சவடி என்று முடிவு செய்திருக்கிருர்கள்,

நாசிக்கைத் தரிசித்து முடிந்தவுடன் ஸ்ரீசைதன்யர் பிரம்மகிரியையும் கோதாவரி உற்பத்தியாகும் குசாவர்த்தம் என்னும் பர்வதத்தையும் அடைந்தார். நாசிக் தலத்துக்குத் தெற்கே உள்ள காசர் மலேயே குசாவர்த்தமாகும். குசாவர்த்தத்திலிருந்து புறப்பட்டு, கிழக்கு நோக்கி, கோதாவரி நதியின் போக்கை ஒட்டியே ஸ்ரீசைதன்யர் தம் பிரயாணத்தை மேற்கொண்டு வழியில் பல தலங்களேயும் கோயில்களேயும் தரிசித்துக்கொண்டு நிஜாம் ராஜ்யத்தின் வடபகுதி வழியாக வித்யாநகரை அடைந்தார்.

வித்யாநகரில் ஸ்ரீசைதன்ய மகாப்பிரபுவை ராமானந்தராயர் மிக்க மகிழ்ச்சியுடன் வரவேற்ருர். தம்முடைய நீண்ட தீர்த்த யாத்திரையைப் பற்றி முழு விவரத்தையும் ஸ்ரீசைதன்யர் அவரிடம் தெரிவித்தார். ’பிரம்ம சம்ஹிதை’ ‘கிருஷ்ண கர்ணும்ருதம்’ என்னும் இரண்டு அபூர்வ கிரந்தங்கள் பிரயாணத்தில் தமக்குக் கிடைத்தன என்பதையும் அவரிடம் ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார். அந்த இரண்டு ஆசார்யர்களும் சேர்ந்து சமய விஷயங்களே ஆராய்வதில் பல இரவுகள் தூங்காமல் கழித்தார்கள். இந்த நகரத்துக்கு ஸ்ரீசைதன்யர் திரும்ப வந்திருக்கும் தகவல் பல ஊர்களுக்கும் பரவியது. சுற்றுப்புறம் இருந்த ஊர்களிலிருந்த மக்கள் அனேவரும் குருநாதரைக் கண்டு சேவிப்பதற்காக வித்யாநகரத்தில் கூடிவிட்டார்கள்.

மந்திரிப் பதவியை விட்டு விலக எண்ணியிருப்பதைக் குறித்து மன்னரிடம் தெரிவித்துவிட்டதாகவும் பூரிக்குச் செல்வதற்கு மன்னரும் அநுமதி தந்துவிட்டார் என்றும் அதற்கான ஏற்பாடுகளேத் தாம் செய்துகொண் டிருப்பதாகவும் ராயர், ஸ்ரீசைதன்யரிடம் தெரிவித்தார். இதைக் கேட்ட ஸ்ரீசைதன்யர் தம்முடனேயே

ராயரைப் பூரிக்கு அழைத்துப் போகவேண்டும் என்ற எண்ணத் துடனேதான் வித்யாநகரத்துக்கு வந்ததாகத் தெரிவித்தார். தம்முடன் வந்துள்ள ஏராளமான யானை, குதிரை, காலாட் படைகள் எல்லாவற்றுக்கும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய பத்துப் பதினைந்து நாட்கள் பிடிக்கலாம். எனவே, தம்மால் வித்யா நகரை விட்டு, பூரிக்கு உடனடியாகப் புறப்பட இயலாது என்று ராயர், ஸ்ரீசைதன்யரிடம் தெரிவித்துக்கொண்டார்.

வித்யாநகரத்திலிருந்து ஸ்ரீசைதன்யர் புறப்பட்டார். எந்த எந்த ஊர்களின் வழியாக வித்யா நகரத்துக்கு வந்தாரோ, அந்த அந்த ஊர்களின் வழியாகவே தம் பிரயாணத்தை அவர் வகுத்துக்கொண்டார். ஓராண்டுக்கு முன் தாம் விஜயம் செய்த போது உபதேசம் பெற்ற மக்கள் எந்த அளவு அதைப் பின்பற்றி வருகிறார்கள் என்பதை அறிந்து கொள்வதற்காகவே ஸ்ரீசைதன்யர் இவ்வாறு ஏற்பாடு செய்தார். அவர் சென்ற இடங்களில் எல்லாம் மக்கள் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஆர்ப்பரித்து வரவேற்றார்கள். தம் முடைய உபதேசத்தை மக்கள் ஓரளவு ஏற்றுக்கொண்டுள்ளார்கள் என்பதையும் அறிந்து ஸ்ரீசைதன்யர் களிப்படைந்தார்.

ஸ்ரீசைதன்யரின் தென்னிந்தியச் சுற்றுப் பிரயாணத்துக்கு இரண்டு வருஷங்கள் பிடித்தன என்று கிருஷ்ணதாச கவிராஜர் தம் நூலில் குறிப்பிட்டிருக்கிறார். சந்நியாசம் மேற்கொண்ட மூன்று மாதங்களுக்குப் பின்னர், 1510-ஆம் ஆண்டு வைகாசி மாதம் (ஏப்ரல்) பூரியை விட்டு, தட்சிண யாத்திரையை ஸ்ரீசைதன்யர் தொடங்கினார் என்பதை ஏற்கனவே அறிவோம். அவர் ஆவணி (ஜூலை, ஆகஸ்டு) மாதத்துக்கு முன்பே ஸ்ரீரங்கத்தை அடைந்து விட்டார். அங்கே அவர் நான்கு மாதங்கள் வரை இருந்து, சாதுர் மாஸ்ய விரதத்தைத் தொடங்கி நிறைவேற்றினார். கார்த்திகை (அக்டோபர்–நவம்பர்) மாதத்தில் ஸ்ரீரங்கத்தை விட்டுப் புறப்பட்டு, ஸ்நான யாத்திரை விழாவுக்குள் ஸ்ரீசைதன்யர் பூரியை அடைந்தார். சாதாரணமாக ஸ்நான யாத்திரை விழா ஆடி மாதத்தில்தான் நடைபெறுவது வழக்கம். எனவே, வைகாசியிலிருந்து ஆடி வரையில் மூன்று மாதங்களும் ஆடியிலிருந்து மறு ஆடி வரையில் ஓராண்டுமாக ஸ்ரீசைதன்யர் தென்னிந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்த காலம்

ஒரு வருஷமும் மூன்று மாதங்களுமாகும். இரண்டாண்டுகள் தென் னிந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்தும் அதற்கடுத்த இரண் டாண்டுகளில் வங்காளத்துப் பக்தர்களுடன் ரத யாத்திரைக்குச் சென்று வருவதிலும் ஸ்ரீசைதன்யர் நான்கு ஆண்டுகள் பிரயாணத் தில் கழித்தார். ஐந்தாம் ஆண்டில், ரத யாத்திரை முடிந்ததும் பூரியைவிட்டு வங்காளப் பக்தர்கள் புறப்பட்டபோது, பிருந்தா வனத்துக்குச் செல்லவேண்டும் என்ற நோக்கத்துடன் ஸ்ரீசைதன்ய ரும் வங்காளத்துக்குப் புறப்பட்டார். ஸ்ரீசைதன்யர் சந்நியாசம் ஏற்றுக்கொண்ட மூன்ருவது ஆண்டில், வங்காளத்துப் பக்தர்கள் பூரிக்கு இரண்டாவது தடவையாக விஜயம் செய்தார்கள். தென் னிந்திய யாத்திரையை முடித்துவிட்டு, ஸ்ரீசைதன்யர் பூரிக்குத் திரும்பியிருந்தபோதுதான் அதாவது 1511-ஆம் ஆண்டு ஜூன் மாதம் வங்காளத்துப் பக்தர்கள் முதல் முறையாக ஜூலை மாதத்தில் பூரிக்கு வந்தார்கள். இந்திய ஆண்டு கணக்குப்படி பார்க்கும் பொழுது ஸ்ரீசைதன்யரின் தென்னிந்தியச் சுற்றுப்பிரயாணம் இரண் டாண்டுகள் ஆகின்றன.

1510-ஆம் வருடம் ஏப்ரல் மாதம் ஸ்ரீசைதன்யர் பூரியிலிருந்து புறப்பட்டார். அவருடைய தென்னிந்திய யாத்திரைக் காலம் 14 மாதங்களாகும். இரண்டாவது ஆண்டின் ஆருவது மாதத்தில் அவருடைய யாத்திரை முற்றுப்பெற்றது. இதைத்தான் கிருஷ்ண தாச கவிராஜர், ஸ்ரீசைதன்யரின் யாத்திரைக் காலம் இரண்டு வரு ஷங்கள் என்று குறிப்பிட்டிருக்கிருர்.

ஸ்ரீசைதன்யருடன் இருபத்து இரண்டு ஆண்டு பழகிய ரகு நாதரும், நெருங்கிய தொடர்பு கொண்ட ஸ்வரூப தாமோ தரரும் எழுதிய நாட் குறிப்புக்களிலிருந்தும் ஸ்ரீரங்கத்திலிருந்து வந்து பிருந்தாவனத்தில் தங்கிய கோபால பட்டரிடமிருந்து வாய்மொழியாகக் கேட்ட தகவல்களைக் கொண்டும் சிலசமயங்களில் ஸ்ரீசைதன்யரிடமிருந்தே நேரிடையாகக் கேட்டும் ஸ்ரீசைதன்யரின் தென் இந்தியத் தீர்த்த யாத்திரையைப் பற்றிக் கிருஷ்ணதாச கவி ராஜர் தம் நூலில் விரிவாக எழுதியிருக்கிருர். எனினும் பல கஷ் டங்கள் நிறைந்த பிரதேசங்களின் வழியாக, எண்ணற்ற கோயில் களுக்கு விஜயம் செய்தும் பல்வேறு மதப் பிரிவினர்களுடன் வாதம்

செய்தும் நெடுந் தூரம் பிரயாணம் செய்திருப்பதால், கிருஷ்ண தாச கவிராஜர் எழுதியுள்ள பிரயாண வரலாற்றை உன்னிப்பாகக் கவனித்த பிறகே ஏற்றுக்கொள்ள வேண்டும்.

ஸ்ரீசைதன்யர் தம் பிரயாணம் முழுவதிலும், தென் இந்தியாவின் வெவ்வேறு மதப் பிரிவினர்களின் கடுமையான கண்டனங்களுக்கும் பௌத்தர்களால் பல தொந்தரவுகளுக்கும் உள்ளாகி அவற்றை எதிர்த்துச் சமாளிக்க வேண்டி நேரிட்டது. நீண்ட காலம் தங்கி, தம் கொள்கையைத் தீவிரமாகப் பரப்பி வந்த வங்காளத்தில் ஸ்ரீசைதன்யரை எதிர்த்தவர்கள் நையாயிகர், சாக்தர்கள், சில சைவர்கள் ஆகியவர்களே. தென்னிந்தியாவில், அறிவின் திறமையாலும், ஞானத்தாலும் தம்மை எதிர்த்தவர்களை பல முறை வாயடைக்கச் செய்து, வென்றிருக்கிறார். அங்கே ராம பக்தர்கள், ஸ்ரீவைஷ்ணவர்கள், மாத்வர்கள் உட்பட்ட பல வைஷ்ணவர்களை ஸ்ரீசைதன்யர் சந்தித்தார். அவர்களுடைய பக்திக் கொள்கைகள் எதுவும் ஸ்ரீசைதன்யரின் கொள்கைகளுக்கு அப்பாற்பட்டவையாகவோ விலக்கு என்று சொல்லக்கூடியவையாகவோ இல்லை. ஸ்ரீசைதன்யருக்கு மத்வர்களை விட வைஷ்ணவர்களிடமே நெருங்கிய பற்றும் பரிவும் ஏற்பட்டன. ஸ்ரீசைதன்யரே மாதவ பூரியின் மூலமாக வைஷ்ணவப் பிரிவைச் சேர்ந்தவர். எல்லா மத நெறிகளிலும் உள்ள எந்தச் சிறந்த அம்சத்தையும் ஏற்றுக்கொள்ள அவருடைய ஆழ்ந்த வேதாந்த உள்ளம் என்றும் தயாராக இருந்தது. இந்த எல்லா நல்ல அம்சங்களையும் இணைத்துத் திருத்திய, குற்றமற்ற, பூரணமான பக்திக் கொள்கையையே ஸ்ரீசைதன்யர் உருவாக்கினார். சீதாராமன், லக்ஷ்மிநாராயணன் போன்ற தெய்வ ஆராதனையாளர்களை, தம்முடைய அதிசயக்கத்தக்க கிருஷ்ண பக்தியின் சக்தியால், ராதாகிருஷ்ணனையே வழிபடும் தம்முடைய வைஷ்ணவ கோட்பாட்டை ஏற்றுக்கொள்ளச் செய்தார்.

ஸ்ரீசைதன்யரின் அறிவைப்பற்றிக் கேள்விப்பட்டு, வேதாந்தங்களைக் கற்ற அறிஞர்கள் பலர் அவரை வாதத்துக்கு அழைத்தனர். ஆனால் கடைசியில் ஸ்ரீசைதன்யரின் ஞானத்தையும், மேதையையும் அவர்கள் ஒப்புக்கொண்டுவிட்டார்கள். அவருடைய தென் இந்திய விஜயம் பற்றிய வரலாற்றைப் படிக்கும்போது, அங்கே இருந்த

மதப் பிரிவினர் பலரையும் வாதுக்கு அழைக்கும் விஜயமாகவே தோன்றுகிறது. இந்த வாதப் போர் ஒவ்வொன்றிலும் ஸ்ரீசைதன்யர் வெற்றி பெற்றவராகவே விளங்குகிறார்.

ஸ்ரீசைதன்யரின் தென் இந்திய யாத்திரையைப் பற்றி முடிக்கும் தறுவாயில் மற்றொன்றையும் இங்கே நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். கோவிந்ததாசர் எழுதிய கர்சாவை அடிப்படையாகக் கொண்டு டாக்டர் டி. சி. சென் எழுதிய நூலில் சில இடங்களில் சிறு வேறுபாடுகள் இருக்கின்றன. தென் இந்தியச் சுற்றுப் பிரயாணம் சம்பந்தமாகச் சென் எழுதியவை வேறு மாதிரியாக இருக்கின்றன. ஸ்ரீசைதன்யரின் வரலாறுகளிலே மிகவும் ஆதார பூர்வமானதாகக் கருதப் பெறும் நூல் கிருஷ்ணதாசர் எழுதிய 'சைதன்ய சரிதம்'. ஸ்ரீசைதன்யர் ஆங்காங்கே தங்கிய இடங்கள் சம்பந்தமாகப் பூகோள ரீதியில் சில தவறுகள் இருக்கலாம். ஆனால் இந்த நூலில் உள்ள விவரங்கள் யாவும் நம்பத்தக்க சான்றுகளுடன் கூடியவை. தென் இந்தியாவில் ஸ்ரீசைதன்யர் யாத்திரை செய்த பிரதேசத்தைப் பொறுத்தவரையில் கிருஷ்ணதாசர் எழுதிய வரலாற்றுக்கும், கோவிந்ததாசர் எழுதிய சரித்திரத்துக்கும் அதிக வித்தியாசம் எதுவும் இல்லை. சென் எழுதிய 'ஸ்ரீசைதன்யரும் அவரது துணைவர்களும்' என்னும் நூலில் கோவிந்தர் கூறும் விவரங்களை டாக்டர் சென் இணைத்துள்ளார். அவற்றை இந்த நூலில் எடுத்துக்கொள்ளவில்லை. கவிகர்ணபுராவும், முராரி குப்தரும் கிருஷ்ணதாசர் அபிப்பிராயங்களை ஓரளவாவது ஒப்புக்கொள்கிறார். ஆனால் கோவிந்ததாசர் கருத்துக்களுடன் அவர்கள் உடன்படவில்லை.

'கர்நாடக ராஜ்யம், ஸ்ரீசைதன்யரின் வைணவக் கோட்பாட்டை ராஜாங்க மதமாகவே ஏற்றுக்கொண்டது. தென் இந்தியாவில் அங்கங்கே இருந்த ஜமீன்தார்களும் குறுநில மன்னர்களும் பிராந்தியத் தலைவர்களும் ஸ்ரீசைதன்யரை மிகுந்த மரியாதையுடனும் பக்தியுடனும் வரவேற்றார்கள்' என்றும் 'காலில் செருப்பு எதுவும் போட்டுக்கொள்ளாமல், எளிய உடையுடன் திருவாங்கூர் மகாராஜா அன்புடன் எதிர்கொண்டு ஸ்ரீசைதன்யரை வரவேற்று உபசரித்தார்' என்றும் கோவிந்தரின் கர்சா குறிப்பிடுகிறது.

9

# மீண்டும் பூரிக்கு விஜயம்

ஸ்ரீசைதன்யர் தென் இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது, ஓரிஸ்ஸா ராஜ்யத்தில் அவருடைய துணைவர்களான நித்தியானந்தர் முதலியவர்கள் வாசுதேவ சார்வபௌமரின் தலைமையில், ஓரிஸ்ஸா ராஜ்யத்தில் ஸ்ரீசைதன்யரின் கோட்பாடுகளைப் பரப்பி வந்தார்கள். பூரியில் உள்ள மக்களிடையே ஸ்ரீசைதன்யருக்கு ஏற்பட்ட செல்வாக்கும் அவருடைய உபதேசங்களைச் சார்வபௌமர் ஏற்றுக்கொண்டுவிட்டார் என்ற தகவலும் ஓரிஸ்ஸாவின் மன்னர் பிரதாபருத்திரன் காதுக்கு எட்டியது. மதத்தில் தீவிர நம்பிக்கை கொண்டிருந்த பிரதாபருத்திரன் ஸ்ரீசைதன்யரின் பெருமையைக் குறித்து அறிந்துகொள்ளும் ஆர்வ மிகுதியால் சார்வபௌமரைத் தம்முடைய ஆஸ்தான சபைக்கு வரவழைத்தான். மன்னனுக்கு ஸ்ரீசைதன்யரிடம் எல்லை கடந்த மதிப்பு ஏற்படக்கூடிய வகையில் சார்வபௌமர் எல்லா விஷயங்களையும் எடுத்துரைத்தார். ஸ்ரீசைதன்யரின் மேலான தெய்விக தன்மையை, பிரதாபருத்திரனுக்குச் சார்வபௌமர் உணர்த்தினர். இவற்றை எல்லாம் கேட்ட மன்னனும், "பட்டரே, எனக்குத் தெரிந்த அறிஞர்களில் நீங்கள் மிகவும் உயர்ந்தவர். எனவே, நீங்கள் இவ்வளவுதூரம் வற்புறுத்திச் சொல்வதால் ஸ்ரீசைதன்யரே பகவான் கிருஷ்ணன் என்று திடமாக நம்புகிறேன்" என்று சார்வபௌமரிடம் தெரிவித்தார்.

அதே சமயத்தில் பூரி ஜகந்நாதர் ஆலயத்துக்கு அருகில், தனிமையானதோர் இல்லம் ஏற்பாடு செய்து தருமாறு சார்வபௌமர் மன்னரிடம் வேண்டிக் கொண்டார். ஏற்கெனவே, ஸ்ரீசைதன்யரின் உபதேசங்களால் ஆட்கொள்ளப்பட்டவரும் தனது குருவுமாகிய காசி மிஸ்ரரின் இல்லத்தையே மன்னன் ஏற்பாடு செய்தான்.

தென் இந்தியப் பிரயாணத்தைத் தொடங்குவதற்கு முன்பு, தம்முடைய சிஷ்யர்களிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்ட அதே

ஆலாலநாத் என்னும் இடத்துக்கு ஸ்ரீசைதன்யர் வந்து சேர்ந்தார் உடனே நமது துணைவரான கிருஷ்ணதாசரை அனுப்பித் தம் முடைய வருகையை அனைவருக்கும் தெரிவிக்கச் செய்தார். எல் லோருக்கும் மகிழ்ச்சி தரும் இந்தச் செய்தியைக் கேள்வியுற்றதும் பூரியில் இருந்த நித்தியானந்தர், ஜகதானந்தர், தாமோதரர், முகுந்தர், கோபிநாதர் இன்னும் மற்ற அன்பர்கள் அனைவரும் தங்கள் உள்ளம் கொள்ளைகொண்ட தெய்விகப் புருஷரை வரவேற் பதற்காக ஆலாலநாத் என்னுமிடத்திற்கு வந்து குழுமினர். வாசு தேவ சார்வபௌமர் கடல் வழியாக வந்து ஸ்ரீசைதன்யரை சந் தித்தார். எல்லோரும் சூழ, ஸ்ரீசைதன்யரைச் சகல மரியாதை களுடன் ஜகந்நாதர் கோயிலுக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே அர்ச்சகர்களும் பண்டாக்களும் அவருக்கு மாலையிட்டு கோயில் மரியாதைகள் யாவும் செய்து கௌரவித்தார்கள். பின்னர், சார்வபௌமர் ஸ்ரீசைதன்யரைத் தம்முடைய இல்லத்துக்கு அழைத் துச் சென்று அன்புடன் உபசாரம் செய்தார். அங்கே அன்றிரவு முழுவதும் தம்முடைய தென்னிந்திய யாத்திரையைக் குறித்து, சார்வபௌமர், நித்தியாநந்தர், மற்றும் பல அன்பர்களிடம் ஸ்ரீசைதன்யர் எடுத்துரைத்தார்.

அங்கே ஓர் இரவு தங்கிவிட்டு பின்னர், ஸ்ரீசைதன்யர் காசி மிஸ்ரரின் இல்லத்தையே தம்முடைய உறைவிடமாக வைத்துக் கொண்டார். இயற்கை வனப்புக்கள் சூழ்ந்த தனிமையான தோட் டத்தில் அமைந்த அந்த இல்லம் ஸ்ரீசைதன்யருக்கு அளவுகடந்த மகிழ்ச்சியைத் தந்தது. ஆயுள் முழுவதும் அவர் அங்கேயே வசித்து வந்தார். தம்முடைய உடமைகள் யாவும் ஸ்ரீசைதன்ய ருக்கே அர்ப்பணம் செய்துவிட்ட காசி மிஸ்ரர், ஸ்ரீசைதன்யரின் நான்கு கரங்களுடன் கூடிய அவதாரக் காட்சியைத் தரிசித்த பின் னர், ஸ்ரீசைதன்யருக்கு வாழ்நாள் முழுவதும் பணிவிடைகள் செய்வ திலேயே கழித்தார்.

இரண்டாவது நாள், வைஷ்ணவ தர்மத்துக்குத் தம்மால் மாற் றப்பட்ட பல அன்பர்களை ஸ்ரீசைதன்யரின் முன்னிலையில் சார்வ பௌமர் அழைத்துச் சென்றார். "தங்களைக் கண்டு தரிசிக்க வேண்டும் என்று இவர்கள் மிகவும் ஆவலாக இருக்கிறார்கள்.

மழை நீரை அருந்துவதற்காக ஏங்கிக் காத்துக்கொண் டிருக்கும் தாகம் மிக்க சாதகப் பட்சிகளுடைய நிலையில் இவர்கள் இருக் கிறார்கள். கருணைகூர்ந்து இவர்களை ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று சார்வபௌமர், ஸ்ரீசைதன்யரிடம் வேண்டிக் கொண் டார். அன்று ஸ்ரீசைதன்யரின் அருட் பார்வையைப் பெற்றுக் கொண்டவர்களில் சிலர்: ஜனார்த்தனர், கிருஷ்ணதாசர், (ஜகந் நாதர் ஆலயத்தில் சாமரம் ஏந்துபவர்) சிகிமாதி, (கணக்கர்) பிரத்யும்ன மிஸ்ரர், (ஜகந்நாதரின் மகாசோயர்) முராரி மாஸ்தி, சந்திரனேஷ்ரர், சிம்ஹேஷ்வரர், முராரி (வங்காளத்தைச் சேர்ந்த முராரி அல்ல இவர்) விஷ்ணுதாசர், பரமானந்த மகா பாத்ரர், பவானந்தராயரும் அவருடைய நான்கு குமாரர்களும், ராமானந்தராயரின் தகப்பனார் முதலியோர். பவானந்தராயர், பக்தி மிகுதியால் தம்முடைய குமாரர்களில் ஒருவருக்குப் பரணிநாதர் என்று நாமமிட்டு, ஸ்ரீசைதன்யருக்குப் பணிவிடைகள் செய்வதற் காகவே அவரை அர்ப்பணித்தார்.

தென்னிந்திய யாத்திரையின்போது பணிவிடைக்காகத் தம் முடன் வந்திருந்த கால கிருஷ்ணதாசர், மாலவார் பிரதேசத் தில் பட்டதாரிப் பெண்களிடம் சிக்கிக்கொண்டதால் தார்மிக ஒழுங்கிலிருந்து பிறழ்ந்தவர் என்று கருதி, தமக்குத் தொடர்ந்து பணிவிடை செய்வதிலிருந்து அவரை ஸ்ரீசைதன்யர் விலக்கிவிட் டார். ஸ்ரீசைதன்யர் பூரிக்குச் சௌக்கியமாகத் திரும்பிவந்த தக வலை வங்காளத்துக்குச் சென்று தெரிவிக்கும்படி கிருஷ்ணதாசரை நித்தியானந்தர் அனுப்பி வைத்தார். ஸ்ரீசைதன்யர் பூரிக்கு மீண்டும் திரும்பி வந்துவிட்டார் என்ற செய்தி நவத்வீபத்துக்கு எட்டியது. அப்பொழுது ஸ்ரீசைதன்யரின் அன்னையாரின் இல்லத்தில் பரமா னந்த பூரி என்பவர் விருந்தினராகத் தங்கியிருந்தார். இவரைத் தான் ஸ்ரீசைதன்யர் ரிசவபர்வதத்தில் சந்தித்து, பூரியில் தம்முட னேயே வசிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண் டிருந்தார். அத் வைதருடைய சிஷ்யரான கமலகாந்தர், விசுவாசருடன், வங்காளத் துப் பக்தர்கள் ஸ்ரீசைதன்யரைத் தரிசிக்கவேண்டும் என்ற எண் ணத்துடன் பூரிக்கு விரைந்தார். ஸ்ரீசைதன்யரின் தோட்ட இல் லத்திலேயே அவருக்கு இடவசதி அளிக்கப்பெற்றதுடன், தக்க

பணியாள் ஒருவனும் உதவிக்கு அமர்த்தப்பட்டான். ஸ்ரீசைதன்ய ரின் மறு அவதாரம் என்று எல்லோராலும் அழைக்கப்பெறும் ஸ்வ ரூப தாமோதரரும் அங்கே வந்து ஸ்ரீசைதன்யருடன் சேர்ந்து கொண்டார்.

ஸ்ரீசைதன்யரின் வைஷ்ணவக் கோட்பாடுகளை வெகு தீவிர மாகப் பின்பற்றும் ஸ்வரூப தாமோதரர், புருஷோத்தம ஆசாரியர் என்னும் பெயரில் நவத்வீபத்தில் குருநாதருடன் இருந்து வந்தார். நபத்வீபத்தை விட்டு ஸ்ரீசைதன்யர் வெளிவந்த பின்னர், நாதன் இல்லாத இடத்தில் நமக்கென்ன வேலை என்று உலகைத் துறந்து காசியில் தாமோதர ஸ்வரூப் என்னும் பெயருடன் சந்நியாசி ஆனர். பூரியில் தம்முடைய இல்லத்தில், தம்முடைய அறைக்குச் சமீபத்தில் ஓர் அறையைத் தாமோதர ஸ்வரூப்புக்காக ஒதுக்கிவைக்க ஏற்பாடு செய்தார் ஸ்ரீசைதன்யர். அவருக்கு உதவி புரியப் பணியாளும் அமர்த்தப்பட்டான். ஸ்ரீசைதன்யரின் வாழ்வுடனும் உபதேசத்துடனும், பிரிக்கவே முடியாதவர்களாய் ஒன்றிப்போன தாமோதர ஸ்வரூபும் ராமானந்தராயரும், குரு நாதரின் உபதேசங்களை அப்படியே ஏற்றுக்கொண்டார்கள். ஈசுவர பூரிக்குப் பணிவிடை செய்துகொண் டிருந்த கோவிந்தர், தம்முடைய குருவின் அந்திம காலத்துக் கட்டளைப்படி ஸ்ரீசைதன்யருக்குச் சிசுருஷை செய்வதற்காக வந்து சேர்ந்தார். தம்முடைய குரு ஈசுவர பூரிக்குப் பணிவிடை செய்து வந்த வர் என்ற முறையில் அதிக மதிப்பு வைத்திருந்த கோவிந்தரை, பணிவிடை செய்பவராக எடுத்துக்கொள்ள முதலில் ஸ்ரீசைதன்யர் தயங்கினர். பின்னர் குருவின் கட்டளை என்பதை உணர்ந்து அவ்விதமே செய்தார். அன்றிலிருந்து இடைவிடாமல் முழு மனத் துடன் கோவிந்தர் ஸ்ரீசைதன்யருக்கு தொண்டாற்றி வரலானர். அன்பு கலந்த பணிவிடை, தூய்மையான உள்ளம், சீரிய நேர்மை ஆகிய இயல்புகள் சேர்ந்து அவரை லட்சிய வைணவராக்கிவிட்டன. ஸ்ரீசைதன்யரின் நினைவு வரும்போதெல்லாம் என்றென்றும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டிய பண்புள்ளவர் அவர். கோவிந்தருக்கு ரமாய், நந்தாய் என்னும் இருவரும் துணைவர் களாக இருந்தார்கள்.

ஸ்ரீசைதன்யரின் சிஷ்யர்களில் கோவிந்தருக்கு அடுத்த படியாக ராமபத்ர ஆசார்யா, பகவான் ஆசார்யா, காசீசுவரர் முதலியவர்களைச் சொல்லலாம். ஸ்ரீசைதன்யருடன் வாழ்ந்து அவருக்குச் சேவை செய்வதற்காகவே, 24 பர்கானுக்களைச் சேர்ந்த ஹாலிசஹாரில் இருந்த சதானந்த ராயர் என்னும் பெரிய தனவந்தர் பூரிக்கு வந்து தங்கினர். அவருடைய புதல்வரே பகவான் ஆசார்யர். மாயாவாதியான பிரம்மானந்த பாரதியின் மனத்தை மாற்றி ஸ்ரீசைதன்யர் அவரையும் தம் துணைவராக்கிக் கொண்டார். 1511-ஆம் வருஷம் ஜூன் மாதம் ஜகந்நாதரின் ஸ்நான யாத்திரைக்கு விஜயம் செய்த பிறகு ஸ்ரீசைதன்யர் ஆலாலநாத்துக்குத் திரும்பி வந்தார். மீண்டும் ரத யாத்திரை வருவதற்கு பதினைந்து நாட்கள் செல்லக்கூடும் ஆகையால் அந்தப் பதினைந்து நாட்களையும் பிரார்த்தனையிலும் தியானத்திலும் ஸ்ரீசைதன்யர் கழித்தார். இந்தக் காலத்தில் ஆலயத்தை விட்டு ஸ்ரீஜகந்நாதர் வெளிவருவதில்லை என்பதையும் இங்கே குறிப்பிட வேண்டும்.

பிரதாபருத்திரன்:—சக்கரவர்த்தி பிரதாபருத்திரன், ஸ்ரீசைதன்யரின் கோட்பாட்டைத் தழுவியதும் வங்காளத்திலிருந்து 100 பக்தர்கள் பூரிக்கு விஜயம் செய்ததும் பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகளில் முக்கியமானவையாகும். பூரியில் ஸ்ரீசைதன்யர் தங்கியிருந்த காலத்தில் விஜய நகர மன்னருடன் போரிட, பிரதாபருத்திரன் விஜயநகரம் சென்றிருந்தான். எனவே, பிரதாபருத்திரன் ஸ்ரீசைதன்யரைக் கண்டு பேச இயலாமற் போய்விட்டது என்று பிருந்தாவனதாசர் தம் நூலில் குறிப்பிட்டிருக்கிறர். மூன்று வருஷங்கள் கழித்து, ஸ்ரீசைதன்யர் வங்காளத்திலிருந்து திரும்பி வந்த பின்னர் (கி. பி. 1514-1515) பிரதாபருத்திரனைச் சந்தித்துத் தம்முடைய கோட்பாட்டை ஏற்றுக் கொள்ளும்படி செய்தார் என்றும் பிருந்தாவனதாசர் எழுதியிருக்கிறர். கிருஷ்ணதாச கவிராஜரோ இந்தச் சம்பவம் முன்பே நடந்தது என்கிறர். வங்காளத்துக்கு ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்யும்போது பிரதாபருத்திரன் மிகவும் விரிவான ஏற்பாடுகளைச் செய்திருந்தான் என்று படம் பிடித்தாற்போன்று கிருஷ்ணதாச கவிராஜர் தம்முடைய 'சைதன்ய சரிதம்' என்னும் நூலில் வர்ணித்திருக்கிறர். கிருஷ்ணதாசர்

சொல்லும் கருத்தை ஏற்றுக் கொள்ளாவிட்டால் சைதன்ய சரிதத்தில் பெரும் பகுதியை அறிந்துகொள்ள முடியாமல் போய் விடும். கிருஷ்ணதாசரின் அபிப்பிராயத்தையே, 'சைதன்ய சரித மகாகாவியம்' என்னும் நூலில் கவிகர்ணபுராவும் ஒப்புக் கொண்டிருக்கிறார். விஜய நகரத்தின் மேல் பிரதாபருத்திரன் படையெடுத்தான் என்று பிருந்தாவன தாசர் குறிப்பிடும் வரலாறு சம்பந்தமாக ஓரிஸ்ஸாவின் அரசியல் சரித்திரம் குறிப்பிடுவதைப் படிக்கும்போது கிருஷ்ணதாசரின் கருத்துத் தான் மேலும் பலப்படுகிறது.

முன்பு குறிப்பிட்டதுபோல, 1511-ஆம் வருஷம் ஜூன் மாதம் ஸ்ரீசைதன்யர் பூரிக்கு வந்து சேர்ந்தார். விஜய நகரத்தில் ஆட்சி செலுத்தி வந்த துளுவ வம்சத்து மன்னர் கிருஷ்ணதேவ ராயர் ஓரிஸ்ஸாவின் மேல் 1512-ஆம் ஆண்டில் படையெடுக்க ஆரம்பித்தார். நடந்த சண்டையில் 1513-ஆம் ஆண்டில் உதயகிரி வீழ்ந்தது. 1515-ஆம் வருஷம் கிருஷ்ணு நதியின் முகத்துவாரத்துக்கு அருகில் கிருஷ்ண தேவராயரை, பிரதாபருத்திரன் சந்தித்தான். 1515-ஆம் ஆண்டு ஜூன் 23-ஆம் தேதி தோல்வி யடைந்தான். இந்த யுத்தம் பல வருஷங்களுக்குப் பிறகே ஓய்ந்தது. (ஆர். டி. பானர்ஜி எழுதிய ஓரிஸ்ஸாவின் சரித்திரம், தொகுதி 1; பக்கம் 229). பிரதாபருத்திரன் மேல் கிருஷ்ண தேவராயர், படையெடுத்ததற்குப் பல வருஷங்கள் கழிந்த பிறகு தான், பிருந்தாவனதாசர் குறிப்பிடும் பிரதாபருத்திரனின் விஜயநகரப் படையெடுப்பு நிகழ்ந்தது. எனவே, 1511-ஆம் வருஷம் தலைநகரத்தில் மன்னன் அமைதியாக இருந்திருக்கிறான். அப்போது ஸ்ரீசைதன்யர் அவனைச் சந்தித்துத் தம் கோட்பாடுகளை ஏற்றுக் கொள்ளச் செய்திருக்கிறார் என்று சைதன்ய சரிதத்தில் கிருஷ்ண தாசர் குறிப்பிடுவது பொருத்தமாகவே இருக்கிறது.

கி.பி. 1514-1515-ஆம் ஆண்டில் வங்கத்திலிருந்து ஸ்ரீசைதன்யர் திரும்பி வந்த பின்னர் பிரதாபருத்திரனைச் சந்தித்தார் என்னும் பிருந்தாவனதாசரின் கருத்தை விட கிருஷ்ணதாசரின் அபிப்பிராயமே சரியானது என்பதற்கு வேறு ஒரு சான்றும் கிடைத்திருக்கிறது. பிரதாபருத்திரன் பதவிக்கு வந்த 17-வது ஆண்டில் ஓரிஸ்ஸாவின் கஜபதி மன்னர்களின் குலகுருவும் ஆஸ்தான கவியு

மான ஜீவ தேவ ஆசார்யா என்பவர் எழுதிய 'பக்தி பாகவத மகா காவியம்' என்னும் நூலின் இறுதிப் பகுதியில் உள்ள பிராசஸ்தியில், மன்னன் பிரதாபருத்திரன் ஸ்ரீசைதன்ய கோட்பாட்டை ஏற்றுக் கொண்டது பற்றி ஒரு குறிப்பு உள்ளது. 'நீண்ட கரங்களுடைய மன்னன் பிரதாபருத்திரன் அத்வைதத் தத்துவத்தால் ஆத்மாவைத் தூய்மையாக்கிக் கொண்டான். ஆனால் அவன், கிருஷ்ணனின் அவதார (ஸ்ரீசைதன்யர்)த்தினுல் விசிஷ்டாத்வைதக் கொள்கையைப் பரப்பினான்.' (சம்ஸ்கிருத சுவடிகளைப் பற்றிய ஆராய்ச்சி அறிக்கை, 1901, 1902, 1905, 1906-பக்கம் 15-16) பிரதாபருத்திரன் கி. பி. 1497-ஆம் ஆண்டில் பட்டத்துக்கு வந்தான் என்பது நாம் எல்லோரும் அறிந்ததே (பானர்ஜி எழுதிய ஓரிஸ்ஸாவின் சரித்திரம்). எனவே, பட்டத்துக்கு வந்த 17-ஆம் ஆண்டு என்றால் அந்த நூல் அநேகமாக கி. பி. 1514-இல் எழுதப் பெற்றதாக இருக்க வேண்டும். இதை அடிப்படையாகக் கொண்டு பார்த்தால் இதற்குச் சில வருஷங்களுக்கு முன்பே, பிரதாபருத்திரன் ஸ்ரீசைதன்யரின் கொள்கைகளை ஏற்றுக்கொண் டிருந்திருக்க வேண்டும். பிரதாபருத்திரன், ஸ்ரீசைதன்யரின் வைஷ்ணவ கோட்பாடுகளை ஏற்றுக் கொண்டது மட்டுமன்றி அதில் தீவிர நம்பிக்கை கொண்டு பரப்பவும் முயற்சி செய்தான் என்று அந்த நூல் தெரிவிக்கிறது. எனவே, கி. பி. 1511-இல் ரத யாத்திரை தினத்தன்று ஸ்ரீசைதன்யர் பிரதாபருத்திரனைச் சந்தித்து வைஷ்ணவக் கோட்பாடுகளை ஏற்றுக் கொள்ளும்படி செய்தார் என்று கிருஷ்ணதாசர் எழுதுவது சரி என்பது புலனாகிறது. சார்வபௌமர், ராமானந்த ராயர் இருவருடைய செல்வாக்காலும் முயற்சியாலுமே தான் பிரதாபருத்திரன், ஸ்ரீசைதன்யரிடம் பக்தி மிகுந்த சிஷ்யரானான்.

சாதாரணமாகச் சந்நியாசி அரசனைப் பார்க்கக் கூடாது என்ற அடிப்படையிலே மன்னனைப் பார்ப்பது குறித்த யோசனையைப் பல தடவை ஸ்ரீசைதன்யர் நிராகரித்தார். தம்முடைய லட்சியத்தின் உயர்வை நிலைநாட்ட வேண்டும்; ஆத்மிகத் துறையின் சம்பிரதாயங்களைக் காப்பாற்ற வேண்டும்; இம்மை விஷயங்களில் அக்கறை காரணமாகவே மன்னனுடன் ஸ்ரீசைதன்யர் தொடர்பு வைத்துக் கொண்டார் என்று கருத்து மக்களிடையே பரவிவிடக் கூடாது

இத்தகைய காரணங்களுக்காகவே ஸ்ரீசைதன்யர் மன்னனுக்கு பேட்டி அளிக்க அடிக்கடி மறுத்து வந்தார்.

ஸ்ரீசைதன்யரின் பேட்டிக்கான முன்னேற்பாடுகள் படிப்படியாக நடந்தன. தென் இந்திய யாத்திரையை ஸ்ரீசைதன்யர் முடித்துவிட்டுத் திரும்பிய உடனேயே அவரைச் சந்திக்க ஏற்பாடு செய்யும்படி பிரதாபருத்திரன் சார்வபௌமருக்குக் கட்டாக்கிலிருந்து கடிதம் எழுதினுன். ஆனுல் கிடைத்த பதில் மன்னனுக்கு ஏமாற்றத்தையே அளித்தது. ஸ்ரீசைதன்யரைத் தான் சந்திக்க வேண்டும் என்றும் தன் விஷயத்தைப் பக்தர்கள் முன் வைத்து அவர்களுடைய துணையால், குருநாதரின் ஆசியைப் பெற வேண்டும் என்றும் பிரதாபருத்திரன் வேண்டிக் கொண்டான். கடைசியில், ஸ்ரீசைதன்யரைத் தரிசிக்க முடியாதோ என்ற நம்பிக்கை இழந்த அதீத நிலையில் தன்னுடைய அரச பதவியையும் வாழ்க்கையுமே துறந்துவிடுவதாக மிகவும் உருக்கமான கடிதம் ஒன்றை மன்னன் எழுதினுன். ஆனுல் மன்னனுக்குப் பேட்டி தந்தால் அந்தச் செயலை மக்கள் வெறுத்து ஒதுக்குவார்கள் என்று, கொஞ்சம்கூட மனம் இளகாமல் ஸ்ரீசைதன்யர் பிடிவாதமாக இருந்தார். மன்னனின் மனத்தைத் தேற்றுவதற்கு நித்தியானந்தர் ஒரு வழி செய்தார். ஸ்ரீசைதன்யரின் அநுமதி பெற்று, அவருடைய மேலாடையின் சிறு பகுதி ஒன்றை எடுத்து மன்னனுக்கு அனுப்பி வைத்தார். அந்தச் சிறு துண்டை, ஸ்ரீசைதன்யரின் வடிவமாகவே எண்ணி பயபக்தியுடன் வழிபடலானுன் மன்னன்.

இதற்கிடையே விஜயநகரத்திலிருந்து கட்டாக்குக்கு ராமாநந்த ராயர் வந்து மன்னனிடம் ராஜிநாமாவைச் சமர்ப்பித்து, உலக பந்தங்கள் எல்லாவற்றிலிருந்தும் விடுபட்டு ஸ்ரீசைதன்யரின் பாதாரவிந்தத்துக்கே பணிவிடை செய்து எஞ்சிய காலத்தைக் கழிக்கப் போவதாகவும் தெரிவித்தார்.

ஸ்ரீசைதன்யரிடம், ராமானந்தருக்கு இருந்த அளவற்ற பக்தியைக் கண்டு மன்னன் அவர் கேட்டுக் கொண்டபடியே அநுமதி தந்தான். மற்றும், "இதுவரை நீங்கள் பெற்றுவந்த சம்பளம் இனியும் உங்களைத் தேடிவந்து சேரும். எந்த விதமான உலகக் கவலையும் இல்லாமல் ஸ்ரீசைதன்யருக்குப் பணிவிடைகள் செய்து

வாருங்கள்" என்று மன்னன் தெரிவித்தான். மேலும், "நான் மிகவும் இழிந்தவன்; அவரை ஒருமுறை தரிசிக்கும் பாக்கியம் கூடச் செய்யாதவன்" என்று வருத்த மிகுதியால் மன்னன் தெரிவித்தான்.

பின்னர் ராமானந்த ராயரும் மன்னனும் பூரிக்கு வந்து சேர்ந்தனர். உடனே ஸ்ரீசைதன்யரை ராமானந்தராயர் தரிசித்தார். அப்பொழுது அவர், மன்னருக்கு இருக்கும் அளவுகடந்த அன்பையும் பக்தியையும் பற்றி ஸ்ரீசைதன்யரிடம் எடுத்துரைத்தார்.

பிரதாபருத்திரன் பூரிக்கு வந்து சேர்ந்ததுமே சார்வபௌமரை அழைத்து, ஸ்ரீசைதன்யரின் அருள் தமக்குக் கிடைக்க அவருடைய முயற்சி வெற்றிபெற்றதா என்று விசாரிந்தான். ஆனால் முயற்சி தோல்வியே என்று அறிந்ததும் மன்னன் ஆழ்ந்த துயரத்தை அடைந்தான். இதைக் கண்டு ராமானந்தராயரே ஸ்ரீசைதன்யரின் மனத்தை மாற்றுவதில் முனைந்தார். தமக்குக் கிடைத்த ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நீண்ட நாளாகக் காத்துக் கொண்டிருக்கும் பிரதாபருத்திரனுக்கு அவரைச் சந்தித்துப் பேச ஒரு சந்தர்ப்பம் தருமாறு ராமானந்த ராயர் தெரிவித்து வந்தார்.

"இத்தகைய பேட்டிகளை அளிப்பதால் இம்மையிலும் மறுமையிலும் துறவிகளுக்கு அழிவு வந்து விடும். எல்லோரும் பரிகாசம் செய்யக்கூடிய நிலை எனக்கு ஏற்படும். வெண்மையான துணியில் ஒரு துளி மை பட்டால் அதை எவ்வாறு மறைக்க முடியாதோ, அவ்வாறே சந்நியாசிக்கு ஏற்படும் சிறுகளங்கமும் எல்லோராலும் நிச்சயம் கண்டிக்கப்படும்" என்று ஸ்ரீசைதன்யர் சொல்லிப் பிடிவாதமாக பிரதாபருத்திரனின் கோரிக்கையை மறுத்தே வந்தார். பிரதாபருத்திரனுக்குப் பேட்டி தரவேண்டும் என்று நீங்கள் அவசியம் விரும்பினால் மன்னனின் பிரதிநிதியாக இளவரசனை அழைத்து வாருங்கள்" என்று ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார்.

அதற்குப் பிறகு ராமானந்தராயர் பிரதாபருத்திரனின் புதல்வனை ஸ்ரீசைதன்யரிடம் அழைத்துச் சென்றார். அவனைக் கண்டதும் ஸ்ரீசைதன்யர் அப்படியே அரவணைத்துக்கொண்டார். பின்னர் பகவானிடம் பக்தி ஏற்படும் வகையில் அவனுக்கு உபதேசம் செய்தார். தினந்தோறும் தம்மை வந்து பார்த்துவிட்டுச் செல்

லும்படி இளவரசனுக்கு ஸ்ரீசைதன்யர் உத்திரவிட்டார். ஸ்ரீசைதன்யரின் சிறந்த பக்தர்களில் இளவரசனும் ஒருவனுனன்.

மனிதர்களின் இயற்கையான சுபாவங்களையும் நடவடிக்கைகளையும் ஸ்ரீசைதன்யர் நன்கு அறிந்திருந்தார் என்பது அவர் மன்னரிடம் நடந்துகொண்ட விதத்திலிருந்து நன்கு புலனுகிறது. அரசனைக் காண்பதில் அவர் அதிக ஆவலைக் காட்டவில்லை. மன்னனின் முடிவைப்பற்றிய நேர்மையையும் உறுதியையும் மேலும் மேலும் திடப்படுத்திக்கொள்ள ஸ்ரீசைதன்யர் விரும்பினுர். உலகின் இன்ப துன்பங்களில் சாதாரணமாக ஈடுபட்டுள்ளவர், ஏதாவது ஓர் லட்சியத்தை அவசரத்தில் ஏற்றுக்கொண்டால், அதனை வெகு விரைவில் கைவிட்டுவிடுவார்கள் என்பது சர்வ சாதாரணமாகச் சொல்லப்படுவது. இந்த மாதிரி அவசரத்தில் மன்னனும் தம்முடைய கோட்பாடுகளை ஏற்றுக்கொண்டு பின்னர் அவற்றைக் கைவிட நேர்ந்தால், அந்தச் செயல் ஓரிஸ்ஸாவில் தம்முடைய லட்சியம் வெற்றி பெறுவதையே பெரிதும் பாதிக்கும் என்பதையும் ஸ்ரீசைதன்யர் நன்கு உணர்ந்திருந்தார்.

உண்மையிலேயே, பிரதாபருத்திரனும் ஸ்ரீசைதன்யர் கடவுள் தானு என்று சந்தேகப்பட்டுக்கொண் டிருந்தான். "தம்மையே கடவுள் என்று உறுதியாகத் தெரிவிக்கும் ஸ்ரீசைதன்யர் உண்மையாகவே கடவுளாக இருந்தால், உலகம்-முக்கியமாகப் படித்த அறிவாளிகள்-ஏன் அவரைத் தெய்வமாக உடனே ஏற்றுக்கொள்ளவில்லை. இது எனக்குப் புரியாமல் இருக்கிறது" என்று சார்வபௌமரை மன்னன் பிரதாபருத்திரன் ஐயத்துடன் வினவினுன். அவனுக்குச் சரியான பதில் சொல்வதற்குச் சார்வபௌமரும் தயாராகத்தான் இருந்தார். கடைசியில், ஸ்ரீசைதன்யரின் தெய்விகத் தன்மையை அவனுக்கு உணர்த்துவதில் சார்வபௌமர் வெற்றி பெற்ருர்.

எனினும், ஸ்ரீசைதன்யர் பக்திமிகுதியால் கண்ணீர்விட்டு அழுவது, வேர்த்துக்கொட்டி நிற்பது, தரையில் விழுந்து புழுதியில் புரள்வது முதலிய செயல்களில் மெய்மறந்திருப்பதை மன்னனுல் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஓர் அற்புத நிகழ்ச்சியால் இந்தச் சிக்கலும் நீங்கிற்று. பகவான் ஜகந்நாதருடன்

ஸ்ரீசைதன்யர் சிம்மாசனத்தில் அமர்ந்திருப்பதாக மன்னன் ஒரு கனவு கண்டான். அப்பொழுது பிரதாபருத்திரன் பகவானைத் தொட்டு நமஸ்கரிக்க அருகில் சென்றான். 'ஸ்ரீசைதன்யர் வடிவில் தாம் இருந்த போது உடம்பிலே புழுதியும் வேர்வையும் படிந்து கிடந்ததைக் கண்டு அருவருத்ததனால் தம்மையே, அவமரியாதை செய்ததாக ஆயிற்று. எனவே இப்பொழுது தம்மைத் தொட்டு வழி படலாகாது' என்று பகவான் தடுத்தார். இதுதான் அந்த அற்புதக் கனவு. ஒரிஸ்ஸா ராஜ்யத்தின் தெய்வமான ஜகந்நாதரின் அவ தாரமே ஸ்ரீசைதன்யர் என்பதை இந்தக் கனவு மன்னனுக்கு நன்கு உணர்த்திவிட்டது. ஸ்ரீசைதன்யரின் தெய்விகத் தன்மையை அறிஞருக்கு அறிஞரான சார்வபௌமரும் சிறந்த மதியூக மந்திரி யான ராமானந்த ராயரும் மனப்பூர்வாக நம்பிப் பக்தி செலுத்துவ தும் பொதுமக்களின் ஏகோபித்த முடிவும் பக்தி உள்ளம்கொண்ட மன்னனின் மனத்தில் ஸ்ரீசைதன்யரிடம், தடுத்து நிறுத்திவிட முடி யாத நன்மதிப்பைத் தந்தன. ஜகந்நாதரின் ரதோற்சவத்துக்காக வங்காளத்துப் பக்தர்கள் பூரிக்கு வந்து சேர்ந்த சில நாட்கள் கழித்து. பிரதாபருத்திரன் ஸ்ரீசைதன்யரின் வைஷ்ணவ கோட்பாடு களை முற்றும் ஏற்றுக்கொண்டான்.

பூரிக்கு ஸ்ரீசைதன்யர் திரும்பி வந்த பின்னர், சாந்திபுரியில் உள்ள ஸ்ரீஅத்வைதர் இல்லத்தில் இருந்த வங்காளத்துப் பக்தர்கள் பலர் சேர்ந்து தங்கள் தெய்விக புருஷரான ஸ்ரீசைதன்யரை உப சரிப்பதற்காக மூன்று நாள் விருந்தொன்றை நடத்துவது என்று முடிவு செய்தார்கள்.

நவத்வீபத்தில், ஸ்ரீசைதன்யரின் அன்னையாரின் ஆசீர்வாதத் தையும் அநுமதியையும் பெற்றுக் கொண்டு பக்தர்கள் கூட்ட மொன்று பூரிக்குப் புறப்பட்டது. சிவானந்த சென், குமாரஹட்டர், கஞ்சிரபாதர், குலிங் கிராமத்தைச் சேர்ந்த சத்தியராஜ்கானும் இன் னும் பலரும், ஸ்ரீகண்டைச் சேர்ந்த நரஹரி சர்க்கார், மற்றும் பலர், அனைவருமாக இருநூறுபேர் கொண்ட கோஷ்டி அத்வைதரின் தலை மையில் ரதோற்சவத்துக்கு முன்பு பூரிக்குப் போய்ச் சேர்ந்தார் கள். ஆலால்நாத் என்னும் இடத்தில் அப்பொழுது தங்கியிருந்த ஸ்ரீசைதன்யரிடம் சார்வபௌமர் விரைந்து சென்று தகவலை

அறிவித்து, பூரிக்கு அவருடன் திரும்பிவந்தார். பூமாலைகளுடனும் மலர்களுடனும் ஸ்வரூப தாமோதரரையும் கோவிந்தரையும் அனுப்பி நரேந்திர சரோவரத்தில் இருந்த தம்முடைய சிஷ்யர் களைத் தக்க மரியாதை செய்து அழைத்துவரும்படி ஸ்ரீசைதன்யர் அனுப்பினர்.

வங்காளத்துப் பக்தர்கள் ஆனந்த மிகுதியால் களிப்புடன் ஆடிப் பாடி ஊர்வலமாக வந்ததைக் கண்ட மன்னனுக்குப் பெரு மதிப்பு ஏற்பட்டது. சார்வபௌமர், கோபிநாத ஆசாரியர் இருவருடன் அரண்மனை மேல்மாடியில் அமர்ந்து மன்னன் பக்தர்களின் ஊர்வலத்தைக் கவனித்துக்கொண் டிருந்தான். ஊர் வலத்தில் செல்லும் ஒவ்வொரு பக்தரையும் சுட்டிக்காட்டி அவ ருடைய அந்தஸ்தையும் பதவியையும் பக்தியின் சிறப்பையும் குறிப் பிட்டு மன்னனுக்கு கூறிவந்தார் கோபிநாத ஆசாரியர். "பூரிக்கு வந்திருக்கும் பக்த கோஷ்டியினர் தங்குவதற்கு ஜாகையும் உண்பதற்கு உணவு வசதியும் செய்துதர என்ன ஏற்பாடு செய்திருக் கிறீர்கள்?" என்று சார்வபௌமரைக் கோபிநாதர் விசாரித்தார். இதைக் கேட்ட மன்னன், அந்தக் கோஷ்டியினர் யாவரையும் தன்னுடைய விருந்தினர்களாக உபசரிக்க எண்ணியிருப்பதாகத் தெரிவித்து அவர்களுக்குத் தக்க இருப்பிடத்தையும் உணவு வசதி களையும் மற்றச் சௌகரியங்களையும் செய்து கொடுக்கும்படி காசி மிஸ்ரருக்கும், துளஸி பரீசாவுக்கும் உத்திரவிட்டான்.

ஜகந்நாதர் கோயிலுக்கும் தம்முடைய வீட்டுக்கும் இடையே சிஷ்யர்களைச் சந்தித்து வரவேற்றார் ஸ்ரீசைதன்யர். ஸ்ரீசைதன்ய ரைக் கண்டதும் ஆனந்த மிகுதியால் அவருடைய பாதத்தில் விழுந்து அவர்கள் நமஸ்காரம் செய்தனர். அவர்களில் முதலில் ஸ்ரீஅத்வைதரைத் தொட்டு எழுந்திருக்கச் செய்து ஸ்ரீசைதன்யர் அவ ரைத் தழுவிக்கொண்டார். இதைப்போலவே மற்ற சிஷ்யர்களையும் அரவணைத்தார். சற்றுத் தொலைவிலே அடக்கத்துக்கும் பணிவுக்கும் அடையாளமாகக் கைகளைக் கட்டி பற்களிடையே புற்களை வைத்துக் கொண்டு முராரி குப்தரும், ஹரிதாசரும் நின்றிருந்தார்கள். பக வான் ஸ்ரீசைதன்யரின் பாதங்களைத் தொடத் தகுதியில்லாத தாழ்ந்த வர்கள் என்ற எண்ணத்துடனேயே அவர்கள் இருவரும் இருந்

தார்கள். இந்தக் காட்சியைக் கண்டு ஸ்ரீசைதன்யரின் உள்ளம் கரைந்தது. "இத்தகைய பணிவை விட்டு விடுங்கள்; இதனுல் எனக்கு மிகுந்த மனவேதனை ஏற்படுகிறது" என்று ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார். பின்னர், கோபிநாத ஆசாரியரும் துளசி பரீசாவும் காசி மிஸ்ரரும் சிஷ்யர்களை அவரவர் விடுதிகளுக்கு அழைத்துச் சென்ருர்கள். ஸ்ரீசைதன்யரின் இருப்பிடத்துக்கு அருகே தோட்டத்துத் தனி அறை ஒன்றில் ஹரிதாசருக்கு இடம் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

மாலையில் எல்லோரும் கூடினுர்கள். அவர்கள் அனைவரையும் ஜகந்நாதர் கோயிலுக்கு ஸ்ரீசைதன்யர் அழைத்துச்சென்ருர். தெய்வ வழிபாட்டுக்குப் பிறகு எட்டு மிருதங்கங்களும் முப்பது தாளங்களு மாக நான்கு நான்கு பேர் அடங்கிய வகுப்புகளாகக் கீர்த்தனம் பாடினுர்கள்.

மன்னனைச் சந்திப்பதில்லை என்ற உறுதி ஸ்ரீசைதன்யரிடம் இன்னும் தீவிரமாகவே இருந்தது. மன்னனின் ஆர்வமும் அடங் கியபாடில்லை. இந்த நிலையைக் கண்டு சார்வபௌமர் மன்னனுக்கு யோசனை சொன்னுர்: "தேர்த் திருவிழா அன்று ஸ்ரீசைதன்யர் பக்தி மிகுதியால் மெய்மறந்து தேரின் முன்பு நடனமாடிக்கொண் டிருப் பார். சிறிது நேரம் நந்தவனத்தில் களைப்பாற்றிக் கொள்வார். அந் தச் சமயத்திலும் அவர் தெய்விகப் பரவச நிலையிலேயேதான் இருப் பார். அப்போது ராஜ உடைகள் எல்லாவற்றையும் களைந்து, பணியாட்கள் எவரும் இல்லாமல், கிருஷ்ணனின் ராஸ லீலைகளைப் பற்றிச் சொல்லும் பாகவத சுலோகங்களைப் பாடிக்கொண்டே அவ ரிடம் சென்ருல், தன்நிலை மறந்துள்ள வேளையில் ஸ்ரீசைதன்யர் கிருஷ்ணனின் நாமங்களையும் லீலைகளையும் பாடிக்கொண்டு வருப வரை, மன்னன் என்று நினையாமல் பாகவதர் என்று நினைத்துக் கொண்டு, அவரைக் கட்டித் தழுவி, ஆசீர்வாதமும் செய்வார்."

பக்தியில் மன்னனுக்கு உள்ள ஈடுபாட்டைக் குறித்து மேன் மையாகவே, ராமானந்த ராயர் தெரிவித்ததன் பயனுய், ஸ்ரீசைதன்ய ரின் மனத்தில் மன்னனைப்பற்றி இருந்த திடமான அபிப்பிராயத்தில் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்பதையும் சார்வபௌமர் மன்ன னிடம் தெரிவித்தார்.

ரதோற்சவத்துக்கு முந்திய நாள் உற்சவம் நடைபெறும் தினத்தில் ஸ்வாமியைக் கூண்டிசா கோயிலில் எழுந்தருளப் பண்ணுவார்கள். அடுத்த எட்டு நாட்களுக்கு அங்கேயே உற்சவ மூர்த்தியை வைத்திருப்பார்கள். பின்னர் பழையபடி கோயிலுக்கே மூர்த்தி சென்று விடும். ரதோற்சவத்துக்கு முந்திய நாளன்று, ஸ்ரீசைதன்யர் தம்முடைய துணைவர்களுடன் கூண்டிசா ஆலயத்தைப் பெருக்கிச் சுத்தம் செய்யத் தொடங்கினர். இதைக் கண்டு சார்வபௌமரும் மற்றவர்களும், "இப்படிக் கோயிலைச் சுத்தம் செய்வது குருநாதரின் பெருமைக்குத் தாழ்மையான செயல்" என்று சொல்லி ஆட்சேபித்தார்கள். "ஆண்டவனுக்குச் செய்யும் பணி எவ்வளவு அற்பமானதாக இருந்தாலும் அது மகத்தான பெருமை உள்ளதாகும்" என்று சொல்லி, ஸ்ரீசைதன்யர் அவர்களுடைய கருத்தை மாற்றினர். ஸ்ரீசைதன்யரைப் போலவே, கௌடிய வைஷ்ணவர்கள் இன்றும் இந்தப் பணியை மிகுந்த பக்தியுடன் பூரிக் கோயிலில் செய்து வருகிறார்கள்.

ரத யாத்திரை: அதற்கு அடுத்த நாள், ஸ்ரீஜகந்நாதரின் ரதோற்சவத்துக்கு மிகவும் மகிழ்ச்சியுடன் ஸ்ரீசைதன்யர் தம்முடைய துணைவர்கள் சூழ உதவி செய்தார். ரதத்தில் ஏறுவதற்கு முன்பு கோயிலை விட்டு வெளியே வரும் தெய்வ வடிவத்தின் பாண்டு விஜயம் என்னும் காட்சியை ஸ்ரீசைதன்யர் பார்த்துக்கொண்டிருந்தார். அப்பொழுது ரதம் செல்லும் பாதை முழுவதையும் மன்னன் தங்கத் துடைப்பத்தால் சுத்தம் செய்வதைக் கண்டு பெரிதும் அவர் மகிழ்ந்தார். பிரதம கோயிலிலிருந்து, 'கூண்டிசா கோயிலுக்குப் புறப்பட்ட தேரின் முன்பு, தம்முடைய சிஷ்யர்கள் சூழ, குருநாதர் ஆடிக்கொண்டே சென்றார். கீர்த்தனம் பாடும் சிஷ்யர்கள் தாங்களாகவே பிரிந்து, பாடகர் ஒருவர், நாட்டியமாடுபவர் ஒருவர், பின்னணி பாடுபவர் ஒருவர் உட்பட ஏழுபேர் அடங்கிய கோஷ்டியாக அமைந்தனர். ஸ்வரூப தாமோதரரும், அத்வைதரும், ஸ்ரீவாசரும், நித்யானந்தரும், முகுந்த தத்தரும், ஹரிதாசரும், கோவிந்த கோஷரும், வக்ரேசுவரரும் முதல் நான்கு கோஷ்டிகளில் பிரதம பாடகர்களாகவும் நாட்டியமாடுபவர்களாகவும் இருந்தனர். மற்ற மூன்று கோஷ்டிகளில் ஒன்றில் சாந்திபுரத்துப் பக்தர்களும், இன்னொன்றில்

குலிங் கிராமத்துச் சிஷ்யர்களும், மற்றொன்றில் ஸ்ரீகண்டத்துப் பக்தர்களும் இருந்தனர். இந்தக் கோஷ்டிகளில் அச்சுதரும் ராமானந்தரும் சத்திய ராஜகானும் நாட்டியமாடினுர்கள். தேரின் பக்கவாட்டிலும் பின் புறத்திலும் நரஹரி சர்க்காரும், ரகுநந்தனரும் பாடிக் கொண்டே வந்தனர். சிறிது நேரம் கழிந்தது. ஸ்ரீசைதன்யர் தாமே நடனமாட விரும்பினுர். எனவே ஏழு கோஷ்டிகளையும் இணைத்து ஸ்வரூப தாமோதரரின் தலைமையில் ஸ்ரீவாசர், ரமாயி, ரகுநந்தனர், கோவிந்தர், முகுந்ததத்தர், ஹரிதாஸர், கோவிந்தானந்தர், மாதவர், கோவிந்த கோஷர் ஆகிய எல்லோரையும் ஒரு கோஷ்டியாக ஸ்ரீசைதன்யர் அமைத்தார். அந்தக் கோஷ்டியின் மத்தியிலே சென்று ஸ்ரீசைதன்யர் ஆடலானுர். அவரைச் சுற்றி மற்ற இரண்டு கோஷ்டியினர் ஆடிப் பாடலானுர்கள். கூப்பிய கரங்களுடன் பகவானைப் பிரார்த்தனை செய்தவண்ணம் விஷ்ணுபுராணத்திலிருந்தும் பாகவதத்திலிருந்தும் சுலோகங்களை ஸ்ரீசைதன்யர் பாடத் தொடங்கினுர். இதற்குப் பின்னர் அவர் உத்தண்ட நடனம் ஆடினுர்.

மெய்மறந்த வியப்புடன் அந்த நாட்டியத்தை கவனித்துக் கொண்டிருந்த மன்னன் அவருடைய நடனத்தைக் கண்டு மக்கள் நெருக்கியடிக்காமல் இருக்கவும் நடனமாட அவருக்கு இடம் விசாலமாக இருப்பதற்காகவும் தம்முடைய பரிவாரங்களால் அவரைச் சூழ்ந்து கொண்டான். கிருஷ்ணபரமாத்மாவை அடைய வேண்டும் என்ற அடங்காத ஆசை முழுவதும் ஸ்ரீசைதன்யரின் அந்தத் தாண்டவத்தில் பிரதிபலித்தது. தாண்டவ நடனத்தில் பகவானுடன் ஒன்றிய பின்னர், அதை நிறுத்திவிட்டு, தம்முடைய உணர்ச்சிக்குப் பொருத்தமான பாடல் ஒன்றைப் பாடும்படி ஸ்வரூப தாமோதரரிடம் ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார். பின்னர், ஐக்கிய நடனத்தை அவர் ஆடத் தொடங்கினுர். அந்த வேளைக்கு என்ன பாட்டைப் பாட வேண்டும் என்பதை நன்ருக அறிந்த ஸ்வரூபர், ஸ்ரீசைதன்யருக்குப் பிடித்த புகழ்பெற்ற பாட்டை பாடினுர். "பகவானை அடையவேண்டும் என்பதற்காக விரகதாபத்தில் உருகிக்கொண் டிருந்த நான் கடைசியில் என் உள்ளத்தில் உறையும் அவனை அடைந்து விட்டேன்" என்னும் பொருள் பொதிந்தது அந்தப் பாடல்.

விரஜையிலிருந்த கோபிகைகளை விரகதாபத்தில் வருந்தும்படி பிரிந்து, குருக்ஷேத்திரத்துக்கு சென்ற தெய்விகக் காதல் புருஷரான ஸ்ரீகிருஷ்ணனை விரஜைப் பெண்கள் மீண்டும் அடைந்தபோது ஆடிய நடனத்தையே ஸ்ரீசைதன்யரும் ஆடினர். இந்த நடனத்தில் உடம்பை வளைத்தும் குறிப்பாக ஹஸ்த பாவங்களினலும், தம் முடைய பக்தி வாழ்க்கையின் அழகையும் ரகசியத்தையும் பூரணமாக ஸ்ரீசைதன்யர் வெளிப்படுத்தினர்.

"ரேவா நதிக் கரையில் என்னுடைய இளம் உள்ளத்தைக் கவர்ந்த கள்வனே, இன்னும் என்னுடைய காதலன்; அதே வசந்த கால இரவுகள்; நறுமணம் கமழும் மாலதி மலர்கள்; கடம்பவனத் திலிருந்து வீசும் மந்தமாருதம்; அன்று நான் எவ்விதம் இருந் தேனே அப்படியே தான் இன்றும் இருக்கிறேன். எனினும் நம்மு டைய காதல் முதலில் தோன்றிய இடமான வேதகி தருக்களையே என் மனம் நாடுகிறது" என்னும் கருத்தமைந்த 'காவிய பிரகாச'த் தின் பாடலுக்கேற்ப, சில சமயங்களில் ஸ்ரீசைதன்யர் நடனமாடு வார். அத்தகைய வேளைகளில் வெவ்வேறு வகையான உணர்ச்சிகள் ஸ்ரீசைதன்யரின் உள்ளத்தில் எழுந்து போராடத் தொடங்கும்; ஓர் உணர்ச்சி எழுவதும் மற்றென்று அடங்குவதுமாக இருக்கும். "அவருடைய மேனி பொன்மலையைப் போல இருந்தது. அதில் நில வியிருக்கும் மலர் சொரியும் மரங்களைப் போல அவருடைய உணர்ச் சிகள் இருந்தன" என்று கிருஷ்ணதாசர் குறிப்பிட்டிருக்கிறர். நடனமாடிக்கொண் டிருக்கும்போது, மன்னனின் முன்பு ஸ்ரீசைதன் யர் கீழே விழுந்துவிட இருந்தார். நல்ல வேளையாக மன்னன் அவ ரைக் கையில் ஏந்திக்கொண்டான்.

ஆழ்ந்த அமைதியிலிருந்து ஸ்ரீசைதன்யர் திரும்ப எழுந்ததும் மன்னனின் கரங்களில் இருப்பதை அவர் அறிந்தார். "உலகத் தின் இன்ப துன்பங்களில் ஈடுபட்டிருப்பவனைத் தீண்டிய நான் நெறி கெட்டவனகிவிட்டேன்" என்று ஸ்ரீசைதன்யர் கதறினர். இதைக் கண்டு 'பெரிய அபசாரத்தைச் செய்துவிட்டோமோ' என்று மன்னன் பயந்தான். அருகில் இருந்த சார்வபௌமர், கவலைப்படா மல் இருக்கும்படி மன்னனுக்கு ஆறுதல் சொன்னர். மேலும், 'இத் தகைய வெறுப்பு கலந்த செய்கை மூலமாகத்தான், தம் வழியைப்

பின்பற்றுபவர்களுக்குத் துறவறத்தை உபதேசிக்க விரும்புகிறார் என்பதற்கு இதுவே அடையாளம் என்றும், உண்மையில் அவர் மன்னரை ஏற்றுக்கொண்டுவிட்டார் என்றும் அடுத்த சந்திப்பின்போது மன்னரைப்பற்றி எடுத்துரைத்து அவரை ஏற்றுக் கொள்ளும்படி பிரார்த்திப்பதாகவும் பிரதாபருத்திரனுக்குச் சார்வ பௌமர் உறுதி தந்தார்.

**மன்னனுக்கு அருள் செய்தல் :—** பிரதான கோயிலுக்கும் கூண்டிசாவுக்கும் இடையே உள்ள பாலகந்தி என்னும் இடத்தைத் தேர் அடைந்தது. அங்கே ஆண்–பெண், உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்னும் வித்தியாசம் இல்லாமல் எவரும் உற்சவ மூர்த்திக்கு நிவேதனம் செய்யலாம். எனவே, பாலகந்தியில் பெருங்கூட்டம் கூடிவிட்டது. அருகே இருந்த நந்தவனத்துக்குச் சென்று ஸ்ரீசைதன்யர் தரையிலே படுத்துச் சற்றுநேரம் ஓய்வு எடுத்துக்கொண்டார். அங்கேயும் பக்தர்கள் அவரைத் தொடர்ந்தனர். ஸ்ரீசைதன்யர் இன்னும் தீவிர பக்தி பாவத்திலேயே இருந்தார். சார்வபௌமரின் ஆலோசனைக்கு ஏற்ப மன்னர், தம்முடைய ராஜாங்க உடைகளைக் களைந்து, வைஷ்ணவ பக்தர்களுக்கு உரிய எளிய உடையை உடுத்துக்கொண்டார். பணியாள் எவருமின்றி மன்னன், ஸ்ரீசைதன்யரை நெருங்கி, பாகவதத்தில் ராஸ நடனத்தை வர்ணிக்கும் பாடல்களைப் பாடிக்கொண்டே, மெல்ல அவருடைய பாதத்தை வருடினான். அந்தப் பாடல்களைக்கேட்டு, ஸ்ரீசைதன்யர் ஆனந்தம் கொண்டார். பாடுபவர் யார் என்பதை அறியாமலே, மீண்டும் அதே பாடல்களைப் பாடும்படி ஸ்ரீசைதன்யர் கேட்டுக்கொண்டார். அப்படியே மன்னன் ராஸ நடன கீதங்களை மறுபடியும் பாடினான். அதைக் கேட்டு, "விலைமதிக்க முடியாத பொக்கிஷத்தை எனக்கு நீங்கள் தந்திருக்கிறீர்கள். அதற்குப் பிரதியாக என்னால் ஒன்றுமே உங்களுக்குக் கொடுக்க இயலவில்லை. எனவே, உங்களையே அரவணைத்துக் கொள்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே ஸ்ரீசைதன்யர் பக்திப் பரவசத்தில் மன்னனைத் தழுவிக்கொண்டார். ராஸ நடன கீதங்களைத் திரும்பத் திரும்பப் பாடியதால் பக்தி மயக்கத்தில் ஆழ்ந்துவிட்ட ஸ்ரீசைதன்யர், "இவ்வளவு பேருபகாரம் செய்த நீங்கள் யார்? திடீரென்று தோன்றி, லீலா விநோதம் என்னும் அமிர்தத்தைப் பருக வைத்த நீங்கள் யார்"? என்று வினவினார்.

" நான் உங்களுடைய அடியாருக்கு அடியான். தங்களுடைய தொண்டருக்குத் தொண்டனுக என்னை அருள்கூர்ந்து ஏற்றுக் கொள்வீர்கள் என்பதே என்னுடைய நம்பிக்கை" என்றுன் மன்னன். மன்னருக்குத் தம்முடைய தெய்விக அம்சத்தை ஸ்ரீசைதன்யர் காண்பித்தார் என்றும் அதைக் குறித்து வேறு எவரிடமும் தெரிவிக்க வேண்டாம் என்று கேட்டுக்கொண்டதாகவும் சொல்லப் படுகிறது. (சை. ச. ம. 14–19 பக்கம்) கடைசியில், சார்வ பௌமரின் நீண்ட நாளைய ஆசைக் கனவு நிறைவேறியது.

கிருஷ்ண பகவானைப் பிரார்த்தித்து எதுவும் செய்ய வேண்டாம். பவித்திரமான அவனுடைய நாமசங்கீர்த்தனமே போதும். அந்தத் தெய்விக ஆயுதமே எல்லாவித ஆபத்துக்களிலிருந்தும் மன்னனைக் காப்பாற்றும் என்று ஸ்ரீசைதன்யர் உறுதி அளித்தார். சார்வபௌமர், ராமானந்தர், பிரதாபருத்திரன் ஆகிய மூவரையும் சந்தித்துத் தம்முடைய நெறிக்கு அவர்களை ஆட்படுத்துவதற்காகவே பூரிக்கு வந்ததாக ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார்.

" ஸ்ரீசைதன்யர் பகவானின் அவதாரம் என்று பிரகடனப் படுத்தவோ பிரசாரம் செய்யவோ கூடாது. அப்படிச் செய்தால் பூரியைவிட்டுச் சென்றுவிடுவேன்" என்று மன்னனிடம் ஸ்ரீசைதன்யர் விசேஷமாக வற்புறுத்திக் கேட்டுக்கொண்டார். இந்தச் சம்பவத்துக்குப் பிறகு, மன்னனுடன் அவனுடைய குடும்பமும் ராஜ்யமும் ஸ்ரீசைதன்யரின் லட்சியத்தைப் பரப்பும் உன்னத நோக்கத்துக்காகவே பாடுபட்டது. மன்னன் பிரதாபருத்திரன் முழு மனத்துடன் ஸ்ரீசைதன்யரின் நெறியைப் பின்பற்றலானுன்; மிகவும் உற்சாகத்துடன் ஸ்ரீசைதன்யரின் லட்சியத்தைப் பாது காக்கலானுன். இந்த லட்சிய வேகத்தின் மிகுதியால், தன்னுடைய ராஜ்யத்தில் ஸ்ரீசைதன்யரின் நெறிமுறைகளைத் தவிர வேறு எந்த மதத்தையும் அநுமதிக்க மறுத்துவிட்டான். மற்ற காரியங்களுடன் இந்த விஷயத்திலும் மன்னனுக்கு ராமானந்தராயரும். சார்வ பௌமரும் பிரதம ஆலோசகர்களாக இருந்தனர். பௌத்தர்களை மன்னன் ஒறுத்து வந்தான் என்றும் அவர்களை நகரங்களிலிருந்தே வெளியேற்றி, மலைப்புறத்துக் காடுகளில் வசிக்கும்படி செய்தான்

என்றும் ஏ. ஸ்டர்லிங் என்பவர் ஓரிஸ்ஸாவின் சரித்திரத்தில் எழுதியிருக்கிருர்.

நந்தவனத்தில் தங்கியிருந்த ஸ்ரீசைதன்யருக்கும் அவருடைய சிஷ்யர்களுக்கும் வேண்டிய பிரசாதங்களை மன்னன் நிறைய அனுப்பினுன். அதை ஸ்ரீசைதன்யரும் மற்றவர்களும் பங்கிட்டுக்கொண்டார்கள்.

தேர் மீண்டும் நகரத் தொடங்கியது. "ஸ்ரீஜகந்நாதர் வாழ்க! ஸ்ரீசைதன்யர் வாழ்க!" என்னும் வாழ்த்தொலிகளுக்கும் பலத்த ஆரவாரத்துக்கும் இடையே விரைவில் ரதம் கூண்டிசாவை அடைந்தது. அங்கே ஜகந்நாதரின் உற்சவமூர்த்தி ஒன்பது நாட்கள் தங்குவதற்கு ஏற்பாடாகியது. விரஜையில் இருப்பது போன்ற உணர்ச்சியுடன் ராதையின் பாவத்தில் பகவானை வழிபடுவதற்காக அருகே இருந்த ஜகந்நாத வல்லப நந்தவனத்தில் ஸ்ரீசைதன்யரும் தங்கினுர்.

ஹீரபஞ்சமி :— ரதோற்சவம் முடிந்து ஐந்தாவது, நாளன்று ஹீரபஞ்சமி விழா வந்தது. ஸ்ரீசைதன்யரின் விஜயத்தை முன்னிட்டு வெகு சிறப்பாகவும் ஆடம்பரமாகவும் அந்த விழாவைக் கொண்டாடலானுர்கள். லக்ஷ்மி தேவியின் பக்தியின் தன்மையையும், விரஜையில் இருந்த கோபிகைகளின் அன்பு கனிந்த பணிவிடையையும் ஒப்பிட்டு இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டைக் குறித்தும் இவற்றில் உயர்ந்தது எது என்பது குறித்தும் ஸ்வரூப தாமோதரருக்கும் ஸ்ரீவாசருக்கும் இடையே நீண்ட விவாதம் இந்த விழாவில் எழுந்தது. இருசாராரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் இந்த விவாதத்தில் ஸ்ரீசைதன்யர் சமரசம் செய்தார்.

பிரதான கோயிலிலே தனிமையில் விட்டுச் சென்றதால் பகவானிடம் லக்ஷ்மிக்கு ஏற்படும் கோபத்தையும் பிறகு அது தணிவதையும் அடிப்படையாகக் கொண்டது ஹீரபஞ்சமி விழா. நவரத்தினங்களால் அலங்கரிக்கப் பெற்ற தங்கப் பல்லக்கில் லக்ஷ்மி விக்கிரகத்தை, கோயிலின் சிங்கவாயிலை நோக்கி எடுத்துச் செல்வார்கள். பல்லக்குக்கு முன்னே, நடனமாதர்கள் ஆடியும் பாடியும் செல்வார்கள். அதைத் தொடர்ந்து பல பெண்கள் கொடி, குடை,

தோரணம் ஆகியவற்றை ஏந்திக்கொண்டு வரிசை வரிசையாகப் போவார்கள். பல்லக்கு சிங்கவாயிலை அடைந்ததும் லக்ஷ்மியின் பணியாட்கள், ஸ்ரீஜகந்நாதரின் ஆட்களைக் கட்டிப் பிடித்து, லக்ஷ்மி தேவியின் அருகே இழுத்துச் சென்று அவளுடைய பாதத்தில் சேர்ப்பார்கள். பகவானின் பணியாட்களைத் திருடர்களாகக் கருதி, அவர்களுக்கு அபராதம் விதித்துத் தண்டிப்பாள் லக்ஷ்மி. கோபத்தினால் அவர்களைக் கடிந்து, மூர்ச்சையாகும் வரையில் லக்ஷ்மி அவர்களை அடிக்கச் செய்வாள். இதுதான் அந்த விழா. இவ்விழாவை முன்னிட்டு ஸ்ரீசைதன்யர் கீர்த்தனங்களைப் பாடிக் கொண்டு நடனமாடுவார்.

தினசரி வழிபாட்டைத் தவிர, வங்காளத்துப் பக்தர்களுடன் கிருஷ்ணனுடைய லீலா விநோதங்களைப்பற்றி அளவளாவுவதும் நாம சங்கீர்த்தனம் செய்வதுமாக, ஸ்ரீசைதன்யர் அடுத்த நான்கு மாதங்களைக் கழித்தார். ஒவ்வோர் ஆண்டும் செப்டம்பர் மாதத்தில் ஜன்மாஷ்டமியின் போது நந்தோற்சவத்தையும் அக்டோபரில் விஜயதசமி, ராஸ யாத்திரை, தீபாவளி, உத்தான ஏகாதசி ஆகிய விசேஷ நாட்களையும் தம்முடைய சிஷ்யர்களுடன் சேர்ந்து ஸ்ரீசைதன்யர் நாட்டிய நாடகங்களுடன் கொண்டாடுவார். ஜூலையில் ரத யாத்திரை ஆரம்பமானதிலிருந்து நவம்பரில் சாதுர்மாஸ்ய விரதம் முடியும் சமயம் வங்காளத்துப் பக்தர்கள் தாயகம் திரும்பும் வரையில் கழிந்த நான்கு மாதங்களும் கோலாகலமாகவே கழிந்தன. இப்படி நடந்த சில விசேஷ நிகழ்ச்சிகளில் மன்னன் பிரதாபருத்திரனும் கலந்து கொண்டான்.

**வங்கத்துக்குப் புறப்பட்டார்** :—வங்காளத்திலிருந்து வந்த பக்தர்கள் தாயகம் செல்வதற்கு முன்னர், வங்கத்தில் தம்முடைய இயக்கம் தொடர்ந்து நடைபெறுவதற்கான வழிகளையும் முறைகளையும் ஏற்பாடு செய்வதற்காக ஸ்ரீசைதன்யர் நித்தியானந்தருடன் கலந்தாலோசித்தார். அந்தப் பணியை நிறைவேற்றுவதற்காக, நித்தியானந்தரைத் தலைவராகவும் ராமதாசர், கதாதரதாசர், இன்னும் சிலரை அவருக்குத் துணைவர்களாகவும் ஸ்ரீசைதன்யர் நியமித்தார். நித்தியானந்தரிடம் ஸ்ரீசைதன்யர் மகத்தான பொறுப்பை ஒப்புவித்தார். பகவானிடம் பரிபூர்ண காதலும் பக்தியும் கொள்ள

வேண்டும் என்னும் தம்முடைய உபதேசத்தை, வங்காளத்தில் எல்லோரிடம் எடுத்துச் சொல்லும்படி நித்தியானந்தரிடம் ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார். சண்டாளர்களிலிருந்து எல்ல உயர் வகுப்பினர் வரையில் எல்லோருக்கும் கிருஷ்ணபக்தியை எடுத்துரைத்து அவர்களை வைஷ்ணவ நெறியை ஏற்றுக் கொள்ளச் செய்யும்படி அத்வைதருக்கு அவர் கட்டளையிட்டார்.

ஸ்ரீஜகந்நாதர் உடுத்துக் களைந்த பீதாம்பரத்தையும் மற்ற பிரசாதங்களையும் ஸ்ரீவாசரிடம் எடுத்துத் தந்து அதைத் தம்முடைய அன்னையாருக்கு அளித்து, தம்முடைய பணிவான நமஸ்காரத்தையும் தெரிவிக்கும்படி ஸ்ரீசைதன்யர் கேட்டுக் கொண்டார். பூரியை விட்டுப் புறப்படும் வேளையில், சார்வபௌமரின் சகோதரர் மதுசூதன வித்யா வாசஸ்பதி, அத்வைதர், நித்யானந்தர், ஸ்ரீவாசரின் சகோதரர்கள், ராகவ பண்டிதர், சிவானந்த சென், ஸ்ரீகண்டத்தைச் சேர்ந்த சத்தியராஜகான் முதலியவர்கள், முராரி குப்தர், வாசுதேவ தத்தர் ஆகிய பக்தர்களை ஸ்ரீசைதன்யர் பாராட்டிச் சில வார்த்தைகள் பேசினர். பின்னர் ஸ்ரீசைதன்யரை விட்டுப் பிரிகிறோமே என்ற வருத்தம் முகத்தில் நிலவப் பூரியை விட்டு எல்லாச் சிஷ்யர்களும் வங்காளத்துக்குப் புறப்பட்டார்கள். கதாதர பண்டிதர் மட்டும் பூரியிலேயே தங்கினர். யமேசுவரத்தில் உள்ள கோபிநாதர் ஆலயத்தில் தினசரி வழிபாடு செய்யும் பணியில் ஸ்ரீசைதன்யர் அவரை அமர்த்தினர். காசி மிஸ்ரரின் இல்லத்தில், குருநாதருடன் பரமானந்த பூரி, ஸ்வரூப தாமோதரர், ஜகதானந்தர், கோவிந்தர், காசீசுவரர் ஆகியோர் தங்கி விட்டார்கள்.

வங்காளத்துப் பக்தர்கள் பூரியில் தங்கியிருந்த நான்கு மாத காலத்திலும் அவர்களே ஸ்ரீசைதன்யரின் பிக்ஷையை ஏற்றுக் கொண்டிருந்தார்கள். சிஷ்யர்கள் சென்ற பிறகு, பகவானை அழைத்து உபசரிப்பதில் தாமும் மனைவியும் எல்லையற்ற மகிழ்ச்சி அடைவோம் என்றும் எனவே ஒரு மாதம் தங்கள் வீட்டில் பிக்ஷை ஏற்றுக் கொள்ளும்படியும் ஸ்ரீசைதன்யரை, சார்வபௌமர் வேண்டிக்கொண்டார். சில நாட்கள் வரையில் ஸ்ரீசைதன்யர் அந்த வேண்டுகோளை நிராகரித்தே வந்தார். கடைசியில், மற்ற சிஷ்யர்களுடன் ஐந்து நாட்கள் தம் வீட்டில் பிக்ஷை ஏற்றுக்

கொள்வதற்கு ஸ்ரீசைதன்யரை ஒப்புக் கொள்ளச் செய்தார் சார்வபௌமர்.

அடுத்த ஆண்டு ரத யாத்திரை விழா வந்தது. ஏராளமான பக்தர்கள் பூரியில் கூடினர். சாதுர்மாஸ்ய விரதம் முடிந்த பிறகு ஸ்ரீசைதன்யர் நித்தியானந்தரை அழைத்து, "பூரியில் நான்கு மாதங்கள் தங்கி விடுவதால் வங்காளத்தில் பக்தி இயக்கம் தடைப்பட்டு விடும். எனவே, ஸ்ரீபாதா, என்னுடைய வேண்டுகோளை நீ நிறைவேற்றத்தான் வேண்டும். ஒவ்வோர் ஆண்டும் பூரிக்கு வர வேண்டாம். என்னுடையஆசையை வங்காளத்திலிருந்தே நிறைவேற்றி வா. உன்னைக் காட்டிலும் இந்தக் காரியத்தைச் செய்ய வேறு யாரும் இல்லை என்றே நான் நினைக்கிறேன். இந்தக் கடினமான செயலை நிறைவேற்ற உன்னால் தான் முடியும்" என்று அவரிடம் கேட்டுக் கொண்டார்.

# 10

# ஸ்ரீசைதன்யரின் வட இந்திய யாத்திரை

ஸ்ரீசைதன்யர் துறவறம் மேற்கொண்ட ஐந்தாவது ஆண்டில், அதாவது கி. பி. 1511-ஆம் வருஷம் தேர்த் திருவிழா முடிந்ததும் வங்காளத்துப் பக்தர்கள் தாயகம் திரும்பிச் சென்ற பின்னர், பிருந்தாவனத்துக்குப் புறப்பட இறுதியாக முடிவு செய்திருப்பதை ஸ்ரீசைதன்யர் அறிவித்தார். தம்முடைய பிரயாணத் திட்டத்துக்கு ராமானந்தராயரின் சம்மதத்தையும் ஸ்ரீசைதன்யர் வேண்டினர். "வங்காளத்துக்கு விஜயம் செய்வதற்கு இரண்டு நோக்கங்கள் உண்டு. ஒன்று அன்னையைக் காண வேண்டும்; மற்றொன்று கங்கையைத் தரிசிப்பது. இரண்டுமே புனிதம் மிக்கவை. பிருந்தாவனத்துக்குப் போகும் வழியில் கங்கையில் நீராடிவிட்டுத் தாயைத் தரிசிக்கலாம் என்றிருக்கிறேன்" என ஸ்ரீசைதன்யர் ராமானந்தரிடம் தெரிவித்தார்.

ஸ்ரீசைதன்யர் பூரியை விட்டு, விஜயதசமி அன்று புறப்படுவது என்று நாள் பார்த்தாயிற்று. பிரயாணம் சிரமம் இல்லாததாகவும் குருநாதரின் உடல் நலம் பாதிக்காமலும் இருக்கவேண்டும் என்ற கவலையால், மழைக்காலம் முடிவதற்கு முன்னர் ஸ்ரீசைதன்யர் புறப்படவேண்டாம் என்று ராமானந்தர் சொல்லிவிட்டார். எனவே, மழைக்காலம் முடிந்த பிறகு 1514–ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் பிருந்தாவனத்துக்குப் போகும் உத்தேசத்துடன், ஒரு நாள் அதிகாலையில், ஸ்ரீசைதன்யர் வங்காளத்துக்குப் புறப்பட்டார். ஸ்வரூப தாமோதரர், காசீசுவரர், ஹரிதாச டாகுரா, வக்ரேசுவரர், கோபிநாத ஆசாரியர் இன்னும் பலரும் ஸ்ரீசைதன்யருடன் புறப்பட்டார்கள். முன்னரே, பூரியில் உள்ள ஐயோடா ஆலயத்தில் நித்திய வழிபாட்டுக்காக ஸ்ரீசைதன்யர் கதாதர பண்டிதரை நியமித்து என்றும் அங்கேயே இருந்து வரும்படி பண்டிதரைக் கேட்டுக்கொண்டிருந்தார். தம்முடைய பூர்ண அன்புக்கும் மதிப்புக்கும் உரிய குருநாதரை விட்டுப் பிரிந்த வேதனையைச் சகித்துக் கொள்ள இயலாமல்

கதாதர பண்டிதரும் பிருந்தாவனம் செல்லும் கோஷ்டியில் சேர்ந்து கொண்டார்.

ஸ்ரீசைதன்யரின் பிரயாணத்துக்குப் போதுமான அளவு பிரசாதமும் சந்தனமும் மற்ற அன்பளிப்புகளும் வந்து சேர்ந்தன. ஆவல் நிறைந்த உள்ளத்துடன் ஒரிஸ்ஸாவில் இருந்த சிஷ்யர்கள் அனைவரும் அவரைப் பின் தொடர்ந்தார்கள். தம்முடன் தொடர்ந்து வரவேண்டாம் என்று அவர்களைப் பல தடவை கேட்டுக் கொண்டதற்குப் பின்னரே அவர்கள் தங்கள் பயணத்தை நிறுத்திக் கொண்டார்கள். பவானிபுரத்துக்கு வந்ததும் தம்முடைய சிஷ்யர்களுடன் உணவை முடித்துக் கொண்டு ஸ்ரீசைதன்யர் அங்கேயே இரவையும் கழித்தார். அடுத்த நாள் காலையில் மீண்டும் புறப்பட்டுப் புவனேசுவரத்தை ஸ்ரீசைதன்யர் அடைந்தார். அங்கேயிருந்து அவர் கட்டாக்கை நோக்கிச் சென்றார். அங்கே ஸ்வப்னேசுவர விப்பிரர் என்னும் பக்தர் அவரை வரவேற்று உபசாரம் செய்தார். ஸ்ரீசைதன்யரின் சிஷ்யர்களை ராமானந்தராயர் தம்முடைய இல்லத்துக்கு அழைத்துச் சென்று கவனித்துக் கொண்டார். ஸ்ரீசைதன்யரின் விஜயத்தைக் கேள்விப்பட்ட உடனேயே மன்னன் பிரதாபருத்திரன் ஓடோடியும் வந்து அவருடைய பாதத்தில் பலமுறை விழுந்து வணங்கினான்; மன்னனின் ஆழ்ந்த பக்தியைக் கண்ட ஸ்ரீசைதன்யர், அப்படியே அவனை இறுகத் தழுவி அணைத்துக் கொண்டார். அப்பொழுது உணர்ச்சி மிகுதியால் மன்னனின் உடலில் சில மெய்ப்பாடுகள் தோன்றின. கண்களில் ஆனந்த பாஷ்பம் துளிர்த்து வழிந்தது. அச்சமயத்துக்குப் பொருத்தமான பாடல்களை மீண்டும் மீண்டும் பாடிக் கொண்டே மன்னன் வணக்கம் செலுத்தினான். ஸ்ரீசைதன்யரும் மன்னனுக்குப் பரிபூரணமான அருளை வழங்கினார். அன்றிலிருந்து குருநாதருக்கு, 'பிரதாபருத்திர சந்திரதா' என்னும் பெயரும் வழங்கலாயிற்று.

மன்னனின் பரிவாரங்கள் குருநாதருக்கு அஞ்சலி செய்து முடிந்ததும், அரசன் ஓர் கட்டளையைப் பிறப்பித்தான். 'ஸ்ரீசைதன்யரின் பிரயாணத்தின்போது, அவர் செல்லும் வழியில் உள்ள ஒவ்வொரு கிராமத்திலும் புதிதாக ஜாகைகள் கட்ட வேண்டும். அவர் தங்குமிடங்களில் வேண்டிய பொருள்கள் யாவும் குறைவு

இல்லாமல் சேர்த்து வைக்கவேண்டும். குருநாதர் குறிப்பிட்ட இடங்களைச் சேரும் போது அவரை எதிர்கொண்டு அழைத்து, அவர் புறப்படும் வரையில் இரவும் பகலும் அவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்ய அருகிலேயே இருக்க வேண்டும்' என்று தன்னுடைய ராஜ்யத்தில் உள்ள எல்லா அதிகாரிகளுக்கும் பிரதாபருத்திரன் உத்திரவிட்டான். எல்லா ஏற்பாடுகளையும் கவனிக்க ஹரிச்சந்திரா, மங்கராஜா என்னும் இரண்டு உயர்தர அதிகாரிகளையும் மன்னன் நியமித்தான். புதிதாக ஒரு படகைத் தயாராக வைத்திருக்கும்படியும் அவர்களுக்குக் கட்டளையிட்டான். "இந்தப் படகுகள் எப்போதும் நதிக்கரையிலேயே இருக்கட்டும். குருநாதர் ஸ்நானம் செய்துவிட்டு மறுகரையை அடைவதற்காக, எந்த இடத்தில் நதியைக் கடந்து மறுகரையை அடைகிறுரோ அந்த இடம், தூய்மையான துறை என்று சுட்டிக் காட்டுவதற்காக அங்கே நினைவு மண்டபம் ஒன்றைக் கட்டவேண்டும். எப்பொழுதும் நான் அந்தத் துறையிலேயே நீராடுவேன். என்னுடைய மரணமும் அங்கேயே நேர வேண்டும்" என்றும் மன்னன் தெரிவித்தான்.

சாதுர்த்வாரத்தில் புதிதாக ஒரு வீடுகட்டப் பெற்றது. பகவானின் அருகிலேயே இருக்கவே ராமானந்தர் விரும்பினுர்.

நான்கு வருஷங்களுக்கு முன்பு ஸ்ரீசைதன்யர் பூரிக்குச் சென்ற போது அவரை யாரும் அதிகமாகக் கவனிக்கவில்லை. ஆனுல் அதற்கு மாருக, இந்த முறை ராஜ்யத்தின் மகாபுருஷராகக் கருதி, சென்ற இடங்களில் எல்லாம் ஸ்ரீசைதன்யரை, மகத்தான முறையில் வரவேற்று மக்கள் உபசரித்தனர்.

மகாநதிக்கு அருகில், தங்கியிருக்கும் ஸ்ரீசைதன்யரைத் தரிசிப்பதற்காக மன்னன் தன்னுடைய ராணிகளை யானையின்மேல் ஏற்றி வைத்தான். மாலையில் கட்டாக்கை விட்டுப் புறப்பட்டு, நிலவொளியில் நதியைக் கடந்து, சாதுர்த்வாராவை அடைந்த ஸ்ரீசைதன்யர் அங்கேயே இரவைக் கழித்தார். இப்பொழுது செளதார் என்று அழைக்கப்பெறும் சாதுர்த்வாரா, கட்டாக்கிலிருந்து கொஞ்ச தூரத்தில்தான் இருக்கிறது. அடுத்த நாள் காலையில் மன்னனின் கட்டளைப்படி, ஜகந்நாதர் கோயிலிலிருந்து அவருக்குப் பிரசாதம் வந்து சேர்ந்தது. ஸ்ரீசைதன்யர், சாப்பிட்டு முடிந்ததும் நாம சங்கீர்த்த

னத்துடன் மீண்டும் பிரயாணத்தைத் தொடங்கினர். தம்முடன் தொடர்ந்து வர வேண்டாம் என்று பல முறை சொன்னதற்குப் பிறகே கதாதரர் அவருடைய வேண்டுகோளை ஏற்றுக்கொண்டார். சார்வபௌமருடன் கதாதரை ஸ்ரீசைதன்யர் பூரிக்கே அனுப்பினர். சாதுர்த்வாரத்தில் படகில் ஸ்ரீசைதன்யர் ஏறியதுமே ஆற்றங்கரையிலே உணர்வற்று, கதாதரர் விழுந்து விட்டார்.

ஜேஜ்பூர் வரையில் ஸ்ரீசைதன்யருடன் ஹரிச்சந்திராவும் மங்கராஜாவும் துணையாகப் பிரயாணம் செய்தார்கள். பின்னர் ஸ்ரீசைதன்யர் அவர்களைத் திருப்பி அனுப்பிவிட்டார். ரேமுணு என்னும் இடம் வரையில் ராமானந்தர் மட்டுமே ஸ்ரீசைதன்யருடன் படகில் சென்றுர். ஸ்ரீசைதன்யரும், ராமானந்தரும் எந்த இடத்தில் பிரிந்தார்கள் என்பது குறித்து, நூலாசிரியர்கள் மாறுபட்ட கருத்துள்ளவர்களாக இருக்கிறுர்கள். கவிகர்ணபுராவும் கிருஷ்ணதாசரும் பத்ரக் என்னும் இடம்வரையிலும் ராமானந்தராயர் ஸ்ரீசைதன்யருடன் சென்றுர் என்று குறிப்பிடுகிறுர்கள். ரேமுணுவுக்கும் பத்ரக் என்னுமிடத்துக்கும் நாற்பது மைல் தூரமே இருக்கிறது.

**இஸ்லாமியத் தலைவரை மதம் மாற்றியது:** ஓரிஸ்ஸாவின் எல்லையை அடைந்ததும் ராஜாங்க அதிகாரிகள் ஸ்ரீசைதன்யரைச் சகல மரியாதைகளுடனும் வரவேற்றுர்கள். ஓரிஸ்ஸா ராஜ்யத்துக்கு அப்பால்-(அநேகமாக நரசிங்கபுரம், தாந்தன் என்னும் இடங்களிலிருந்து கங்கையின் முகத்துவாரம் வரை) உள்ள பிரதேசம் படைபலம் மிக்க முஸ்லிம் தலைவனின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. ஓரிஸ்ஸாவின் எல்லைக் கவர்னரின் நன்னம்பிக்கைச் சீட்டுக் கிடைத்தால்தான் எவரும் அந்தப் பிரதேசத்தின் வழியாகச் செல்ல முடியும். எனவே, அந்தச் சீட்டைப் பெறுவதற்காக ஸ்ரீசைதன்யர் சில தினங்கள் எல்லையோரத்திலேயே தங்கினர். கங்கைச் சமவெளிப் பிரதேசத்துக்கும் ஓரிஸ்ஸாவுக்கும் இடையே இருந்த பிரதேசம் மிகவும் ஆபத்தானதாகக் கருதப்பெற்றது. இதற்குக் காரணம் அப்போதிருந்த முஸ்லிம் நவாபின் கொடுமையே யாகும்.

கட்டாக்கில் ஸ்ரீசைதன்யருக்கு மக்கள் அளித்த மகோன்னதமான வரவேற்பைக் கண்ட முஸ்லிம் நவாப்பின் ஹிந்து ஒற்றன் ஓரிஸ்ஸா ராஜ்யம் முழுவதும் மனம் கனிந்து ஸ்ரீசைதன்யருக்கு

அளித்த வரவேற்பைக் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டான். நூற்றுக்கணக்கான சிஷ்யர்கள் சூழ, ஸ்ரீசைதன்யர் என்னும் மகான் தங்களுடைய ராஜ்யத்தை நோக்கி வந்துகொண் டிருக்கிறார் என்றும் அந்த மகான் செல்லும் இடங்களில் எல்லாம் ஆயிரக்கணக்கான மக்கள் தங்கள் தொழிலைக்கூடப் புறக்கணித்துவிட்டு, அவருடைய தரிசனத்துக்காகக் காத்துக்கொண் டிருக்கிறார்கள் என்றும் ஹிந்து ஒற்றன் நவாப்புக்குச் செய்தி அனுப்பினான்.

அந்த மகானைத் தரிசிக்க வேண்டும் என்று ஏற்கனவே எண்ணியிருந்த நவாபின் உள்ளத்தில் ஹிந்து ஒற்றன் அனுப்பிய செய்தி மேலும் பரபரப்பை ஏற்படுத்தியது. அந்த ஒற்றனின் தகவலே முஸ்லிம் நவாப்பின் மனத்தில் பெரிய மாறுதலை ஏற்படுத்தி, ஸ்ரீசைதன்யரைத் தரிசித்துப் பேசவும் தூண்டியது என்று கிருஷ்ண தாசர் குறிப்பிடுகிறார். பிரதாபருத்திரனுடைய ஒரிஸ்ஸா ராஜ்யத்தின் நடமாடும் தெய்வமாக விளங்கும் ஸ்ரீசைதன்யரைக் கௌரவித்து உபசாரம் செய்வதால், வலிமை மிக்க அண்டை நாடான ஒரிஸ்ஸாவின் நல்லெண்ணத்தைப் பெற்று அதைத் தமக்குச் சாதகமாக்கிக்கொள்ள இது ஒரு நல்ல சந்தர்ப்பம் என்று எண்ணி முஸ்லிம் நவாப் ஸ்ரீசைதன்யரைச் சந்திக்க ஏற்பாடுகள் செய்திருக்கலாம் என்பதிலும் சந்தேகமில்லை.

ஸ்ரீசைதன்யரிடத்தும் ஒரிஸ்ஸாவின் எல்லைக் கவர்னரிடத்தும் சென்று, ஸ்ரீசைதன்யரைத் தரிசிக்கத் தன்னுடைய நவாப் மிக்க ஆவலுடன் இருக்கிறார் என்றும் அதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்யும்படியும் நவாபின் ஒற்றன் வேண்டிக்கொண்டான். மகானைத் தரிசித்து அவருடன் பேச மிக்க ஆர்வத்துடன் முஸ்லிம் நவாப் இருப்பதாகவும் யுத்தம் தொடுக்கும் எண்ணம் எதுவும் நவாப்புக்கு இல்லை என்றும், எவ்வித பயமும் இல்லாமல் அமைதியாகத் தம்முடைய ஆளுகைக்கு உட்பட்ட பிரதேசத்தின் வழியாக ஸ்ரீசைதன்யர் செல்லலாம் என்று நவாப்பின் உத்திரவாதத்துடன் வந்திருப்பதாகவும் எல்லைப்புறக் கவர்னரிடம் ஒற்றன் எடுத்துரைத்தான். தங்களுடைய பழைய எதிரியின் நேர்மையிலும் பக்தியிலும் ஒரிஸ்ஸா கவர்னருக்குப் பூரண நம்பிக்கை ஏற்படவில்லை. எனினும், நிராயுதபாணியாக ஐந்தாறு பணியாட்களை மட்டுமே அழைத்துக்கொண்டு

வந்தால் ஸ்ரீசைதன்யரைச் சந்திக்கலாம் என்ற நிபந்தனையுடன் எல்லைக் கவர்னர் நவாப்புக்கு அநுமதி தந்தான்.

முஸ்லிம் நவாப் ஹிந்து உடை அணிந்து வந்து ஸ்ரீசைதன்யரைப் பேட்டி கண்டான். கடந்த காலத்தில் செய்த அக்கிரமங்களை எல்லாம் தெரிவித்து அவற்றுக்காக ஸ்ரீசைதன்யரிடம் நவாப் மனம் இரங்கினான்; தான் இழைத்த குரூரமான செயல்களை நினைத்தும் நவாப் மிகவும் வருந்தினான். கிருஷ்ணனின் நாமங்களை உச்சரித்ததாலேயே அதன் சக்தியும் பெருமையும் சேர்ந்து பின் மனத்தை முற்றும் மாற்றிவிட்டது.

நவாபின் நல்லெண்ணத்துக்கு அடையாளமாக இன்னல் நிறைந்த பிரதேசத்தின் வழியாகத் தங்களை, கங்கையின் முகத்துவாரம் வரையில் பத்திரமாகக் கொண்டு சேர்த்துவிடவேண்டும் என்று, சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு முகுந்த தத்தர் நவாப்பிடம் கேட்டார். உடனே நவாபும் அதற்கு ஒப்புக்கொண்டான். ஒரிஸ்ஸா கவர்னருடன் சிறிது நேரம் அளவளாவி அவனுக்குப் பரிசில்களும் அளித்துவிட்டுத் தன்னுடைய பிரதேசத்துக்கு நவாப் போய்ச் சேர்ந்தான். அடுத்த நாள், ஸ்ரீசைதன்யர் தொடர்ந்து பிரயாணம் செய்வதற்காக அருமையான படகை அனுப்பியதுடன், பயங்கரமான மந்திரேசுவரர் நதியின் கரையில் உள்ள பிச்சால்டா என்னும் இடத்துக்குப் போக வழித்துணையாக, பத்துப் படகுகள் நிறையச் சிப்பாய்களையும் அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்ததுடன் தானும் அந்த இடத்துக்குச் சென்றான். நந்திக் கிராமத்துக்கு மேற்கேயும் தாம்லுக் என்னும் இடத்துக்குத் தெற்கே பதினெட்டு மைல் தொலைவிலும் அமைந்துள்ளது பிச்சால்டா. அங்கே ஸ்ரீசைதன்யரிடம் முஸ்லிம் நவாப் விடை பெற்றுக்கொண்டான்.

பிச்சால்டாவிலிருந்து, தம்முடைய அன்புக்குரிய சிஷ்யரான ராகவ பண்டிதரின் சொந்த ஊரான பானிஹாடியை ஸ்ரீசைதன்யர் அடைந்தார். அங்கே ராகவ பண்டிதரின் இல்லத்துக்கே சென்றார். ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்திருக்கிறார் என்ற தகவல் அந்த ஊரில் பெரிய பரபரப்பை ஏற்படுத்தியது. வெகு தூரம் நடந்தும் படகில் நீரைக் கடந்தும் ஏராளமான மக்கள் ஸ்ரீசைதன்யரை வரவேற்கக் கூடிவிட்டார்கள். ராகவர், ஸ்ரீசைதன்யரை

முன்னின்று வரவேற்றார். வானைப் பிளக்கும் ஆரவாரத்துக்கும் மகிழ்ச்சி நிறைந்த வாழ்த்தொலிக்கும் இடையே ஸ்ரீசை தன்யரை, ராகவர் அழைத்துச் சென்றார். ஒரிஸ்ஸா சாம்ராஜ் யத்தின் ராஜ்ய மதமாக விளங்கும் பெருமை பெற்ற ஸ்ரீசைதன்ய நெறியின் தாயகம் என்ற முறையில் வங்கம் முழுவதுமே பெருமிதம் அடைந்தது. நாடு முழுவதும் பரவிவரும் புதிய பக்தி இயக்கம் வங்கத்தில்தான் முதலில் பிறந்தது என்று வங்காளிகள் பெருமை கொண்டார்கள். ஏற்கனவே ஸ்ரீசைதன்யரின் பக்தி நெறியைப் பானிஹாடி மக்களிடையேயும் சுற்றுப் புறத்திலும் தீவிரமாகப் பரப்பி வெற்றி கண்டு ஸ்ரீசைதன்யரின் பக்தி நெறியைப் பரப்பும் முக்கிய இடங்களில் ஒன்றாகப் பானிஹாடியைச் செய்திருந்தார் நித்தியானந்தர்.

அந்த ஊரில் ஒரு நாள் இரவு முழுவதும் ஸ்ரீசைதன்யர் தங்கி யிருந்தார். பின்னர், குமார ஹட்டாவில் உள்ள ஸ்ரீவாசரின் இல் லத்துக்குச் சென்றார். காஞ்சிராபராவில் உள்ள சிவானந்த சென், வாசுதேவதத்தர் ஆகியோரின் இல்லங்களுக்கும் சாக்டாவுக்கு அருகே உள்ள யாஸ்டா என்னும் ஊரில் இருந்த ஜகதீச பண்டி தரின் இல்லத்துக்கும் ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்தார். ஜகதீசரால் நிறுவப்பெற்ற ஸ்ரீஜகந்நாதர், கௌர கோபாலர் (ஸ்ரீசைதன்யர்) ஆகியோருடைய விக்கிரகங்கள் அமைந்த சிதிலமான கோயிலை இன்றும் யாஸ்டாவில் காணலாம். அந்த ஊருக்கு ஸ்ரீசைதன்யர் விஜயம்செய்தபோது கதாதரதாசர் பாடிய பாடல்கள் இன்றும் தினந்தோறும் பூஜைவேளையின்போது அங்கே பாடப்பெறுகின்றன.

பூரியிலிருந்து வித்யாநகரை அடைந்து, பின்னர் கூலியாவுக்குப் புறப்பட்டு, கங்கைக்கரையோரமாகவே கௌடாவுக்கு அருகே உள்ள ராமகேலியை அடைந்தார் ஸ்ரீசைதன்யர். கௌடாவி லிருந்து திரும்பி, சாந்திபுரத்தை அடைந்து குமாரஹட்டாவில் ஸ்ரீவாசரின் இல்லத்துக்கும் பானிஹாடியில் ராகவரின் இல்லத் துக்கும் அவர் விஜயம் செய்தார் என்றும் பின்னர் பல இடங் களுக்கும் சென்று மெல்ல மெல்ல, பூரிக்குத் திரும்பினார் என்றும் 'சைதன்ய பாகவதம்' என்னும் நூல் கூறுகிறது. கவிகர்ண புராவின் வரலாற்றுக்குச் சற்றேறக் குறைய பொருத்தமாக

கிருஷ்ணதாசரின் வரலாற்றையொட்டியே பிரயாணக் குறிப்புக்கள் இந்த நூலில் எழுதப்பெறுகின்றன. இந்த விஷயத்தில் பிருந்தாவனதாசர் கூறுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. வழியில் உள்ள முக்கியமான இடங்களில் தங்கித் தம் பக்தி நெறியைப் பற்றி எடுத்துரைக்காமல் ஸ்ரீசைதன்யர், வித்யாநகருக்கு நேராகச் சென்றுர் என்பது நம்பத்தக்கதாக இல்லை.

யாஸ்டாவிலிருந்து, வித்யாநகருக்கு ஸ்ரீசைதன்யர் வந்திருக்கக்கூடும். நவத்வீபம் என்று இப்போது வழங்கும் கூலியாவுக்கு வடமேற்கே சாந்திபுரத்துக்குப் போகும் வழியில் உள்ளது வித்யாநகரம். அங்கேதான் பூரியில் இருந்த வாசுதேவ சார்வபௌமரின் சகோதரரான வித்யா வாசஸ்பதி இருந்தார். அங்கே ஸ்ரீசைதன்யர் வந்த செய்தியைக் கேள்வியுற்றதும் ஆயிரக்கணக்கான மக்கள் அன்னுருடைய தரிசனத்துக்காகக் கூடிவிட்டார்கள். மக்கட்கூட்டம் சொல்ல முடியாத அளவுக்குப் பெருகிவிடவே, ஸ்ரீசைதன்யர் எவருக்கும் தெரிவிக்காமல், கூட்டத்தைத் தவிர்ப்பதற்காக, கூலியாவுக்குச் சென்றுவிட்டார். கூலியாவில் மக்கள் ஸ்ரீசைதன்யருக்கு அளித்த மாபெரும் வரவேற்பைக் குறித்துப் பிருந்தாவனதாசர் தம் நூலில் அற்புதமாக வர்ணித்திருக்கிருர்.

கூலியாவில் சில நாட்கள் ஸ்ரீசைதன்யர், மாதவ சட்டோபாத்யாயா என்பவரின் வீட்டில் தங்கி, எல்லாப் பக்தர்களுக்கும் காட்சி தந்து, தம்முடைய பக்தி நெறியை மீண்டும் ஒரு முறை, எடுத்துரைத்தார். ஸ்ரீசைதன்யரின் உபதேசத்தைக் கேட்டவர்களில் பலர், ஐந்தாண்டுகளுக்கு முன், அவருக்குப் பரம விரோதிகளாக இருந்தவர்களாவர். ஸ்ரீசைதன்யரின் ஆத்மிகப் பெருமையை உணர்ந்த அவர்கள் தங்கள் அறியாமைக்கும் அவருக்கு இழைத்த தீங்குகளுக்கும் வருந்தி அவரிடம் மன்னிப்பை வேண்டினர்கள். முன்பு ஸ்ரீசைதன்யர் சொன்னதற்கெல்லாம் குதர்க்கம் பேசி, அவரை எதிர்த்து வந்த ஒருவர் இப்போது அவரிடம் மன்னிப்புப் பெறவேண்டி நின்றுர். " இளமைப் பருவத்தில் எவ்வளவு தீவிரமாக வைஷ்ணவர்களை எதிர்த்துப் பிரசாரம் செய்தீரோ, அந்த வேகத்துடன் உமக்கு இருக்கும் கவிதா சக்தியையும் இசைப் புலமையையும் வைஷ்ணவர்களின் பெருமையைப் பாடுவதில்

செலுத்துக" என்று ஸ்ரீசைதன்யர் அவரிடம் தெரிவித்தார். அநேகமாக இவர், 'வைஷ்ணவ வந்தனே' என்னும் நூலின் ஆசிரியரான வைஷ்ணவதாசராக இருக்கலாம். வைஷ்ணவர்களுக்கு இடையூறு விளைவித்த பலருக்கும் ஸ்ரீசைதன்யர் கூலியாவில்தான் மன்னிப்பு அளித்திருக்கிருர். இதனுல் அந்த இடமே 'அபராத பஞ்ஜன் பதம்'—எல்லாவித அபசாரங்களுக்கும் மன்னிப்பு வழங்கும் தலம்—என்று வழங்குகிறது.

ஸ்ரீசைதன்யர் துறவு மேற்கொண்ட சிறிது காலத்துக்குள்ளாகவே அவருக்குச் சிஷ்யரான வக்ரேசுவர பண்டிதரால் வைஷ்ணவ மதத்தைத் தழுவிய மாயாவாதியான தேவானந்த பண்டிதர், வித்யா கர்வமுற்றிருந்தார். ஸ்ரீசைதன்யர் அவருக்குப் பாகவதக் கதையை அற்புதமாக எடுத்துரைத்து, அவரைத் திருத்தினுர். இந்தப் பாகவத உபந்யாசம், ஸ்ரீசைதன்யரின் புகழ்பெற்ற உபதேசங்களில் ஒன்ருகும்.

**ராமகேலியில் :**—கூலியாவிலிருந்து பாகீரதி நதிக்கரையோரமாகவே, அநேகமாக மூர்ஷிதாபாத் ஜில்லாவின் வழியாக, ராமகேலிக்கு, ஸ்ரீசைதன்யர் புறப்பட்டார், இங்கிலீஷ்பஜாரிலிருந்து தெற்கே எட்டரை மைல் தொலேவில் உள்ள ராமகேலியில், வங்காள நவாப்பான ஹுசேன்ஷாவின் மந்திரிகளான சாகரமல்லிக, தவிர்காசர் (சநாதனர், ரூபர்) என்பவர்கள் இருந்தார்கள். ஸ்ரீசைதன்யரின் வருகையால் சுற்றுப்புறமிருந்த மக்களிடையே ஏற்பட்ட உற்சாகத்தையும் ராமகேலியில் அவர் நடத்திய நாமசங்கீர்த்தனத்தில் கலந்துகொள்ள வேண்டும் என்னும் மக்களின் ஆர்வத்தையும் கண்டு முஸ்லிம் நவாப்புக்கு ஆத்திரம் ஏற்பட்டது. ஒரிஸ்ஸாவில் பல விக்கிரகங்களேயும் கோயில்களேயும் அழித்து ஹிந்து மதத்துக்குப் பரம விரோதியாக இருந்தான் அந்த வெறி பிடித்த நவாப். எனவே, கௌடாவிலும் அதைச் சுற்றிலும் ஹிந்து மதம் முற்றும் மறைந்தது போலவே இருந்தது.

ஸ்ரீசைதன்யரைப் பற்றியும் அவருடைய நடவடிக்கைகளேக் குறித்தும் நகரத்தின் போலீஸ் அதிகாரி நவாப்புக்குத் தெரிவித்தான். "நூற்றுக் கணக்கான பேர்கள் எப்பொழுதும் ஸ்ரீசைதன்யரைச் சூழ்ந்திருக்கிருர்கள். அவருடைய பேச்சைக் கேட்கவோ

தரிசனத்துக்காகவோ வந்தவர்கள், வீட்டுக்குச் செல்லவேண்டும் என்ற ஆசையே இல்லாதவர்களாக இருக்கிறார்கள். இந்த மகானின் வசீகரமே மகத்தானது'' என்று கொத்தவால், நவாப்புக்குத் தகவல் அறிவித்தான். மேற்கொண்டு தகவல்களையும் இது சம்பந்தமாகத் தன்னுடைய சொந்த அபிப்பிராயங்களையும் தெரிவிக்குமாறு, நவாப் தன் உயர்ந்த அதிகாரிகளில் ஒருவரான கேசவகான் என்பவரை அனுப்பினான். அதிர்ஷ்டவசமாக, கேசவகான், ஸ்ரீசைதன்யரின் சிஷ்யர்களில் ஒருவராக இருந்திருக்கக் கூடும். நவாப் வெறுத்து வந்த ஹிந்துக்களின் சாஸ்திரங்களில் சொல்லப் பெறும் அன்பு நெறியைத் தீவிரமாகப் பரப்புகிறவரும் பல முஸ்லிம்களை ஹிந்து மதத்துக்குத் திருப்பியவருமான ஸ்ரீசைதன்யரிடம் நவாப்புக்கு அசூயை ஏற்பட்டு ஏதாவது விபரீதம் நேரிடுமோ என்று அவர் அஞ்சினார். எனவே, 'மரங்களின் நிழலில் தங்கித் திரியும் ஏழைப் பிச்சைக்காரரே ஸ்ரீசைதன்யர்; எனவே அவரைப் பற்றி அதிகமாகக் கவலைப்பட வேண்டாம்' என்று கேசவர் செய்தி அனுப்பினார்.

மிகவும் அறிவுள்ள நவாப் அதை நம்பவில்லை, ''ஏதாவது நன்மை விளையும் என்ற நம்பிக்கை இல்லாமல் நூற்றுக்கணக்கான மக்கள் சாதாரணப் பிச்சைக்காரனின் பின்னால் செல்லமாட்டார்கள். ஸ்ரீசைதன்யர் அத்தகையவர் அல்ல. தன்னுடைய அதிகாரிகளுக்கு ஆறு மாதம் சம்பளம் கொடுக்காமல் இருந்துவிட்டால் அவர்கள் தனக்கு விரோதமாகச் சதி செய்து விடுவார்களே! ஒழுங்காகச் சம்பளம் பெறும் பணியாட்கள்கூட ஏதாவது தொந்தரவுகள் கொடுப்பதில் ஈடுபட்டிருப்பார்கள். எனவே, அலட்சியம் செய்யக்கூடிய சாதாரண மனிதராக ஸ்ரீசைதன்யர் இருந்திருந்தால் நூற்றுக்கணக்கான மனிதர்கள் தெய்வமாக மதித்து அவரைத் தொடர்ந்து செல்லமாட்டார்கள்'' என்று அவரிடம் நவாப் சொன்னான். ஸ்ரீசைதன்யரைக் குறித்து நவாப் மிகவும் உயர்ந்த மதிப்பு வைக்கத் தொடங்கினான். எந்தக் காரணத்தைக் கொண்டும் அவருக்கு எவரும் எவ்விதத் தொந்தரவும் கொடுக்கக்கூடாது என்று தன்னுடைய காஜிகளுக்கும் கொத்தவால்களுக்கும் நவாப் உத்திரவிட்டான். பின்னர் தன்னுடைய மந்திரியான தவிரகாஸ்

(ரூபர்)ஸை அழைத்து, அவருடைய கருத்துக்களை நவாப் தெரிந்து கொண்டான். மந்திரி தெரிவித்த விவரங்களிலிருந்து ஸ்ரீசைதன்ய ரின் ஆத்மிகப் பெருமையை நவாப் உணர்ந்துகொண்டான்.

நவாபின் உத்திரவையும் அடிக்கடி ஸ்ரீசைதன்யரைப்பற்றி விசாரிப்பதையும் கண்டு, நவாபிடம் இருந்த ஸ்ரீசைதன்யரின் பக்தி நெறியைப் பின்பற்றும் உயர்ந்த அதிகாரிகளின் மனத்தில் பெருத்த சஞ்சலம் ஏற்பட்டது. எனவே, அவர்கள் எல்லோரும் ஓரிடத்தில் கூடி நிலைமையைக் குறித்து ஆலோசித்தனர். 'சர்வாதி காரியான நவாப்பின் மனோபாவம் மதத்துவேஷம் கொண்ட யாரா வது ஒருவருடைய துர்ப்போதனையினால் உடனே மாறினாலும் மாறிவிடும். இதனால் ஸ்ரீசைதன்யருக்கு ஏதாவது ஆபத்து நேரிட லாம்' என்று அவர்கள் கருதினார்கள். எனவே, தலைநகருக்கு அருகே இருப்பதை விட்டு விரைவில் வேறு இடத்துக்குச் செல்லும் படி ஸ்ரீசைதன்யரை வேண்டிக் கொள்வது என்று அவர்கள் முடி வுக்கு வந்தார்கள். தங்கள் வேண்டுகோளை ஸ்ரீசைதன்யரிடம் தெரிவிப்பதற்காக அதிகாரிகள் வயது முதிர்ந்த பிராம்மணர் ஒரு வரை அனுப்பினார்கள்.

ஸ்ரீசைதன்யரைச் சுற்றி ஏராளமான மக்கள் கூடியிருந்தார்கள். எனவே, அவரால் ஸ்ரீசைதன்யரை நெருங்கவே முடியவில்லை. நித்தியானந்தரையும் மற்றவர்களையும் சந்தித்து உயர்தர அதிகாரி களுடைய பயத்தை அவர்களிடம் எடுத்துரைத்தார்.

இது சம்பந்தமாக நடுநிசி வேளையில் எவருக்கும் தெரியாமல் சாகரமல்லிகாவும் தவிரகாசாவும் (சநாதனரும் ரூபரும்) ஸ்ரீசைதன்யரைக் கண்டுபேச வந்தார்கள். ஏற்கனவே அவர்கள் இருவரும் ஸ்ரீசைதன்யரின் உன்னத நோக்கத்துடன் தொடர்பு கொண்டிருப்பதாகப் பலர் எண்ணிவந்தார்கள். மேலும் வெளிப் படையாக அவருடைய விஷயத்தில் அக்கறை காட்டினால் அதனால் நவாப்பின் மனத்தில் வீண் சந்தேகத்தை உண்டுபண்ணும் என்று அவர்கள் இருவரும் பயந்தே இரவில் ஸ்ரீசைதன்யரைச் சந்தித் தார்கள்.

கைகளைக் கட்டிக்கொண்டு அவர்கள் இருவரும் ஸ்ரீசைதன்ய ரின் முன் பாடல்களைப் பாடினார்கள்; உலகபந்தங்களிலிருந்து

தங்களை விடுவிக்கவேண்டும் என்றும் மனப்பூர்வமாக வேண்டினர். முஸ்லிம் நவாபுடன் தொடர்பு கொண்டிருப்பது குறித்துத் தங்களுடைய வருத்தத்தையும் தெரிவித்தனர். ஸ்ரீசைதன்யர், அவர்களை ஆசீர்வதித்து, பதவிகளை ராஜிநாமா செய்துவிட்டு, தம்முடைய பக்தி இயக்கத்தில் ஈடுபடுமாறு யோசனை கூறினர். எல்லாத் துயரங்களிலிருந்தும் கிருஷ்ணபகவான் விரைவில் அவர்களை விடுதலை செய்வார் என்று ஸ்ரீசைதன்யர் ஆறுதல் அளித்தார். முஸ்லிம் நவாபை என்றென்றும் நம்ப முடியாது. எனவே உடனே ராமகேலியை விட்டு ஸ்ரீசைதன்யர் வேறு எங்கேயாவது சென்று விட வேண்டும் என்றும் இவ்வளவு பெரிய கூட்டம் பின் தொடர, பிருந்தாவனத்துக்குச் செல்லவேண்டாம் என்றும் அவர்கள் சைதன்யரை வேண்டிக்கொண்டார்கள்.

கௌடிய வைஷ்ணவத்தின் மூன்று பிரதான குருநாதர்களான ரூப, சநாதன, ஜீவர் (ரூபசநாதனர்களுடைய மருமகர்) என்னும் மூவருடைய வெகு நாளைய வாசஸ்தலமான ராமகேலியின் மகத்துவமும், பெருமையும் ஸ்ரீசைதன்யரின் விஜயத்தினுல் மேலும் உயர்ந்தது. ஸ்ரீசைதன்யரின் ராமகேலி விஜயம் வைஷ்ணவப் பண்பாடும், இலக்கியமும் பெற்ற மகத்தான சாதனைகட்கு அஸ்திவாரமாக அமைந்தது.

பின்னர், தம்முடைய பக்தி மனோபாவத்துடன் விரஜையின் அழகில் மனத்தை ஒருநிலைப்படுத்துவதற்குச் சிஷ்யர் கூட்டம் தடையாக இருக்கும் என்ற எண்ணத்தினுல் பிருந்தாவனத்துக்குச் செல்வதை அடுத்த ஆண்டுக்கு ஒத்திப்போட்டு, பூரிக்குத் திரும்பிச் செல்வது என்று ஸ்ரீசைதன்யர் தீர்மானித்தார். எனவே, கங்கையைக் கடந்து கனுய்நட்சாலாவை அவர் அடைந்தார்.

"உங்களைப் பார்ப்பதற்காகவே இந்தப் பக்கங்களில் எல்லாம் நானே விஜயம் செய்துவிட்டேன். பூரிக்குச் சென்ற பிறகே பிருந்தாவனத்துக்குப் போகப் போகிறேன். எனவே, இந்த ஆண்டு என்னைத் தரிசிப்பதற்காகப் பூரிக்கு எவரும் வரவேண்டாம்" என்று வங்காளப் பக்தர்களிடம் ஸ்ரீசைதன்யர் கேட்டுக்கொண்டார். ரத யாத்திரைக்கு முன்பே, அநேகமாக, ஜூன் மாதத்தின் கடைசி வாரத்தில் ஸ்ரீசைதன்யர் சாந்திபுரத்துக்குத் திரும்பிவிட்டார். மழைக்

காலம் தொடங்குவதற்குச் சில தினங்களுக்கு முன்னரே அவர் பூரியை அடைந்தார். அங்கேயே சாதுர்மாஸ்ய விரதத்தை எடுத்து முடித்த பின்னர், (1515-இல்) அக்டோபர் மாதம் பிருந்தா வனத்துக்குப் புறப்பட்டார். இதற்கு முந்திய வருடம் அக்டோபர் மாதத்தில் விஜயதசமி அன்றே ஸ்ரீசைதன்யர் வங்காளத்துக்குப் புறப்பட்டார் என்பதை ஏற்கனவே பார்த்தோம். ராமகேலிவரையில் சென்று திரும்பியதற்கு இரண்டு மாதத்துக்கு மேலாகியிருக்காது. (1514 ஆம் ஆண்டு) நவம்பர் அல்லது டிசம்பர் மாதம் அவர் ராம கேலியை அடைந்திருக்கலாம். கனுய்நட்சாலாவிலிருந்து சாந்தி புரத்துக்குச் சென்று (1515-இல்)ஜூன் ஜுலை மாதத்தில் பூரிக்குத் திரும்பியிருக்கிறார். கனுய்நட்சாலா-ராமகேலியிலிருந்து புறப்பட்ட ஸ்ரீசைதன்யர் சாந்திபுரம்-பூரியை அடைவதில் ஏழு மாதங்களாகி யிருக்கின்றனவே! இது ஏன் என்னும் கேள்வி பிறக்கிறது. இந்த ஏழு மாதங்களிலும் ஸ்ரீசைதன்யர் எங்கே இருந்தார்? அவருடைய வர லாற்றை எழுதிய எந்த ஆசிரியரும் இது சம்பந்தமாக விஷயத்தைத் தெளிவாக்கவில்லை. இந்த இடைக்காலத்தில் என்ன நடந்தது என் பதை அறிவதற்கு அசாமிய இலக்கியங்களும் சம்பிரதாயங்களும் துணையாக இருக்கின்றன. இதற்காக நாம் அவற்றுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம்.

அசாமில் காமரூபம் என்னும் ஜில்லாவில் ஹாஜோ என்னும் இடத்துக்கு அருகே மணிகூட பர்வதம் என்று ஒரு மலை இருக்கிறது. அதன்மேலே பிரசித்தி பெற்ற ஹயக்ரீவ மாதவ விஷ்ணுவின் கோயில் அமைந்திருக்கிறது. இந்த மலையின் அடிவாரத்திலே சைதன்ய கோபம் என்று வழங்கும் குகையில் சிலகாலம் ஸ்ரீசைதன்யர் தங்கினார் என்று, 'சத் சம்பிரதாய கதை' என்னும் நூலில் பிரபல அசாமிய ஆசிரியரான பட்டதேவர் எழுதியிருக்கிறார். இவர், தாமோதரர் (கி. பி. 1418—1598) அவர்களுடைய அன்புக்கு பாத் திரமான சிஷ்யர்; சிறந்த அறிவாளி.

இந்த மணிகூட பர்வதத்தில் தான், ரத்னேசுவர விப்பிரருக்கு ஸ்ரீசைதன்யர் அருள் பாலித்து, ரத்தின பாதுகா என்னும் பெயரை யும் அவருக்கு அளித்தார். ஹயக்ரீவ மாதவர் ஆலயத்தில் பாக

வதம் படிப்பதையும் நாமசங்கீர்த்தனத்தையும் ஸ்ரீசைதன்யரே துவக்கிவைத்தார்.

இன்னும் அசாமின் உட்பாகங்களுக்கும் ஸ்ரீசைதன்யர் சென்றார். பிரசித்தி பெற்ற பரசுராம குந்தாவுக்கும் அவர் விஜயம் செய்தார். பின்னர் அவர் தம்முடைய பழைய இடமான மணிகூட பர்வதத்துக்கே திரும்பிவிட்டார். இங்கே, மகூரி என்னும் ஊரைச் சேர்ந்த காந்தபூஷணர், கவிசேகரர், காந்தஹாரர், இன்னும் பலருக்கும் பாகவதத்தைச் சொல்லிக் கொடுத்தார். நாரத முனிவர் அருளியது போல, கிருஷ்ண பகவானின் நாமாவளியைப் பாடுவதையும் பழக்கத்துக்குக் கொண்டுவந்தார்.

இந்த இடத்தில்தான், பட்டதேவரின் ஆசாரியரான தாமோதரர், தம்முடைய படகோட்டியும் படகும், நதியில் மறைந்து போனதை எண்ணி வருத்தப்பட்டுக்கொண்டு அமைதி இழந்திருந்தார். இந்த நிலையில் அவர் ஸ்ரீசைதன்யரை அடைந்தார். உலகப் பொருள்களின் மேல் உள்ள பற்றுக்களைத் துறக்கவேண்டும் என்று எடுத்துச் சொல்லி அவருக்கு ஸ்ரீசைதன்யர் ஆறுதல் கூறினார். தாமோதரருக்கு வைஷ்ணவ தர்மத்தை உபதேசித்த பிறகு ஸ்ரீசைதன்யர் ஒரிஸ்ஸாவுக்குத் திரும்பினார்.

'சத் சம்பிரதாய கதை' என்னும் நூலை எழுதுவதற்கு, 'சைதன்ய சங்கிரகம்', 'கிருஷ்ணபாரதி', நரசிம்ஹ க்ருதா' என்னும் மூன்று நூல்கள் தமக்கு ஆதாரமாக இருந்தன என்று பட்ட தேவர் குறிப்பிடுகிறார். 'சைதன்ய சங்கிரகம்' என்னும் நூல் நமக்குக் கிடைக்கவில்லை. நமக்குக் கிடைத்துள்ள மற்ற இரண்டு புத்தகங்களில் எழுதியிருப்பது பட்டதேவரின் கொள்கைக்கு ஏற்ப ஒத்து இருக்கிறது. அந்த இரண்டு நூல்களும், 'சத் சம்பிரதாய கதை'க்குக் காலத்தால் முற்பட்டவையே. அநேகமாக அசாமில் ஸ்ரீசைதன்யர் தங்கியிருந்த காலத்திலேயே அவை எழுதப் பெற்றிருக்கவேண்டும். நீலகண்ட தாசர் எழுதிய தாமோதரரின் வாழ்க்கை வரலாற்றிலும் இதற்குச் சான்றுகள் கிடைக்கின்றன. தம்முடைய இருப்பிடமான ரத்னேசுவரத்திலிருந்து தினந்தோறும் மணிகூட பர்வதத்துக்கு வந்து, ஸ்ரீசைதன்யரைத் தாமோதரர் தரிசித்துச் செல்வார் என்றும் உலகத்துக்குச் சொல்லவேண்டிய பக்தி நெறியை ஸ்ரீசைதன்யர்

தாமோதரருக்கு உபதேசித்துவிட்டு ஒரிஸ்ஸாவுக்குச் சென்றார் என்றும் அந்த நூல் கூறுகிறது.

ஸ்ரீசைதன்யர் ஒரு குகையில் இருந்தார் என்றும் அதை அவர் விட்டு சென்ற பின்னர் அவர் நினைவாகவே அந்தக் குகையை, சைதன்ய கோபம் என்று மக்கள் அழைக்கிறார்கள் என்றும் ஹாஜோவை ஒட்டிய பகுதியில் கர்ணபரம்பரையாகச் சொல்கிறார்கள். அந்தக் குகைக்கு எதிரே இரண்டு இடங்களைச் சுட்டிக்காட்டி ஒன்றில்தான் ஸ்ரீசைதன்யர் அமர்ந்திருந்தார் என்றும் மற்றொன்றில் அவர் புனித தீர்த்தம் அடங்கிய கமண்டலத்தை வைத்தார் என்றும் அந்த நாட்டு மக்கள் இன்றும் சொல்லிவருகிறார்கள். ஸ்ரீசைதன்யர் அசாமிலிருந்தே ஒரிஸ்ஸாவுக்குத் திரும்பிச் சென்றார் என்று இந்த நூல்கள் யாவும் கூறுகின்றன.

பிருந்தாவனத்திலிருந்து கி. பி. 1516-ல் பூரிக்குத் திரும்பிய பின்னர் அதை விட்டு எங்குமே ஸ்ரீசைதன்யர் புறப்படவே இல்லை. கி. பி. 1515-ல் வங்கத்திலிருந்து திரும்பிய பிறகும் அவர் மீண்டும் அங்கே சென்றதும் கிடையாது. எனவே, அவர் வங்காளத்துக்குச் சென்றிருந்த சந்தர்ப்பத்தைத் தவிர வேறு எந்தச் சமயத்திலும் அவரால் அசாமுக்குச் சென்றிருக்க முடியாது. இந்த நிலையில் ஸ்ரீசைதன்யரின் வாழ்க்கை வரலாற்றில் அவருடைய அசாம் விஜயத்தைக் குறித்து எவருமே ஏன் எழுதாமல் விட்டுவிட்டார்கள் என்னும் கேள்வி எழுகிறது. ஸ்ரீசைதன்யர் எங்கெங்கே விஜயம் செய்தாரோ அங்கெல்லாம் எதிர்பாராத வெற்றியை அடைந்து, கிருஷ்ணனையே சிறப்பாகக் கருதும் வைஷ்ணவ நெறியை நிலைநிறுத்தி வந்திருக்கிறார் என்பதை நெடுகிலும் பார்த்தோம்.

தாந்திர நெறிக்குப் பிறப்பிடமாகவும் அந்நெறியைத் தோற்றுவித்து இந்தியாவிலும் கடல் கடந்த சில பிரதேசங்களிலும் பரப்புவதற்குக் காரணமாகவும் அசாம் இருந்துள்ளது என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. அந்த ராஜ்யத்தில் உள்ள காமாட்சி கோயில் தாந்திரிக நெறியைப் பின்பற்றுவர்களுக்கு முக்கியமான யாத்திரை ஸ்தலமாகும். தாந்திரிக நெறியும் தத்துவமும் வைஷ்ணவத்தினின்றும் முற்றும் மாறானது. அந்த நாட்டில் ஸ்ரீசைதன்யர் இருந்த சொற்ப நாட்களில், தாந்திரிக நெறிக்கு ஓர் கோட்டை

போல் இருந்த அசாம் ராஜ்யத்தில் ஸ்ரீசைதன்யர் உறுதியான வெற்றி பெருமல் இருந்திருக்கலாம் அல்லது அவரிடம் உபதேசம் பெற்ற பண்டிதர்கள், தாந்திரிக நெறியிலிருந்து முற்றும் தங்களை விடுவித்துக் கொள்ள முயலாமல் இருந்திருக்கலாம். அவர்கள் சைதன்ய வைஷ்ணவ நெறியிலிருந்து சிறிது மாறுபட்டவர்களாக இருக்கிருர்கள். இத்தகைய காரணங்களால் தான், சில பண்டிதர்களை ஓரளவு ஸ்ரீசைதன்யர் மாற்றிய அசாம் விஜயத்தையே, ஸ்ரீசைதன்யரின் வரலாற்று ஆசிரியர்கள் நூலில் குறிப்பிடாமல் விட்டுவிட்டார்கள். அப்படி எழுதினுல், தோல்வியே கண்டிராத வெற்றிச் சம்பவங்களே நிறைந்த வாழ்க்கையைப் பாராட்டாமல், அவருடைய ஒரு தோல்வியை மட்டுமே பெரிதாக மற்றவர்கள் பேச வழி ஏற்படும் என்ற அச்சத்திஞல் ஒருவேளை அவர்கள் அசாம் விஜயத்தைப் பற்றியே எழுதாமல் இருந்திருக்கலாம்.

ஸ்ரீசைதன்யர் மாற்றியதாகக் கருதப் பெறும் அசாம் ராஜ்யத்தின் தாந்திரிக பண்டிதர்களால் நிறுவப் பெற்ற சைதன்ய பக்தி, சைதன்யரின் வைஷ்ணவத்தின் அம்சங்களையும் தாந்திரிக–சாக்த–புத்தக் கொள்கைகளையும் கொண்டதாக இருக்கிறது.

மழைக்காலத்துக்கு முன்போ அல்லது தொடங்கும் சமயத்திலோ ஸ்ரீசைதன்யர் அசாமிலிருந்து சாந்திபுரம் வந்தடைந்தார். பூரிக்குப் புறப்படுவதற்கு முன்பு அவர் அங்கே ஐந்தாறு நாட்கள் தங்கினுர். ஸ்ரீசைதன்யருடன் சேர்ந்து, ஸ்ரீஅத்வைதர் மிகுந்த ஆடம்பரத்துடன் மாதவேந்திர பூரியின் ஜன்மதினத்தைக் கொண்டாடினுர். கோவர்த்தன மஜும்தாரின் புதல்வரும் சப்தகிராமத்தின் அதிபதியுமான ரகுநாததாசர் சாந்திபுரத்தில் ஸ்ரீசைதன்யரிடம் உபதேசம் பெற்றுக்கொண்டார். பிறகு தம் சிஷ்யர்களில், பலபத்திர பட்டாசார்ய, ஸ்வரூபதாமோதரர், இன்னும் நான்கைந்து பேர்களைத் தவிர மற்றவர்களை வங்காளத்திலேயே விட்டு, ஸ்ரீசைதன்யர் பூரிக்குப் புறப்பட்டார். தம்முடைய சிஷ்யர்கள் வசித்த இடங்களான குமாரஹட்டா, பானிஹாடி, வராஹ நகர் முதலிய இடங்களுக்கும் ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்தார்.

ஸ்ரீசைதன்யர் பூரியை அடைந்ததும் அவருடைய சிஷ்யர்கள் கவலை நீங்கியவர்களாய் மிகுந்த மகிழ்ச்சியுடன் அவரை வரவேற்றார்கள். அவர்களிடம் தம்முடைய பிரயாணத்தைப்பற்றி விவரித்தார்: "நான் வங்காளத்தை அடைந்ததும் என்னைச் சுற்றிலும் ஆயிரக்கணக்கான சிஷ்யர்கள் சூழ்ந்து கொண்டார்கள். நான் செல்லும் வழியையே மக்கள் மறித்துக் கொண்டார்கள். நான் தங்கிய வீடுகளில் எல்லாம் மக்களின் நெரிசலைத் தாங்கமுடியாமல், வீடுகளின் முகப்புக்களும் கதவுகளும் நொறுங்கின. நான் பார்த்த இடங்கள் எல்லாம் ஒரே தலைகளாகவே இருந்தன. மக்கள் சமுத்திரம் போலக் கூடியிருந்தார்கள். மிகுந்த சிரமப்பட்டு ராமகேலிக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்கே ரூப–சநாதனர் என்னும் சகோதரர்களைக் கண்டேன். சநாதனர் என்னிடம் விடை பெற்றுச் செல்லும் முன்பு, லட்சம்பேர் பின் தொடரப் பிருந்தாவனத்துக்குச் செல்வது சரியானவழி அல்ல என்று புதிர் போலச் சொல்லிவிட்டுச் சென்றார். அவர் சொன்ன வார்த்தைகளைப் பற்றி நான் நெடுநேரம் சிந்தித்துப் பார்த்தேன். மாதவ பூரியைப் போலத் தன்னந்தனியனாகப் பிருந்தாவனத்துக்குச் செல்லாமல், அநாவசியமான ஆடம்பரங்களுடன் ஆரவாரம் செய்து கொண்டு போகவிருக்கிறேனே என்று நான் நினைத்தேன். எனவே, பிருந்தாவனத்துக்குத் தனியாகவே செல்வது என்று நான் தீர்மானித்து விட்டேன்." இவ்விதம் ஸ்ரீசைதன்யர் சிஷ்யர்களிடம் தம் முடிவைத் தெரிவித்தார்.

மழைக்காலம் முடியும் வரையில் நான்கு மாதங்கள் பூரியிலேயே தங்கவேண்டும் என்று ஸ்ரீசைதன்யரை எல்லாச் சிஷ்யர்களும் வற்புறுத்தி வேண்டிக்கொண்டனர். மன்னன் பிரதாபருத்திரனின் சந்தோஷத்துக்காகவும் ஸ்ரீசைதன்யர் அவ்வாறே பூரியில் தங்க ஒப்புக்கொண்டார்.

மழைக்காலம் முடிந்ததும் கி.பி. 1515–இல் ஸ்ரீசைதன்யர் பிருந்தாவனத்துக்குப் புறப்பட்டார். அவருடைய வழித்துணைக்காக, பலபத்திர பட்டாசார்யாரையும் அவருடைய பிராம்மணப் பணியாளையும் அழைத்துச் செல்லும்படி ஸ்வரூப தாமோதரரும் ராய ராமானந்தரும் ஸ்ரீசைதன்யரை வற்புறுத்தினார்கள். ஜனங்களுக்குத் தெரியாத வகையில், வழியனுப்பு உபசாரம் முதலியவற்றுக்கு இடங்

கொடுக்காமல், அந்த இரண்டு பிராம்மணர்களையும் அழைத்துக் கொண்டு ஜாரி கண்ணம் வழியாக ஸ்ரீசைதன்யர் புறப்பட்டார்.

கட்டாக் நகரத்துக்கு வலப் புறமாக இருந்த கானகத்தை ஸ்ரீசைதன்யர் அடைந்தார். அத்காரா, தென்கா கானல், அங்குல், லாஹரா, சோடாநாக்புரி, சர்குஜா முதலிய இடங்களுக்கும் அந்தக் கானகம் பரவியிருந்தது. ஜன நடமாட்டமே அதிகம் இல்லாதது; கொடிய வன விலங்குகள் நிறைந்தது. தீய வழிகளையே பிழைப் பாகக் கொண்ட மக்களைத் தவிர வேறு யாரும் வசிக்காத காடு. சுலபத்தில் கடக்க முடியாத உயர்ந்த மலைகளுக்கிடையே அமைந்த அந்தக் காட்டில், புலி, யானை, மான், மயில், போன்ற பிராணிகளைப் பார்த்தபடியே ஸ்ரீசைதன்யர் சென்றார். இந்தக் காட்சிகளை அப்படியே தத்ரூபமாக, கிருஷ்ணதாச கவிராஜர் தம் நூலில் எழுதியிருக்கிறார். ஸ்ரீசைதன்யருடன் சென்ற பலபத்திரரைக் கொண்டு காட்டிலே நடந்த நிகழ்ச்சிகளை சநாதனர் எழுதும்படி செய்திருந்தார். அவற்றி லிருந்து கிருஷ்ணதாச கவிராஜர் சில பகுதிகளை எடுத்துக் கொண் டிருக்கிறார்.

கானகத்திலே ஸ்ரீசைதன்யர் சென்றுகொண் டிருக்கும் போது ஜார்கண்ட் வனத்தில் இருந்த மிருகங்கள் யாவும் கிருஷ்ணனின் நாமத்தைக் கூவிக்கொண்டே ஒன்றையொன்று தழுவின என்று அந்த வைஷ்ணவக் கவி எழுதியிருக்கிறார். ஸ்ரீசைதன்யருக்கு வேண்டிய ஆகாரத்தை, பலபத்திரர் சமைத்துக் கொடுத்தார். ஸ்ரீசைதன்யருடைய துணிகளையும் மேலாடைகளையும் பணியாள் துவைத்து வைத்தார். எளிமையான உணவு, தியானம் செய்வதற் கேற்ற சூழ்நிலை, தனிமை இவை யாவும் ஸ்ரீசைதன்யருக்கு எல்லை யற்ற மகிழ்ச்சியைத் தந்தன. அவருடைய பக்திமயமான உயர்ந்த கற்பனை, உண்மையில் அற்புதமான ஜார்கண்ட் கானகத்தின் வனப்பில் ஆழ்ந்தது. கண்ணில் தென்பட்ட மலைகள் யாவும் ஸ்ரீசைதன்யருக்குக் கண்ணனின் விளையாட்டு இடமான கோவர்த் தனகிரியாகவே தோற்றம் அளித்தன. நதிகள் புனித யமுனை நதியாகவும், மரங்கள் யாவும் பிருந்தாவனமாகவும் ஸ்ரீசைதன்ய ருக்குக் காட்சி தந்தன.

மிக்க மகிழ்ச்சியுடன் அவர் காசியை அடைந்தார். மணி கர்ணிகா கட்டத்தில் முதல் முதலாகக் கங்கையில் அவர் ஸ்நானம் செய்தார். கிழக்கு வங்காளச் சுற்றுப் பிரயாணத்தின்போது, அவரிடம் உபதேசம் பெற்று, அவருடைய யோசனையின்படி காசியில் வசிக்கும் தபனமிஸ்ரரை ஸ்ரீசைதன்யர் சந்தித்தார். பூரண சந்தோஷத்துடனும் அன்புடனும் ஸ்ரீசைதன்யரைத் தபன மிஸ்ரர் வரவேற்றார். மிஸ்ரரின் துணையுடன் ஸ்ரீசைதன்யர், காசிவிசுவ நாதர் கோயிலுக்கும் பிந்துமாதவர் சந்நிதிக்கும் சென்றார். பின்னர் அவருடைய வீட்டிலேயே தங்கினர்.

பிற்காலத்தில் ரகுநாதபட்ட கோஸ்வாமி என்று பெயர் பெற்ற ரகுநாதர் இங்கே வந்து ஸ்ரீசைதன்யரின் அருளையும் ஆசியையும் பெற்றார். பிறவியில் வைத்தியராகப் பிறந்து ஆசிரியராகப் பணி யாற்றி வந்த பழைய சிஷ்யரான சந்திரசேகரரும் காசியிலேயே வாழ்ந்து வந்தார். ஸ்ரீசைதன்யருடன் இருவருக்கும் இருந்த தொடர் பினல் தபன மிஸ்ரரும் சந்திரசேகரரும் நெருங்கிய நண்பர்களானார் கள். இந்தியாவில் மாயாவாதத்தின் கோட்டைபோல இருந்த காசியில் அப்பொழுது அவர்கள் இருவர்கள்தாம் வைஷ்ணவர்கள். ஒரு மகாராஷ்டிரப் பிராம்மணரும் இந்தச் சமயத்திலேயே, ஸ்ரீசைதன்யரின் சிஷ்யரானர். அப்பொழுது காசியில் நிலவியிருந்த சமய நிலையைக் குறித்து வருத்தத்துடன் அவர்கள் ஸ்ரீசைதன்ய ரிடம் தெரிவித்தார்கள். பிரகாசானந்தரின் தலைமையிலிருந்த மாயாவாத சந்நியாசிகள், ஸ்ரீசைதன்யர் வெறும் ஏமாற்றுக்காரர் என்றும் உணர்ச்சியால் எழுந்த அவருடைய பக்தி நெறியைக் காசியில் எவரும் மதிக்கமாட்டார்கள் என்று அவரைப் பற்றி அவதூருகப் பேசியதையும் ஸ்ரீசைதன்யரிடம் தெரிவித்தார்கள். "என்னுடைய உணர்ச்சி பூர்வமான பக்தி என்னும் சரக்கை சரச மான விலையில் விற்றுவிடுகிறேன்; இல்லாவிட்டால் அப்படியே திரும்ப எடுத்துச்சென்று விடுகிறேன்" என்று ஸ்ரீசைதன்யர் அவர் களிடம் தெரிவித்தார்.

காசியில் ஸ்ரீசைதன்யர் சுபுத்தி ராயரைச் சந்தித்தார். வங்காளத்தின் நவாபாக ஆவதற்கு முன்னுல் சுல்தான் ஹுசேன் ஷா இவரிடத்தில் பணியாளாக இருந்தான். ஒரு சமயம் கடமை

யில் சிறிது தவறியதற்காக அவனை, சுபுத்தி ராயர் சவுக்கால் அடிக்கச் செய்து விட்டார். நவாபான பிறகு, சுபுத்தி ராயரைக் கொன்று விடவேண்டும் என்று நவாபின் மனைவி விருப்பம் தெரிவித்தாள். ஆனால் எஜமான விசுவாசத்தால் நவாப், அவ்விதம் செய்வதற்கு மறுத்து விட்டான். கடைசியில் சுபுத்தி ராயரின் வாயில் அசுத்த மானவற்றை ஊற்றி, மதத்திலிருந்து பிரஷ்டமாகும்படி செய்தான் நவாப். எந்தப் பிராயச் சித்தம் செய்து இதிலிருந்து மீள்வது என்று பிராம்மண பண்டிதர்களை சுபுத்தி ராயர் ஆலோசனை கேட்டார். அசுத்தமான நாக்கை மீண்டும் சுத்தமாக்க வேண்டுமானால் கொதிக் கும் நெய்யைக் குடிக்க வேண்டும் என்று அவர்கள் சொன்னார்கள். இதைக் கேட்டு நடுங்கிப் போனார் சுபுத்தி ராயர். இருப்பினும் வேறு ஏதாவது வழி பிறக்காதா என்று மனத்தைத் தேற்றிக் கொண்டு ஸ்ரீசைதன்யரை அணுகி, "பிராயச்சித்தமாக என்ன செய்ய வேண்டும்?" என்று வினவினர்.

"கிருஷ்ணனின் நாமத்தை உச்சரிப்பதால், பாபங்கள் நீங்கி விடுவது மட்டும் அல்ல; அவருடைய பாதாரவிந்தங்களுக்கே நம்மைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடும். எனவே, கிருஷ்ணனின் நாமங்களை உச்சரியுங்கள். அதுவே போதும்" என்று ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார். இதைக் கேட்டு சுபுத்தி ராயர் கவலையும் துக்கமும் நீங்கியவராய், ஆத்ம திருப்தி அடைந்தார். ஸ்ரீசைதன்யரின் உப தேசங்களை அப்படியே பின்பற்றினர்.

காசியில் பத்து நாட்கள் தங்கிய பின்னர், ஸ்ரீசைதன்யர் பிரயா கைக்குப் புறப்பட்டார். அவருடைய மனம் முழுவதும் பிருந்தா வனத்திலேயே லயித்திருந்தது. பிரயாகையில் கங்கையுடன் சேரும் யமுனையைக் கண்டவுடன் விரஜையில் நிகழ்ந்த லீலா விநோதங் களை நினைந்து உணர்ச்சி மிகுதியால் ஸ்ரீசைதன்யர் ஆற்றில் விழுந்து விட்டார். நல்ல வேளையாக அருகில் இருந்த பலபத்திரர் அவரை மீட்டார். பின்னர் மாதவர் ஆலயத்துக்கு சென்று விட்டு, யமுனைக் கரையோரமாக ஸ்ரீசைதன்யர் மதுரைக்குப் புறப்பட்டார். வழி நெடுகிலும் மக்களுக்கு அவர் உபதேசம் செய்து கொண்டே சென்றார்.

மதுரையிலிருந்து பூரிக்குத் திரும்பும் வழியில், ஸ்ரீசைதன்யர் எங்கெங்கே தங்கினரோ, அந்த இடங்களில் எல்லாம், உள்ளத்தைத் தூண்டிவிடக்கூடிய கிருஷ்ண நாமத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லி ஆனந்தத்தால் எல்லோரையும் நடனமாடும்படியே ஸ்ரீசைதன்யர் செய்து விட்டார் என்று கிருஷ்ணதாச கவிராஜர் தம் நூலில் குறிப்பிட்டிருக்கிறர். அவருடைய தென்னிந்திய விஜயத்தில் பல இடங்களில் உபதேசம் செய்து, பலரைத் தம்முடைய பக்தி நெறிக்குத் திருப்பியதைப் போலவே, இந்த யாத்திரையிலும் வேறு மார்க்கங்களில் இருந்தவர்கள் பலரை ஸ்ரீசைதன்யர் வைஷ்ணவ பக்தி நெறியை மேற்கொள்ளும்படி செய்தார்.

**விரஜமண்டலத்துக்கு யாத்திரை :** மதுரையை அடைந்ததும் யமுனையில் விஷ்ரம கட்டத்தில், ஸ்ரீசைதன்யர் பித்ரு கர்மாக்களைச் செய்தார். கண்ணன் பிறந்த இடத்தில் இருந்த கேசவர் ஆலயத்தைக் கண்டு தரிசித்து, ஸ்ரீசைதன்யர் தெய்விகக் காதல் நிலையில் ஆடிப் பாடினர். ஸ்ரீசைதன்யரின் எல்லை கடந்த காதலையும் பக்தியையும் இந்த நிலையில் கண்டு, மக்களின் உற்சாகம் கரை கடந்தது. ஸ்ரீசைதன்யரின் மெய்மறந்த நடனத்தில் யாரோ ஒரு பிராம்மணரும் கலந்து கொண்டார் ; தரையிலே உருண்டு போய், ஸ்ரீசைதன்யரின் பாதங்களைப் பற்றிக் கொண்டார். கண்ணன் மேல் இருந்த பிரேமை மிகுதி, இருவரையும்கட்டித் தழுவிக் கொள்ளச் செய்தது. கேசவர் சந்நிதியின் அர்ச்சகர் ஸ்ரீசைதன்யருக்கு மாலைகளால் அலங்கா்ரம் செய்தார். தம்முடன் சேர்ந்து நடனமாடிய பிராம்மணரின் அருகே சென்று, "நீங்கள் மிக எளிமையும் நேர்மையும் உள்ளவராக இருக்கிறீர்கள். இந்தத் தெய்விகப் பிரேமை என்னும் பொக்கிஷத்தை எவரிடமிருந்து பெற்றீர்கள் ?" என்று மெல்ல ரகசியமாகக் கேட்டார்.

"எனக்கு அருள்புரிந்தவர் மாதவ பூரி. கருணை மிகுதியால் அவரே என்னுடைய இல்லம் தேடிவந்து, என் கையால் செய்த உணவையே பிக்ஷையாக ஏற்றுக்கொண்டார்" என்று பதில் தந்தார் அந்த அந்தணர்,

அவருடைய தெய்விகக் காதலையும் பக்தியையும் கண்டு தம்முடைய ஆசாரியரான மாதவ பூரியின் சிஷ்யராகத்தான் இருக்க

வேண்டும் என்று ஏற்கனவே ஸ்ரீசைதன்யர் சந்தேகித்தற்கு ஏற்ப, அந்தப் பிராம்மணர் தாம் மாதவ பூரியின் சிஷ்யர் என்பதைத் தெரிவித்த உடனே ஸ்ரீசைதன்யர் அவருடைய காலைத் தொட்டு வணங்கினர். இவ்வளவு பெரிய மகான், மதிப்புக்குரிய சந்நியாசி, தம்முடைய காலைத் தொடுகிறாரே என்ற அச்சத்தால், ஸ்ரீசைதன்ய ரின் பாதத்தில் விழுந்து அந்தப் பிராம்மணர் நமஸ்காரம் செய்தார்.

அதைக் கண்டு, "நீங்கள் என்னுடைய குரு; நான் உங்க ளுடைய சிஷ்யன். எனவே, ஆசாரியர்கள் தம்முடைய சிஷ்யர் களுக்கு நமஸ்காரம் செய்வது முறை அல்லவே" என்று ஸ்ரீசைதன்யர் சொன்னர்.

இதைக் கேட்டுப் பிராம்மணர் மேலும் அஞ்சினர். "சந்நியாசி யாக இருக்கும் நீங்கள் ஏன் இப்படி எல்லாம் பேசுகிறீர்கள்? மாதவ பூரியினுடன் நீங்கள் உறவுள்ளவர் என்பதை உங்களிடம் எனக்கு ஏற்பட்ட அன்பினலேயே தெரிந்து கொண்டேன். எங்கே யெல்லாம் கிருஷ்ணனுடன் தொடர்பு இருக்கிறதோ அங்கே யெல்லாம் அன்பு உண்டு. இத்தகைய அன்பை–காதலை–கிருஷ்ண னிடத்தில் பிரேமை உள்ளவரைத் தவிர வேறு யாரிடத்திலும் காணமுடியாது" என்றார் ஸ்ரீசைதன்யர்.

ஸ்ரீசைதன்யருக்கும் மாதவ பூரிக்கும் உள்ள உறவைப் பற்றி, அந்தப் பிராம்மணரிடம் பலபத்திரர் தெரிவித்தார். உடனே அவர் தம்முடைய இல்லத்துக்கு ஸ்ரீசைதன்யரை அழைத்துச் சென்றார். தீண்டத் தகாத சநோதியப் பிரிவைச் சேர்ந்தவர் என்ற காரணத் தால் அந்தப் பிராம்மணர் ஸ்ரீசைதன்யருக்கு வேண்டிய சமையலைச் செய்யும்படி பலபத்திரரையே ஏற்பாடு செய்தார்.

"உங்கள் கையால் சமைத்ததை பூரி கோஸ்வாமியே, உண் டிருக்கிறார். உங்களுடைய இல்லத்தில் நீங்கள் சமைத்த உணவையே நிச்சயம் நான் ஏற்றுக்கொள்ளப்போகிறேன்" என்று சொல்லி, அவரையே சமைக்கும்படி ஸ்ரீசைதன்யர் வற்புறுத்தினர். இதனல் மக்கள் ஸ்ரீசைதன்யரைக் கண்டித்துத் தொந்தரவுகள் கொடுப்பார்களோ என்று எண்ணி அவர் மறுத்தார்.

உண்மையான எந்த வைஷ்ணவனையும் தீண்டாதவன் என்று கருதக்கூடாது என்னும் தம்முடைய மதத்தின் கொள்கைகளில் ஒன்றை நிலைநாட்டுவதற்காகவே அந்தப் பிராம்மணர் சமைத்ததையே ஸ்ரீசைதன்யர் ஏற்றுக்கொண்டார்.

மதுரையில், யமுனை நதியில் உள்ள 24 ஸ்நானகட்டங்களிலும் ஸ்ரீசைதன்யர் நீராடினர். பின்னர் ஸ்வயம்பு, விஷ்ரமா, தீர்க, விஷ்ணு, பூதேஸ்வர முதலிய புனிதமான இடங்களுக்குச் சென்ருர். பிறகு மதுரையைச் சுற்றிலும் உள்ள 12 வனங்களையும் 24 சிறிய வனங்களையும் வலம் வரலானுர். இவை ஸ்ரீகிருஷ்ணனின் லீலா விநோதங்கள் நிகழ்ந்த இடங்களாகும்.

"பூரியில் இருக்கும் பொழுது கிருஷ்ண பிரேமையால் ஸ்ரீசைதன்யரின் உள்ளம் உச்சநிலையை அடைந்திருந்தது. பிருந்தாவனத்தை நோக்கிப் புறப்பட்டுக்கொண் டிருக்கும்போது அவருடைய காதல் நூறு மடங்கு வளர்ந்து உருகத் தொடங்கியது. மதுரையைக் கண்டதுமே காதல் ஆயிரம் மடங்கு பெருகியது. மதுரையைச் சுற்றிலும் உள்ள வனங்களில் அவர் சஞ்சரிக்கும்போது ஸ்ரீசைதன்யரின் காதல் லட்சம் மடங்கு அதிகரித்துவிட்டது. மற்ற இடங்களில் அவர் இருக்கும்போது, பிருந்தாவனம் என்னும் பெயர் அவர் காதில் விழுந்தாலே கிருஷ்ண பிரேமையில் கரைந்து விடுவார். அந்த லட்சிய பிருந்தாவனத்திலேயே இருக்கும் போது அவருடைய தெய்விகக் காதல் உணர்ச்சியின் தன்மை எப்படியிருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? கிருஷ்ணனின் மேல் உள்ள காதலை நினைந்து இரவும் பகலும் அவர் உள்ளம் நைந்தது. குளிப்பதையும் சாப்பிடுவதையும், மற்றக் கடமைகளையும் கேவலம் வழக்கத்தின் காரணமாகவே அவர் செய்து வந்தாரே, தவிர வேறு எதிலுமே அவர் மனம் நாடவே இல்லை. பன்னிரண்டு வனங்களிலும் ஸ்ரீசைதன்யர் உலவும்போது இந்த நிலையிலேயே இருந்தார் என்று ஸ்ரீசைதன்யரின் மனநிலையைக் குறித்து கிருஷ்ணதாச கவிராஜர் தம்முடைய நூலில் விரிவாக எழுதியிருக்கிருர்.

சநோதிய பிராம்மணருடனும் தம்முடைய இரு துணைவர்களுடனும் சேர்ந்து மதுரையின் சுற்றுப் புறப் பகுதிகளையும் மது, தால, குமுத, வகுள வனங்களையும் ஸ்ரீசைதன்யர் வலம் வரலானுர்.

அந்த வனங்களில் எல்லாம் கிருஷ்ணன் திரிந்து விளையாடியதை மனத்தில் எண்ணிக் கொண்டு, எதிரே தோன்றிய பசு, மான், மரம், செடி, கொடிகள் எல்லாவற்றையும் காதல் மிகுதியினல் ஸ்ரீசைதன்யர் தழுவியும் தடவியும் இன்புற்று வந்தார். மயிலின் கழுத்தைக் கண்டதும் கண்ணனின் கவர்ச்சியான வண்ண நிறத்தை நினைத்துக்கொண்டு, பிரேமை மிகுதியால் மயங்கிக் கீழே விழுந்துவிட்டார். உடனே அருகே இருந்த துணைவர்கள் குளிர்ந்த நீரை அவருடைய உடலில் தெளித்தும், விசிறி எடுத்து வீசியும், அவருடைய காதுகளில் கிருஷ்ண நாமங்களைப் பலக்க உச்சரித்தும் அவருடைய மயக்கத்தைத் தெளிவிக்கலானுர்கள். மயக்கம் நீங்கியதும் ஸ்ரீசைதன்யர் தரையிலே விழுந்து புரண்டார், காடுகளில் செல்வதற்கு வழியெங்கும் தடைகளாக இருந்த முட்கள் அவருடைய உடலைக் குத்தி வருத்தின. மெல்ல அவரைத் தம் கைகளால் எடுத்து, ஜாக்கிரதையாக அவருடைய மயக்க நிலையைப் போக்கத் துணைவர்கள் பெரிதும் உதவி செய்தார்கள்.

சிறிது நேரம் கழிந்ததும் ஸ்ரீசைதன்யர் எழுந்திருந்து கிருஷ்ண கிருஷ்ண என்று கூவிக்கொண்டே நடனமாடத் தொடங்கிவிட்டார். குருநாதருக்குக் கண்ணன்மீது ஏற்பட்ட காதல் மிகுதியினல் தோன்றிய உணர்ச்சி நிலையால் அவருடைய உடல் நலம் கெட்டுவிடுமோ என்று சநோதி பிராம்மணர் கவலை கொண்டார்.

ராதையும் கிருஷ்ணனும் விளையாடிய ராதா குண்டம், சியாம குண்டம் என்னும் இரண்டு ஏரிகளை ஆரிக் கிராமத்தில் இருப்பதை ஸ்ரீசைதன்யர் கண்டுபிடித்தார். சுமண சரோவரம் (குசும சரோவரம்) கோவர்த்தனம், பிரம்மகுண்டம், புகழ்பெற்ற ஹரிதேவர் ஆலயம் முதலிய இடங்களுக்கும் ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்தார். ஹரிதேவர் ஆலயத்தில் ஸ்ரீசைதன்யரை அர்ச்சகர் வரவேற்று உபசாரம் செய்தார். அங்கேயே அன்றிரவை ஸ்ரீசைதன்யர் கழித்தார்.

கோவர்த்தன மலையின்மீது அன்னகூட என்னும் இடத்தில் ஸ்ரீசைதன்யரின் குருநாதர் நிறுவிய கோபால ஆலயம் இருந்தது. ஸ்ரீசைதன்யருக்கோ கோபாலரைத் தரிசனம் செய்ய வேண்டும் என்று ஆசை. ஆனல் புனிதமான கோவர்த்தனகிரியின் மேல் ஏறிச்

செல்ல அவருக்குக் கொஞ்சமும் மனம் இல்லை. இந்தச் சமயத்தில் முஸ்லிம்கள் கோயிலைத் தாக்கப் போகிறார்கள் என்று வதந்தி பரவியது. இதனால், அருகே இருந்த காதோலி என்னும் கிராமத்துக்கு விக்கிரகத்தைக் கொண்டுவந்தார்கள். எதிர்பாராமல் கோபாலரைத் தரிசிக்கும் வாய்ப்புக் கிடைக்கவே, ஸ்ரீசைதன்யர் எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தார்; மூன்று நாட்கள் வரை கோபாலரின் முன்பு ஆடியும் பாடியும் ஆனந்த நிலையில் இருந்தார். இன்றைக்கும், கௌடிய வைஷ்ணவர் எவரும் கோபாலரைத் தரிசனம் செய்வதற்காக, கோவர்த்தனகிரியின் மேல் ஏறுவதில்லை.

பின்னர் ஸ்ரீசைதன்யர் நந்தீசுவரம், பாவன சரோவரம், கதிரவன சேஷசாயி, நீலதீர்த்தம், பாந்திரவனம், யமுனைக் கரைக்கு அப்பால் உள்ள பத்ரவனம், ஸ்ரீவனம், லௌக வனம், மஹாவனம் முதலிய இடங்களுக்கு விஜயம் செய்தார். மீண்டும் சநோதிய பிராமணர் அவரை அழைத்து, தம் விருந்தாளியாகவே இருக்கச் செய்தார். ஸ்ரீசைதன்யர் என்னும் மகான் வந்திருக்கிறார் என்று மதுரையைச் சுற்றியுள்ள மக்களிடையே செய்தி பரவியதால் ஆயிரக் கணக்கான மக்கள் அவரைத் தரிசிப்பதற்காகக் கூடிவிட்டார்கள்.

தரிசிப்பதற்காக வரும் மக்களுடைய ஆரவாரம், கூச்சல் இவற்றிலிருந்து விலகி, அக்ரூரா என்னும் இடத்துக்கு ஸ்ரீசைதன்யர் சென்றார். அங்கேயிருந்து கொண்டு தினமும் காளிய மடு, துவாதச ஆதித்ய கட்டங்கள், கேசி கட்டம், ராசஸ்தாலி, சிரா கட்டம், ஆம்லிதாலா, பிருந்தாவனம் முதலிய இடங்களுக்குச் ஸ்ரீசைதன்யர் சென்று வந்தார். அதிகாலையிலிருந்து நடுப்பகல் வரையில் தனிமையாக, தியானத்தில் ஆழ்ந்திருந்த பின்னர் பிற்பகலில் அவர் அக்ரூராவுக்குத் திரும்புவதைத் தினசரி முறையாகக் கொண்டார். பின்னர் தம்மை நாடிவருபவர்களுக்குத் தரிசனம் தந்து பக்தியைக் குறித்து, உபதேசமும் செய்து வந்தார்.

ஒரு நாள் பிருந்தாவனத்தில், ஆம்லிதாலா என்ற இடத்தில் கிருஷ்ணதாஸ் என்னும் ரஜபுத்திரத் தலைவனை ஸ்ரீசைதன்யர் சந்தித்தார். ஸ்ரீசைதன்யரிடத்தில் மிகுந்த பக்தி அவனுக்கு ஏற்

பட்டது. அன்றிலிருந்து அந்த ரஜபுத்திரத் தலைவன் ஸ்ரீசைதன்ய ருக்கு மற்றுமோர் துணைவனாகவும் பணியாளனாகவும் ஆனான்.

ஜனங்கள் எல்லோரும் ஸ்ரீசைதன்யரைத் தெய்வமாகவே கொண்டாடலானார்கள். ஆனால் அப்படிப் பிறர் தம்மை அழைப் பதை ஸ்ரீசைதன்யர் கடுமையாக எதிர்த்துக் கண்டித்து வந்தார். தம்முடைய இல்லத்துக்கு வந்து தங்கும்படி அவரைப் பலரும் வேண்டிக்கொண்டேயிருந்தார்கள். எல்லோரும் ஏமாற்றம் அடையும் வகையில் ஒரு நாள் மதுரையில் வசித்துவந்த கண்ணஜி என்னும் தென்னிந்திய வைதிக பிராம்மணர்களின் வேண்டு கோளை ஸ்ரீசைதன்யர் ஏற்றுக் கொண்டார். இந்த பிராம்மணர் கள் அக்ரூரா மலைக்குச் சென்று, சமையல் செய்து, ஸ்ரீசைதன்ய ருக்கு உணவளித்து மகிழ்ந்தார்கள். மக்கள் கூட்டங் கூட்டமாக அங்கே சென்று, அவரைத் தரிசித்து உபதேசம் பெறலானார்கள்.

ஒரு நாள் அக்ரூராவில் நீராடும் துறையில் அவர் அமர்ந் திருக்கும்போது, பிருந்தாவனத்தில் கண்ணன் விளையாடும் காட்சி களை நினைத்து அவற்றிலேயே ஆழ்ந்தார். திடீரென்று உணர்ச்சி மிகுதியால் ஸ்ரீசைதன்யர் ஆற்றிலும் குதித்து விட்டார். அதிர்ஷ்ட வசமாக அருகே இருந்த ரஜபுத்திர கிருஷ்ணதாசரும், பலபத்திரரும் ஸ்ரீசைதன்யரை நீரிலிருந்து எடுத்துக் காப்பாற்றினார்கள். இந்தச் சம்பவத்துக்குப் பிறகு, இந்த மாதிரி உணர்ச்சி வசப்பட்ட நிலையில் ஸ்ரீசைதன்யருக்கு ஆபத்து எதுவும் ஏற்படாமல் இருக்க வேண்டுமே என்ற கவலையால் பலபத்திரரும் கிருஷ்ணதாசரும் கூடி ஆலோசனை செய்தார்கள். மதுரையிலும் பிருந்தா வனத்திலும் இருக்கும் வரை யிலும் ஸ்ரீசைதன்யருடைய உணர்ச்சி கட்டுக்கு அடங்காமல்தான் இருக்கும். மேலும் அவரைச் சந்தித்து, சற்று நேரமாவது பேச வேண்டும் என்று தினசரி ஆயிரக்கணக்கான பேர் காத்துக்கிடப் பவர்களாலும், உள்ளன்புடன் ஸ்ரீசைதன்யரரைத் தரிசித்து, வணங்க வேண்டும் என்ற எண்ணத்துடன் வருபவர்களாலும் குருநாதருக்கு உடல் சிரமமும் களைப்பும் மிகுதியாக ஏற்படுகின்றன. எனவே, இவற்றை எல்லாம் தவிர்ப்பதற்காக மதுரை–பிருந்தாவனத் திலிருந்து ஸ்ரீசைதன்யரை வேறு எங்கேயாவது அழைத்துச் செல் வது என்று முடிவு செய்தார்கள். எனவே, பலபத்திரர் ஸ்ரீசைதன்

யரை அணுகி, "பிரயாகையில் நீராட வேண்டும் என்று காசியில் தெரிவித்திருந்தீர்களே! அதற்கு இப்பொழுதே பிருந்தாவனத்தை விட்டு புறப்பட்டால்தான் நல்லது" என்று யோசனை தெரிவித்தார். தம்மிடம் பூரண பக்தி கொண்டிருக்கும் பலபத்திரரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதற்காகவே, ஸ்ரீசைதன்யர் அந்த யோசனையை ஏற்றுக்கொண்டார்.

1516-ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தின் பிற்பகுதியில், சுருக்ஷேத்திரா, பிரயாகை முதலிய இடங்களுக்குச் செல்லுவதற்காக, பலபத்திரர், ரஜபுத்திரத் தலைவன் கிருஷ்ணதாஸ், சநோதிய பிராம்மணர் ஆகிய மூவருடன் அக்ரூரா என்னுமிடத்திலிருந்து ஸ்ரீசைதன்யர் யமுனையைக் கடந்தார். போகும் வழியில் மீண்டும் கோகுலத்துக்கு அவர் விஜயம் செய்தார். பின்னர் பாதையில் சென்றுகொண் டிருக்கும்போது, மந்தை மந்தையாக மாடுகள் மேய்ந்துகொண் டிருப்பதை ஸ்ரீசைதன்யர் கண்டார். மேலும் ஆயன் ஒருவனின் வேய்ங்குழல் இன்னிசையும் அவர் காதில் விழுந்தது. உடனே அவருக்கு, கிருஷ்ணன் குழலூதி ஆவினங்களையும் கோபிகைகளையும் மயங்கவைத்த காட்சி நினைவுக்கு வந்தது. இதனால் அவர் உணர்ச்சி மேலிட்டு மயங்கி விழுந்து விட்டார்.

அதே வேளையில் அந்த வழியே பட்டாணியக் குதிரைவீரர்கள் பத்துப் பேர் வந்தார்கள். அவர்களுடைய தலைவன், ஸ்ரீசைதன்யர் மயங்கிக் கீழே கிடப்பதையும் அவரைச் சூழ்ந்து மூவர் நிற்பதையும் கண்டான். அவர்கள் மூவருமே, ஸ்ரீசைதன்யரைக் கொள்ளையடித்துக் கொடுமைப்படுத்தியிருக்கிறார்கள் என்று பட்டாணியத் தலைவன் சந்தேகப்பட்டான். எனவே, அவர்களை அடித்துக் கொல்லப்போகிறோம் என்று பயமுறுத்தினார்கள். பலபத்திரரும் பணியாளும் பயந்து நடுங்கி, பேச்சு மூச்சற்று நின்று விட்டார்கள். ஆனால் சநோதிய பிராம்மணர் மட்டும் தைரியத்தை இழக்கவில்லை. "மதுரையில் வெகுகாலமாக வசிக்கிறவன் நான். சிக்தார் கோர்ட்டுக்கு என்னை அழைத்துச் சென்றாலும் என்னைத் தெரிந்தவர்கள் நூறுபேர்களை என்னால் காட்ட முடியும். இங்கே மயங்கிக் கிடப்பவர் என்னுடைய குருநாதர். இந்த மாதிரி இவருக்கு அடிக்கடி நேருவது

உண்டு'' என்று பட்டாணியக் குதிரை வீரர்களிடம் சநோதிய பிராம்மணர் தெரிவித்தார்.

ரஜபுத்திரத் தலைவன் ''அருகில் உள்ள பிரதேசத்தின் அதிபதி நான்; என்னிடம் இருநூறு துருக்கிய வீரர்களும் நூறு பீரங்கிகளும் கொண்ட படை இருக்கிறது. ஒரு சைகை மட்டும் செய்தால் என்னுடைய படையினர் வந்து, உங்களைக் கொன்று குதிரைகளையும் பறித்துக்கொண்டு விடுவார்கள். ஒன்றும் அறியாத யாத்ரிகர்களின் பணத்தைக் கொள்ளை அடிக்க நீங்கள் முயலுகிறீர்கள்'' என்று குதிரை வீரர்களைக் கடிந்து கொண்டான்.

இந்தச் சமயத்தில் பிரக்ஞையிலிருந்து விழித்துக் கொண்ட ஸ்ரீசைதன்யர் உரத்த குரலில் 'கிருஷ்ணு' என்று கூவியதைக் கண்டு குதிரை வீரர்களுக்கு ஐயம் ஏற்பட்டது.

''இந்த நான்கு துணைவர்களும் மோசக்காரர்கள். ஊமத்தம் இலைகளைக் கொண்டு விஷமிட்டு, உங்களிடமிருந்து பணத்தை அபகரிக்க இருந்தார்கள்'' என்று மயக்கத்திலிருந்து விழித்தெழுந்த ஸ்ரீசைதன்யரிடம் குதிரை வீரர்கள் சொன்னார்கள்.

அதைக் கேட்ட ஸ்ரீசைதன்யர், ''அவர்கள் நால்வரும் என்னிடம் மிக்க விசுவாசமுள்ள துணைவர்கள். நானோ சந்நியாசி; என்னிடம் பணம் ஏது? நான் பிரக்ஞை இழந்து கிடக்கும்போதெல்லாம் இவர்களே எனக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வருகிறார்கள்'' என்று நிலைமையைத் தெளிவு படுத்தினர்.

**பட்டாணியர்கள் மதம் மாறுதல்:** இந்த முஸ்லிம் குதிரை வீரர்களில் மதகுரு ஒருவர் இருந்தார். கரிய உடை உடுத்திக் கொண்டு, பார்வைக்குப் பயங்கரமாக இருந்த போதிலும் அவர் ஸ்ரீசைதன்யரின் ஆத்மிக உயர்வைக் கண்டு மனம் கரைந்து போனார். சூபி மதக் கொள்கையில் உள்ள நிரீசுவரவாதத்தை வற்புறுத்தி ஸ்ரீசைதன்யரிடம் மதகுரு வாதம் செய்யத் தொடங்கினர். அந்த முஸ்லிம் மதகுரு, தர்க்கம் புரிவதில் திறமைசாலி. சூபித் தத்துவத்தில் கரைகண்டவர். குரானிலிருந்து மேற்கோள்களை எடுத்துக்

காட்டி, மதகுருவின் தத்துவத்தை ஸ்ரீசைதன்யர் வன்மையாக மறுத்தார். நீண்ட நேர விவாதத்துக்குப் பின்னர், குரானின் பிற் பகுதிக்கு எவ்வாறு வியாக்கியானம் செய்வீர்கள் என்று முஸ்லிம் குருவை ஸ்ரீசைதன்யர் வினவினர். "தனிப்பட்ட தெய்வத்தைவிட எவ்வித பேதமும் இல்லாத பூரணனையே எங்கள் மதப் பிரிவு ஏற் கிறது" என்று ஸ்ரீசைதன்யரிடம் தெரிவித்தார் மதகுரு. 'முஸ்லிம் மத நூல்களை நிறையப் படித்திருந்தாலும், சாத்தியம், சாதனை இரண் டுக்கும் உள்ள சம்பந்தம்பற்றி இன்னும் ஐயம் இருக்கிறது' என்று மதகுரு ஒப்புக் கொண்டார்.

கடைசியில் ஸ்ரீசைதன்யருடைய அறிவை முஸ்லிம் குரு பூர்ண மாக உணர்ந்து கொண்டார். தன்னுடைய வித்யாகர்வம் ஒடுங்கியது என்று ஒப்புக் கொண்டதுடன் சாத்யம், சாதனை இரண்டு விஷயங்களையும் விளங்க வைக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

முஸ்லிம்களின் புனித நூல்களில் ஸ்ரீசைதன்யருக்கு இருந்த பூரண ஞானமும் ஆத்மிக உயர்வும் கண்டு அவரிடம் முஸ்லிம் மத குருவுக்கு அசாத்திய மதிப்பு ஏற்பட்டது. கடைசியில் தனக்கும் அருள் செய்து. சிஷ்யனை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டான்.

என்றும் தோல்வி கண்டிராத ஸ்ரீசைதன்யரின் சக்திக்கு இங்கே மற்றுமோர் உதாரணத்தைப் பார்க்கிறோம். முஸ்லிம் மத குருவின் வேண்டுகோளுக்கு ஏற்ப, முஸ்லிம் மத குருவை ஹிந்து மதத்தில் சேர்த்துக்கொண்டு ராமதாஸ் என்னும் பெயரையும் சூட்டினர். பிஜிலிகான் என்னும் அந்தக் குதிரை வீரர்களின் தலைவன் ஒரு பிரதேசத்து அதிபதியின் மகன்; ஸ்ரீசைதன்யருக்கும் முஸ்லிம் மத குருவுக்கும் நிகழ்ந்த விவாதத்தை மிகுந்த ஆர்வத்துடன் அவன் கேட்டுவந்தான். அவனையும் அவனைச் சேர்ந்த, மற்றக் குதிரை வீரர்களையும் கிருஷ்ண நாம சங்கீர்த்தனத்தால் ஹிந்து மதத்துக்கு மாற்றி ஸ்ரீசைதன்யர் அருள் புரிந்தார். ஹிந்துக்களின் எல்லாப் புண்ணிய ஸ்தலங்களிலும் இந்தப் பிஜிலிகானைச் சிறந்த வைஷ்ண வனாகப் போற்றுகிறார்கள். தம்முடைய வாழ்க்கையை, ஸ்ரீசைதன்ய

ரின் வைஷ்ணவ தர்மத்தின் பெருமையை பரப்புவதற்காகவே, பிஜிலிகான் சமர்ப்பணம் செய்தான். ஹிந்து மதத்தில் சேர்ந்த அவனும், அவனைச் சார்ந்த முஸ்லிம் குதிரைவீரர்களும் "பட்டாணிய வைஷ்ணவர்கள்'' என்று அழைக்கப்படலாயினர்.

முஸ்லிம்களின் வேதமாகிய குரானை ஸ்ரீசைதன்யர் நன்கு படித்திருக்கிறார் என்றே தோன்றுகிறது. தம்முடைய பாகவத மதத்திற்கு ஏற்ப, குரானுக்குப் பல சந்தர்ப்பங்களில் அவர் வியாக்கியானம் செய்திருக்கிறார். நவத்வீபத்தில் ஸ்ரீசைதன்யர் இருந்த போதே, நவத்வீபத்தின் காஜியுடன் நீண்ட விவாதம் நடத்தியிருக்கிறார். காஜியையும் ஸ்ரீவாசரின் முஸ்லிம் தையற்காரரையும் ஹிந்து மதத்தைத் தழுவும்படி செய்தார். அவருடைய நெருங்கிய சிஷ்யரான ஹரிதாஸ டாகுரா என்பவரும் புகழ்பெற்ற முஸ்லிம் பண்டிதர். பாகவத தர்மமே உயர்ந்தது என்பதை நிலைநாட்டி நாடு முழுவதும் பரப்ப மற்ற மதங்களின் கொள்கைகளைப்பற்றி பரிபூரண அறிவு அவருக்கு அவசியம் வேண்டியிருந்தது. சில தென்னிந்திய மொழிகள்கூட ஸ்ரீசைதன்யருக்குத் தெரிந்திருந்தன என்று தாம் எழுதிய கோவிந்ததாசரின் வரலாற்றில் டாக்டர் டி. சி. சென் குறிப்பிட்டிருக்கிறார். ஸ்ரீசைதன்யரைப் போன்ற ஓர் அறிஞர் பல்வேறு மதங்களின் பிரதான நூல்களையும் பல மொழிகளையும் கற்றறிந்தார் என்பது பெரிய அதிசயம் அல்ல.

கங்கைக் கரையின் வழியே, மதுரையிலிருந்து அலாகாபாத்துக்குப் புறப்பட்டுச் சென்ற ஸ்ரீசைதன்யர், போகும் வழியிலே சுருக்ஷேத்திராவுக்கும் விஜயம் செய்தார். பஞ்சாப் ராஜ்யத்தின் கர்னல் ஜில்லாவில் உள்ள குருக்ஷேத்திரத்துக்கு ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்தார் என்று 'ராய ராமானந்தர்' என்னும் நூலில் ஆசிரியர் குறிப்பிட்டிருக்கிறார். பிருந்தாவனத்திலிருந்து அலாகாபாத்தை அடைவதற்கு முன் ஸ்ரீசைதன்யர் அங்கே விஜயம் செய்திருக்கக் கூடும். பூரியில் ஜகந்நாதரின் தேருக்கு முன்பு ஸ்ரீசைதன்யர் நடனம் ஆடும்போது, தம்மை, ராதிகாவாக எண்ணி, குருக்ஷேத்திரத்தில் கிருஷ்ணனைச் சந்திப்பதான பாவனையில் இருப்பார். இந்த நினைவை யொட்டியே ராய ராமானந்தரின் ஆசிரியர், குருக்ஷேத்திரத்துக்கு ஸ்ரீசைதன்யர் சென்றார் என்று குறிப்பிடுகிறார் போலும்.

அலாகாபாத்தில் பிந்து மாதவர் ஆலயத்துக்கு ஸ்ரீசைதன்யர் செல்லும் போது கூடிய மக்களுடைய கூட்டத்துக்கும் சந்தோஷ ஆரவாரத்துக்கும் எல்லேயே இல்லே. ஸ்ரீசைதன்யரிடம் சந்நியாசம் பெறுவதற்காக வந்திருந்த ரூபரால் அவர் இருக்கும் இடத்துக்குப் போய்ச் சேரமுடியவில்லே. "கங்கையும் யமுனேயும் கலந்து அலாகா பாத்தை மூழ்கடிக்க முடியவில்லே. ஆனல் ஸ்ரீசைதன்யர் தெய்வப் பிரேமை என்னும் வெள்ளத்தால் அலாகாபாத்தையே முழுகும்படி செய்து விட்டார். ஸ்ரீசைதன்யரின் லட்சியம் அலாகாபாத்தில் அடைந்த வெற்றியை வர்ணிக்கவே முடியாது" என்று கிருஷ்ண தாச கவிராஜர் தம் நூலில் எழுதியிருக்கிறுர்.

தென்னிந்திய விஜயத்தின் போது அறிமுகமான ஒரு பிராம் மணர் அலாகாபாதில் வசித்து வந்தார். இவர் ஸ்ரீசைதன்யரைத் தம் முடைய இல்லத்தில் தங்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். கங்கையும் யமுனேயும் சங்கமமாகும் புனிதமான இடத்துக்கு அருகே இருந்த அந்தப் பிராம்மணரின் இல்லத்தில் ஸ்ரீசைதன்யர் தங்கினுர். இங்கேதான் ரூபரும் அவருடைய தம்பி அநுபமரும் தங்கள் குரு நாதரைச் சந்தித்தார்கள்.

ஸ்ரீசைதன்யர் சரித்திரப் பிரசித்தி பெற்ற உபந்நியாசம் ஒன்றை இவ்விடத்தில்தான் நிகழ்த்தினுர். மற்ற முறைகளில் தெய்வத்தை வழிபடுவதிலிருந்து பக்தி மார்க்கம் எவ்விதம் மாறுபடுகிறது என் பதையும் பக்தியின் ஆரம்ப நிலேயிலிருந்து உயர்ந்த நிலேவரையில் பக்திமார்க்கத்தின் பல் வேறு அம்சங்களேயும் இந்த உபந்நியாசத் தில் ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார். கௌடிய வைஷ்ணவ ஆசாரியர் களில் முதல்வரான ரூபர் எழுதிய பல அருமையான கௌடிய வைஷ்ணவ நூல்களுக்கெல்லாம், ஸ்ரீசைதன்யரின் இந்த விரி வுரையே அடிப்படையாகும்.

கோயிலிருந்து திரும்பி வந்த ஸ்ரீசைதன்யரைக் கண்டதும், தர்ப்பையை இரண்டு பற்களுக்கிடையே வைத்துக்கொண்டு ரூபரும் அநுபமரும் தரையில் விழுந்து விழுந்து வணங்கினுர்கள்.

"கிருஷ்ணப்ரேமையை ஊட்டியவரே! கிருஷ்ணனின் அவ தார புருஷரே! பொன்னிற வர்ணம் கொண்ட ஸ்ரீசைதன்யர் என்

னும் பெயருள்ள தெய்வமே" என்று பல வகையாக ரூப அநுபமர் கள் ஸ்ரீசைதன்யரைப் பாடிப் பரவினுர்கள்.

அவர்கள் இருவரையும் தழுவிக்கொண்டு "சநாதனர் எங்கே யிருக்கிறுர்?" என்று ஸ்ரீசைதன்யர் விசாரித்தார். நவாபின் உத்திர வினுல் அவர் சிறையில் இருக்கிறுர். விரைவில் அவர் சிறையி லிருந்து விடுதலையாகும்படி அருள்புரிய வேண்டும் என்று ரூபரும் அநுபமரும் வேண்டிக்கொண்டார்கள்.

"சநாதனர் விடுதலை பெற அதிகநாள் பிடிக்காது" என்று ஸ்ரீசைதன்யரும் ஆறுதல் சொன்னுர். சில தினங்கள் கழிந்த உடனேயே காசியில் சநாதனர், ஸ்ரீசைதன்யரைச் சந்தித்தார்.

வல்லபாசாரியாரின் **அஞ்சலி**:—யமுனைக் கரைக்குச் சற்று அப்பால், அலாகாபாத்துக்கு எதிரே ஆதாயில் என்னும் கிராமத்தில் வல்லபபட்டர் என்னும் பக்தர் வசித்து வந்தார். இவரே பிற்காலத் தில் வல்லபாசாரியார் என்று புகழ்பெற்ற ஆசாரியர். ஸ்ரீசைதன்ய ரின் வருகையைப்பற்றிக் கேள்விப்பட்டதும் வல்லபபட்டர் அவரைச் சந்திக்கச் சென்றுர். ஸ்ரீசைதன்யர், ரூபரையும் அநுபமரை யும் வல்லபபட்டருக்கு அறிமுகம் செய்துவைத்தார். பின்னர், ஸ்ரீசைதன்யரையும் ரூப, அநுபமர் உள்ளிட்ட அவருடைய துணை வர்களையும் தம்முடைய இல்லத்தில் வந்து தங்கவேண்டும் என்று வல்லப பட்டர் வேண்டிக்கொண்டார். அவர்களைப் படகில் ஏற்றிக் கொண்டு தம் இல்லத்துக்கு அழைத்தும் சென்றுர். வல்லபபட்டரே ஸ்ரீசைதன்யருடைய பாதங்களைப் பூசித்து அந்தத் தீர்த்தத்தைத் தம் தலையிலும் குடும்பத்தில் உள்ளவர்கள் மேலும் தெளித்துக்கொண் டார். ஸ்ரீசைதன்யரிடம் அவருக்கு அவ்வளவு பக்தி! சிறிது உணவு உட்கொண்ட பிறகு ஸ்ரீசைதன்யர் ஓய்வெடுத்துக் கொண்டார். அப்பொழுது வல்லப பட்டர் அவருடைய கால்களை வருடினுர்.

தம்முடைய பக்தி நெறியில் பூரண நம்பிக்கை இல்லாதவர்கள் முன்னிலையில் ஸ்ரீசைதன்யர் தம் உணர்ச்சி நிலையையும் பக்திப் பரவச நிலைகளையும் வெளிப்படையாகக் காட்டமாட்டார் என்பதை இங்கே நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். அதனுல்தான் கரிய நிற

முள்ள யமுனையைப் பார்க்கும் போதெல்லாம் கிருஷ்ணனிடம் கொண்ட பக்திக் காதல் வயப்பட்ட போதிலும், வல்லபர் முன்னே தம்முடைய உணர்ச்சியை ஸ்ரீசைதன்யர் கட்டுப்படுத்திக் கொண்டார்.

இன்று ஆதாயில் என்று வழங்கும் கிராமத்துக்கு ஒன்றரை மைல் தொலைவில் உள்ள தேவராக் என்னும் மதில்கள் சூழ்ந்த கிராமத்தில் ஸ்ரீசைதன்யர் விஜயம் செய்த வல்லப பட்டரின் இல்லம் இருந்த இடத்தில், வல்லப பிரிவினரின் வைதகம் (பீடம்) ஒன்று இருக்கிறது. இந்தக் கிராமத்தில் உள்ள கோயிலில் தம் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்யும் போது வல்லபர் அமர்ந்த பீடம் ஒன்று இருக்கிறது.

# 11

## ரூப, சநாதனர்களுக்கு உபதேசம்

அலாகாபாத்துக்குத் திரும்பி வந்ததும் ரூப கோஸ்வாமிக்கு ஸ்ரீசைதன்யர் உபதேசம் செய்யத் தொடங்கினர். இந்தப் புகழ் பெற்ற உபதேசம் தொடர்ந்து பத்து நாட்களுக்கு நடைபெற்றது. தம்மை நாடிவரும் பக்தர்களின் கூட்டத்திலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக ஸ்ரீசைதன்யர் ரூபரைத் தசாவமேத கட்டத்துக்கு அழைத்துச் சென்று உபதேசம் செய்தார். கவி கர்ணபுரா எழுதிய ''சைதன்ய சந்திரோதய நாடகம்'' என்னும் நூலிலிருந்து எடுத்து இந்தச் சம்பவத்தைக் குறித்து, கிருஷ்ணதாச கவிராஜர் தம் நூலில் விவரித்திருக்கிருர். ரூப கோஸ்வாமியின் சிஷ்யரும் மாணவருமான கிருஷ்ணதாசர், தம்முடைய குருநாதரின் வாயிலாகவும் இந்தச் சம்பவத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கக்கூடும். கிருஷ்ணதாசர் எழுதிய வரலாற்றிலிருந்து சிறு தொகுப்பை இங்கே காணலாம்.

"ரூபா, பக்திரஸத்தின் இலக்கணத்தைக் கேள். விரிவாக எடுத்துரைப்பதற்கு இயலாததால் மிகச் சுருக்கமாகச் சொல்கிறேன். பக்திக் கடல் மிகவும் ஆழமானது; எல்லையற்றது. இதைப்பற்றி, நீ ரசிக்கும் வகையில் சுருக்கமாகக் கூறுகிறேன். இந்த உலகில் வாழும் ஜீவராசிகள் எண்ணற்றவை. எண்பத்து நான்கு லட்சம் பிறவிகள் இந்த உலகம் முழுவதும் நிறைந்திருக்கின்றன. ஜீவனின் ஆத்மா அளவில் நுண்ணியது. அதாவது ஓர் மயிரிழையின் நூறில் ஒரு பங்கு அளவு உள்ளது. ஜீவன்கள் சரம், அசரம் என்று இரண்டு பிரிவாக உள்ளன. அசரம் என்னும் பிரிவைச் சேர்ந்தவை, நிலத்திலும், நீரிலும் காற்றிலும் வாழ்கின்றன. நிலத்தில் வாழும் உயிரினங்களின் எண்ணிக்கையில் மனிதனின் தொகை மிகவும் அற்பம்.

''இந்த மனிதர்களில் மிலேச்சர், புலிந்தர், பௌத்தர், சவரர் முதலிய பலர் இருக்கிருர்கள். இவர்களில் வேத மதத்தைப் பின் பற்றுகிறோம் என்று சொல்லிக்கொண்டு பாதிப் பேர் சொல் அள

விலேயே இருக்கின்றனர். அவர்கள் வேதங்கள் தடைவிதித்துள்ள பாபங்களைச் செய்கிறார்கள்; சமய நெறிகளையும் லட்சியம் செய்வது கிடையாது. வேத நெறியில் செல்பவர்களில் பலர், கர்மவாதிகளாகவே இருக்கிறார்கள். கோடிக் கணக்கான கர்மவாதிகளில் ஒரு ஞானியைக் கண்டு பிடிப்பது மிகவும் அருமை. கோடிக்கணக்கான ஞானிகளிலே யாரோ ஒருவரே முக்தராக இருக்கிறார். இத்தகைய கோடி முக்தர்களில் கிருஷ்ணனிடம் பக்தி செலுத்துபவர் உண்மையிலேயே மிகவும் அபூர்வம். கிருஷ்ணபக்தன் எல்லாவிதமான ஆசைகளிலிருந்தும் தேவைகளிலிருந்தும் விடுபட்டவனாக இருப்பான். எனவே, அவன் சாந்தசொரூபன். கர்மவாதிகளின் புக்தியையோ, ஞானிகளின் முக்தி (மோட்சம்) யையோ யோகிகளின் சக்தியையோ, விரும்புவர்கள் அனைவரும் சாந்தியற்றவர்களாகவே இருப்பார்கள்.

"இந்த உலகில் தோன்றும் எண்ணற்ற பிறவிகளில், பக்தி என்னும் கொடியின் விதையை, குரு, கிருஷ்ணன், ஆகியோரின் அருளினால் ஏதாவது பேறு பெற்ற ஜீவனே அடையும். இதுவும் வெகு அபூர்வமே. ஜீவன், தோட்டக்காரனைப்போல பக்தி என்னும் விதையை ஊன்றி, கிருஷ்ணனின் பெருமையையும் நாமத்தையும் கேட்பது, சொல்வது என்னும் தண்ணீரை ஊற்றி வருவானால், பக்தி என்னும் கொடி, துளிர்விட்டு, விரைவில் வளர்ந்து, விவகார உலகத்தைத் துளைத்து ஊடுருவிச் சென்று, விவகார உலகத்தையும் சூட்சும உலகத்தையும் பிரிக்கும் விரஜை என்னும் ஆற்றையும் ஒளி வீசும் பிரம்மத்தையும் கடந்து பரவியோமத்தை அடையும். பரவியோமத்திலிருந்தும் வளர்ந்து, அந்தப் பக்திக் கொடி, லோக பிருந்தாவனத்தையும் அடையும். அங்கே கிருஷ்ணனின் பாதம் என்னும் கொழுகொம்பை அடைகிறது.

"கிருஷ்ணனின் பாதத்தை அடைந்த பின்னரே, பக்திக்கொடியில் பிரேமை என்னும் பழம் தோன்றுகிறது. இந்த வளர்ச்சி முழுவதிலும் பக்தனாகிய தோட்டக்காரன் கிருஷ்ண நாமத்தை ஸ்மரணை செய்தல், கேட்டல், என்னும் தண்ணீரைக் கொடிக்கு ஊற்றிக் கொண்டேயிருக்கிறான். தண்ணீர் ஊற்றுவதைத் தவிர கொடியின் வளர்ச்சிக்காக இன்னொன்றும் அவன் செய்ய வேண்டியிருக்கிறது.

"சிறிது காலத்துக்குத் தண்ணீர் ஊற்றிய பிறகு, கொடி வளர்ந்துவரும் நாளில், ஏதாவது குறும்புத்தனமான சில மிருகங்கள் கொடியின் இலைகளைப் பறித்துத் தின்னுமல் பார்த்துக்கொள்ள வேண்டும்; அல்லது வெப்ப மிகுதியால் இலைகள் வாடாமலும் காக்கவேண்டும். வைஷ்ணவர்களுக்குச் செய்யும் அபராதங்களே, மிருகங்களுக்கு உவமையாகச் சொல்லப்படுகின்றன. மதம் பிடித்த யானைகள் புகுந்து கொடியை நாசப்படுத்திவிடுவதுபோல் இத்தகைய அபராதங்கள் பக்திக்குத் தீங்கு செய்துவிடும். இத்தகைய ஆபத்து நேராமல் இருப்பதற்காக வேலி போன்ற பாதுகாப்புகளினுல் விசேஷக் கவனம் எடுத்துக் கொண்டு, மதயானைகளின் தாக்குதல்களிலிருந்து கொடியைத் தோட்டக்காரன் காப்பாற்றுகிருன். பக்தியில் வைஷ்ணவ அபசாரம் நேராமல் பக்தன் கவனித்துக்கொள்கிருன். வைஷ்ணவர்களுக்குச் செய்யும் அபசாரம் பகவந் நாமத்துக்குப் பத்து மடங்கு அதிகமாகச் செய்த அபசாரத்துக்குச் சமமாகும்.

"இந்த நிலையில் இன்னெரு ஆபத்து நேரவும் கூடும். பக்திக் கொடி வளரும்போது அதன் அருகே வேறு கிளைச் செடிகளோ, புல் பூண்டுகளோ, களைகளோ தோன்றி, மூலக்கொடிக்கு இடைஞ்சல் செய்துவிடக் கூடாது. கர்ம, ஞான, மோட்சம், செய்யக் கூடாத செயல்கள் புரிவது, பிராணிகளுக்கு ஹிம்சை செய்வது, செல்வம், கௌரவம், புகழ் முதலியவை இத்தகைய புல் பூண்டுகளுக்குச் சமம். விசேஷ கவனத்தை எடுத்துக் கொள்ளாவிட்டால் இந்தப் புல் பூண்டுகள் அபரிமிதமாக வளர்ந்து, பிரதானமான பக்திக் கொடிக்கு ஊறு விளைவித்துவிடும்; மூலமாகிய கொடி சீராக வளராவிட்டால் உயிர் அளிக்கும் தண்ணீர் ஊற்றியது எல்லாம் வியர்த்தமாகிவிடும். எனவே, இந்தக் களைகள் தோன்றிய உடனேயே, தண்ணீர் ஊற்றும்போதே கவனித்து அவற்றைக் களைந்தெறிய வேண்டியது தோட்டக்காரனின் கடமை. இப்படிச் செய்து வந்தால் கொடி இடையூறின்றி வளர்ந்து பிருந்தாவனத்தை அடையும்.

"பின்னர் பிரேமை என்னும் பழம் பழுத்து, பூமியில் விழுகிறது. பக்தன் இதை ருசி பார்க்கிருன். இந்த நிலையில் பிருந்தா

வனத்தில் பிரேம பழத்தின் இனிய ரசத்தைப் பருகி ஆனந்தத்தை அடையும் நிலையை அடைகிருன். ஜீவன்களின் செயல் எல்லாவற்றி லும் இறுதியில் பலன் தரும் உயர்ந்தது இந்தப் பிரேமையே. பிரேமையுடன் ஒப்பிட்டு பார்க்கும்போது தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் யாவும் உமிக்குச் சமமாகும்.

"தெய்வக் காதலின் பக்தியின் விளைவால் தோன்றுவது தூய் மையான பக்தி. எனவே, களங்கமற்ற பக்தியைப்பற்றி விளக்கு வது அவசியமாகிறது. கிருஷ்ணனிடம் புலன்களை நேரான வழி யில் செலுத்தி, பணிவிடை செய்வதே நேரிடையான பக்தியின் அம்சம். ஞான, கர்ம மார்க்கங்களைப் பின்பற்ருதிருப்பது, விஷ்ணு–கிருஷ்ணனைத் தவிர மற்றத் தெய்வங்களை வழிபடாமல் இருப்பது, சமய நெறியற்ற ஒழுங்கற்ற வாழ்க்கை வாழாதிருப்பது ஆகியவை யும் பக்தியின் இன்னெரு அம்சம். தன்னுடைய எல்லாவித சக்தி களையும் கொண்டு உபாசகன் கிருஷ்ணனை அவனுக்குத் திருப்தி தரும் வகையில் வழிபட வேண்டும். இதுவே களங்கமற்ற பக்தி. இத்தகைய பக்தியில்தான் கிருஷ்ணனிடத்துக் காதல் பிறந்து வளர முடியும். பாஞ்சராத்ரமும் பாகவதமும் இதையே சொல்கிறது. புக்தி, முக்தி இவற்றை அடைய வேண்டும் என்று மனம் சிறிது ஆசைப்பட்டாலும், சாஸ்திரங்களில் சொல்லியபடி பகவானை வழி பட்டாலும் பகவானிடம் பிரேமை தோன்ருது.

"இத்தகைய பக்தி நிலை, சாதன பக்தியாகும். இதைச் சீராக வளர்த்துவந்தால், காதலின் அடிப்படை அம்சங்களான 'ரதி' பாவம் ஏற்படும். ஒருமுனைப்பட்ட 'ரதி'யே பிரேமை. பிரேமை படிப்படியாக சிநேகம், மானம், பிரணயம், ராகம், அநுராகம், பாவம், மகாபாவ நிலைகளை அடைகிறது. கரும்பின் சாறு வெல்லப் பாகு, கண்டம் (வெல்லம்), சர்க்கரை, கல்கண்டு என்று வெவ்வேறு நிலைகளை அடைந்து கடைசியில் கல்கண்டாக மாறுவதையே இதற்கு உதாரணமாகச் சொல்லலாம்.

கிருஷ்ணபக்தி ரஸத்தில் இவை அடிப்படையானவையாகும்—(ஸ்தாயி பாவங்களாகும்) இந்த ஸ்தாயிபாவங்கள், வில்பாவம், அநு பாவம், சாத்விகம், வியபிசாரிகம் ஆகியவற்றுடன் இணையும்போது

பக்திரசம் தயிருடன், சர்க்கரை, நெய், மிளகு, பச்சைக் கர்ப்பூரம் ஆகியவை சேர்ந்தாற்போன்று, மிகுந்த இன்பச் சுவை அளிக்கிறது.

வெவ்வேறு வகையான பக்தர்களை யொட்டி ஐந்துவகையான 'ரதி'கள் இருக்கின்றன. அவை சாந்தம், தாஸ்யம், சக்கியம், வாத்சல்யம், மாதுரியம் எனப்படும். இந்தப் பிரதான ஐந்து நிலைகளைத் தவிர, ரதியில் இன்னும் ஏழு ரகங்களும் கிளைகள்போல இருக்கின்றன. (ரதியின் ஆரம்ப கட்டத்துக்கே ரஸம் என்று பெயர்.) அவை, ஹாஸ்யம், அத்புதம், வீரம், கருணை, ரௌத்ரம், பயானகம், பீபத்சம் எனப்படும். சாந்தம், தாஸ்யம், சக்கியம், வாத்ஸல்யம், மாதுரியம் என்னும் ஐந்து ரதிகளும் நிரந்தரமானவை. பக்தனின் மனத்தில் ஊடுருவி நிற்பவை. பின்னுல் சொன்ன ஏழு ரஸங்களும் அவ்வப்போது தோன்றி, அந்த அந்தச் சர்தர்ப்பங்களுடனும் காரணங்களுடனும் மறைந்து விடுகின்றன.

சனகர், சனந்தர் முதலிய முனிவர்கள் பின்பற்றியது சாந்த பாவம். உலகெங்கும் தாஸ்ய பாவம் (பகவானுக்கு அடிமையைப் போலப் பணிவிடை செய்வது) எங்கும் சர்வ சகஜமாகக் காணலாம். ஸ்ரீதாம் பீமன், அர்ஜுனன் போன்று பகவானிடம் நண்பன்போல அன்புகொள்ளுதல் சக்கிய பாவம்- பகவான் கிருஷ்ணனின் பெற்றோர்களைப் போல, அவனிடம் தாய் அன்பு கொள்வது, வாத்ஸல்ய பாவம். மாதுரிய பாவத்தில் பக்தர்கள், கணக்கற்ற விரஜைப் பெண்கள், கண்ணனின் பத்தினிகள், லக்ஷ்மி ஆகியோர்கள், மாதுர்ய ரஸ பக்தர்கள்.

"மேலும் கிருஷ்ண—ரதி—இரண்டு வகைப்படும். கோலோகத்தில் கிருஷ்ணனுடன் ரதி நிலை எவ்விதக் களங்கமும் அற்றது. ஏனெனில் அங்கே கண்ணனின் தெய்விக சக்தி மதிக்கப்படுவதில்லை. ஆனல் துவாரகை, மதுரை, வைகுந்தம், என்னும் தெய்வ நகரங்களில் கிருஷ்ணனின் தெய்விக சக்தி மேலோங்கி நிற்கிறது. அத்தகைய இடங்களில் காதல் கட்டுப்பாடுகளுடன் இருக்கும். தெய்விக சக்தி மறைந்துள்ள போதிலும், பகவானிடத்தில் அதைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் காதல் செய்வதில்தான் களங்கமற்ற

ரதி விசேஷத் தன்மை பெற்றதாக விளங்குகிறது. சாந்த, தாஸ்ய ரஸ நிலைகளில் பகவானின் தெய்விக சக்தி துணையாக நிற்கிறது. சாக்ய, வாத்சல்ய, மாதூரிய நிலையில் அது அவசியமற்றதாக இருக்கிறது. வசுதேவ, தேவகி ஆகியோரின் பாதங்களைக் கண்ணன் வருடினான். தெய்விக சக்தி இருக்கிறது என்பதே மனத்தில் பயத்தைத் தரும். கண்ணன் விசுவரூபத்தைக் கண்டு அர்ஜுனன் பயந்துவிட்டான். 'உன்னைவிட்டுப் பிரியப் போகிறேன்' என்று கண்ணன் வேடிக்கையாகச் சொன்னபோது ருக்மிணி பயந்தாள். பகவான் தொடர்ந்து இன்பம் அடைகிறான். சாந்த நிலை பக்தரின் இரண்டு லட்சணங்களுடன் இடைவிடாத பணிவிடையும் தாஸ்ய பக்தனுக்கு அமைகிறது.

(தோழமை) சக்கிய நிலையில், சாந்த, தாஸ்ய பக்தர்களுக்கு உள்ள குணங்கள் இருக்கின்றன. தாஸ்ய நிலையில் அபரிமிதமான பணிவும் மிக உயர்ந்த மதிப்பும் கிருஷ்ணனிடம் தோன்றுகின்றன. அதற்கு மாறாக, சக்கிய நிலையில் கிருஷ்ணனிடம் பக்தன் பூரண நம்பிக்கையை வைக்கிறான்; கிருஷ்ணனிடம் சமமாக இந்த நிலையில் பக்தன் விளையாடுகிறான். அவனுக்குப் பணி செய்கிறான்; அவனிடமிருந்தும் பணியைப் பெறுகிறான். அபரிமித மரியாதையும், அளவுக்கு மீறிய பணிவும் இங்கே கிடையா. சக்கிய நிலையில் பகவானிடம் பூரண நம்பிக்கைக்குரிய உறவு நிலையே அமைகிறது. எனவே, சக்கிய நிலையில் மூன்று குணங்கள் ஏற்படுகின்றன. கிருஷ்ணன் தனக்குச் சொந்தமானவன் என்ற பாவம் இந்தத் தோழமை நிலையில் ஏற்படுகிறது. எனவேதான் தோழமை நிலையில் பகவான் பக்தனுக்குப் பணிகிறான்.

ஆனால் கண்ணனிடம் கொண்ட களங்கமற்ற காதல், அவனுடைய தெய்விக சக்தியை உணருவதே இல்லை. அத்தகைய சக்தியைச் சந்திக்க நேரும்போது, களங்கமற்ற காதல் அதை லட்சியமே செய்வதில்லை.

சாந்த ரசத்திலே கிருஷ்ணனிடத்தில் தனி அன்பு ஏற்படுகிறது, கிருஷ்ணனைத் தவிர சாந்த நிலையில் உள்ள பக்தன் வேறு எதையும் விரும்பமாட்டான். கிருஷ்ண பக்தன், சொர்க்கத்தையோ,

மோட்சத்தையோ நரகமாகவே கருதுகிருன். கிருஷ்ணனிடம் இடையருத பற்றும், எல்லா ஆசைகளையும் துறந்த நிலேயும், சாந்த நிலேயில் உள்ள பக்தனின் இரண்டு லட்சணங்கள்.

சாந்த நிலேயில் பக்தன், பகவானே, பரபிரம்மமாகவே காண் கிருன். வேறு எவ்வித உறவையும் அவன் மேற்கொள்வதில்லே; இந்த நிலே ஒன்றில் தான் பக்தன் பகவானிடம் ஆத்மிகத் தொடர்பை அடைகிருன்.

தாஸ்ய நிலேயில், பகவானே மிக உயர்ந்த எஜமான நிலேயில், வைத்தே எல்லாவித சக்திகளும் உடையவஞக எண்ணி, பக்தன் வழிபடுகிருன். பணிவுள்ள சேவையினுல் இத்தகைய பக்தனிடம் வாத்சல்ய ரசத்தில், சாந்த, தாஸ்ய, சக்கிய நிலேகளில் உள்ள குணங்களுடன் பரிபாலிக்கும் தன்மையும் சேருகின்றன. நெருங் கிய உறவினுல் கண்ணனிடம் குற்றம் காணுதல், தண்டித்தல் போன்ற அம்சங்கள் இதில் சேருகின்றன. பயபக்தியோ, பணிவோ இந்த நிலேயில் கிடையா. கண்ணனே வளர்ப்பவஞகப் பக்தனும் குழந்தையாகக் கண்ணனும் இந்த வாத்சல்ய நிலேயில் மாறிவிடு கிருர்கள். நான்கு லட்சணங்களேக் கொண்ட வாத்சல்ய ரஸம் தேனேப் போல இன்பம் பயப்பது. தன்னுடைய பக்தர்களுடன் இந்த நிலேயில் கிருஷ்ணனும் ஆனந்தம் அடைகிருன்.

மாதுர்ய ரசத்தில் முந்திய நிலேகளில் உள்ள நான்கு லட்ச ணங்களுடன், பக்தன் பகவானுடைய காதலியாகவும் மாறுகிருன். எனவே, ஐந்து லட்சணங்கள், மாதுர்ய ரசத்தில் ஏற்படுகின்றன. ஆகாயத்திலிருந்து தொடங்கும் பஞ்ச பூதங்களில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு குணமாகப் பிருத்வியில் ஐந்து குணங்களும் சேர்ந் திருப்பதை இந்த நிலேக்கு உதாரணமாகச் சொல்லலாம். மாதுர்ய ரசத்தில் ஐந்து பாவங்களும் இணேந்திருப்பதால் இது மிகவும் மதுரமானது; யாவராலும் விரும்பப்படுகிறது. (சை. ச. ம. 19)

பத்து தினங்கள் தொடர்ந்து பக்தியைக் குறித்து ரூபருக்கு உபதேசங்கள் கூறி முடிந்ததும், ஸ்ரீசைதன்யர் காசிக்குப் புறப் பட்டார். மந்திரிப் பதவியின் வசதிகளேயும் பெருமையையும்

ஸ்ரீசைதன்யருக்காகத் துறந்து வந்த ரூபரால் அவரைப் பிரிந்திருக்க முடியவில்லை. எனவே, ரூபர் ஸ்ரீசைதன்யரைப் பின்தொடர்ந்து வருவதாகக் கூறினர். ஆனல் ஸ்ரீசைதன்யர் அதற்கு உடன்படவில்லை. மேலும் செய்யவேண்டிய வேலைகள் பிருந்தாவனத்திலேயே அவருக்கு இருக்கின்றன என்றும், பக்தி மார்க்கத்தைப் பரப்ப வேண்டிய பொறுப்பு முழுவதும் ரூபரையே சார்ந்தது என்றும் தம்முடைய கட்டளையை மீருமல் நடந்து கொள்ளவேண்டும் என்றும் ஸ்ரீசைதன்யர் அவரிடம் தெரிவித்தார். பின்னல் பூரிக்கு வந்து தம்மை சந்திக்கும்படியும் ஸ்ரீசைதன்யர் அவரிடம் சொன்னர். குருநாதர் காசிக்குப் புறப்பட்டுச் சென்றதும் ரூபர் உணர்விழந்து கீழே விழுந்துவிட்டார். எனினும், பிறகு குருநாதரின் கட்டளையை மனத்தில் எண்ணி ரூபரும் அநுபமரும் (1516–ஆம் வருஷம் பிப்ரவரி மாதம்) பிருந்தாவனத்துக்குப் புறப்பட்டார்கள்.

காசி நகரத்தின் எல்லையிலேயே, தபனமிஸ்ரர், ஸ்ரீசைதன்யரை எதிர்கொண்டு அழைத்தார். ஸ்ரீசைதன்யரைத் தம்முடைய வீட்டுக்குத் தபன மிஸ்ரர் அழைத்துச்சென்ருர். காசியில் தங்கியிருக்கும் காலம் முழுவதும் தம்முடைய விருந்தாளியாகவே இருக்கும்படியும் மிஸ்ரர், ஸ்ரீசைதன்யரை வேண்டிக்கொண்டார். அதற்கும் ஸ்ரீசைதன்யர் ஒப்புக்கொண்டார். ஸ்ரீசைதன்யரின் மற்ருெரு சிஷ்யரான சந்திரசேகர வைத்யாவின் வீட்டில் அவருக்கு வேண்டிய ஜாகை வசதிகள் செய்யப்பெற்றன.

இதற்குள், சநாதனர், சிறைக் காவலருக்கு 7,000 ரூபாய் லஞ்சம் தந்து சிறையிலிருந்து தப்பி, மாறுவேடத்தில் காசியை வந்தடைந்து, சந்திரசேகரின் இல்லத்தில் ஸ்ரீசைதன்யரைக் கண்டார். ஸ்ரீசைதன்யர் காசியில் தங்கியிருந்த இரண்டு மாதங்களிலும் கௌடிய வைஷ்ணவத்தின் தத்துவங்களைச் சநாதனருக்கு உபதேசம் செய்தார். இந்த உபதேசங்களே சநாதனர் பிற்காலத்தில் எழுதிய, 'பாகவதாம்ருதம்', 'ஹரிபக்தி விலாசம்' முதலிய நூல்களுக்கு அடிப்படையாக அமைந்தன. இந்த உபதேசங்களின் சாரத்தை 'சைதன்ய சரிதம்'' என்னும் வரலாற்று நூலில் கிருஷ்ணதாச கவிராஜர் ஐந்து அத்தியாயங்களில் எழுதியிருக்கிருர்.

1. "நான் யார்?' நான் எதனுல் ஆனவன்? 2. மூன்று ஆசைகளில் சிக்குண்டு நான் ஏன் அல்லல்படுகிறேன்? 3. பரம் பொருளே அடைய நான் என்ன செய்யவேண்டும்?" என்னும் மூன்று கேள்விகளே ஸ்ரீசைதன்யரிடம் சநாதனர் கேட்டார். சாத்யம், சாதனே என்னும் இந்த இரண்டைப்பற்றிய உண்மைகளேயே அந்த மூன்று கேள்விகள் மூலம் ஸ்ரீசைதன்யரிடம் சநாதனர் வேண்டினுர். ஜீவனேப்பற்றிய உண்மையை எடுத்துரைத்த பின்னர் தம் முடைய முக்கியமான மூன்று கோட்பாடுகளான—சம்பந்தம், அபி தேயம், பிரயோஜனம் என்பவைபற்றி ஸ்ரீசைதன்யர் அவருக்கு விளக்கமாக எடுத்துரைத்தார். பின்னர் ஸ்ரீசைதன்யர் சம்பந்தம் என்னும் தலேப்பில் கௌடிய வைஷ்ணவத்தின் தத்துவத்தை விளக் கினுர். பகவானின் வெவ்வேறு அவதாரங்கள், சக்திகள், தன்மைகள் எல்லாவற்றையும் குறித்து, புராணங்கள், சாஸ்திரங்கள் ஆகியவற் றிலிருந்து மேற்கோள்களுடன் எடுத்துரைத்தார். பின்னர், அபிதேயம் என்னும் தலேப்பில், பிரேமையை அடையப் பக்தியே சாதனம் என்றும், வைதம், ராகாநுகம் என அது இருவகைப்படும் என்றும் அதன் தன்மைகளேயும் வழிமுறைகளேயும் பற்றித் தெரி வித்தார். பிரயோஜனம் என்னும் தலேப்பில் எப்படி, பக்தி பிரேமையாக மாறுகிறது என்பதையும் உயர்ந்த நிலேயில் மதன-மோகன என்னும் இரண்டு அம்சங்களாக இருப்பதையும் ஸ்ரீசைதன்யர் சநாதனருக்கு விளக்கினுர்.

மேலும் சநாதனர் பல கேள்விகளே ஸ்ரீசைதன்யரிடம் கேட்டார். அவை எல்லாவற்றுக்கும் விரிவாக ஸ்ரீசைதன்யர் பதில் தந்தார். பின்னர் 'ஆத்மாராமாஸ்ச' என்னும் பிரசித்தி பெற்ற பாகவத சுலோகத்தின் பொருளேத் தெரிவிக்கும்படி ஸ்ரீசைதன்யரை, சநாதனர் கேட்டுக் கொண்டார்.

முன்பு தாம் கூறிய 18 வியாக்கியானங்களே ஒதுக்கிவிட்டு, சநாதனருக்கு 61 அர்த்தங்களே ஸ்ரீசைதன்யர் புதியதாகக் கூறினுர். குறிப்பிட்ட சுலோகம் முழுவதற்கும் வெவ்வேறு விதமான விளக்கம் தந்தார். பாகவதத்தின் ஒரு சுலோகத்துக்கு 79 விதமாக அர்த்தம் சொன்னதிலிருந்து ஸ்ரீசைதன்யருக்கு மகத்தான மேதா விலாசமும் பாகவதத்தில் உள்ள ஒவ்வோர் எழுத்தினும் பொதிந்துள்ள

உண்மையைப் பூர்ணமாக அறிந்திருக்கும் ஆற்றலும், கௌடிய வைஷ்ணவ தர்மத்தைப்பற்றிய பரிபூரண ஞானமும் இருந்தன என்பது தெளிவாகத் தெரிகிறது.

இரண்டு மாதம் உபதேசம் செய்த பிறகு, ரூபரையும் சநாதரையும் பிருந்தாவனத்திலிருந்து கொண்டு, வைஷ்ணவ தர்மத்தைப் பரப்பும் இயக்கத்துக்குத் தலைமைப் பீடத்தின் பொறுப்பாளர்களாக இருக்கும்படி ஸ்ரீசைதன்யர் நியமித்தார்.

"இதற்குமுன்பு அலாகாபாத்தில் பக்தி ரசத்தைக் குறித்து ரூபருக்கு உபதேசம் செய்திருக்கிறேன். அதை ஏற்றுக் கிரகித்துக் கொள்ளக் கூடிய சக்தியையும் அவருக்கு அளித்திருக்கிறேன். நீயும் பக்தியைப்பற்றி எங்கும் பிரசாரம் செய்யலாம், மற்றும் மதுரையைச் சார்ந்த பிரதேசங்களில் கிருஷ்ணனுடன் சம்பந்தம் உள்ள இடங்களைத் தேடிக் கண்டு பிடி. அங்கே எல்லாம் கோயில்களை நிறுவி தக்க வழிபாடுகளுக்கு ஏற்பாடுகளைச் செய்; அந்தக் கோயில்களில் வைஷ்ணவ முறைகளைத் தொடங்கி நடத்தச் செய்; பக்தி மார்க்கத்தைக் குறித்து நூல்களை எழுதி, பக்தியைப் பரப்புவதற்கு சாதனமாகப் பயன்படுத்து" என்று சநாதனரிடம் ஸ்ரீசைதன்யர் முடிவில் தெரிவித்தார்.

சநாதனர் தம்முடைய பற்களுக்கிடையே தர்ப்பையை வைத்துக் கொண்டு கைகட்டியபடியே, "தூய்மையற்ற எஜமானரிடம் பணி செய்தவன் நான்; நானே பரிதாபத்துக்கு உரியவன்; ஒரு பிராம்மணரின் அறிவுக்கு அப்பாற்பட்ட உண்மைகளை நீங்கள் எனக்குப் போதித்திருக்கிறீர்கள். உங்களுடைய உபதேசம் என்னும் அமுதக் கடலின் துளியைக் கூடப் பருகும் ஆற்றல் அற்றவன் நான். ஒரு நொண்டியை நடனமாடும்படி செய்யவேண்டும் என்று நீங்கள் நினைத்தால், உங்கள் பாதத்தை என் சிரசில் வைத்து ஆசிர்வாதம் செய்யுங்கள். நீங்கள் செய்த உபதேசங்கள், என் மூலமாக ஒளி விசச் செய்யுங்கள்; உங்களுடைய கட்டளைகளை நிறைவேற்றும் சக்தி உங்கள் அருளால் எனக்குக் கிடைக்கட்டும்" என்று ஸ்ரீசைதன்யரை சநாதனர் வேண்டிக்கொண்டார். ஸ்ரீசைதன்யர் அவர் சிரத்தில் தம்முடைய கரத்தை வைத்து, நான் செய்த உப

தேசங்கள் யாவும் உன்னால் ஒளிபெறட்டும்'' என்று சொல்லி அருள் புரிந்தார்.

இதுவரையிலும் சநாதனருக்கு, ஸ்மிருதிகளைப்பற்றி ஸ்ரீசைதன்யர் எதுவும் உபதேசிக்கவில்லை என்பதைக் கண்டோம். ஆனால் அந்த விஷயத்தைக் குறித்து ஒரு புத்தகம் எழுதும்படி அவரைக் கேட்டுக்கொண்டதால் இது சம்பந்தமாக ஸ்ரீசைதன்யரிடம் சநாதனர் விளக்கம் கேட்டார். எல்லாப் புராணங்களிலிருந்தும் தக்க மேற்கோள்களுடன் வைஷ்ண ஸ்மிருதிக்கு முக்கியத்வம் கொடுக்கும் எல்லா கோட்பாடுகளையும் ஆதரிக்கும் வகையில் ஸ்ரீசைதன்யரும் சூத்திரங்கள் மூலமாக விளக்கம் தந்தார். இதை அடிப்படையாகக் கொண்டே சநாதனர் 'ஹரிபக்தி விலாசம்' என்னும் நூலை இயற்றினார்.

12

# காசியிலிருந்த மாயாவாதிகளை மாற்றியது

காசியிலிருந்த சந்நியாசிகளின் கடின இதயங்களில் மாற்றத்தை ஏற்படுத்த வேண்டும் என்று தபன மிஸ்ரரும் சந்திர சேகரரும் ஸ்ரீசைதன்யரிடம் பிரார்த்தித்துக் கொண்டனர் என்பதை ஏற்கனவே நாம் பார்த்தோம். மாயாவாதத்தைக் கடைப் பிடிக்கும் சந்நியாசிகளை ஓர் விருந்துக்கு அழைத்து, அவர்களை ஸ்ரீசைதன்யர் சந்திக்கும்படி மராட்டிய பிராமணர் ஒருவர் ஏற்பாடு செய்தார். மாயாவாத சந்நியாசிகளும் ஸ்ரீசைதன்யரும் சந்தித்தது இதுவே முதல் முறையாகும். ஸ்ரீசைதன்யருக்கும் மாயாவாத சந்நியாசிகளுக்கும் இடையே நிகழ்ந்த பிரசித்திபெற்ற இந்த விவாதத்தை 'பஞ்ச தத்துவாக்கியம்' என்னும் நூலில் கிருஷ்ணதாசர் குறிப்பிட்டதாக டாக்டர் டி. சி. சென் என்னும் அறிஞர் கூறுகிருர். இப்பொழுது அந்த நூல் மறைந்து போய் விட்டது. ஆனல் 'சைதன்ய சரித்திர'த்தின் மத்திய பகுதியில் 25-ஆவது அத்தியாயத்தில் இந்த விவாதத்தைக் குறித்து, கிருஷ்ணதாசர் எழுதியிருக்கிருர். அதே நூலின் முதற் பகுதியில் ஏழாவது அத்தியாயத்தில் பஞ்சதத்துவத்தைப் பற்றி, கிருஷ்ணதாசர் குறிப்பிட்டிருக்கிருர். பஞ்சதத்துவாக்கியம் என்பது கிருஷ்ணதாசர் எழுதிய தனி நூல் அல்ல; 'சைதன்ய சரித'த்தின் ஓர் அத்தியாயமேயாகும்.

மேடையிலே அமர்ந்திருந்தவர்களுக்கு நமஸ்காரம் செய்து விட்டு, மிகுந்த பணிவுடன் காலை அலம்பிக் கொண்டு ஸ்ரீசைதன்யர் தனியே ஓரிடத்தில் சென்று அமர்ந்தார்.

"அசுத்தமான இடத்தில் சென்று ஏன் அமர்கிறீர்கள்?" என்று பிரகாசானந்தர் ஸ்ரீசைதன்யரைக் கேட்டார்.

"உங்களைப் போன்ற படித்த அறிஞர்கள் மத்தியிலே அமருவதற்கு எனக்குத் தகுதியில்லை. அதனல்தான் இங்கே உட்கார்ந்தேன்" என்று பணிவுடன் பதில் தந்தார் ஸ்ரீசைதன்யர்.

"சந்நியாசியாகிய நீங்கள் எங்களுடன் கலந்து கொள்ளாமல் எப்படி நகரத்தில் இருக்கிறீர்கள் ? சந்நியாசிகளுக்குரிய தியானமும் வேதாந்த விசாரணையும் இல்லாத, உணர்ச்சி வசப்பட்ட சாதாரண மக்களுடன் சந்நியாசியாகிய நீங்கள் ஆடியும் கீர்த்தனங்களை இசைத்தும் வருகிறீர்களே, ஏன்?" என்று மீண்டும் பிரகாசானந்தா கேட்டார்.

"நானோ கொஞ்சமும் படிக்காத பாமரன், வேதாந்தம் படிக்கும் ஆற்றல் என்னிடம் ஏது! மிகவும் மந்தபுத்தியுள்ள எனக்கு கிருஷ்ணனின் நாம மந்திரத்தை மட்டும் என் குருநாதர் உபதேசித்தார். 'கிருஷ்ணனின் நாம மந்திரமே இந்த உலகத்திலிருந்து விடுதலையைத் தந்து, பகவானின் பாதாரவிந்தத்தில் சேர்க்க வல்லது. கிருஷ்ண நாமம், எல்லா மந்திரங்களிலிருந்து பிழிந்தெடுத்த ரசம் போன்றது, கலியுகத்தில் இது ஒன்றே பகவானை அடையச் செய்யும் ஆத்மிக நெறி' என்று எனக்குக் குருநாதர் உபதேசம் செய்திருக்கிறார்." இவ்வாறு ஸ்ரீசைதன்யர் மிக்க அடக்கத்துடன் சொன்னார்.

மேலும் அவர் சொன்னார் : "கிருஷ்ணனின் நாமத்தைச் சொல்லும்போது பக்திப் பெருகில் என் அறிவு கரைந்தே விடுகிறது. நான் பொறுமையிழந்து மயங்கி விடுகிறேன். மது அருந்தியவனைப் போல, அழுகிறேன் ; பாடுகிறேன் ; சிரிக்கிறேன். பகவானின் நாமத்தை யார் உச்சரித்தாலும் அவரிடத்தில் இம்மாதிரி மெய்ப்பாடுகள் கிருஷ்ண பக்தியின் பாவ நிலையில் ஏற்படும் என்று என் குருநாதர் சொல்லியிருக்கிறார். அறம், பொருள், இன்பம், வீடு, இந்த நான்கு நிலைகளையும் இந்தப் பக்தி நிலையுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, அவை சாதாரண துரும்புக்குச் சமமாகிவிடுகிறது. நிர்க்குண பிரம்மத்தில் உண்டாகும் ஆனந்தத்தைவிட கிருஷ்ண பிரேமையால் உண்டாகும் ஆனந்தம் பன்மடங்கு உயர்ந்தது."

கடைசியில், "என்னுடைய குரு ஈசுவரபூரி, பாகவதத்தின் சாரமான சுலோகம் ஒன்றை எனக்குச் சொல்லிச் சென்றிருக்கிறார். 'தன்னுடைய அன்புக்குரிய பகவானின் நாமங்களை ஆழ்ந்த பக்தியுடன் தீவிரமாகத் திரும்பத் திரும்பச் சொல்பவன் சில சமயங்களில் தானாகவே உரக்கச் சிரிப்பான், அழுவான் ; கூச்சலிடுவான் ; பாடு

வான்; சில வேளைகளில் நடனமாடுவான்; மானம் அபிமானம் இவற்றைப் பார்க்காத நிலையை அடைந்து விடுவான்' என்னும் கருத்துள்ள அந்தச் சுலோகத்தையும் ஸ்ரீசைதன்யர் எடுத்துக்கூறினர்.

"நீங்கள் ஏன் வேதாந்தத்தை கேட்க வில்லை?" என்று மாயாவாத சந்நியாசிகள் ஸ்ரீசங்கரபாஷ்யத்தை மனத்தில் வைத்துக் கொண்டு ஸ்ரீசைதன்யரைக் கேட்டார்கள்.

ஸ்ரீசைதன்யர் வேதாந்தத்தைப் பற்றிய தம் கருத்தினை அவர்களுக்குக் கூறத் தொடங்கினர். முதலில், தர்க்கத்திற்குரிய இரண்டு கருத்துக்களை விளக்குவதற்கு எடுத்துக் கொண்டார். (1) தம் விவர்த்த வாதத்தால் சங்கரர் நிலை நிறுத்திய அத்வைதக் கொள்கை. (2) சர்வசக்தி உள்ள அந்தப் பரம்பொருள் தான் மாறுபடாமல் வேறுபட்ட பலவற்றுக்கும் இடங்கொடுக்கின்றது - என்ற இவ்விரண்டுமே அந்தக் கருத்துக்கள்.

பின்சொன்ன கருத்தே வேதாந்தத்தின் நியாயமும் இயற்கையும் தெளிவும் நேர்மையும் உடைய பொருள் (முக்கிய அர்த்தம்) என்பதை உபநிஷத்துக்களின் மூலம் வெளியிட்டார்; முற்கூறிய கருத்து தம் விருப்பத்திற்கு ஏற்றதும் வற்புறுத்தி வலிந்து கூறுவதும் (கௌண அர்த்தம்) ஆகும். இதற்கு மூலம் இடம் தராது. பகவான், ஸ்ரீவியாசர் மூலம் வேதாந்தத்தை விளக்கிக்கூறியுள்ளார் ஆதலின், அந்த வியாக்கியானம் குற்றமோ அஜாக்கிரதையோ ஏமாற்றமோ குறைவுற்ற காட்சியோ இல்லாமல் ஆண்டவனுடைய கருத்துக்களைப் பெற்றுள்ளது. அந்த வேதாந்தம் உபநிஷத்துக்களின் உதவியைக் கொண்டு விளக்கப்படுதல் வேண்டும். உபநிஷத்துக்களின் கருத்து வேதாந்தத்தில் சூத்திரங்கள் வடிவில் காணப்படும். ஸ்ரீசங்கரர் தம் மாயாவாதத்தால் ஸ்தாபிக்கும் புதிய விவர்த்த கொள்கையைவிட, உபநிஷத்துக்களில் முழு ஆதாரத்தையும் பெற்ற இயற்கையாக அமைந்துள்ள பொருளே சிறந்தது. ஸ்ரீசங்கருடைய உபதேசத்தைக் காட்டிலும் உபநிஷத்துக்களையும் வேதாந்தத்தையும் ஆராய்ந்தறிந்த ஞானிகளின் உபதேசம் அதிக நம்பிக்கைக்குப் பாத்திரமானது என்பதை ஸ்ரீசைதன்யர் சுட்டிக் காட்டினர். பின்னர், வேதாந்த சூத்திரங்கள் உபநிஷத்துக்களின் ருத்துக்களோடு ஒன்றுபடுவதையும் ஸ்ரீசங்கருடைய பாஷ்யத்

துக்கு மாறுபடுவதையும் ஸ்ரீசைதன்யர் விளக்கிக்கூறினர். வேதாந்தத்தின் நேரிய இயற்கைப் பொருளை ஒட்டி உபநிஷத்தின் உதவி கொண்டு ஸ்ரீசங்கரருடைய கருத்து ஆதாரமற்றது என்று அவர் மறுத்து வாதாடினர்.

பின்னர் அந்த மாயாவாத சந்நியாசிகள் தங்களுக்குத் திருப்தி ஏற்படும் முறையில் பரிணும வாதத்தை விளக்கி ஸ்தாபிக்க வேண்டும் என்று ஸ்ரீசைதன்யரை வாதத்திற்கு அழைத்தனர். அதனல் ஸ்ரீசைதன்யர் அந்தச் சூத்திரங்கள் ஒவ்வொன்ருய் ஆராய்ந்து, அவற்றினுக்கு நேரிடையான விளக்கத்தை அளித்தார். நீண்ட தர்க்கத்திற்குப் பின் தன் கருத்தை ஸ்ரீசைதன்யர் நிலைநாட்டினர். "ஸ்பரிசவேதியைப் போன்ற ஒரு பொருள், பொன்னை உண்டாக்கும் போது யாதொரு மாறுபாடும் இன்றி இருக்கும்போது எல்லாப் பொருள்களையும் படைத்துத் தான் மட்டும் மாறுபடாமல் இருக்கும் ஆற்றலைப் பெற்றவன் ஆண்டவன் என்னும் கருத்தைக் குறித்து அந்த மாயாவாதிகள் ஆச்சரியப்படுவது" ஏன் என்று ஸ்ரீசைதன்யர் வினவினர்.

பிரும்மம் வேறுபாடு இல்லாமலும் குணங்கள் இல்லாமலும் இல்லை. அது உறுப்புக் குறைந்த பொருளும் அன்று. கர்த்தாவும், கர்மாவும் இல்லாத ஸர்வ வியாபக தத்துவம் மட்டும் அன்று. ஆயினும் பகவான் தானே ஆறு குணங்களைப் (ஷட் ஐசுவரியம்) பெற்றவன். மாயையின் சுவடு சிறிதும் இல்லாதவன். அவன் சக்திகள் அவனிடத்தில் இயற்கையாய் அமைந்துள்ளன. அவன் மாயாவாதத்தை ஒப்புக்கொள்வதில்லை. சர்வ சக்திப் பொருளாகிய பிரும்மமே எல்லா வேதங்களாலும் பிரதிபலிக்கப்படுவது. அப்பொருள் நிர்விசேஷமானது என்று கூறுவோர் அதன் தெய்விகச் சக்திகளை மறுப்பவராவர்; அப்பொருளைக் குறைவுள்ளதாக ஆக்குவர். தியானம், நாம சங்கீர்த்தனம் போன்ற ஒன்பது வித மார்க்கங்களால் ஆண்டவன் அருளை அடைய முடிக்யும்" என்று ஸ்ரீசைதன்யர் வற்புறுத்தி கூறினர்.

அபிதேய பக்தியின் பழக்கத்தால் பிரேமை தோன்றுகின்றது. அந்த முழு பக்தியால் மற்றைப் பற்றுக்கள் மறைகின்றன. இந்த அன்பே ஐந்தாவது புருஷார்த்தம், (பஞ்சம புருஷார்த்தம்). அதுவே

பக்தன் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் நெகிழ்ந்த அருளின் சாயையை அடையும்படி செய்கின்றது. இந்த அன்பின் மூலம் இறைவன் அருளைப் பெறலாம்; இறைவன் தொண்டின் இன்பத்தை அநுபவிக்கச் செய்வதும் இதுவே. வேதாந்தத்தின் சூத்திரங்களில் ஊடுருவிச் செல்லும் தத்துவங்கள் மூன்று. அவை (1) சம்பந்தம், (2) அபிதேயம் (பக்தி), (3) பிரயோஜனம் (பிரேமை) என்று கூறி ஸ்ரீசைதன்யர் தம் கருத்துக்களை முடிவாகத் தெரிவித்தார்.

இந்த மகத்தான விவாதத்தினால் குதர்க்க புத்தி கொண்ட சந்நியாசிகளின் மனமும் அறிவும் மாறின. உலகைத் துறந்த கர்வம் மிகுந்த அறிஞர்களான சந்நியாசிகளுக்கு அவர்களுடைய அறிவைக் காட்டிலும் மேலான உண்மை ஒன்றை, எதிர்பாராத இடத்திலிருந்து அவர்கள் உணர்ந்து கொள்ளக் கூடிய நிலை ஏற்பட்டது பெரிய அதிசயமாகும்.

பாமரர்களுக்கு ஏற்ற, வெறும் உணர்ச்சி நிறைந்தது என்று கருதிவந்த கிருஷ்ண நாம சங்கீர்த்தனத்தைச் சந்நியாசிகள் ஸ்ரீசைதன்யரிடமிருந்து ஆசியுடன் பெற்றுக் கொண்டார்கள். பிறருடைய மனத்தை மாற்றித் தம் கருத்துக்குக் கொண்டு வரும் வாதத் திறமை ஸ்ரீசைதன்யரிடம் குழந்தைப் பருவத்திலிருந்தே இருந்தது என்பதை நாம் பல சமயங்களில் பார்த்திருக்கிறோம். எனவேதான் மக்களைத் தம் முடிவுக்கே அவரால் கொண்டுவர முடிந்தது. இந்தியாவிலேயே மாயாவாத சந்நியாசிகளின் கோட்டையான காசியிலேதான் அவருக்குக் கண்டனமும் எதிர்ப்பும் நிறைய இருந்தன. அத்வைதக் கோட்டை போன்ற இடத்தில் நடந்த விவாதத்தில் ஸ்ரீசைதன்யர் மாயாவாதிகளை வென்றதால், காசியின் ஆத்மிகச் சூழ்நிலையிலேயே பெரிய மாறுதல் ஏற்பட்டது. ஸ்ரீசைதன்யரின் கருத்துக்களையும் கிருஷ்ணனின் நாம மந்திரத்தையும் ஏற்றதுடன் மட்டும் அல்லாமல் மாயாவாதிகளில் பலர் பின்னர் ஸ்ரீசைதன்யரின் வைஷ்ணவ தர்மத்தையும் அவருடைய தெய்விகத் தன்மையையும் பரப்பும் தொண்டர்களாகவும் மாறினர்.

ஸ்ரீசைதன்யர் அடைந்த இந்த வெற்றி காசி நகரம் முழுவதும் பெரிய பரபரப்பைத் தந்தது. மற்ற மதத்தைச் சேர்ந்த பல தலைவர்களும் மத சம்பந்தமான நூல்களில் தர்க்கம் செய்ய ஸ்ரீசைதன்யரை

அழைத்தார்கள். அவர்களுடைய வாதங்கள் எல்லாவற்றையும் மறுத்து, தம்முடைய பக்திக்கொள்கையை ஸ்ரீசைதன்யர் நிலை நாட்டினார். சந்நியாசிகள் தங்களுக்குள்ளாகவே பக்தியைக் குறித்து விவாதங்கள் நடத்திப் பின்னர் ஒரு முடிவுக்கு வந்து, சங்கர பாஷ்யத்தைப் படிப்பதையே கைவிட்டார்கள். அந்த வெற்றிக்குப் பின், ஸ்ரீசைதன்யரைக் காண மக்கள் ஏராளமாகக் கூடலானார்கள். அவருடைய தரிசனத்துக்காக ஆயிரக்கணக்கான மக்கள் காத்துக்கிடந்தார்கள். காசியில் ஸ்ரீசைதன்யர் தங்கிருந்த இடம், பெரிய ஜனக் கூட்டம் வந்து போக இயலாத மிகவும் சிறிய இடமாக இருந்தது. ஸ்ரீசைதன்யர் விசுவநாதர் ஆலயத்துக்குச் சென்றபோது அவரைக் காண்பதற்காக நதிக்கரையிலும் மற்ற இடங்களிலும் மக்கள் குழுமிவிட்டார்கள். காசியில் அவர் நொடிப்பொழுதில் ஒரு பெரிய வெற்றியைப் பெற்று விட்டார். அதன் விளைவுகளும் உடனடியாகப் பிரதிபலித்ததுடன் நிலையாகவும் அமைந்து பெரிய மாறுதலையும் ஏற்படுத்தின.

மாயாவாத சந்நியாசிகளின் தலைவரான பிரகாசானந்த சரஸ்வதி, பிந்து மாதவர் கோயிலில் ஸ்ரீசைதன்யரைச் சந்தித்தார்.

"தாங்களே தெய்வம். தங்களுடைய பெருமையை அறியாமல் முன்பு நான் நடந்து கொண்டதற்கு மன்னித்து அருளுங்கள்" என்று சொல்லி அவர் பாதங்களைப் பற்றிக் கொண்டு பிரகாசானந்த சரஸ்வதி நமஸ்கரித்தார்.

"என்னைத் தெய்வம் என்று குறிப்பிடாதீர்கள். எந்த மனிதரையுமே அப்படி அழைக்கக்கூடாது. அது பெரிய அபசாரமாகும். மனிதனைக் கடவுள் என்று கூறுவது தெய்வநிந்தனையாகும்" என்று தம்மைக் கடவுள் என்று கூறுவதை உடனே ஸ்ரீசைதன்யர் ஆட்சேபித்தார்.

ஸ்ரீசைதன்யர் வேதாந்தத்துக்கு கூறிய வியாக்கியானம் தம்மை மிகவும் கவர்ந்தது என்றும் மேலும் வேதாந்தத்தின் முக்கிய அர்த்தத்தைத் தெளிவாக்கவேண்டும் என்றும் பிரகாசானந்தா ஸ்ரீசைதன்யரை வேண்டிக் கொண்டார். வேதாந்தத்துக்கு எல்லாவகையிலும் ஏற்ற வியாக்கியானம் பாகவதமே என்று இச்சமயத்தில் ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார். வேதாந்த சூத்திரத்துக்கு வியாக்கி

யானமாக, வியாசரே பாகவதத்தை அருளினர் என்னும் கர்ண பரம்பரைச் செய்தியையும் ஸ்ரீசைதன்யர் சுட்டிக் காட்டினர்.

வேதாந்தத்தின் நேரிடையான பொருளைச் சாதாரண மனிதன் புரிந்து கொள்வது மிகக் கடினம். வேதாந்த சூத்திரத்திற்கு வியாசரின் விளக்கத்தையே தரக்கூடிய பாகவதத்தின் மூலமே வேதாந்தத்தின் பூரண அர்த்தத்தையும் உணரமுடியும். நூலை இயற்றியவரே அதற்கு வியாக்கியானமும் செய்திருக்கிறார் என்றால் அதுதானே சுலபமாக உணரக்கூடியதாக இருக்கும். பாகவதத்தின் கடைசி நான்கு சுலோகங்களில் காயத்ரி மந்திரத்தில் உள்ள பிரணவத்துக்குப் பொருள் சொல்லப்பெற்றிருக்கிறது. இந்த நான்கு சுலோகங்களின் அர்த்தத்தை பகவான் பிரம்மாவுக்கு விளக்கினர். பிரம்மா நாரதருக்குக் கூறினர்; அவர் வியாசருக்குச் சொன்னர். நாரதரிடமிருந்து பெற்ற அந்த நான்கு சுலோகங்களின் அர்த்தத்தைத் தம்முடைய வேதாந்த சூத்திரத்திற்கு வியாக்கியானமாக இருக்கும்படி வியாசர் பாகவதத்தை இயற்றினர். நான்கு வேதங்களையும் உபநிஷத்துக்களையும் வியாசர் தொகுத்தார். வேதாந்த சூத்திரத்தின் ஒவ்வொரு பகுதியான 'ருக்'கில் தெரிவித்துள்ள விஷயம் பாகவதத்தின் குறிப்பிட்ட சுலோகத்திலும் அமைந்திருக்கிறது. எனவே, வேதாந்தத்தின் உண்மையான விளக்கமே பாகவதம். வேதாந்தமும் உபநிஷத்துக்களும் ஒரே விஷயத்தையே கூறுகின்றன. உபநிஷத்துக்கள் மூல நூலாகும்; அவற்றின் விரிவுரையே வேதாந்தம்.

கிருஷ்ணனுடன் சம்பந்தம், பக்தியின் அபிதேயம், பிரமையின் பிரயோஜனம் ஆகிய மூன்று கொள்கைகளை யொட்டி, வேதாந்த சூத்திரங்களின் விளக்கமாக அந்த நான்கு சுலோகங்களின் பொருளையும் ஸ்ரீசைதன்யர் விளக்கினர். சுலபத்தில் எடுத்துரைக்க முடியாத இந்தவிரிவுரையை மிகவும் சுருக்கித் தம் நூலில் கிருஷ்ணதாச கவிராஜர் தந்திருக்கிறார். அதை இங்கே வெளியிடுவதும் சுலபமல்ல. பாகவதத்தின் பிரசித்தி பெற்ற 'ஆத்மாராமஸ்ச' என்னும் பாடலின் 61 வெவ்வேறு வித அர்த்தத்தையும் ஸ்ரீசைதன்யரின் வாயிலிருந்து நேராக கேட்டுத் தெரிந்துகொள்ளும் வாய்ப்பும் பிரகாசானந்தாவுக்குக் கிட்டியது.

## காசியிலிருந்த மாயாவாதிகளை மாற்றியது

தம்முடைய பக்தி நெறியை நிலைநாட்டும் மகத்தான பணியின் உச்சநிலையை ஸ்ரீசைதன்யர் காசியில் அடைந்தார். பூரியில் வாசுதேவ சார்வபௌமரை மாற்றியதில் தொடங்கின ஸ்ரீசைதன்யரின் இயக்கம் பெற்ற பல வெற்றிகளில் பிரகாசானந்தரின் மாற்றம் மிக முக்கியமானதாகும். எந்தச் சந்தர்ப்பத்திலும் எவரையுமே ஸ்ரீசைதன்யர் விரோதித்துக் கொண்டதும் கிடையாது தென் இந்தியாவிலும் இந்தியாவின் கிழக்கு, வடக்கு, மத்திய பாகங்களிலும் அநேகமாக ஸ்ரீசைதன்யரின் செல்வாக்கு பதவியிலிருந்த போதிலும் காசியில் மட்டும் இயக்கம் எட்டாமல் இருந்தது. இப்பொழுது அந்த நிலையும் மாறிவிட்டது.

சங்கரரின் வேதாந்த பாஷ்யத்தை கற்பிப்பதற்கு பதிலாக, பாகவதத்தைச் சொல்லிக் கொடுப்பதையே சந்நியாசிகள் தங்களுடைய நித்திய உபந்நியாசங்களில் ஒன்ருகக் கொண்டார்கள். கிருஷ்ணநாம சங்கீர்த்தனத்தையும் அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். 'இரண்டாவது நவத்வீபமாகக் காசி மாறிவிட்டது' என்று கிருஷ்ணதாசர் குறிப்பிடுகிருர்.

# 13

# ஸ்ரீசைதன்யரின் இயக்கம்

எண்ணற்ற மக்களின் மனத்திலே என்றும் அழியாத நினைவை நிறுத்திவிட்டு ஜார்கண்ட் காடுகளின் வழியாக, ஸ்ரீசைதன்யர் பூரிக்குத் திரும்பினர். அவருடன் கூடவே, தபன மிஸ்ரர், ரகுநாதர், இன்னும் பலரும் பூரிக்குவர விரும்பினர்கள். ஆனல் இயன்றவரையில் குறைவாகவே தம்முடன் அன்பர்களை அழைத்துச் செல்ல விரும்புவதைத் தெரிவித்து அவர்களுக்கு ஸ்ரீசைதன்யர் அநுமதி மறுத்துவிட்டார். பிருந்தாவனத்துக்குச் சென்று அவருடைய சகோதரர்களுடன் சேர்ந்து கொள்ளுமாறு சநாதனருக்குக் கட்டளையிட்டார். பலபத்திரருடனும் அவருடைய பிராம்மணப் பணியாளுடனும் ஸ்ரீசைதன்யர் அநேகமாக 1516-ம் ஆண்டு ஏப்பிரல் மாதம் பூரிக்குத் திரும்பினர். அதற்குப் பிறகு 18 ஆண்டுகள் வரையில் ஸ்ரீசைதன்யர் அங்கேயே வசித்துவந்தார். சிற்சில சமயங்களில், பிருந்தாவனத்தை நினைவூட்டக்கூடிய ஆலால் நாத் என்னும் கிராமங்களில் சிறிது காலம் ஸ்ரீசைதன்யர் கழித்தார். அந்தக் கிராமத்தில் தங்கியிருக்கும் காலங்களில் அவருக்குப் பிருந்தாவனத்து நினைவுகள் வந்துவிடும்.

ஸ்ரீசைதன்யர் பூரியை அடைந்ததும் அவருடைய சிஷ்யர்கள் மகத்தான வரவேற்பை அளித்தனர். பழைய இருப்பிடமான காசி மிஸ்ரரிவின் தோட்ட வீட்டிலேயே ஸ்ரீசைதன்யர் தங்கினர். பூரிக்குத் திரும்பிய தினத்தன்றே சார்வபௌமர், ஸ்ரீசைதன்யருக்கு ஓர் விருந்தளித்தார்.

அடுத்த ஆறு ஆண்டுகளில் ஸ்ரீசைதன்யர் முழுச் சக்தியையும் செலுத்தி, தீவிரமாகத் தம் பக்தி நெறியைப் பரப்பி வந்தார். மற்றத் துணைவர்களின் உதவியுடன், அவரே ஒரிஸ்ஸாவில் இயக்க வேலைகளைக் கவனித்து வந்தார். வங்கத்தில் இயக்கம் மேலும் வலுவடைவதற்காக முக்கிய அதிகாரியாக நித்தியானந்தரை நியமித்தார்.

பிருந்தாவனத்தில் ரூபசநாதனர்களை, இருக்கும்படி செய்து, அவருக்கு உதவியாகச் சில அறிஞர்களையும் அனுப்பிவைத்தார். பக்தி இயக்கத்தின் அதிகார பூர்வமான நூல்களை எழுதும் பணியையும் அவரிடமே ஸ்ரீசைதன்யர் ஒப்புவித்தார். பிருந்தாவனத்தை முன்பு போல இந்தியாவின் மகத்தான புண்ணிய ஸ்தலமாக நிலைநாட்ட, புதிய கோயில்களை நிர்மாணிக்கவும் பழையனவற்றைப் புதுப்பிக்கவும் வேண்டிய காரியங்களைக் கவனிக்கும் பொறுப்பையும் ரூபசநாதனர்களிடம் ஒப்புவித்தார்.

தேர்ந்தெடுத்த தம்முடைய சிஷ்யர்களில், ரூபசநாதனர்கள் இருவரும் சுயேச்சையாகச் செயலாற்றும் நிலையை அடைந்துவிட்டார்கள் என்று 36-ஆவது வயதில் ஸ்ரீசைதன்யர் உணர்ந்தார். மெல்ல மெல்லப் பொது வேலைகளிலிருந்து அவர் விலகிக் கொண்டு, தனிமையை நாடினர். இப்படியே 12 ஆண்டுகள் தன்னந்தனியே பகவானை எண்ணித் தியானத்தில் அவர் ஆழ்ந்திருந்தார்.

ஸ்ரீசைதன்யரைப் போலவே, பிருந்தாவனத்தின் வெவ்வேறு காடுகளில் ஒரு மாதத்துக்கு மேலாக ரூபர் கழித்தார். பின்னர் சகோதரர் அநுபமருடன் பூரி வழியாக வங்காளத்துக்குப் புறப்பட்டார். செல்லும் வழியில் கோதா என்னுமிடத்தில் அநுபமர் காலமானர். 1957-மார்ச் மாதம் டோலி யாத்ரை முடிய, பூரியில் ரூபர் தங்கினர். பின்னர் ஸ்ரீசைதன்யர், சநாதனருடன் இணைந்து செயலாற்ற ரூபரைப் பிருந்தாவனத்துக்கு அனுப்பினர்.

அங்கேயிருந்து ரூபர் புறப்பட்டுப் போன பத்து தினங்களுக்குப் பிறகே பூரியைச் சநாதனர் அடைந்தார். ரத யாத்திரை முடிந்ததும் நவம்பரில் வங்காளத்துப் பக்தர்கள் தாயகம் திரும்பினர். சநாதனர் பூரியிலேயே தங்கி ஸ்ரீசைதன்யரிடம் மேலும் பயிற்சி பெற்ருர். பக்தித் தத்துவத்தின் உள் அம்சங்கள் பலவற்றையும் பிருந்தாவனத்தில் செய்ய வேண்டிய வேலைகளைப் பற்றியும் ஸ்ரீசைதன்யரிடமிருந்து சநாதனர் அறிந்து கொண்டார். பின்னர் டோலி யாத்ரை விழா முடிந்ததும் 1518-ஆம் வருஷம் மார்ச் மாதம் அவர் பிருந்தாவனத்துக்குப் புறப்பட்டார்.

ஒவ்வோர் ஆண்டும் ரத யாத்திரையின் போது, நான்கு மாதம் பூரியில் தங்கும் காலத்தில் வங்காளத்துப் பக்தர்களுக்குத்

தொடர்ந்து தம் பக்தி நெறியைப் பற்றி ஸ்ரீசைதன்யர் உபதேசித்து வந்தார்.

ஒரு சந்தர்ப்பத்தில், ஸ்ரீசைதன்யரின் சிஷ்யர்களில் ஒருவரான பகவான் ஆசார்யா, அவரை விருந்துக்கு அழைத்தார். ஸ்ரீசைதன்யர் உண்பதற்காக நல்ல அரிசியை, மாதவி தேவி என்னும் வயதான சிறந்த பக்தை ஒருவரிடமிருந்து பெற்று வரும்படி, பகவான் ஆசார்யா, ஹரிதாசர் (இஸ்லாம் மதத்திலிருந்து இந்துவாக மாறிய பிரசித்தி பெற்ற ஹரிதாச டாகுரா அல்ல) என்பவரை அனுப்பினர். அந்த ஹரிதாசரின் மனத்தில் தீய எண்ணம் குடி புகுந்திருந்ததை ஸ்ரீசைதன்யர் கண்டு கொண்டார். போலிச் சந்நியாசிகளுக்கு ஓர் எச்சரிக்கையாக இருக்கட்டும் என்று தம்முடைய இல்லத்துக்குள்ளே அவர் வரக்கூடாது என்று தடை உத்தரவிட்டார்; பெண்களைக் கேவலம் மனத்தால் இச்சித்த காரணத்துக்காகவே அவரைப் பிரஷ்டமும் செய்தார். செய்த குற்றத்துக்கு வருந்திய ஹரிதாசருக்காக மன்னிப்பு வேண்டி, ஸ்வரூப தாமோதரர் தலைமையில் பல பக்தர்கள் ஸ்ரீசைதன்யரிடம் மன்றாடிக் கேட்டுக் கொண்டார்கள். புலனடக்கம் இல்லாத ஒரு பைராகிக்கு, பெண்களிடம் மனத்தைச் செலுத்திய சந்நியாசிக்கு, எக்காலமும் மன்னிப்பு அளிக்க முடியாது என்றும், இது சம்பந்தமாக மேலும் யாராவது வற்புறுத்தினல் பூரியைவிட்டே போய் விடுவதாகவும் ஸ்ரீசைதன்யர் கடுமையாகச் சொல்லிவிட்டார். ஸ்ரீசைதன்யரிடம் மன்னிப்புக் கிடைக்கும் என்று ஒரு வருஷம் வரையில் எதிர்பார்த்து ஏமாந்த ஹரிதாசர் (ஜூனியர்) அலாகாபாத்தில் கங்கையும் யமுனையும் சங்கமமாகும் இடத்தில் விழுந்து இறந்து போனர். இந்தச் செய்தியை யாரோ ஒருவர், வங்காளத்துப் பக்தர் ஸ்ரீவாசரிடம் தெரிவித்தார். இதைக் கேள்வியுற்ற ஸ்ரீசைதன்யர், "பெண்களுடன் உறவு கொள்ள எண்ணும் போலி பைராகிகளுக்கு இதுவே தகுந்த தண்டனை" என்று குறிப்பிட்டார்.

துறவிகளுக்கெல்லாம் மன்னர் போலப் பிற்காலத்தில் விளங்கிய-ரகுநாததாச கோஸ்வாமி என்று எல்லோராலும் அழைக்கப்பெற்ற-ரகுநாததாசர் ஸ்ரீசைதன்யரின் பணிக்காகத் தம்மை அர்ப்பணிப்பதற்காக 1517–ல் ஜூன் அல்லது ஜூலை மாதத்தில், பூரிக்கு

வந்து சேர்ந்தார். ஸ்வரூப தாமோதரரின் பொறுப்பில் அவரை ஒப்பு வித்தார் ஸ்ரீசைதன்யர். அவருடைய ஆத்மிகப் பக்குவ நிலையைக் கண்டு, தினசரி பூஜை செய்வதற்காகப் புனிதமான கோவர்த்தன சிலையையும், கூஞ்சா (துளசி) மாலையையும் அவருக்கு ஸ்ரீசைதன் யர் அளித்தார்.

**வல்லபாசார்யாருக்கு உபதேசம்:**—அலாகாபாத்துக்கு அருகே உள்ளே அடாயிலேச் சேர்ந்த வல்லப பட்டர் கிட்டத்தட்ட 1519-ஆம் வருஷம் பூரிக்கு வந்தார். ஸ்ரீசைதன்யரைக் கடவுளின் அவதாரம் என்றே மதித்து அவரிடம் பெருமதிப்பு வைத்திருந்தார் வல்லப பட்டர். பக்தி இலக்கியத்திலும் பாகவதத்திலும் நிரம்பப் படித்தவர் என்ற கர்வம் மிகுதியாக உள்ளவர். தம்முடைய சிஷ்யர் களின் இணையற்ற மேதாவிலாசத்தை அவருக்குப் புலப்படுத்த வேண்டும் என்று எண்ணி, அத்வைதர், ஸ்வரூப தாமோதரர். ஹரிதாச டாகுரா, நித்தியானந்தர், கதாதரர் இன்னும் பல முக்கிய மானவர்களுடைய உயர்ந்த ஆத்மிக நிலையைப்பற்றி வல்லப பட்டரிடம் தெரிவித்தார். ரத யாத்திரை விழாவுக்காகப் பூரிக்கு வந்திருந்த அந்த ஆசார்யர்களைச் சந்திக்கவேண்டும் என்று மிகுந்த ஆவலுடன் தாம் இருப்பதாக வல்லப பட்டர் தெரிவித்தார். ஒவ்வொரு நாளும் வல்லப பட்டர் ஸ்ரீசைதன்யரிடம் சென்று, அங்கே அவருடன் இருந்த அத்வைதருடன் வாதம் செய்வார். வல்லபருடைய கோட்பாடுகளில் இருந்த குறைகளையும் தவறு களையும் அத்வைதர் சுட்டிக்காட்டினர். பாகவதத்துக்குத் தாம் எழுதிய சுபோதினி என்னும் பாஷ்யத்தை ஸ்ரீசைதன்யரிடம் படித்துக் காட்ட விரும்பினர் வல்லபர். ஆனல் அவருடைய கர்வத்தை எண்ணி அந்த நூலையே ஸ்ரீசைதன்யர் பார்க்க விரும்ப வில்லை. தினசரி அத்வைதரிடம் அடைந்த தோல்வியே, ஸ்ரீதர ஸ்வாமி களின் பாகவத வியாக்கியானத்துக்கு அத்வைதரிடம் மறுப்பை எடுத்துரைக்கும்படி வல்லபரைத் தூண்டியது. ஸ்ரீதர ஸ்வாமியின் வியாக்கியானத்தைப் புறக்கணித்து, தம்முடைய சொந்தக் கருத்துக் களை நிலநாட்டியிருப்பதாக, கர்வத்துடன் ஸ்ரீசைதன்யரிடம் வல்லபர் தெரிவித்தார். பெரிய ஆசார்யரும் மகானுமாகிய ஸ்ரீதர ஸ்வாமியை வல்லபர் அவமரியாதை செய்தது கண்டு ஸ்ரீசைதன்யர்

அவரிடம் வெறுப்படைந்தார். கணவரை மதியாத பெண் எப்படியோ அப்படி என்று இதைப்பற்றி ஸ்ரீசைதன்யர் குறிப்பிட்டார்.

பக்தியைக் குறித்து அற்புதமாக வியாக்கியானம் செய்தருளிய ஸ்ரீதர ஸ்வாமிகள் லோக குரு. அவருடைய உயர்வை ஏற்கும் வியாக்கியானங்களைத்தான் ஏற்றுக்கொள்ள முடியும் என்று ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார். இதன் பின்னர் வல்லபர் மனம் மாறினர். ஸ்ரீசைதன்யரின் உத்திரவுப்படி, பண்டிதர் கதாதரர், பாலகிருஷ்ண பக்தியைப் பற்றி வல்லபருக்கு உபதேசம் செய்தார். வாத்சல்ய பக்தி முறையில் பால கோபாலரை, வல்லப பட்டர் வழிபாடு செய்யலானுர்.

பிரதாபருத்திரனின் ஆட்சியில் மியால்ஜதா என்னும் பிரதேசத்துக்கு, பவானந்த ராயரின் புதல்வரும் ராமானந்த ராயர், வாணிநாதர் ஆகியோரின் சகோதரருமான கோபிநாதபட்ட நாயகர் கவர்னராக இருந்தார். எதிர்பாராத காரணத்தால் ராஜாங்கப் பொக்கிஷத்துக்கு 200,000 கௌரி (ஒருவகை நாணயம்) கட்டத் தவறிய குற்றத்துக்காகவும் தன்னிடம் அகம்பாவத்துடன் நடந்து கொண்டதற்காகவும் கொலைத் தண்டனையை அவருக்கு இளவரசன் விதித்தான். தரையில் கீழே உருவிய வாள்களைப் பதித்துவிட்டு, சற்று உயர்ந்த மேடையிலிருந்து அவரை வீசிக் கொல்லும்படி உத்திரவாயிற்று. கோபிநாதருடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களையும் சிறையில் அடைத்தார்கள். பவானந்தரின் குடும்பம் முழுவதுமே ஸ்ரீசைதன்யரிடம் மிகுந்த பக்தி உள்ளவர்கள், கோபிநாதருக்கு விதிக்கப்பெற்ற தண்டனையிலிருந்து அவரை விடுவிக்க இந்த விஷயத்தில் தலையிடுமாறு, ஸ்வரூப தாமோதரர் தலைமையில் பலரும், ஸ்ரீசைதன்யரை வேண்டிக் கொண்டார்கள். இளவரசனின் உத்திரவை மாற்றுவதற்கு, இந்த உலகத்தில் வேறு ஒன்றுமே கிடையாது. ஆனுல் ஸ்ரீசைதன்யரின் விரல் அசைந்தால் போதும். அவரை மகிழ்விப்பதற்காகப் பிரதாபருத்திரன் தன்னுடைய அரச பதவியை இழக்கவும் தயாராக இருந்தான். எனவேதான் கோபிநாதரின் உயிரைக் காப்பாற்ற எல்லோரும் ஸ்ரீசைதன்யரை நாடினுர்கள்.

'ஏதோ கொஞ்சம் பணம் வேண்டும்' என்று மன்னனிடம் சந்நியாசி என்ற முறையில் கேட்டு வாங்கிக்கொள்ள முடியும்.

ஆனால் ஏராளமான பணத்தைக் கொடு என்று கேட்பது முறை அல்ல. அதைத்தான் எப்படிக் கேட்க முடியும்?" என்று ஸ்ரீசைதன்யர் சொல்லி அந்த விஷயத்தில் தம்மால் தலையிட முடியாது எனத் தீர்மானமாகச் சொல்லிவிட்டார். லௌகிகப் பேச்சுக்களிலும் செயல்களிலும் அவர் சிறிதும் ஈடுபட விரும்ப வில்லை. வேறு இரண்டு பேர்களும் இதே போல ஸ்ரீசைதன்யரை நெருங்கி, வேண்டிக் கொண்டார்கள். "ஜகந்நாதர் கோயிலுக்குச் சென்று கோபிநாதரின் விடுதலைக்காகப் பகவானிடம் பிரார்த்தனை செய்யுங்கள்" என்று அவர்களிடமும் ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார். கோபிநாதரின் விடுதலையைக் கோரித் தம் சிஷ்யர்களை ஜகந்நாதர் கோயிலுக்குச் சென்று பிரார்த்தனை செய்யும்படி சொல்லியிருக்கிறார் என்ற செய்தியை மன்னருக்கு, ஹரிச்சந்திரா என்னும் மந்திரி ஒருவர் தெரிவித்தார். கோபிநாதருக்கு அளித்த தண்டனை, தம்முடைய கடவுளைப் போன்ற ஸ்ரீசைதன்யருக்கு மனவருத்தம் தரக்கூடும் என்ற எண்ணத்தின் பேரில் பிரதாபருத்திரன் மரண தண்டனையை நிறுத்தும்படி உத்திரவிட்டான். பவானந்தர் குடும்பத் தைக் கொடுமையாக நடத்துவதால் ஸ்ரீசைதன்யரின் உள்ளம் மிகவும் வேதனைப்படுகிறது என்றும் ஒரு வேளை அவர் பூரியை விட்டு ஆலாலநாத்துக்குச் சென்று விடுவார் என்றும் மன்னனின் குரு காசிமிஸ்ரர் தக்க சமயத்தில் அவனுக்குத் தெரிவித்தார்.

அதைக் கேட்டு மன்னர், "ஸ்ரீசைதன்ய மகாப்பிரபு பூரியை விட்டு எங்கும் செல்லாமல் இருந்தால் கோபிநாதர் கட்டவேண்டிய தொகை அனைத்தையும் நானே கட்டி விடுகிறேன். லட்சம் சிந்தா மணிக் கற்களைவிட மகாப்பிரபுவின் ஒரு தரிசனம் மேலானதாகும். இரண்டு லட்சம் கௌரித் தொகை மிகவும் அற்பத் தொகை. ஸ்ரீசைதன்யரின் சேவைக்காக என் வாழ்க்கையையே தியாகம் செய்யத் தயாராக இருக்கிறேன்" என்று சொல்லிவிட்டான்.

உடனே கஜானாவில் கட்டவேண்டிய தொகையை கட்டியது மல்லாமல், கோபிநாதரை மீண்டும் இரட்டிப்புச் சம்பளத் துடன் மியால்ஜாதா பிரதேசத்தின் கவர்னராக மன்னன் நியமித்து விட்டான். தகுதியற்ற கருணை காட்டியதாகச் சொல்லி அரசனின் செய்கையை ஸ்ரீசைதன்யர் கண்டித்தார். மற்றும் அவருக்கு இத்

தகைய சமயங்களில் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதையும் தெரிவித்தார்.

ராமானந்தராயர், கோபிநாதராயர் ஆகிய நான்கு சகோதரர்களுக்கும் வாணிநாதர் தகப்பனுர் என்று டாக்டர் டி. சி. சென் தம் நூலில் எழுதியிருக்கிருர். பவானந்தரின் ஐந்து குமாரர்களில் ஒருவரே வாணிநாதர். தென் இந்திய விஜயத்துக்குப் பிறகு ஸ்ரீசைதன்யருக்குச் சேவை செய்வதற்காக அவரிடமே வாணிநாதரை, பவானந்தர் ஒப்புவித்திருந்தார்.

வங்காளப் பக்தர்கள் நான்கு மாதம் பூரியில் தங்கியிருந்தபோது, ஒருசமயம் வழக்கம்போல ஸ்ரீசைதன்யர், சிஷ்யர்களுடன் சேர்ந்துகொண்டு நாம சங்கீர்த்தனம் செய்துகொண் டிருந்தார். அப்போது சில ஒரிஸ்ஸா பக்தர்கள் இனிய பாடல்களை இயற்றிப் பாடலானுர்கள். அவற்றை ஸ்ரீசைதன்யர் மிகவும் ரசித்தார். அந்தப் பாடல்களின் உணர்ச்சியை வெளியிடுவதன்பொருட்டே ஸ்ரீசைதன்யரே நடனங்கள் ஆடினுர். இப்படிக் கீர்த்தன நடனங்கள் நிகழும்போது, பரிமுந்தா நடனம் ஆடவேண்டும் என்று ஸ்ரீசைதன்யருக்கு எண்ணம் எழுந்தது. எனவே, தம்முடைய ஆவலுக்கும் மனசுக்கும் ஏற்ப எப்பொழுதும் பாடி வரும் ஸ்வரூப தாமோதரரிடம் பொருத்தமான பாடலைப் பாடும்படி கூறினுர். பிரசித்திபெற்ற பரிமுந்தா நடனத்தின் கருத்தைப் புலப்படுத்தும் "ஜகந்நாத பரிமுந்தா ஜாவ்" என்னும் பிரசித்திபெற்ற ஒரியாப் பாடலை ஸ்வரூப தாமோதரர் பாடினுர்.

ஸ்ரீசைதன்யரின் உடம்பின் ஒவ்வொரு மயிர்க்கால்களிலிருந்தும் ரத்தமும் வேர்வையும் வெளிவந்தன. அதீதமான உணர்ச்சி வேகத்தால் ஸ்ரீசைதன்யர், "ஜஜ கக மோமோ கக னன" என்று குழறலுடன் பாடிக்கொண்டே நடனமாடினுர். இந்த நடனம் வெகுநேரம் வரையில் தொடர்ந்து நடந்தது.

சில வருஷங்கள் கழித்து ஸ்ரீசைதன்யருக்குப் பணி செய்துகொண்டிருந்த ஹரிதாச டாகுரா காலமானுர். இறக்கும்போது அவர் ஸ்ரீசைதன்யரைத் தொட்டுக்கொண்டே 'ஸ்ரீகிருஷ்ண சைதன்யர், ஸ்ரீகிருஷ்ணசைதன்யர்' என்று சொல்லியவண்ண

மிருந்தார். அவருடைய உடலைத் தம் கைகளில் ஏந்திக்கொண்டு, பக்தர்கள் நடுவே ஸ்ரீசைதன்யர் நடனமாடினர். கடற்கரைக்குச் சென்று அவரே, உடம்பைப் புதைத்தார். பலரிடம் பிச்சை கேட்டு வாங்கி, ஹரிதாசருக்குச் செய்யவேண்டிய ஈமச் சடங்குகளையும் அவரே செய்து முடித்தார்.

இதற்கிடையே, ஸ்ரீசைதன்யரிடம் ரகுநாத பட்டர் வந்து சேர்ந்தார். போதிய பயிற்சி அளித்த பின்னர் அவரையும் பிருந்தா வனத்துக்கு ஸ்ரீசைதன்யர் அனுப்பினர். ஒவ்வோர் ஆண்டும் நவத்வீபத்தில் உள்ள தம் அன்னையாரைக் கவனித்து வரும்படி ஜகதானந்த பண்டிதரை ஸ்ரீசைதன்யர் அனுப்புவது வழக்கம். ஒரு வருடம், சிவானந்த சேனுவின் இல்லத்திலிருந்து வாசனை கலந்த சந்தனாதித் தைலத்தைக் கொண்டுவந்து ஸ்ரீசைதன்யருக்கு அவர் அளித்தார். அத்தகைய வாசனைத் தைலத்தை உபயோகப்படுத்தினுல் தம்மை த்வாரி சந்நியாசி (பெண்களுடன் சம்பந்தம் கொண்ட சந்நியாசி) என்று மக்கள் அழைக்கத் தொடங்கிவிடுவார்கள். எனவே, தமக்கு அது தேவையில்லை என்று ஸ்ரீசைதன்யர் மறுத்து விட்டார். சந்நியாசிகள் அந்தத் தைலத்தை உபயோகப்படுத்துவது அழகல்ல என்று சொல்லி அதை ஜகந்நாத ஆலயத்தில் விளக்கு எரிக்கப் பயன்படுத்திக் கொள்ளும்படி உத்திரவிட்டார்.

கடினமான தவ நெறியாலும் அடிக்கடி பிரக்ஞை இழப்பதாலும் மிகவும் மெலிந்து எலும்பும் தோலுமாக இருந்த ஸ்ரீசைதன்யர், வாழைமட்டைகளின் மேல் படுப்பதில் மிகவும் வேதனைப்படுகிருர் என்பதை ஜகதானந்தர் உணர்ந்து, இலவம் பஞ்சாலான மெத்தை யையும் தலையணையையும் தயாரித்து அளித்தார். ஆனுல் தம்முடைய துறவு நிலைக்கு அவை ஏற்றவை அல்ல என்று ஸ்ரீசைதன்யர் நிராகரித்து விட்டார். உலர்ந்த வாழைமட்டைப் படுக்கையைச் சற்று மிருதுவாக்க, ஸ்வரூபா அவற்றின் இடையே இரண்டு வஸ்திரங்களைப் போடச் செய்தார். மிகுந்த தயக்கத்துடன், தம்மு டைய தீவிர பக்தர்களின் வேண்டுகோளை ஸ்ரீசைதன்யர் ஏற்றுக் கொண்டார்.

# 14

## அதிருத–மகாபாவ நிலைகள்

ஸ்ரீசைதன்யரின் வாழ்க்கையின் கடைசி நாட்களில், 46-வது வயதுக்குப் பின்னர் கிருஷ்ணனை விட்டுப் பிரிந்திருக்கும் விரக தாபம் மிகவும் அதிகமாகிவிட்டது. அதனால் மெல்ல மெல்ல பொது வாழ்வின் தொடர்புகளிலிருந்து அவர் விலகிச் செல்லலானார். தம்முடைய வழிபடு தெய்வத்தின்பால் ஆழ்ந்த பக்தி உணர்ச்சி மிக்கவராய், ஸ்ரீசைதன்யர் நாட்களைக் கழித்துவந்தார். அந்தர்–தசா, அர்த்த–வாஹ்ய தசா, பஜ்ய தசா என்னும் பரவச நிலைகளில் அவர் இருந்துவந்தார். பகவானிடம் அவர் கொண்டிருந்த காதல் வளர்ந்து தீவிரமாகி உச்ச கட்டமாகிய அதிருத–மகா பாவ நிலையை மெல்ல மெல்ல அடைந்தது என்று மட்டும் இங்கே சொன்னால் போதும். அந்த அதிருத–மகா பாவ நிலையை, மதனம் என்றோ மோகனம் என்றோ சொல்ல இயலாது. பிரமர கீதை (பாகவதம் 10–47)யில் ஓரளவு சொல்லியிருக்கிற, காதலின்போது ஏற்படும் பல்வேறு மன நிலைகளாகிய பத்துவித சித்திர ஜல்பம், உத்குர்ண அல்லது திவ்ய உன்மாதம் என்னும் நிலைகளில் திளைத்து அவற்றினூடே செல்வதுதான் மோகனம் என்று சொல்லப்படுகிறது.

ஸ்ரீசைதன்யரின் மிக உயர்ந்த பக்தி நிலையைப் பற்றி வர்ணிக்கத் தொடங்குவதற்குமுன், ஸ்ரீசைதன்யரின் காலத்துக்கு முன்பு, இவருக்கு ஏற்பட்டதைப் போன்ற அநுபவங்கள் பெற்ற எந்த மனிதரைப் பற்றிய வரலாறோ அல்லது இத்தகைய பெ[illegible]ப் பாடுகளையும் உணர்ச்சிகளையும் பற்றிய வர்ணனைகளோ சரித்திரத்தில் எங்கேயுமே கண்டிருக்க முடியாது என்று கிருஷ்ணதாச கவிராஜர் தம் நூலில் குறிப்பிட்டிருக்கிறார்.

ஸ்ரீசைதன்யரின் வாழ்வின் பிற்பகுதியின் சம்பவங்கள் உண்மையாகவே நிகழ்ந்தன என்பதில் சந்தேகமே இல்லை என்று திடமாகவும் நேர்மையான உள்ளத்துடனும் கிருஷ்ணதாச கவிராஜர் கூறுகிறார். ஸ்வரூப தாமோதரரின் கட்டளைக்கு இணங்க

ஸ்ரீசைதன்யரின் கடைசி 16 வருஷங்களில் பணிவிடை புரிந்து வந்த ரகுநாத கோஸ்வாமி, நடந்த சம்பவங்கள் எல்லாவற்றையும் தம் குறிப்புப் புத்தகத்தில் குறித்து வைத்திருக்கிறுர். மற்றும் அதே சம்பவங்களைப்பற்றி, ஸ்வரூபரும் குறிப்புப் புத்தகத்தில் எழுதியிருக்கிறுர். இதுவும் ரகுநாத தாசரிடம் ஒப்புவிக்கப் பெற்றது. ரகுநாத தாசர் தம் சிஷ்யரான, கிருஷ்ணதாசர் எழுதும் ஸ்ரீசைதன்ய சரிதம் என்னும் நூலில் வேண்டியவற்றை சேர்த்துக்கொள்ளலாம் என்ற கருத்துடன் நினைவுக் குறிப்புக்களை அவரிடம் கொடுத்தார்.

ராதையின் பாவ நிலையில் தீவிரமாக ஆழ்ந்திருந்த ஸ்ரீசைதன்யர், உலகம் என்று ஒன்று இருக்கிறது என்பதையே மறந்து விட்டார். பிருந்தாவனத்தில் ராதையைத் தனிமையில் தவிக்க விட்டு, கிருஷ்ணன் குருக்ஷேத்திரத்துக்கும் மதுரைக்கும் சென்ற போது அவருக்கு விரகதாபம் மிகுந்தது. அதே நிலையில்தான் ஸ்ரீசைதன்யர் இருந்தார். குழந்தையைப் போலத் தேம்பித் தேம்பி அழுது தனக்குத் தானே ராதை பேசுவதுபோல, "ஓ, கிருஷ்ணு, எங்கே போய்விட்டாய்? என்னை விட்டு ஏன் பிரிந்தாய்? நீ இல்லாமல் நான் எப்படி வாழ்வேன்? என் பிரபுவை நான் அடைந்தேன்; மீண்டும் அவரை இழந்துவிட்டேன். என்னிடமிருந்து கண்ணனைப் பறித்துச் சென்றவர் யார்?" என்று பலவாருகத் திரும்பத் திரும்பப் புலம்பிக்கொண்டே யிருந்தார் ஸ்ரீசைதன்யர்.

'கிருஷ்ணன்' என்ற நாமமே ஸ்ரீசைதன்யருக்குத் தனி அர்த்தத்தைப் புலப்படுத்தியது. அந்த நாமத்தைக் கேட்டதுமே கண்ணனை நேருக்கு நேர் காண்பது போல அவர் உணர்ந்தார். கிருஷ்ணனின் வேய்ங்குழல் அவர் காதில் கேட்பது போல இருந்தது. கிருஷ்ணனின் நறுமணம் வீசுவது போல இருந்தது. கிருஷ்ணனைத் தொட்டுப் பார்ப்பது போலவும் இருந்தது. இவை எல்லாம் ஒரே சமயத்தில் நிகழ்வதுபோல அவருக்குத் தோற்றியது. இத்தகைய பக்திப் பரவச நிலையில் ஸ்ரீசைதன்யரின் மன நிலை பிறழ்ந்து போவது சர்வ சாதாரணம். உடனே அவர் பிரக்ஞை இழந்துவிடுவார். கடவுளைப் பிரிந்த விரகதாபத்தில் ஸ்ரீசைதன்யர் இருக்கும் வேளையில் அவருடைய அதீத காதலுக்கு ஆறுதல் சொல்லக் கூடியது எதுவுமே இல்லை. அவருக்கே என்ன செய்வது என்று

தெரியாது; பொறுமை இழந்த அவசர நிலையில் இருப்பது போலத் தோற்றுவார். இத்தகைய வேளைகளில் ஸ்வரூப தாமோதரரும் ராய ராமானந்தரும் பாகவதம், கீத கோவிந்தம், கிருஷ்ண கர்ணாம்ருதம், வித்யாபதி, சண்டிதாஸ், ராமானந்தர் ஆகியோருடைய பாடல்கள் இவற்றைப் பாடி அவருடைய விரகதாபத்தின் வேகத்தைத் தணிப்பார்கள். இரவு வேளைகளில் ஸ்ரீசைதன்யரின் உணர்ச்சி தீவிரமடைந்துவிடும். அவர் அருகே அமர்ந்து அந்த அந்த மெய்ப்பாடுகளுக்கு ஏற்பப் பாடல்களை நடுநிசி வரையில் ராயராமானந்தரும் ஸ்வரூபரும் பாடிக்கொண்டே இருப்பார்கள்.

ஒரு நாள் குஜரா-ராகினி-கோயிலில் ஒரு தேவதாசி கீத கோவிந்தத்தின் பாடலை இனிய குரலில் பாடிக்கொண் டிருந்தாள். அந்த இன்ப கீதம் ஸ்ரீசைதன்யரின் காதுகளில் மெல்ல விழுந்தது. அப்பொழுது கிருஷ்ண பிரேமை மிகுதியால் ஸ்ரீசைதன்யர் பாதி நினைவு மங்கியவராக இருந்தார். கீத கோவிந்தத்தின் மதுரமான பாடல் காதில் விழுந்ததுமே, குரல் வந்த திசையை நோக்கி அடர்ந்த செடி கொடிகளையும் புதர்களையும் விலக்கிக் கொண்டு ஓடினார். ஸ்ரீசைதன்யர் அந்தத் தேவதாசியை அணுகும் வேளையில், கோவிந்தர் அவருடைய கையைப் பிடித்து இழுத்து, "ஒரு பெண்ணிடமிருந்து வந்த கீதம் இது" என்று நல்ல வேளையாக எச்சரித்தார். 'பெண்' என்ற சொல் காதில் விழுந்ததுமே, எவ்வளவு இடையூறுகளை விலக்கிக் கொண்டு ஓடி வந்திருக்கிறோம் என்பதை ஸ்ரீசைதன்யர் உணர்ந்தார். தக்க சமயத்தில் எச்சரித்ததற்காக, கோவிந்தருக்கு நன்றியையும் செலுத்தினார். பெண்ணின் உடலைத் தொடுவதைவிட இறந்துவிடவே தயாராக இருப்பதாயும் அவரிடம் ஸ்ரீசைதன்யர் தெரிவித்தார்.

எப்பொழுதும், ஸ்ரீசைதன்யர் உறங்கிய பின்னரே நடுநிசியில் தம்முடைய வீட்டுக்கு ராய ராமானந்தர் திரும்பிச் செல்வார். கிருஷ்ணனின் நாமத்தைச் சொல்லிக் கொண்டே, இரவைக் கழிக்கும் ஸ்ரீசைதன்யரின் படுக்கை அறைக் கதவுகள் மூடியிருக்கும். அறையின் வெளியே தாழ்வாரத்தில் ஸ்வரூபரும் கோவிந்தரும் படுத்துக் கொள்வார்கள். கிருஷ்ண தரிசனத்தை நினைந்து நினைந்து

ஸ்ரீசைதன்யர் எப்பொழுதும் பரபரப்புடன் பொறுமை இழந்தவரா யும் இருந்தார். இந்த நிலையில் அவர் எங்கேயாவது வெளியே சென்றால் அவருடைய உயிருக்கே ஆபத்து நேரிடுமே என்று ஸ்வ ரூபரும் கோவிந்தரும் ஸ்ரீசைதன்யரை எங்கேயும் வெளியில் விடா மல் வெகு கவனமாக இருந்தார்கள். ஆனால் ஒரு சந்தர்ப்பந்தில் ஸ்ரீசைதன்யரின் அறைக்கு வெளியே தாழிடப்பெற்றிருந்தது. ஆனால் அந்த அறையில் ஸ்ரீசைதன்யரைக் காணவில்லை. இந்த ஆச்சரியத்தைக் கண்டு ஸ்வரூபரும் கோவிந்தரும் மிகுந்த கலவர மடைந்தனர். அவர்களும் மற்றப் பக்தர்களும் ஸ்ரீசைதன்யரைத் தேடத் தொடங்கினார்கள். ஸ்ரீஜகந்நாதர் ஆலயத்தின் சிங்கவாயி லுக்கு வடக்கே, பிரக்ஞை இழந்த நிலையில் ஸ்ரீசைதன்யர் கிடந்ததை அவர்கள் கண்டார்கள். குருநாதரைக் கண்டதால் அவர்களுக்கு ஆனந்தம் ஏற்பட்டது; ஆனால் அவர் இருந்த நிலை அந்த ஆனந் தத்தைத் துக்கமாக மாற்றிவிட்டது.

ஸ்ரீசைதன்யருடைய உடலில் பூட்டுக்கள் விலகியிருந்தன; எலும்புகள் நகர்ந்திருந்தன; வெறும் தோல்மட்டுமே உடலோடு கவிந்திருந்த எலும்புகளை இணைத்துவைத்திருந்தது. சுவாசம் மிக மெல்லியதாக இருந்தது; எவ்வித அசைவோ உணர்ச்சியோ இல்லை; கண்கள் மேல் நோக்கியிருந்தன. வாயிலிருந்து நுரை நுரையாக வெளிவந்தது. ஸ்ரீசைதன்யர் இறந்துவிட்டார் என்றே ஸ்வரூபரைத் தவிர அனைவரும் எண்ணினார்கள். இந்த மாதிரி பல தடவைகள் ஸ்ரீசைதன்யர் உயிர் போனது போலப் பிரக்ஞையற்றுக் கிடந்த போதெல்லாம் அவர் அருகே இருந்து தக்க பணிவிடைகள் செய்து பழகியிருந்தார் ஸ்வரூபர். இத்தகைய வேளைகளில் ஸ்ரீசைதன்யர் காதில் மெல்ல மெல்லக் கிருஷ்ண நாமங்களை அவர் உச்சரித்துக் கொண்டே இருப்பார். இதனால் ஸ்ரீசைதன்யரும் பிரக்ஞையிலிருந்து மெல்ல எழுந்து விடுவார். இந்தத் தடவை ஸ்ரீசைதன்யர் கிடந்த பிரக்ஞை நிலை விசித்திரமாகவும் புதுமையாகவும் இருந்த போதிலும் பழகிய அதே முறையையே ஸ்வரூபர் பின்பற்றினார்; கொஞ்ச நேரம் தொடர்ந்து கிருஷ்ண நாமங்களை ஸ்வரூபர் சொல்லச் சொல்ல, ஸ்ரீசைதன்யருக்கு நினைவு வரலாயிற்று; நகர்ந்த எலும்புகள் ஒன்று சேர்ந்தன. அவருடைய உடம்பும் பழைய நிலையை அடைந்தது.

பிரக்ஞையிலிருந்து எழுந்ததும் ஸ்ரீசைதன்யர், "இங்கே என்னை என்ன செய்துகொண் டிருக்கிறீர்கள்?" என்று அருகில் இருந்தவர்களிடம் கேட்டார்.

"நீங்கள் ஏன் இந்த நிலையில் இங்கே யிருக்கிறீர்கள்?" என்று ஸ்வரூபர் ஸ்ரீசைதன்யரை வினவினர்.

"என்னுடைய கண்ணன் எனக்கு மின்னலைப் போலக் கணநேரம் காட்சி அளித்து விட்டு மறைந்து விட்டான்" என்று ஸ்ரீசைதன்யர் பதில் அளித்தார்.

"இம்மாதிரியான சம்பவம் மிகவும் ஆச்சரியமானது; புதுமை யானது; எந்த நூலிலும் காண முடியாதது; முன்பு எவருமே கேட்டதும் இல்லை; கண்டதும் இல்லை; எனவே, சாதாரண மக்களுக்கு நம்ப முடியாத சம்பவமாகவே தோன்றும். ஆனால் ரகுநாத தாசர் என்னிடம் இந்தச் சம்பவத்தை நேரே வர்ணித்திருக்கிறார்" என்று கிருஷ்ண தாசர் தம் நூலில் குறிப்பிட்டிருக்கிறார். 'சைதன்ய ஸ்தவகல்ப விருட்சம்' என்னும் நூலில் ரகுநாத தாசரும் இந்தச் சம்பவத்தைப் பற்றி எழுதியிருக்கிறார்.

மற்றொரு சமயத்தில், கடற்கரையில் சென்றுகொண் டிருக்கும் போது, மணற்குன்றைக் கண்டுவிட்டு, கோவர்த்தன கிரி என்று எண்ணிக் கொண்டு, அதை நோக்கி ஸ்ரீசைதன்யர் பாகவத சுலோகங்களைச் சொல்லிக் கொண்டே ஓடலானார். அவருக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்து விடுமோ என்று பயந்து பின்னாலேயே ஸ்வரூபரும் மற்ற சிஷ்யர்களும் விரைந்தார்கள். திடீரென்று ஸ்ரீசைதன்யரின் வேகம் தடைப்பட்டது; உணர்விழந்து தரையில் அவர் விழுந்தார்; சங்கைப்போல் அவர் உடல் வெளுத்தது. அவருடைய உடல் வெடிப்புகளிலிருந்து ரத்தமும் வேர்வையும் வழிந்தன. கண்ணீர் கன்னங்களில் வழிந் தோடிற்று. ஒரே சமயத்தில் சைதன்யரிடம் அப்போது சாத்விக பாவத்தின் எட்டு நிலைகளும் தோன்றின. இந்த நிலையைத்தான் 'அந்தர்தசா' என்று சொல்லுவார்கள். இந்த நிலையில், உலகத்தில் இருந்த போதிலும் ஸ்ரீசைதன்யருக்கு உலக நினைவு சற்றும் இல்லாமலிருந்தது. கிருஷ்ணனின்

நாமங்களை, ஸ்ரீசைதன்யரின் காதில் ஸ்வரூபர் சொல்லத் தொடங்கினர். அதன் பயனாக, ஸ்ரீசைதன்யருக்கு மீண்டும் பிரக்ஞை வரத் தொடங்கியது. அரைகுறையாகப் பிரக்ஞை தெளிந்த நிலையில் ஸ்ரீசைதன்யர், கோவர்த்தன கிரியில் கண்ணனுடைய விளையாட்டுக் கோஷ்டியில் தாமும் ஒருவராகக் கலந்திருந்ததாகவும், கண்ணனுடன் பலவகை விளையாட்டுக்கள் ஆடினதாகவும், அத்தகைய அருமையான சந்தர்ப்பத்தில், கண்ணனுடைய கோஷ்டியிலிருந்து விலக்கி அழைத்துவந்து விட்டதாகவும், கிருஷ்ணனைப் பிரிந்த வேதனையால் உள்ளம் துடிக்கிறது என்றும் ஸ்வரூபரிடம் பரிதாபமாக ஸ்ரீசைதன்யர் குறைப்பட்டுக் கொண்டார். கிருஷ்ணனை விட்டுப் பிரிந்து விட்டோமே என்று எண்ணி எண்ணி ஸ்ரீசைதன்யர் அழுதார். ஸ்வரூபரும் மற்ற சிஷ்யர்களும் அவரை இல்லத்துக்கு அழைத்துச் சென்றனர்கள்.

இப்படியே, ஸ்ரீசைதன்யர் முழுவதும் பிரக்ஞை இழந்த நிலையிலோ, அல்லது அரைகுறையாகப் பிரக்ஞை இழந்த நிலையிலோ அல்லது மகா பாவ நிலை என்று சொல்லப் பெறும் நிலையிலோ கிருஷ்ண நினைவாகவே காலத்தைக் கழித்து வந்தார். கிருஷ்ணனைப் பிரிந்த ராதையைப் போல எண்ணிக் கொண்டு, ஸ்வரூப தாமோதரர், ராய ராமானந்தர் இருவரில் எவருடைய கழுத்தையாவது அணைத்தும் பக்தி ரசத்தில் முழுகியவராய்ப் புலம்பிக்கொண் டிருந்தார். அருகில் இருந்த நந்தவனத்துக்குள் புகுந்து, அதையே பிருந்தாவனமாகக் கருதுவர். விரஜையில் வசிக்கும் கோபிகளை விட்டு ராதையை நாடிச்சென்ற கிருஷ்ணனைத் தேடும் கோபஸ்திரீகளைப் போல் ஸ்ரீசைதன்யர் மரங்களையும், கொடிகளையும், மிருகங்களையும் பார்த்து "கண்ணன் எங்கே ? கண்ணனைப் பார்த்ததுண்டோ ?" என்று கேட்கலானர்.

வங்கதேசத்துப் பக்தர்கள் பூரியில் இருந்த காலத்தில் ஸ்ரீசைதன்யர் அமைதியாக இருந்தார். மழைக்காலத்தின் இறுதியில் அவர்கள் புறப்பட்டுச் சென்றதும் அவருடைய உணர்ச்சி பன்மடங்கு பெருகியது. முன்னிருந்த பாவநிலை மீண்டும் ஏற்பட்டது. தீவிர காதலின் பயனாக, பூரண பிரக்ஞையில் வேதனைப்பட்டுக் கொண்டிருக்கும்போது, ஸ்ரீசைதன்யர், வெளிப்புறமிருந்து தாளிட்

டிருந்த படுக்கை அறையிலிருந்து, எப்படியோ வெளியே சென்று விட்டார். அறையில் ஸ்ரீசைதன்யர் இல்லாததைக் கண்டு கோவிந்தர் உடனே ஸ்வரூபரை எழுப்பினர். ஸ்வரூபரும் மற்றவர்களும் ஸ்ரீசைதன்யரைத் தேடலானுர்கள். கொஞ்ச நேரம் கழிந்த பிறகு, சிங்கவாயிலுக்கு அருகே ஆமையைப் போல, விசித்திரமான தோற்றத்தில் பசுக் கூட்டத்தின் நடுவே ஸ்ரீசைதன்யரைக் கண்டார்கள். கையையும் காலையும் வயிற்றுக்குச் சமீபமாக முடக்கிக்கொண்டு உணர்விழந்து கிடந்தார் ஸ்ரீசைதன்யர். பூசணிக்காயைப்போல் அவர் சரீரம் காணப்பட்டது. மீண்டும் அவருக்குப் பிரக்ஞை வர எல்லா முயற்சிகளையும் செய்தார்கள்; ஆனுல் எதுவும் பயன் தர வில்லை. எனவே, அவரை அப்படியே வீட்டுக்கு எடுத்துச் சென்ருர்கள். அவருக்குப் பிரக்ஞை வரும் வரையில் எல்லோரும் சேர்ந்து பலமாகக் கிருஷ்ண நாம சங்கீர்த்தனம் செய்தார்கள். பின்னரே—உணர்வு வரப்பெற்றவராய்-வயிற்றிலிருந்து கைகால்கள் தாமாகவே விலகிக்கொண்டன. உடலும் பழைய நிலையை அடைந்தது. 'ராதாகிருஷ்ணனின் விளையாட்டுக்களில் கலந்திருந்த தம்மை எல்லோரும் சேர்ந்து வலுக்கட்டாயமாக ஏன் பிரித்து விட்டார்கள்' என்று இம்முறையும் ஸ்வரூபரை அவர் கேட்டார். இந்த நிலையைக் குறித்து, 'சைதன்ய ஸ்தவகல்ப விருட்சம்' என்னும் நூலில் ரகுநாததாசர் விவரமாக எழுதியிருக்கிருர்.

ஸ்ரீசைதன்யரின் அமைதியின்மையும் பரபரப்பும் நாளுக்குநாள் அதிகமாயிற்று; நாளடைவில் அவருக்குத் தூக்கம் என்பதே இல்லாமற் போய்விட்டது. உலகத்தை விட்டுப் பிரிவதற்குச் சில மாதங்கள் முன்பு அவருடைய உடம்பில் எப்படி உயிர் கட்டுப்பட்டிருந்தது என்பதே பெரிய மர்மமாகும். ஒருநாள் பௌர்ணமி இரவு. மீண்டும் வழக்கம்போல, அவருடைய அந்தரங்க சிஷ்யர்களிட மிருந்து தப்பித்துக்கொண்டு வெளியே சென்றுவிட்டார். ஐயோடா என்னும் இடம் வரையில் சென்று அங்கேயிருந்து அவர் கடலை நோக்கிப் பார்த்திருக்கிருர். விரஜைப் பெண்களுடன் கிருஷ்ணன் விளையாடிய யமுனை நதியைப்போல ஸ்ரீசைதன்யருக்கு, கடல்நீர் தோற்றம் அளித்தது. எனவே, உடனே அவர் கடலில் பாய்ந்துவிட்டார்.

ஸ்ரீசைதன்யரின் சிஷ்யர்கள் அவரைப் பல இடங்களிலும் தேடியும் காணுமல் அவர் எங்கேயோ மறைந்துவிட்டார் என்று அழத் தொடங்கிவிட்டார்கள். ஒவ்வொரு கோஷ்டியும் ஒவ்வொரு திசையாகப் பிரிந்து சென்று தேடினுர்கள். ஸ்வரூபரும் வேறு சிலரும் கிழக்குத் திசையில் கடற்கரையோரமாகச் சென்ருர்கள். அப்போது ஒரு செம்படவன் எதிரே வந்தான். அவனை எல்லோரும் ஸ்ரீசைதன்யரைக் கண்டது உண்டா என்று ஆவலுடன் விசாரித்தார்கள்.

"நான் வழக்கம்போல நீருக்குள் வலை வீசினேன். ஏதோ பெரியதாக ஒன்று வலையில் சிக்கியது. பெரிய மீனுக இருக்கும் என்று எண்ணிக் கரைக்கு இழுத்தேன். வலையில் கிடந்த அந்த உடலைத் தொட்டதும் என்னுள் மின்சாரம் பாய்ந்ததுபோல இருந்தது. யாரோ ஒருவர் பிரக்ஞை இழந்த நிலையில் விசித்திரமான வியப்பூட்டும் வடிவில் சிக்கியிருந்தார். ஏதோ பிசாசு பிடித்திருக்கும் என்ற எண்ணத்துடன் அதை ஓட்ட மந்திரவாதியைச் தேடிச் செல்கிறேன்" என்று செம்படவன் பதில் சொன்னுன்.

மேலும் அவனைச் சில கேள்விகள் கேட்டார்கள். அந்த உருவத்தைச் செம்படவன் வர்ணித்தான். அத்தகைய உருவத்தில் ஸ்ரீசைதன்யர் இருந்திருக்கிருர் என்பதை அறிந்த ஸ்வரூபர், அந்தக் குறிப்பிட்ட இடத்துக்கு அழைத்துச் செல்லும்படி, செம்படவனைக் கேட்டுக்கொண்டார். எல்லோரையும் செம்படவன் அழைத்துச் சென்ருன். உணர்விழந்து உடல் முழுவதும் மணல் படிய, ஸ்ரீசைதன்யர் கடற்கரையில் கிடந்தார். மிகுந்த ஜாக்கிரதையுடன் அவரைத் துடைத்து, கிருஷ்ண நாமத்தைக் காதிலே சிறிதுநேரம் சொல்லிக்கொண்டே இருந்தார். வழக்கம்போல ஸ்ரீசைதன்யர் பிரக்ஞையிலிருந்து மீண்டார். மறுபடியும் ஒருமுறை ஸ்ரீசைதன்யர், மரணத்திலிருந்து மயிரிழையில் தப்பினுர். 'காளிந்தி நதியிலே கிருஷ்ணன் விளையாடிய நீர் விளையாட்டுக்களைக் காணச் சென்றதாக' ஸ்ரீசைதன்யர், ஸ்வரூப தாமோதரரிடம் தெரிவித்தார்.

தம்முடைய மிகுந்த அன்புக்குரிய சிஷ்யர்களில் ஒருவரான ஜகதானந்தாவைப் பிரசாதம் முதலியவற்றுடன் நவத்வீபத்துக்கு ஒவ்வோர் ஆண்டும் அனுப்பி, பிரிவின் வருத்தத்தில் உள்ள

அன்னைக்கு ஆறுதல் சொல்லச் செய்வார் ஸ்ரீசைதன்யர். இந்த ஆண்டும் வழக்கம்போல், ஜகதானந்தர் நவத்வீபத்துக்குச் சென்றார். அன்னை சசிதேவியின் இல்லத்தில் நான்கு மாதங்கள் இருந்துவிட்டே பூரிக்கு அவர் புறப்படுவது வழக்கம். ஆனால் இம்முறை ஜகதானந்தர் ஒரே ஒரு மாதமே நவத்வீபத்தில் தங்கினர். நவத்வீபத்திலிருந்த ஸ்ரீஅத்வைதர், ஜகதானந்தர் மூலமாக ஸ்ரீசைதன்யருக்குப் பொருள் பொதிந்த புதிர் ஒன்றைப் பாடலாக அனுப்பினர். அதைப் படித்ததும் ஸ்ரீகிருஷ்ணனைப் பிரிந்த விரக தாப நிலையில் ஏற்படும் உணர்ச்சிகளும் பாவங்களும் ஸ்ரீசைதன்ய ரின் உடலில் அதீதமாகத் தோன்றின. இத்தகைய மாறுதல்களை, ஸ்ரீசைதன்யரிடம் தோற்றுவித்த ஸ்ரீஅத்வைதரின் புதிரில் ஏதோ ஒரு கூடமான பொருள் பொதிந்திருக்கவேண்டும் என்று ஸ்வரூபர் எண்ணினர். ஸ்வரூபருக்குத் தெரியாமல் மறைத்துவிடவேண்டும் என்றே ஸ்ரீசைதன்யர் கருதினர். மேலும் ஸ்வரூபர் வற்புறுத்தவே, "ஆகமங்களிலும் சடங்குகளிலும் அத்வைதர் பேரறிஞர். 'வழிபடு வதற்காக ஒரு பக்தன் கடவுளை அழைக்கிறன்; பின்னர் விக்கிரகத்தை நீரில் வீசி எறிந்துவிடுகிறன்' என்னும் கருத்தை அத்வைதர் தெரிவித்திருக்கிறர்" என்று ஸ்ரீசைதன்யர் ஸ்வரூபரிடம் சொன்னர்.

'கடவுளை, அத்வைதர் நேரில் கண்டுவிட்டார். அவர் பூமிக்கு வந்த காரியம் நிறைவேறிவிட்டது. இனிமேல் புண்ணியம் செய் தவர்கள் செல்லும் கோலோக பிருந்தாவனததுக்குச் செல்லப் போகிறர்' என்பதை கூரிய அறிவுள்ள ஸ்வரூபர் உணர்ந்து மனம் கலங்கினர்.

"ஜனங்கள் எல்லோரும் தெய்வபக்தியில் ஆழ்ந்துவிட்டார்கள். தெய்விகக் காதல் என்னும் பொருளை விற்க இடமில்லை. எனவே இனி அத்வைதர் உலக விவகாரங்களில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டிய தேவையில்லை" என்னும் அர்த்தம் தெளிவாகத் தெரிகிறது.

அந்தப் புதிரின் உண்மையான பொருள் இதுதான் என்று நிச்சயமாகச் சொல்ல முடிகிறதோ, இல்லையோ. கிருஷ்ணனைப் பிரிந் திருக்கும் ஸ்ரீசைதன்யரின் விரகதாபத்தின் வேகம் உச்ச நிலையை அடைவதற்கு அது தூண்டுகோலாக இருந்தது என்பதற்கு

சந்தேகமில்லை. அதனால் இந்த உலகத்தைவிட்டு, ஸ்ரீசைதன்யர் துறந்து செல்லும் காலமும் நெருங்கியது. ஸ்வரூபரும் கோவிந்தரும் மிகுந்த கவலையுடன் ஸ்ரீசைதன்யரை அருகே இருந்து கவனித்து வந்தார்கள். நாளுக்கு நாள் குருநாதரின் முறுகிய பக்தியும் கற்பனைத் தோற்றங்களும் தீவிரமடைந்தன. இரவும் பகலும், விரக தாபத்தில் உருகிய ராதையைப் போலத் தனக்குத் தானே பேசியும் அழுதும் பக்திப் பாடல்களைப் பாடியும் வந்தார் ஸ்ரீசைதன்யர். அவருடைய வெவ்வேறு உணர்ச்சி நிலைகளுக்கேற்ற பாடல்களை எப்பொழுதும் ராமானந்தரும் ஸ்வரூபரும் அருகே இருந்து பாடி, ஆறுதல் சொல்லி வந்தார்கள்.

ஒரு நாள் இரவு ஸ்ரீசைதன்யரைச் சாந்தப்படுத்தி, படுக்கை அறையில் உறங்கவைத்துவிட்டு ராமராயர் தம் வீட்டுக்குச் சென்றார். அந்த அறையின் வாசலிலே ஸ்வரூபரும் கோவிந்தரும் படுத்துக் கொண்டார்கள். கிருஷ்ண நாமங்களைச் சொல்லிக் கொண்டே இரவைக் கழித்தார் ஸ்ரீசைதன்யர். மெல்ல மெல்ல அவருடைய ஆவல் நிறைந்த பரபரப்பு வெறி நிலையை அடைந்துவிட்டது. கிருஷ்ணனைத் தேடி வெளியே செல்ல அவர் முயன்றார். ஆனால் கதவு வெளிப்புறம் தாழிடப்பட்டிருந்தது. எனவே, கிருஷ்ணனைக் காணவேண்டும் என்ற வெறியால், கரடு முரடான கற் சுவரில் மோதி முகத்தைத் தேய்த்துக்கொண்டார். முகம் முழுவதிலிருந்தும் ரத்தம் வழிந்தது.

பிரக்ஞை இழந்த நிலையில் ஸ்ரீசைதன்யர் ஸ்வரூபரையும் கோவிந்தரையும் கூவி அழைத்தார். ஸ்வரூபரும் கோவிந்தரும் உடனே அவர் அறைக்குள் ஓடினர். அங்கே அவர்கள் கண்ட காட்சி இதயத்தைப் பதை பதைக்கச் செய்தது.

அடுத்த நாள், ஸ்ரீசைதன்யரின் அறையில் இரவில் அவருடன் சங்கர பண்டிதர் என்னும் மற்றுமோர் சைதன்ய பக்தரை இருக்கச் செய்வதற்கு அநுமதி தரவேண்டும் என்று ஸ்வரூபரும் மற்றவர்களும் ஸ்ரீசைதன்யரை வேண்டிக்கொண்டார்கள். ஸ்ரீசைதன்யரின் அறையில் அன்று இரவு முழுவதும் சங்கர பண்டிதர் அவருடைய கால்களை வருடியும் வெளியே அவர் போகாமலும் சுவரில் முகத்தைத் தேய்த்துக்கொள்ளாமலும் கவனித்துக்

கொண்டிருந்தார். மாரிக்கால இரவுகளில் தம் அருகே அமர்ந்து இரவு முழுவதும் உறங்காமல் இருக்கும் சங்கரரைக் கண்டு ஸ்ரீசைதன்யர் மனம் உருகினர். சிறிது கண் அயர்ந்து சங்கரர் கீழே படுத்ததும், ஸ்ரீசைதன்யர் தம்முடைய போர்வையை எடுத்து அவர் மேல் போர்த்தினர். ஸ்ரீசைதன்யரின் பாதங்களை வருடியதால் சங்கர பண்டிதர், பிரபு–பாத–பாதனர் என்று அழைக்கப் பெற்றார்.

ஸ்ரீசைதன்யர் உலகைவிட்டு மறைவதற்கு முன்பு, தம்முடைய பக்திக் கொள்கைகள் யாவும் பொதிந்த சிக்ஷாஷ்டகம் என்னும் எட்டு சுலோகங்களை எப்பொழுதும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் என்று ராய ராமானந்தரிடம் தெரிவித்தார் சிஷ்யர்களின் ஆத்மிக வாழ்வுக்கும் தெய்வ வழிபாட்டுக்கும் அந்தச் சிறு நூல் சிறந்த வழிகாட்டியாக இருக்கும் என்று தம்முடைய சிஷ்யர்களுக்கு எல்லாம் அதை அளித்தார். ஸ்ரீசைதன்யரின் பூரண ஆத்மிகப் பார்வையும் தெய்வந்துக்குச் செய்த சேவையும் பொதிந்த இந்த எட்டு சுலோகங்களும் ஸ்ரீசைதன்யரே இயற்றியவை. சிக்ஷாஷ்டகத்தில் உள்ள பேருண்மையே ஸ்ரீசைதன்யர் உலகத்துக்கு அளித்த தத்துவமாகும். சிக்ஷாஷ்டகத்தின் எளிமையையும் ஆழ்ந்த ஆத்மிகப் பொருளையும் கண்டு ஸ்ரீசைதன்யரே மகிழ்ந்திருக்கிறார்.

சக ஆண்டு 1455-இல் அநேகமாக பிப்ரவரி மாதம் தம்முடைய 45-ஆவது வயதில் ஸ்ரீசைதன்ய மகாபிரபு இந்த உலகை விட்டு மறைந்தார். ஸ்ரீசைதன்யரிடம் அன்புகொண்ட உயர்ந்த பதவியினரும் சாதாரண மக்களும் அவருடைய பிரிவை நினைந்து நினைந்து அழுது புலம்பினர்கள். என்றென்றும் அவரை நினைவில் வைத்துக்கொண் டிருக்கும் வகையில் அவர் மறைந்துவிட்டார்.

மிகுந்த பயபக்தியுடன் கௌடிய வைஷ்ணவர்கள் தினந்தோறும் பாராயணம் செய்யும் அந்த சிக்ஷாஷ்டகத்தின் மொழி பெயர்ப்பை இங்கே தருவது மிகவும் பொருத்தமாக இருக்கும்.

1. மனக் கண்ணுடியைத் துடைப்பது; உலகவாழ்வெனும் காட்டுத்தீயை அணைப்பது; நன்மையெனும் குமுத மலருக்கு நிலவு ஆவது; ஆன்ம வித்யா என்னும் பெண்ணுக்கு வாழ்வு ஆவது; ஆனந்தக் கடலைப் பொங்கி எழச் செய்வது; சொல்லுந்தோறும்

பூரண அமுதச் சுவையை அளிப்பது; ஆன்மா அனைத்தையும் (ஆனந்தத்தால்) தூய்மைப் படுத்துவது—கண்ணனுடைய இத் தகைய நாம சங்கீர்த்தனங்கள் வளர்க!

2. பலவகைப் பெயர்களைப் படைத்தாய். அவற்றிலே உன் வல்லமை அனைத்தையும் புகுத்தினாய். அவற்றை நினைப்பதற்கு, காலத்தைக் குறிப்பிடாது அருளினாய். இத்தகையது உன் பேரருள் பெரும்! உன் நாமங்களிலே எனக்கு அன்பு உண்டாகாதபடி செய்த எனது துரதிர்ஷ்டமும் இந்த அருளுக்குத் துணையாகவே பொலிகிறது.

3. புல்லினும் தாழ்ந்தவன்; மரத்தினும் பொறுமை வாய்ந்த வன்; தற்பெருமை அற்றவன்; பிறருக்குரிய பெருமையைக் கொடுப்ப வன். இத்தகையோர் திருமாலை என்றும் போற்றுவர்.

4. செல்வம் வேண்டேன்; மக்கள் வேண்டேன்; அழகுக் கவிதையை வேண்டேன்; இறைவா! ஆண்டவனை உன்னிடத்தில் காரணம் கருதாத அன்பு எனக்கு விளைக!

5. நந்தகோபன் குமர, பயங்கர இம்மைக் கடலில் வீழ்ந்த அடியேனை உன் பேரருள் கொண்டு உன் தாமரைப் பாதங்களின் தூசியாக எடுப்பாய்.

6. உன் பெயர் பாடி, கண்ணில் நீர் வடிய, நாத் தழுதழுக்க உடலெங்கும் சிலிர்க்க, அந்த இன்பத்தை எப்போது நான் பெறு வேன்?

7. கோவிந்தன் பிரிவினால், எனக்கு ஒரு கணம் யுகமா கிறது. கண் முன் மழை முகில் சூழ்கிறது. உலகம் அனைத்தும் வெறிதாகிறது.

8. (பக்த நாயகி கூறுகிறாள்:) பரமன் திருவடிகளில் ஈடு பட்ட என்னை அவன் அணைத்தாலும் சரி; நசுக்கினாலும் சரி; காட்சி தராமலே என் உள்ளத்தைச் சிதைத்தாலும் சரி; தன் வேட்கைக்காக அவன் என்ன செய்தாலும் சரி; என் உயிருக்குரிய தலைவன் அவனே வேறு எவனும் அல்ல.

15

# ஸ்ரீசைதன்யர் மறைவின் மர்மம்

பழைய சரித்திர ஆசிரியர்களானாலும் சரி, புதிய வரலாற்று ஆசிரியர்களாக இருந்தாலும் சரி, ஸ்ரீசைதன்யர் இந்த உலகைவிட்டு மறைந்தது சக ஆண்டு 1455-இல் தான் என்று ஒரேமுகமாகக் கூறியிருக்கிறார்கள். அந்தர்தானமாகவோ, திரோதானமாகவோ, சங்கோபனமாகவோ அல்லது இதைப் போன்ற வேறுவகையிலோ ஸ்ரீசைதன்யர் மறைந்தார் என்று வெவ்வேறு வார்த்தைகளைப் பயன் படுத்தியிருக்கிறார்கள். சாதாரணமாக நாம் இறப்பதுபோல அல்லா மல், இயற்கையாகவோ இயற்கைக்குப் பொருந்தாமலோ திடீரென்று மாயமாக மறைவதையே அந்தர்தானம் என்று அவர்கள் குறிப்பிடு வதாகத் தோன்றுகிறது.

பூரிக்கு நரோத்தம டாகுரா விஜயம் செய்தது சம்பந்தமாகக் குறிப்பிடும் தகவல்களை, 'பக்தி ரத்னாகரம்' என்னும் நூலில் எழுதும் போது, நரஹரி சக்ரவர்த்தி என்னும் அறிஞர் ஸ்ரீசைதன்யர் திடுமென மாயமாக மறைந்தார் என்னும் கொள்கையையே வற் புறுத்துகிறார்.

"இந்தக் கோபிநாதர் ஆலயத்துக்குள் ஸ்ரீசைதன்யர் புகுந்தார் மீண்டும் வெளிவராத வகையில் அவர் இங்கேயே மறைந்து விட்டார். இங்கேதான் பண்டித கோஸ்வாமி பிரக்ஞை இழந்து கீழே விழுந்தார் இந்த இடத்தில்தான் மற்ற மஹந்துகள் கூக்குரல் போட்டார்கள்" என்று கதாதரரின் சிஷ்யரும் கோபிநாதர் கோயில் அர்ச்சகருமான மாமு டாகுரா, கோபிநாதர் ஆலயத்துக்கு நரோத் தமர் சென்ற போது அவரிடம் சொன்னார்.

ரதயாத்திரை தினத்தன்று நடனமாடும் பொழுது, ஸ்ரீசைதன்ய ரின் வலது காலில் ஓர் செங்கல்லால் ஏற்பட்ட காயத்திலிருந்து உண்டான விஷ ஜுரத்தினாலேயே, சப்தமி அன்று அவர் இறந் திருக்கக் கூடும் என்கிறார் டாக்டர் டி. சி. சென். ரதயாத்திரை விழா வின் ஐந்தாவது நாளன்று தான் ஸ்ரீசைதன்யர் இறந்தார் என்று

சொல்லப்படுகிறது. இப்படிச் சொல்வதற்கு ஜயானந்தர் எழுதிய "சைதன்ய மங்களம்" என்னும் நூல் ஆதாரமாக இருக்கிறது.

ஸ்ரீசைதன்யர் கோயிலுக்குள் மாலை 4 மணிக்குச் சென்றுர். உடனே கோயில் அர்ச்சகர்கள் வெளிவாசலை மூடிவிட்டார்கள். அதற்குப் பின்னுல் ஸ்ரீசைதன்யரைத் தொடர்ந்து வந்த காசி மிஸ்ரர் (மன்னனின் குரு), சநாதனர், ஹரிதாஸர், ஸ்ரீவாசர் முதலானேர் வெளியில் அழுதபடியே நின்றுவிட்டனர். ஸ்ரீசைதன்யர் கோயிலில் உயிர் நீத்ததும் அவருடைய உடல் அங்கேயே அர்ச்சகர்களால் புதைக்கப்பட்டுவிட்டது என்று மேலும் ஒரு படி சென்று டாக்டர் டி. சி. சென் துணிச்சலாக எழுதுகிருர். 'ஜகந்நாதரின் கூண்டிசா கோயிலுக்குள் ஸ்ரீசைதன்யர் சென்றதும் கதவுகள் தாமாகவே மூடிக் கொண்டன. வெளியே தங்கிவிட்ட சநாதனர், ஹரிதாசர் ஆகியோர் அழுது புலம்பினர்' என்று லோசனதாசரின் 'சைதன்ய மங்களம்' என்னும் நூலின் ஒரு பதிப்பில் இந்த விசித்திரமான கதை புகுந்திருக்கிறது. இதையே சென் ஆதாரமாகக் கொண்டிருக்கிருர். ஜயானந்தரின் 'சைதன்ய மங்களம்' எவ்வகையில் ஆதாரமற்றது என்றும் லோசனதாசரின் 'சைதன்ய மங்களத்'தில் புகுந்த அந்தக் கதை எவ்வளவு அபத்தமானது என்றும் பின்னுல் ஓரிடத்தில் விளக்குவோம்.

பொதுவாகப் பார்க்கும் போது, ஸ்ரீசைதன்யர் ஜுரத்தினுல் இறந்திருக்கக் கூடும். ஆனுல் நம்பமுடியாத சில ஆதாரங்களைக் கொண்டு இந்த முடிவுக்கு வந்துவிட முடியாது. முதலாவதாக, ஜயானந்தரின் புத்தகமும், 'சைதன்ய மங்கள'த்தின் ஒரு பதிப்பில் இணைக்கப் பெற்றுள்ள பகுதியும் அதிகார பூர்வமற்றவை. இரண்டாவதாக, ஜுலை மாதம் ரத யாத்திரை முடிந்து ஐந்து நாட்கள் கழித்து ஸ்ரீசைதன்யர் மறைந்தார் என்று குறிப்பிடுவது, ஸ்ரீசைதன்யரின் வரலாற்று ஆசிரியர்கள் அனைவரும் ஒரே முகமாக ஏற்றுக் கொண்டுள்ளதற்கு முரணுக இருக்கிறது.

ரத யாத்திரை விழாவில் ஏற்பட்ட காயத்தால், அந்த விழாவுக்குப் பின் ஐந்துநாட்கள் கழித்து, ஏற்பட்ட ஜுரத்தால் ஸ்ரீசைதன்யர் இறந்தார் என்பது பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல வேண்டும்.

'ஸ்ரீசைதன்யரைத் தரிசிப்பதற்காக, மாசி மாதம் அமாவாசை கழிந்த ஐந்தாம் நாள் வங்காளத்திலிருந்து ஸ்ரீநிவாசாசார்யா என்னும் பக்தர் பூரிக்குப் பயணமானுர்' என்று [18-ஆவது நூற்றுண்டில் வாழ்ந்த] நரஹரி சக்ரவர்த்தி 'பக்தி ரத்னுகரம்' என்னும் நூலில் எழுதியிருக்கிறுர். பூரிக்கு வரும் வழியில் ஸ்ரீசைதன்யர் சங்கோபனம் (பொது மக்கள் கண்ணிலிருந்து மறைந்து விடுதல்) ஆகிவிட்டார் என்ற துக்கச் செய்தி அவர் காதில் விழுந்தது. மாசி மாத மத்தியிலேயே ஸ்ரீசைதன்யர் மறைந் தார் என்று இந்தப் புத்தகத்திலிருந்து தெரிகிறது. இதனுல் ஸ்ரீசைதன்யர் ஜுலை மாதம் மறைந்தார் என்னும் ஜயானந்தரின் கொள்கையும் அதை ஒட்டி டாக்டர் சென்னின் கருத்தும் அடி பட்டுப் போகின்றன. நரஹரி சக்ரவர்த்தியின் கருத்தையே கிருஷ்ண தாச கவிராஜர் ஏற்றுக்கொண்டு ஜயானந்தருடைய கொள்கையை நிராகரிக்கிறுர் என்றே தோன்றுகிறது.

கோப லீலா உற்சவத்தின்போது ஸ்ரீசைதன்யர் பெற்ற பரிவட்டம் முதலிய பிரசாதங்களுடன் ஜகதானந்தரை நவத்வீபத் துக்கு அன்னைக்கு ஆறுதல் சொல்லிவர, ஸ்ரீசைதன்யர் அனுப்பினுர் என்று கிருஷ்ணதாசர் கூறுகிறுர். ஒரு மாதம் நவத்வீபத்தில் தங்கி விட்டு, அத்வைதர் தந்த புதிர்க் கடிதத்துடன் பூரிக்குத் திரும்பினுர் ஜகதானந்தர். அந்தக் கடிதமே கிருஷ்ணனிடம் ஸ்ரீசைதன்யருக்கு ஏற்பட்ட விரகதாபத்தை மிகுவித்ததுடன் கடைசியில் குறுகிய காலத்துக்குள் அவர் மறைவதற்கும் காரணமாக இருந்தது.

ஸ்ரீசைதன்யருக்கு ஏற்பட்ட உணர்ச்சி மிகுதியால், அவர் தம் முகத்தைச் சுவர்களில் அறைந்து கொண்டார். அதனுல் அவ ருடைய முகம், காது, மூக்கு, தொண்டை, தோள் யாவற்றிலும் பலத்த காயங்கள் ஏற்பட்டன. அந்த இரவிலிருந்து ஸ்ரீசைதன்யர் சுவரில் மோதிக்கொள்ளாமல் கவனிக்க, அவருடைய கால்களை வருடுவதற்காக, சங்கர பண்டிதர் நியமிக்கப்பட்டார். இந்தச்சந்தர்ப் பத்திலேயே ஸ்ரீசைதன்யர் இறந்திருக்கலாம் என்றே தோன்று கிறது. ஸ்ரீசைதன்யர் தம்முடைய போர்வையாலேயே சங்கரரை, போர்த்துவிடுவார் என்று கிருஷ்ணதாசர் சொல்வதிலிருந்து அது மழைக்காலம் என்று தெளிவாகத் தெரிந்துகொள்ள முடிகிறது

சாதாரணமாக, பூரி மிகவும் உஷ்ணமான இடம். அங்கே ஜனவரி, பிப்ரவரி மாதங்களில் மட்டுமே கம்பளிகளையோ போர்வைகளையோ உபயோகப்படுத்துவார்கள். மற்ற மாதங்களில், எவ்விதத் துணியும் இல்லாமல் வெளிப்புறங்களில் படுப்பதே வெகு சிரமமாக இருக்கும்.

மற்றும் கோப லீலாவின் போது ஸ்ரீசைதன்யர் பெறும் அன்பளிப்புகளை, ஸ்ரீசைதன்யரின் அன்னைக்காக வருடந்தோறும் எடுத்துக் கொண்டு செல்வார் ஜகதானந்தர். கிருஷ்ண ஜன்மாஷ்டமியை முன்னிட்டு, நந்தோற்சவ தினத்தன்று ஸ்ரீசைதன்யர் கோப லீலையை நிகழ்த்துவார். சாதாரணமாக ரத யாத்திரைக்கு இரண்டு மாதங்கள் கழித்தே, ஆவணி மாதத்தில்தான் ஜன்மாஷ்டமி வரும்.

ஆவணி மாதம் ஸ்ரீசைதன்யர் பெற்ற பரிசுகளைப் புரட்டாசி மாதம் எடுத்துக்கொண்டு, நான்கு மாதங்கள் பூரியில் தங்கியிருந்து விட்டுப் புறப்படும் வங்காள பக்தர்களுடன் சேர்ந்து ஜகதானந்தர் நவத்வீபத்துக்குச் சென்றிருக்கக்கூடும். நவத்வீபத்தில் ஒரு மாதம் தங்கிவிட்டு, கார்த்திகை மாதம் அத்வைதரின் கடிதத்துடன் ஜகதானந்தர் பூரிக்குத் திரும்பியிருக்கலாம். அத்வைதரின் அந்தக் கடிதமே, ஸ்ரீசைதன்யரின் உணர்ச்சியை மிகுதிப்படுத்திக் கடைசியில் மார்கழி, தை மாதங்களில் சுவரில் முகத்தைத் மோதிக்கொள்ளும் அளவுக்கு செய்து விட்டது. அப்பொழுதுதான் அவர் உடம்பை இரவில் கவனித்துக் கொள்வதற்காக, சங்கர பண்டிதர் நியமனமானர். மாசி மாதம் பஞ்சமி அன்று வங்காளத்திலிருந்து புறப்பட்ட ஸ்ரீநிவாசாசார்யார் பூரியை அடைவதற்குச் சில தினங்களுக்கு முன்னரே ஸ்ரீசைதன்யர் காலமாகிவிட்டார் என்றே தோன்றுகிறது. பூரியை அடைவதற்கு ஸ்ரீநிவாசருக்குப் பன்னிரண்டிலிருந்து இருபது நாட்கள் பிடித்திருக்கும். நம்பகமான சிறந்த வரலாற்று ஆசிரியரான கிருஷ்ணதாசரின் கருத்துடன் நரஹரியின் கருத்தும் ஒன்றுவதையே நாம் ஏற்கவேண்டும். எந்த விஷயத்தையும் மறைக்க வேண்டும் என்ற எண்ணம் சற்றும் இல்லாதவர் கிருஷ்ணதாசர். ஆனால் வைஷ்ணவ சம்பிரதாயச் சரித்திர ஆசிரியர்களில் ஒருவர் என்று ஜயானந்தரை உறுதியுடன் ஏற்கமுடியாது.

கி. பி. 1533-இல் ஆவணி மாதம் ஸ்ரீசைதன்யர் மறைந்தார் என்னும் டாக்டர் சென்னின் கருத்தைவிட அவர் கி. பி. 1534 பிப்ர

வரி மாதத்தில் மறைந்தார் என்பதே தகராறுக்கு இடமற்றது என்று சொல்லலாம். டாக்டர் சென்னின் கருத்து, சரியானது அல்ல என்று சந்தேகப்படுவதற்கு இன்னொரு காரணமும் சொல்லலாம். ஸ்ரீசைதன்யர் முதல் இருபத்து நான்கு வருஷங்கள் கிருகஸ்த ராகவும் பின் இருபத்து நான்கு வருஷங்கள் சந்நியாசியாகவும் மொத்தம் 48 ஆண்டுகள் வாழ்ந்தார். கி. பி. 1486 பிப்ரவரி மாதம் 18 ஆம் தேதிக்குச் சரியான சக ஆண்டு 1407 ஆம் வருஷம் பங்குனி மாதம் ஸ்ரீசைதன்யர் பிறந்தார். சரியாக 48 வருஷங்கள் ஸ்ரீசைதன்யர் வாழ்ந்தார் என்று வைத்துக்கொண்டால், 1534 ஆம் ஆண்டு பிப்ரவரிக்கு முன்பு அவர் காலமாகியிருக்க முடியாது. டாக்டர் சென் குறிப்பிடும் நாளில் அவர் இறந்திருந்தால், அதாவது (கி. பி. 1533 ஜூலை) 48 ஆண்டுகளுக்குக் குறைவாக வாழ்ந்ததா கவே ஆகும். இந்த விஷயத்தில் வாதத்துக்கு இடமில்லாத கிருஷ்ண தாசரின் ஆதார பூர்வமான கருத்தைவிட டாக்டர் சென், ஜயானந் தர் இவர்களுடைய அபிப்பிரயங்களை எவ்வாறு ஏற்பது? ஸ்ரீசைதன்யர் ஆவணியில் மறைந்தார் என்னும் கருத்தை நிரா கரித்துவிட்டு, மாசி மாதத்தில் தான் அவர் இறந்தார் என்னும் பக்தி ரத்னகரத்தின் கருத்தை நாம் ஏற்காவிட்டால், ஸ்ரீசைதன்யர் 48-ஆண்டுகள் வாழ்ந்தார் என்னும் முடிந்த முடிபை ஒப்புக்கொள்ளாத வர்களாகிவிடுவோம்,

காசி மிஸ்ரர், சநாதனர், ஹரிதாசர் மற்றும் எந்த ஸ்ரீசைதன்ய பக்தர்களுக்கும் தெரியாமல் கூண்டிசா ஆலயத்தில் ஸ்ரீசைதன்யர் புதைக்கப்பட்டார் என்றும் ஜகந்நாதரின் விக்கிரகத்துக்குள் ஸ்ரீசைதன்யர் புகுந்து மறைந்துவிட்டார் என்று சிஷ்யர்களிடம் கோயில் அர்ச்சகர்கள் தெரிவித்தனர் என்றும் டாக்டர் சென் தெரி விக்கும் கருத்து நடந்திருக்கக்கூடியதாகவே தோன்றவில்லை.

சில வருஷங்களுக்கு முன்பே ஹரிதாசர் காலமாகிவிட்டார். அவருக்குரிய சடங்குகளைச் செய்து புதைத்தவரும் ஸ்ரீசைதன்யரே. 1518-ல் பூரியை விட்டுச் சென்ற சநாதனர் பிருந்தாவனத்திலேயே தங்கிவிட்டார். பின்னர் அவர் பூரிக்குத் திரும்பிவரவே இல்லை.

ஸ்ரீசைதன்யரிடம் மிகுந்த அன்பு செலுத்தி அவருடன் நெருங் கிப் பழகிய காசிமிஸ்ரர், ஸ்வரூப தாமோதரர், கோவிந்தர், இவர்

களைப் போன்றவர்களுடைய பக்தியும் மதிப்பும், கோயில், அர்ச்சகர்களுக்கு ஸ்ரீசைதன்யரிடம் இல்லை என்பது தெரிந்த விஷயமே. ஜகந்நாதர் கோயில் நிர்வாகம் சம்பந்தமாக மன்னனுக்கு அவ்வப்போது ஆலோசனைகள் சொல்லிவரும் ராஜகுரு காசிமிஸ்ரரின் விருப்பத்துக்கு விரோதமாக, அவருக்குத் தெரியாமல் எதையும் செய்யக் கோயில் அர்ச்சகர்களுக்கு உரிமை இல்லை. எனவே, காசிமிஸ்ரரை வாயிலிலே நிறுத்திவிட்டு, அர்ச்சகர்கள் ஸ்ரீசைதன்யரைப் புதைத்திருக்கவே முடியாது. இந்தக் கருத்துக்கு இன்னொரு மிக முக்கியமான ஆட்சேபம். வெகுகாலமாகச் சிறிதுகூட வழுவாத வைதிக நெறியுடன் உள்ள பூரி ஜகந்நாதர் ஆலயத்தில் பிரேதத்தைப் புதைப்பது என்பதைக் கோயில் அர்ச்சகர்கள் ஒருகாலும் ஒப்புக்கொண்டிருக்கமாட்டார்கள். வெளிப்புற மதிலைக் கடந்து உள்ளே செல்பவர்கள் கையில் கடிகாரத்தின் தோல்பட்டையைக்கூட அணிந்து செல்லக்கூடாது என்று கடுமையான விதிகள் இருக்கும்போது கோயிலுக்குள் ஸ்ரீசைதன்யரின் பிரேதத்தைப் புதைத்தார்கள் என்பது மனதிலும் நினைக்கக் கூடிய விஷயமல்ல.

"மிகுந்த காய்ச்சலுடன் ஸ்ரீசைதன்யர் கோயிலுக்குள் வந்தார். அவருடைய முடிவு நெருங்கிவிட்டது என்பதை அறிந்த அர்ச்சகர்கள் மற்றவர்கள் கோயிலுக்குள் வராதபடி கதவை மூடிவிட்டார்கள். அவர் உடம்பைப் புதைப்பதற்காகவும் அந்த இடத்தை மீண்டும் சரி செய்வதற்காகவுமே அவர்கள் இப்படிச் செய்தார்கள். 11-மணிக்கு ஆலயத்தின் கதவைத் திறந்து, ஸ்ரீசைதன்யர் ஜகந்நாதர் பிம்பத்துடன் ஐக்கியமாகி விட்டார் என்று அறிவித்தார்கள்" என்று டாக்டர் சென் கூறுகிறார். கோயில் அர்ச்சகர்கள் சரியாக 11 மணிக்குக் கதவை மூடினார்கள் என்று எந்த ஆதாரத்தின் மேல் டாக்டர் சென் எழுதியிருக்கிறாரோ நமக்குத் தெரியவில்லை.

உடம்பு ஜுரத்துடன் கோயிலுக்குள் வந்து இறக்கவேண்டும் என்றே ஸ்ரீசைதன்யர் வந்தார். அப்போது தயாராகக் கோயிலில் புதைப்பதற்காக அர்ச்சகர்கள் வாசலில் நின்று வரவேற்றார்கள். உடனே அவரை மட்டும் உள்ளே விட்டு மற்றவர்களை வெளியே நிறுத்திவிட்டார்கள். இவை எல்லாம் கோயில் அர்ச்சகர்களுடன் முன்னதாகவே கலந்து தம்முடைய ஆத்ம நண்பர்களுக்குக்கூடத்

தெரியாமல் ஸ்ரீசைதன்யர் செய்துவிட்டார் போலத் தோன்று வகையில் டாக்டர் சென் எழுதியிருக்கிருர்.

குருநாதரின் இல்லத்திலிருந்து கூண்டிசா கோயில் இரண்டு மைல் தூரம் இருக்கிறது. கடுமையான காய்ச்சலால் மரணப் படுக்கையில் அவதியுற்றிருந்த ஸ்ரீசைதன்யர் இவ்வளவு தூரத்தையும் நடந்தே சென்ருர் என்பது கொஞ்சங் கூட நம்பமுடியாத விஷயம். ஸ்ரீசைதன்யரைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துவந்த ஸ்வரூபர், கோவிந்தர், ராமராயர், ரகுநாததாசர், கதாதரர் இன்னும் மற்றவர்களும், காய்ச்சலுடன் இருந்த ஸ்ரீசைதன்யரைச் சாவதற்காக இரண்டுமைல் தூரம் நடக்கவிட்டிருப்பார்கள் என்பதும் நம்பக் கூடியது அல்ல. ஸ்ரீசைதன்யரிடம் மன்னர் பெருமதிப்பு வைத்திருந்ததாலேயே கோயில் அர்ச்சகர்களும் ஸ்ரீசைதன்யரை மதிப்புடன் பாராட்டி வந்தார்கள். கோயில் அர்ச்சகர்களின் லௌகிக மனப்பான்மையையும், மதத்தில் உண்மையான பற்றும் ஈடுபாடும் இல்லாமையையும் கண்டு கிருஷ்ணதாச கவிராஜர் அவர்களிடம் வெறுப்பு கொண்டார். அர்ச்சகர்கள் தங்கள் பணியைச் சாதாரண வேலையாகவே கருதினுர்கள்; பணம் சம்பாதிக்கும் வியாபாரிகளைப் போலவே அவர்கள் நடந்துகொண்டார்கள்.

லௌகிக மனப்பான்மை உள்ளவர்கள் எவரையுமே ஸ்ரீசைதன்யர் மதித்ததில்லை. வாழ்நாள் முழுவதும் பழகிய நண்பர்களையும் பக்தர்களையும் புறக்கணித்துவிட்டு, ஸ்ரீசைதன்யர் தம்முடைய உயிரை அர்ச்சகர்களிடம் ஒப்புவித்தார் என்பதை ஏற்றுக் கொள்ள முடியாது. தினசரி வழிபாடுகளில் சந்நியாசிகளின் சமாதிகளுக்குரிய கௌரவமும் மரியாதையும் அளிக்காமல், ரகசியமாக ஸ்ரீசைதன்யருடைய உடலை மறைத்து அவருடைய சிஷ்யர்கள் அநியாயமும் அவமரியாதையும் செய்திருப்பார்கள் என்பது எவ்விதத்திலும் நம்பக்கூடியதல்ல. எதற்கும் விட்டுக்கொடுக்காத தீவிர வைதிக முறைகளைக் கொண்ட அர்ச்சகர்கள், கோயிலில் ஸ்ரீசைதன்யரின் உடலைப் புதைக்க நிச்சயமாக மனசில்கூட யோசித்திருக்கமாட்டார்கள் என்பது உறுதி.

ரத யாத்திரை விழாவுக்கு ஐந்து நாட்கள் பிறகு, ஆவணி மாதத்தில் ஸ்ரீசைதன்யர் காலமானுர் என்னும் டாக்டர் சென்னின்

கருத்தை நாம் ஒப்புக்கொள்வதில் ஆட்சேபம் இருக்குமானால் ரத யாத்திரையின் போது பட்ட காயத்தினால் ஸ்ரீசைதன்யருக்கு ஜுரம் ஏற்பட்டது என்னும் அவருடைய மற்றொரு கொள்கையும் அடி பட்டுப் போய்விடுகிறது. ஸ்ரீசைதன்யரின் மறைவுக்கு உடனடியான காரணம் என்னவென்பது இன்னும் மர்மமாகவே இருக்கிறது. கடுமையான தவநெறியாலும் பகவானிடம் கொண்ட அதீத காதல் உணர்ச்சியாலும் அடிக்கடி பிரக்ஞை இழந்து போனதால் ஏற்பட்ட நரம்புத் தளர்ச்சியாலும் ஸ்ரீசைதன்யருடைய உடம்பு வெறும் எலும்புக்கூடாகி விட்டது என்பதை ஏற்கனவே நாம் பார்த்தோம்.

ஸ்ரீசைதன்யருடைய உடல் எங்கேதான் போயிற்று என்பது இப்பொழுது புதிராக இருக்கிறது. அவருடைய பக்தர்கள் வசமே இருந்துவிட்டதா? இந்த விஷயத்தை பற்றி ஓர் முடிவாகச் சொல்வது மிகக் கஷ்டம். ஸ்ரீசைதன்யரின் சிஷ்யர்களில் ஒருவர் பாக்கியில்லா மல் எல்லோருடைய உடலையும் மிகுந்த எச்சரிக்கையுடன் பொரு மைப்படத்தக்க முறையில் புதைக்கப்பட்டு, அந்தச் சமாதிகளின் மேல் கோயில்களும் நிர்மாணிக்கப் பெற்றிருக்கின்றன. இன்னும் அவை வழிபாட்டுக்கு உரியவையாக இருக்கின்றன. வைஷ்ணவ சந்நியாசியின் உடல் புதைக்கப்பட்டு, தினசரி வழிபட வேண்டியது அவசியம் என்பதும் யாவரும் அறிந்ததே.

கோபிநாத பட்ட நாயகர் கட்டத் தவறிய பெரிய தொகைக்குத் தண்டனை விதித்தபோது, ஸ்ரீசைதன்யரின் மனம் வருந்துகிறது என்பதை அறிந்த உடனே எல்லாவற்றையும் ரத்து செய்தவரும், ஸ்ரீசைதன்யர் பூரியை விட்டுச் சிறிது காலம் புறப்பட்டு வேறு இடத்துக்குச் செல்வதாக இருந்தால் மன்னர் பதவியையும் சாம் ராஜ்யத்தையுமே துறந்துவிடுவதாகத் தெரிவித்தவரும், ஸ்ரீசைதன்ய ரின் மறைவுக்குப் பிறகு வாழ்வின் எல்லாச் சுகங்களையும் இழந்த வருமான பிரதாபருத்திரன், ஸ்ரீசைதன்யரின் புனிதமான உடலை அலட்சியம் செய்துவிட்டான் என்பதை எப்படி நம்புவது? ஸ்ரீசைதன்யரைப் பகவானாகவே எண்ணி வந்த மன்னன், அவ ருடைய உடலைப் புதைத்து அந்தச் சமாதியின் மேல், ஜகந்நாதர் கோயிலைப் போல ஒன்றையே அல்லவா நிர்மாணித்திருப்பான்? (மனம் குளிர அவருடைய பக்தர்கள் பாதுகாத்து வழிபட்டிருப்

பார்களே?) ஸ்ரீசைதன்யர் வசித்து வந்த அறையே, ஆயிரக் கணக்கான பக்தர்கள் பயபக்தியுடன் வழிபடும் ஸ்தலமாக இருக் கிறது. ஸ்ரீசைதன்யருக்குச் சேவை செய்யவேண்டும் என்பதற்காக, குடும்பத்தையும் எண்ணுமல் தங்களுடைய அரசவாழ்வையும் துறந்து வந்தவர்கள் பலர் இருக்கும்போது, ஸ்ரீசைதன்யருடைய சரீரம் கிடைத்திருந்தால் புதைப்பதற்கு ஏற்பாடு செய்யாமல் இருப் பார்களா? ஸ்ரீசைதன்யரின் சிறந்த சிஷ்யன் என்பதை எண்ணிப் பெருமை அடைவதைவிட மன்னனுக்கு இந்த உலகத்தில் வேறு என்னதான் இருந்திருக்க முடியும்? ஸ்வரூபர், ராமராயர் காசி மிஸ்ரர், கோவிந்தர், ரகுநாதர், கதாதரர், இன்னும் மற்றவர் களுடைய இடைவிடாத பாதுகாப்பிலிருந்து அவருடைய சரீரம் எப்படிப் போயிற்று என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அவருடைய உடல் எங்கே இருக்கிறது என்பதும் இன்னும் மூடகமாகவே இருக்கிறது. எனவே, இந்த நிலையில், தம்மைப் பின் தொடர்ந்தவர்கள் எல்லாரையும் மர்மத்தில் ஆழ்த்திவிட்டு, ஸ்ரீசைதன்யர் சக 1455-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் இந்த உலகை விட்டு மறைந்தார் என்னும் செய்தியைக் கொண்டே நாம் திருப்தி அடைய வேண்டியிருக்கிறது. அதற்குப் பிறகு நிகழ்ந்தது அனைத்தும் மர்மமாகவே இருக்கிறது.

ஸ்ரீசைதன்யர் இயற்கையாக, மரணம் அடைந்திருந்தால் புதைக்கப்படாமல் இருந்திருக்கமாட்டார். அப்படிப் புதைக்கப் பெற்றிருந்தால் அது கண்ணுக்குப் புலப்படாமல் இருந்திருக்க முடியாது.

ஸ்ரீசைதன்யர் வாழ்ந்த, நடமாடிய, நின்ற இடங்கள் ஒவ் வொன்றும் மிகுந்த அக்கறையுடன் பக்தி சிரத்தையாகப் பாது காக்கப் பெற்று, புனித ஸ்தலங்களாக இருக்கும்போது, அவர் புதைக்கப் பெற்ற இடம் மட்டும் கவனிக்கப் பெறுமல் போவதற் குரியது அல்லவே!

ஸ்ரீசைதன்யரின் வரலாற்றை எழுதிய நேர்மையான சரித்திர ஆசிரியர்களோ, மற்றவர்களோ, ஸ்ரீசைதன்யரின் தேகம் மறைந்து விட்ட விஷயத்தைக் குறித்து ஒரு வார்த்தைகூட எழுதவில்லை. அவருடைய உடம்பைப் புதைத்து, அவருடைய புனித நினைவு

என்றும் இருக்கும் வகையில் அதன்மேல் கோயில் எழுப்பும் அரிய சந்தர்ப்பத்தை ஒருகாலும் ஸ்ரீசைதன்யரின் சிஷ்யர்கள் நழுவவிட்டிருக்கமாட்டார்கள். அவர்கள் அத்தகைய ஏற்பாட்டைச் செய்ய இயலாத ஏழைகள் அல்ல: அவருடைய உடலைப் பாதுகாக்க ஒரிஸ்ஸா சாம்ராஜ்யம் தன் சக்தி முழுவதையும் மிகச் சிறந்த முறையிலே பயன் படுத்தியிருக்கும். ஸ்ரீசைதன்யருடைய தேகத்தை அவருடைய சிஷ்யர்களால் தேடிக் கண்டுபிடிக்க முடியவில்லை என்று இதிலிருந்து தெரிகிறது. அவர்களுக்கு அந்த உடலைக் காட்டாமல் எவரும் மறைத்திருக்கவும் முடியாது. அப்படிக் கிடைத்திருந்தால் நிச்சயம் அவர்கள் புதைத்திருப்பார்கள்; யாரும் அதை மறைத்திருக்கவும் மாட்டார்கள். அவருடைய புனித உடலின் எல்லா அடையாளங்களையும் அழித்து விடவேண்டும் என்ற இழிந்த எண்ணமும் அவர்களுக்கு நிச்சயம் இருந்திருக்காது. இது உண்மையாக இருந்திருந்தால், ஸ்ரீசைதன்யருடைய வரலாற்று ஆசிரியர்களும் இதையே வற்புறுத்தி எழுதி நம்மையும் நம்பவைக்க முயன்றிருப்பார்கள்.

ஜகந்நாதர் அல்லது கோபிநாதர் விக்கிரகத்துடன் ஸ்ரீசைதன்யர் ஐக்கியமானுர் என்று மக்களை நம்பவைக்க வேண்டும் என்று வைஷ்ணவர்கள் முயற்சி செய்திருக்கிருர்கள் என்ற குற்றச்சாட்டுக்கு லேசான சிறு சான்றுகூட, கிருஷ்ணதாசர், பிருந்தாவன தாசர், கவி கர்ணபுரா, முராரி குப்தர் ஆகிய வரலாற்று ஆசிரியர்கள் எழுதிய ஸ்ரீசைதன்ய சரித்திரங்களில் காணமுடியாது. 18-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த 'பக்தி ரத்னுகரம்' என்னும் நூலில்தான் இக்கருத்தை ஓரளவு காணமுடிகிறது. ஸ்ரீசைதன்யர் மறைந்து விட்டார் என்று விவரிக்கத்தான் அந்தர்தானம், திரியோதானம், சங்கோபனம் என்னும் சொற்களை அவர்கள் உபயோகப்படுத்தியிருக்கிருர்கள். பக்தர்கள் அவருடைய உடலைக் காணவோ பெறவோ முடியவில்லை என்பதுதான் அந்தச் சொல்லின் பொருள். அதற்கு மேல் அந்தச் சொல்லுக்கு விசேஷ அர்த்தம் ஏதும் இல்லை. ஸ்ரீசைதன்யர் இயற்கையான மரணத்தை அடையாததிஞல் தான் அவருடைய பக்தர்களுக்கு அவர் சரீரம் கிடைக்கவில்லை என்பதே சரியான முடிவு. தால கோபிநாதர் ஆலயத்தின் கோபிநாதர் பிம்பத்துடன், ஸ்ரீசைதன்யர் ஐக்கியமானுர் என்பதே பக்தி சிரத்தை மிகுந்த வைஷ்ணவர்களின் நம்பிக்கை.

# 16

# ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் வைஷ்ணவ கோட்பாடு

ஸ்ரீசைதன்யரின் வரலாற்றை எழுதியவர்களும் கௌடிய வைஷ்ணவ நூலாசிரியர்களும், ஸ்ரீகிருஷ்ணனைப் போலவே ஸ்ரீசைதன்யரும் ஓர் பரிபூர்ண அவதாரம் என்றே தங்கள் நூல்களின் தொடக்கத்திலும் முடிவிலும் எழுதியிருக்கிறார்கள். ஸ்ரீசைதன்யருடைய தெய்விகத்தைச் சுட்டிக் காட்டவேண்டும் என்ற கருத்தைக் கொண்டே அவருடைய வாழ்க்கையையும் நடவடிக்கைகளையும் பிரதிபலிக்க முயன்றிருக்கிறார்கள்.

ஸ்ரீசைதன்யருக்கு அவர் நினைவாகத் தக்க சமாதியை ஏற்படுத்தாமல் ஸ்ரீஜகந்நாதருடன் அவர் ஐக்கியமாகிவிட்டார் என்று பேச்சைக் கிளப்பி, அவர் சிஷ்யர்கள் ஸ்ரீசைதன்யருக்கே ஓர் அபவாதத்தை செய்து விட்டார்கள் என்று சொல்லும் டாக்டர் சென்னின் அபிப்பிராயத்தை நிஜபக்தி உள்ள ஸ்வரூப தாமோதரர் போன்றவர்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். உலகங்களைப் படைத்து, காத்து, அழிக்கும் மும்மூர்த்திகளுடையவோ, அல்லது விஷ்ணுவின் அவதாரங்களுடைய தெய்விகத்தை மட்டுமோ பெற்றவர் அல்ல ஸ்ரீசைதன்யர் கிருஷ்ணப்ரேமையை உலகத்துக்கு எடுத்து காட்ட வந்த பரிபூர்ண பரம்பொருளே அவர். விரஜையின் தெய்விகப் பெண்கள் கிருஷ்ணனிடம் கொண்ட காதலைவிடச் சிறந்த சமயக் கருத்து வேறெங்கும் இல்லை என்று பாகவதம் கூறுகிறது. விரஜையில் உள்ள பெண்களில் சிறந்தவளான ராதையைப் போல, கிருஷ்ணனை எப்படிக் காதலிப்பது என்பதை உலகத்துக்கு உபதேசம் செய்யும் உயர்ந்த லட்சியம், விஷ்ணுவின் வேறு எந்த அவதாரத்தாலும் அடைய முடியாதது. ஏனெனில் அத்தகைய காதலும் பணியும் கிருஷ்ணனைத் தவிர வேறு யாராலும் செய்து காட்ட முடியாது. கிருஷ்ணனின் பிரேமையைச் செலுத்தும் சமய நெறியை உபதேசம் செய்வதற்காகத் தோன்றிய பகவான் ஸ்ரீகிருஷ்ணனே

ஸ்ரீசைதன்யர் என்று கருதப் பெறுகிருர். மேலும் நித்தியானந்தரும் அத்வைதரும் கூடத் தெய்விக அம்சம் உள்ளவர்கள் என்றும் வேத, புராணங்களில் விவரிக்கப் பட்டுள்ள தெய்வக் கொள்கை அவர் களிடம் இணைந்திருந்தது என்றும், வைஷ்ணவ அறிஞர்கள் எழுதி யிருக்கிருர்கள். ஸ்ரீசைதன்யரைவிட உயர்ந்த தெய்வம் வேறு எதுவும் இல்லை என்று ஸ்ரீசைதன்யரின் வரலாற்று ஆசிரியர்கள் எல்லோருமே ஒரே முகமாக முடிவுக்கு வந்திருக்கிருர்கள். வேத காலத்தில் சொல்லப்படும் ஹிரண்ய கர்ப்பத் தோற்றத்தை நித்தி யானந்தரும் அத்வைதரும், ஸ்ரீசைதன்யரிடமே கண்டார்கள் என்று சொல்லப்படுகிறது. நீராடி நித்திய கருமங்களைச் செய்த பிறகு அவர் கள் புருஷ சூக்தம் முதலிய வேத மந்திரங்களால் ஸ்ரீசைதன்யரை வழிபாடு செய்தார்கள்.

**பிருந்தாவனதாசரின் கருத்து**:—ஸ்ரீசைதன்யரிடம் ராதா கிருஷ்ண அம்சத்தைவிட, நாராயணனுடைய கம்பீர அம்சத்தையும் க்ஷீரோத சாயி–விஷ்ணு–புருஷ அம்சத்தையுமே பிருந்தாவனதாசர் அதிகமாக வற்புறுத்துகிருர் என்று தோன்றுகிறது. எனவே அவர், ஸ்ரீசைதன்யரை வைகுந்தபதி, கௌர நாராயணர், வைகுந்த ராயர் என்பதைப் போன்ற பெயர்களாலேயே குறிப்பிட்டு வந்தார் கம்பீரமும் உயர்வும் பொருந்திய தெய்விக அம்சத்தையே அவர் ஸ்ரீசைதன்யரிடம் கண்டார்.

**கிருஷ்ணதாச கவிராஜரின் கருத்து**:—ஸ்ரீசைதன்யரைப்பற்றி அருமையான உருவம் தருகிருர் கிருஷ்ணதாச கவிராஜர். பாவங் களிலும் சமயப் பற்றற்ற தன்மையிலும் சிக்கி உழலும் ஆத்மாக்களை விடுவிப்பதற்காக வந்த காரணத்தைப் பொறுத்த வரையில் விஷ்ணு நாராயணரே ஸ்ரீசைதன்யர் என்பதில் அவருக்குச் சந்தேகமே இல்லை. உலகில் எவ்வெப்போது தர்மம் குலைந்து அதர்மம் நிலவுகிறதோ அப்பொழுதெல்லாம் நான் தோன்றி அதர் மத்தையும் அதர்மம் செய்பவர்களையும் அழித்து, தர்மத்தை நிலை நாட்டுவதற்காகப் பூவுலகில் தோன்றுவேன் என்று பகவான் கீதையில் உறுதி தந்திருப்பதை ஹிந்துக்கள் அனைவரும் பூரண மாக நம்புகிருர்கள். விஷ்ணுவின் எந்த அவதாரமும் போது மானது; பகவானின் பூரண அம்சமே இந்தக் காரியத்தை நிறை

வேற்றப் பூலோகத்துக்கு வரவேண்டும் என்ற அவசியம் இல்லை. ஸ்ரீசைதன்யரின் அவதார நோக்கத்தில் உலகைத் திருத்தி நல்வழிப் படுத்த வேண்டும் என்பது இரண்டாவது காரியமே. உலகத் துக்குத் தம்முடைய அன்பை அளித்து, தம்மிடம் உலகம் அன்பு செலுத்தத் தூண்டச் செய்யும் மகத்தான முக்கிய நோக்கமே அவருடைய அவதாரத்துக்குக் காரணமாகும். மேலும் எல்லோரை யும் கவரும் இனிய இயல்பையும் தம்முடைய அழகையும் ராதை எவ்வாறு அநுபவித்து மகிழ்ந்தாள் என்பதை முன்பு அவருடைய மனத்தின் மூலமே தான் உணர முடிந்தது. இப்பொழுது நேரிடை யாகவே அந்த அநுபவத்தைப் பெற வேண்டும் என்பதும் ஸ்ரீசைதன்யரின் அவதார நோக்கமாகும். ராதையைப் போன்ற பாவநிலையில் இந்த அநுபவத்தை ஸ்ரீசைதன்யர் பெற்றார்.

தம்முடைய சொந்தக் காதல் இன்பத்தை உலத்துக்குத் தெரியப் படுத்த ஸ்ரீகிருஷ்ண பகவானைத் தவிர வேறு எந்தத் தெய்வத்தாலும் இயலாது. மற்றத் தெய்வங்களிடம் கம்பீரமும் பெருமையும் மட்டுமே உண்டு. இனிய தெய்விகக் காதல் லீலைகளும் அழகும், கவர்ச்சியும் கிருஷ்ணனிடத்தில்தான் உண்டு. பாகவதத்ததின் பிரதான அம்சமான, சம்பிரதாயம் எதையும் லட்சியம் செய்யாத, பிரதிப் பிரயோசனமற்ற காதலையே உலகத்துக்கு ஸ்ரீசைதன்யர் உபதேசித்தார். விரஜையிலிருந்த பெண்களுடைய காதல் அத்தகையதுதான். ஸ்ரீசைதன்யரின் கருணை இல்லாவிட்டால், பாகவதத்தில் இந்தக் காதல் மறைந்தே இருந்திருக்கும். ஸ்ரீசைதன்யரே இந்தத் தெய்விகக் காதலை அநுபவித்திருக்கிறார்; மேலும் அவரே பலருக்கு உபதேசமும் செய்திருக்கிறார். கிருஷ்ணனை விட்டுப் பிரிந்திருந்த ராதை விரகதாபத்தில் இருந்தபோது தன்னிடம் அவள் வைத்திருந்த அன்பை ஸ்ரீகிருஷ்ண பகவான் உணர்ந்திருந்தார் என்று சொல்லலாம். ராதையின் காதல் என்னும் திரைக்குப் பின்னால் மறைந்து கொண்ட கிருஷ்ணனே, ஸ்ரீசைதன்யர்.

கலியை வெல்வதற்காகக் கடவுளின் நாமத்தை உச்சரிப்பதே போதுமானது என்னும் கொள்கையைப் பிரசாரம் செய்வது ஸ்ரீசைதன்யரின் அவதாரத்தின் இரண்டாவது நோக்கமே. ஆனால்

அவர் அவதாரத்தின் பிரதான நோக்கம் ஸ்ரீகிருஷ்ணனின் தனிப் பட்ட தன்மையைச் சார்ந்தது. ஸ்ரீசைதன்யரின் வாழ்க்கையையும் உபதேசத்தையும் நன்கு அறிந்த ஸ்வரூப தாமோதரர், ஸ்ரீசைதன்ய ரின் இந்த அம்சத்தைக் குறித்து ஒரு சுலோகத்தில் குறிப்பிட்டிருக் கிருர்.

ஸ்ரீகிருஷ்ணர் சொல்வதாக, கிருஷ்ணதாச கவிராஜர் தம் நூலில் கூறுகிருர்.

"என் காதலி ராதையின் மனத்தையும் கவரக் கூடிய, இன்ன தென்று சொல்ல இயலாத ஏதோ ஒரு சக்தி என்னிடம் இருக் கிறது என்பதை நான் அறிவேன். என்னிடமிருந்து ராதை பெறும் அந்த இன்பத்தை நுகருவதில் எப்பொழுதும் நான் ஆவல் உள்ளவனுக இருக்கிறேன். வேறு எந்தச் செயலிலும் இந்த இன்பத்தை நான் அநுபவிக்கவில்லே. காதலிலிருந்து எழும் ஆனந்தத்தை எதிர்நோக்கி என்னுள் தீவிர ஆசை வளர்ந்தது. ராக மார்க்கத்தில் என்னே வழிபடுவது எப்படி என்பதை என்னு டைய பக்தர்களுக்கு உணர்த்த நானே பூலோகத்துக்குச் சென்று அத்தகைய வாழ்வை நடத்திக் காட்டுவேன். மேலே சொன்ன என் மூன்று ஆசைகளும் இன்னும் நிறைவேறவில்லே. ராதையின் பாவ நிலேயில் தான் அந்த இயல்புகளும் உணர்ச்சிகளும் தோன்றும். எனவே அவற்றைப் பெற நான் ராதையின் உள்ளத்தையும் நிறத் தையும் பெறப் போகிறேன்."

ராதையின் பாகத்தை ஏற்றுக் கொள்வது என்று கிருஷ்ண பகவான் முடிவு செய்த நேரமும் கலியுகத்தில் நாம சங்கீர்த்தனமே கலியை வெல்ல வழி என்பதைப் பிரசாரம் செய்ய விஷ்னு அவதாரம் எடுக்கும் காலமும் ஒன்ருக அமைந்தது. எனவே, விஷ்ணுவின் அவதாரத்தின் நோக்கம், கண்ணனின் அன்புக் காதலியான ராதையின் உள்ளத்துடனும் ஸ்ரீசைதன்யராகத் தோன்றிய கிருஷ்ணனின் அவதாரத்துடனும் இணேந்து விட்டது. ஸ்ரீசைதன் யரின் கேள்விக்கு இணங்க, ராதையின் உணர்ச்சி மனநிலே, சேவை இவைபற்றி ராமானந்தராயர் ஸ்ரீசைதன்யரிடத்தே ராதாகிருஷ்ண ஐக்கிய நிலேயைக் கண்டார். அப்பொழுது ராயர் சொன்னுர்

"என்னிடமிருந்து ஓடி ஒளியாதே! ராதையின் ரூப சௌந்தர்யமும் உணர்வும் கொண்ட நீ, என்னுடைய இன்பத்தைப் பருகவே இந்தக் கோலம் கொண்டிருக்கிறுய். ராதையின் காதலை அநுபவிக்க வேண்டும் என்பதுதான் உன்னுடைய ரகசியமான நோக்கம். அதனுல் இந்த உலகத்தையே காதல் மயமாக்கி விட்டாய். பின் ஏன் நீ என்னை ஏமாற்றுகிறுய்?" என்று ஸ்ரீசைதன்யரிடம் கேட்டார்.

இந்தக் கட்டத்தில், ஸ்ரீசைதன்யர் தம்முடைய ரஸராஜமகா பாவ நிலையான ராதாகிருஷ்ண தோற்றத்தைக் காண்பித்து அருளினுர் என்று சொல்லப்படுகிறது. அப்பொழுது ஸ்ரீசைதன்யர் சொன்னுர்: "என்னுடைய உடம்பின் நிறம் இப்பொழுது இருப்பது போல பொன் நிறம் அல்ல; ராதையிடம் தொடர்பு ஏற்பட்ட பிறகே இந்த மாறுதல் ஆயிற்று. நந்தகோபனின் புதல்வனைத் தவிர வேறு யாரையும் ராதை தீண்டியதே கிடையாது. இப்பொழுது ராதை யின் உள்ளமும் உயிரும் ஒன்றிய நிலையில் அவளுடைய உணர்ச்சி பூர்வமாகவே என்னுடைய சொந்தக் காதல் இன்பத்தை ரசித்துக் கொண்டிருக்கிறேன். இதை ரகசியமாகவே வைத்துக்கொள். இல்லாவிட்டால் பைத்தியக்காரன் செய்யும் செயல் என்று என்னை ஏளனம் செய்யத் தொடங்கி விடுவார்கள்.

முராரி குப்தர் எழுதிய 'சைதன்ய சரிதம்' என்னும் நூலின். தற்போதைய பதிப்பிலும் இதே கருத்தைத் தான் காணலாம். ஸ்ரீசைதன்யர் பற்றிய இதே கொள்கையையே, தம்முடைய 'சைதன்ய சரிதம்' என்னும் நூலின் ஆரம்பத்திலேயே கவி கர்ணபுரா எழுதி யிருக்கிறுர். ஸ்வரூப தாமோதரரின் இந்த எண்ணத்தையே ரூப கோஸ்வாமியும் பிரதிபலிக்கிறுர். ரூபரின் செய்யுள் (அநுராகவல்லி யில் மேற்கோளாகக் காட்டப் பெற்றிருக்கிறது.) "கிருஷ்ணனே அவதாரம் எடுத்து வந்துள்ள ஸ்ரீ கிருஷ்ண—சைதன்யர் என்னும் பெயருடன் இருப்பவரும், கிருஷ்ண பிரேமை மிக்கவரும் பொன்னிறத்தவருமான பகவானை வணங்குகிறேன்" என்று அவர் வேருரிடத்தில் குறிப்பிட்டிருக்கிறுர். இதே விஷயத்தை ரூப கோஸ்வாமி, விதக்த, மாதவ நாடகம் போன்ற நூல்களிலும் விளக்கமாக எழுதியிருக்கிறுர்.

இதே அபிப்பிராயத்தை ரகுநாததாச கோஸ்வாமி என்னும் மற்றொரு கௌடிய வைஷ்ணவ அறிஞர் பாடலாகத் தந்திருக்கிறார் : "தம்முடைய அன்புக்குரிய கோபிகைகளின் நடுவே ஒளிவீசும் தெய்வம் எல்லையற்ற காதலின் இன்பத்தை வேடிக்கையாக நுகருவதற்காக, ஸ்ரீசைதன்யராகத் தோன்றியிருக்கும், கோபிகைகள் நடுவே ஒளி வீசும் தெய்வம் தங்களிடம் அருளைப் பாலிப்பாராக !

மேலே சொன்ன அறிஞர்களின் கருத்தை ஜீவ கோஸ்வாமியும் ஏற்றுக் கொள்கிறார். "கலியுகத்தில், நாம சங்கீர்த்தனம் மூலமாக நான் ஸ்ரீசைதன்யரையே சரண் அடைகிறேன். அவர் உள்ளே நீலவடிவுள்ளவர் ; எனினும் வெளியே பொன்னிறமாகத் தோன்றுபவர். தெய்வத்தின் பூரண அங்கம், உறுப்புக்கள் ஆகியவற்றின் கம்பீரத்தை அவர் நமக்குப் புலப்படுத்தினார். (நித்தியானந்தர், அத்வைதர் மற்ற பக்தர்களை மனத்தில் நினைத்து அவர் இப்படிச் சொல்கிறார் : பக்தி சந்தர்ப்பம் 2).

ராதையும் மாதவனும் இணைந்த வடிவினர் சைதன்யர் என்று தம்முடைய 'சைதன்ய சந்திராமுர்தம்' என்னும் நூலில் ஸ்ரீ பிரபோதானந்த சரஸ்வதி வர்ணிக்கிறார். அந்த நூலில் அவர், ஸ்ரீசைதன்யரின் தெய்விக அம்சத்தைத் தீவிரமாக விளக்குகிறார்.

"சாகராத் ராதா மதுரிபுவ பலி கௌரங்க சந்திரா பாதி"

ஸ்ரீசைதன்யரின் பரிபூரண தெய்விக அம்சத்தை விரிவாக விளக்கி, அவர் ஸ்ரீகிருஷ்ணனின் அவதாரமே என்று தர்க்க முறையில் நிலைநாட்டுவதில் அநேகமாக மற்ற அறிஞர்களை பிரபோதானந்த சரஸ்வதி விஞ்சி விட்டார் என்றே சொல்லலாம். விஷ்ணுவின் மச்ச, கூர்ம முதலிய சாதாரண அவதாரங்களைவிட ஸ்ரீசைதன்யரின் அவதாரத்தை மிக உயர்ந்ததாகப் பிரபோதானந்த சரஸ்வதி கருதுகிறார்." கோபிகைகளின் காதலனே கலியுலகத்தில் கௌரங்கராகத் தோன்றியிருக்கிறார். ராதையின் மனநிலையில் கிருஷ்ணனைக் காதலிப்பதே ஸ்ரீசைதன்யரின் வாழ்வாகவும் லட்சியமாகவும் அமைந்தன. அவருடைய செயல்களையும் நடவடிக்கைகளையும் முறையாக எழுதியுள்ள எல்லா வரலாற்று ஆசிரியர்களும் ஸ்ரீசைதன்யரின் இயல்புகளில் லயித்தனர். அவருடைய தெய்விக அம்சம்

கடவுளிடம் அதிக பக்தி கொண்ட ஒரு பக்தர் என்ற நிலையிலேயே அடங்கியிருந்தது.

விரகதாபத்தில் கிருஷ்ணனைக் காதலிப்பதுதான் அவருடைய தனிப்பட்ட பக்தி வழி. கடவுளின் பக்தன் அல்ல, தான் கடவுளே என்று அவர் கருதியிருந்தால் பக்தராக இல்லாமல் வேறுவகையில் அவர் வாழ்க்கை அமைந்திருக்கும். வாழ்க்கை முழுவதும் அசல் பக்தனாகவும் லட்சிய மதாசிரியராகவும் ஸ்ரீசைதன்யர் வாழ்ந்தார். உலகத்துக்கு என்ன அவர் உபதேசித்தாரோ, அதை மக்கள் பின் பற்றி நடக்க வேண்டும் என்பதற்காக அதற்கேற்ப வாழ்ந்தே காட்டினார். இதைக் கொண்டுதான் அவருடைய சரித்திராசிரியர்கள் யாவரும் ஸ்ரீசைதன்ருடைய பக்தி மயமான வாழ்க்கையை எண்ணிப் பார்க்கும்போது அவர் பூரண பக்தர் என்றே கொள்ள வேண்டும். ஸ்ரீசைதன்யரின் வாழ்க்கையையும் தத்துவத்தையும் நன்கு அறிந்திருந்த ஸ்வரூப தாமோதரர் கடவுளின் பக்தராக ஸ்ரீசைதன்யரைக் குறிப்பிட்டிருக்கிறார். அதே சமயத்தில் அவருடைய ஐந்து நிலைகளையும் குறிப்பிட்டிருக்கிறார். "(பக்தியே வடிவாக அமைந்த?) பக்தரூபர், (ஸ்ரீசைதன்யரையே நிகர்த்த பக்தரான நித்தியானந்தர்) பக்த ஸ்வரூப, (பக்தரின் வெளிப்புறத் தோற்றமாக விளங்கிய அத்வைதர்) பக்தாவதார, (பக்தரின் சக்தி) பக்த சக்தி, (பக்தர்) ஸ்ரீவாசர் ஆகிய ஐந்து தத்துவங்களையும் தம்முள் கொண்டிருக்கும் ஸ்ரீகிருஷ்ணரை (சைதன்யரை) வணங்குகிறேன்" என்று அவர் பாடிய பாடல் ஒன்று கூறுகிறது.

ஸ்ரீசைதன்யருடைய சிஷ்யர்களுக்கு அவர் தெய்வமாகவே விளங்கினார் என்று அவருடைய பக்தர்கள் வரலாறுகளில் எழுதியிருந்த போதிலும் கடவுள் என்று தம்மைச் சொல்லிக் கொள்வதை ஸ்ரீசைதன்யர் ஒரு போதும் விரும்பியதே கிடையாது. ஒரு சமயம் ஸ்ரீசைதன்யர் பூரியில் இருந்தபோது கடவுளின் அவதாரம் ஸ்ரீசைதன்யர் என்று புகழ்ந்து பாடும்படி எல்லாச் சிஷ்யர்களுக்கும் அத்வைதர் கட்டளையிட்டார். ஆனல் அத்தகைய செயலை ஸ்ரீசைதன்யர் மிகவும் கடிந்து பேசுவார் என்று அவ்விதம் செய்யவே இல்லை. பகவானுக்குச் சேவை செய்யவேண்டும் என்ற உணர்வுடனேயே அவர் எப்பொழுதும் இருந்தார். தெய்வத்துக்குத் தொண்டு

செய்யும் பக்தன் என்றே தம்மை அவர் அடிக்கடி சொல்லி வருவார். அவருக்கு எதிரே கடவுளின் அம்சம் என்று சொல்லும் துணிச்சல் எவருக்கும் ஏற்பட்டதில்லை. பகவானின் தொண்டர் என்றே அவரை அழைத்து வந்தார்கள் என்று பிருந்தாவனதாசர் தம் நூலில் எழுதியிருக்கிறார். கடைசியில், அத்வைதர் தந்த ஊக்கத்தாலும் மனத்தின் கட்டுக்கடங்காத எழுச்சியினாலும் ஸ்ரீசைதன்யரின் சிஷ்யர்கள் அவருடைய தெய்விக அம்சத்தைப் புகழ்ந்து கீர்த்தனங்கள் பாடலானார்கள். தம்முடைய பெயரைச் சேர்த்து, கீர்த்தனம் பாடும் இடங்களில் அவர் மிக அபூர்வமாகவே இருப்பார். அத்தகைய பாடல்கள் அவர் காதில் லேசாக விழுந்தாலே உடனே அந்த இடத்தை விட்டு நகர்ந்து, தம்முடைய இல்லத்துக்குச் சென்றுவிடுவார். கீர்த்தனம் யாவும் முடிந்த பிறகு ஸ்ரீசைதன்யரைப் பார்ப்பதற்கு சிஷ்யர்களுக்கு ஒரே நடுக்கமாக இருக்கும். சிஷ்யர்கள் இவ்விதம் தன் புகழ் பாடுவதைக் கண்டு தம்முடைய வெறுப்பை ஸ்ரீவாசரிடம் தெரிவித்து நிறுத்தி விடும்படியும் சொன்னார்.

ஒரிஸ்ஸா சம்ஸ்தானத்தில் இருந்த வாசுதேவ சார்வபௌமர் என்னும் வங்காள பண்டிதர், ஸ்ரீசைதன்யர் தெய்விக அம்சம் கொண்டவர் அல்ல என்று முதல் முதலில் வாதம் செய்தவர். சார்வபௌமரின் மைத்துனர் கோபிநாதர், ஏற்கனவே, ஸ்ரீசைதன்யரின் தெய்விகத் தன்மையில் நம்பிக்கை உள்ளவராக இருந்தார். பகவானே ஸ்ரீசைதன்யராகத் தோன்றியிருக்கிறார் என்னும் கொள்கையில் நம்பிக்கை கொண்ட கோபிநாதரை, சார்வபௌமரும் அவருடைய சிஷ்யர்களும் கடுமையாகக் கண்டித்தார்கள். ஆனால் சில தினங்களுக்குள்ளாகவே வேதாந்தத்தின் சூத்திரங்களுக்கு விளக்கமாக அமைந்த அத்வைதத் தத்துவத்தில் தீவிர நம்பிக்கையுடையவரும், தனியாகத் தெய்வம் ஒன்று உண்டு என்பதிலேயே நம்பிக்கை இல்லாத மாயாவாதி சந்நியாசியுமான சார்வபௌமர் ஸ்ரீசைதன்யருடன் ஏழு நாட்கள் பிரசித்தி பெற்ற வேதாந்த வாதப் போர் செய்த பிறகு ஸ்ரீசைதன்யரை, கிருஷ்ணனின் அவதாரம் என்றும் அவரே பூர்ணமான தெய்வம் என்றும் ஒப்புக்கொண்டார்.

பின்னர் ஸ்ரீசைதன்யர் ஆறுகரங்களுடன் கூடிய தம்முடைய தெய்விகத் தோற்றத்தையும் காண்பித்தார். பிறகு, சார்வபௌமர்

ஸ்ரீசைதன்யரின் அத்தியந்த பக்தராகி விட்டார். ஸ்ரீசைதன்யரின் மேலே சார்வபௌமர் நூறு பாடல்களையும் இயற்றியுள்ளார்.

ஸ்ரீசைதன்யரின் தெய்விக அம்சத்தை மறுத்து எதிர்த்தவர்களில் முக்கியமான மற்றொருவர் பிரகாசானந்த சரஸ்வதி. சங்கரரின் அத்வைத மதப் பிரிவினரான அவர் காசியில் உள்ள துறவிகளுக்கும் அறிஞர்களுக்கும் தலைவர்.

"கேசவ பாரதியின், சிஷ்யரான ஒரு சந்நியாசி வங்காளத்தில் இருப்பதை நான் அறிவேன். அவர் பெயர் ஸ்ரீசைதன்யர். வெறும் உணர்ச்சி நிறைந்தவர்; ஏமாற்றுக்காரர். சிஷ்யர்களுடன் சேர்ந்து கொண்டு நாடு முழுவதும் ஆடியும் பாடியும் மயங்கி வீழ்ந்தும் காலத்தைக் கழிப்பவர். பார்த்தவர்கள் எல்லோரும் அவரைக் கடவுள் என்றே, அழைக்கிறார்கள்; அவருடைய மந்திரத்தின் சக்தி அவ்வளவு; அவர் ஒரு பெரிய மந்திரவாதி" இப்படி பிரகாசானந்தர் ஸ்ரீசைதன்யரைப் பற்றி நிந்தித்தார். ஆனால் ஸ்ரீசைதன்யரின் இணையற்ற அறிவாற்றலும் மேதையும் அவரையும் அவருடைய சிஷ்யர்களையும் பக்தி நெறிக்குத் திருப்பி விட்டன. "வேதங்களின்-ஸ்ரீமந் நாராயணனின்--அவதாரமே நீங்கள். உங்களை அவமரியாதை செய்ததற்கு மன்னியுங்கள்" என்றும் ஸ்ரீசைதன்யரை அவர்கள் வேண்டிக் கொண்டார்கள். ஆனால் ஸ்ரீசைதன்யரோ தம்மைக் கடவுள் என்று அழைப்பதைத் தீவிரமாக ஆட்சேபித்தார்.

பகவான் ஸ்ரீசைதன்யராக அவதாரம் செய்யப் போகிறார் என்று சில நூல்கள் கூறுகின்றன என்று ஸ்ரீசைதன்யரின் வரலாற்று ஆசிரியர்கள் தங்கள் நூல்களில் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். பாகவத புராணத்திலிருந்து கிருஷ்ணதாச கவிராஜர் எடுத்து காட்டுகிறார். "உம்முடைய புதல்வன் கிருஷ்ணன் மூன்று யுகங்களிலும் வெள்ளை, சிவப்பு, மஞ்சள் ஆகிய நிறங்களைப் பெற்றுத் திகழுவான். இந்தத் துவாபரயுகத்தில் அவனுடைய நிறம் நீலம்" என்று நந்தகோபனிடம் கார்கர் சொல்லியிருக்கிறார். ஸ்ரீசைதன்யரைத் தவிர வேறு எந்த அவதார புருஷரும் மஞ்சள் நிறமாக இருந்ததில்லை. ஸ்ரீசைதன்யருடைய பொன் வர்ணத்தைக் கருதியே அவருக்கு கௌரங்கர் என்ற பெயரும் ஏற்பட்டது. எனவேதான்

ஸ்ரீசைதன்யரை, பகவானின் அவதாரம் என்று வரலாற்று ஆசிரியர்கள் அறிந்து கொண்டார்கள்.

**சத்திய யுகத்தில் கிருஷ்ணன் ஹம்ச அவதாரமாகத் தோன்றியிருந்தார். அந்தக் காலத்தில் அனைவரும் சிந்தனை மூலமாகவே இறைவனைக் கண்டார்கள். யாக யக்ஞங்கள் நிறைந்த திரேதா யுகத்தில் யக்ஞ அவதாரமாக எடுத்திருந்தார். துவாபர யுகத்தில் பிறருக்குப் பணி செய்வதே பொருத்தமான தர்மமாக இருந்தது. எனவே, கண்ணன் பலருக்கும் பல சமயங்களில் பணியாளனாக இருந்தார். கலியுகத்தில், நாம சங்கீர்த்தனம் ஒன்றே பொருத்தமான மதம். எனவே இந்தயுகத்தில் ஸ்ரீசைதன்யர் தோன்றினார். எந்தெந்த** யுகத்தில் பகவான் எந்த வடிவில் என்ன என்ன பண்புகளுடன் சின்னங்களுடன், எவ்வித வழிபாட்டுக்கேற்ற முறையில் அவதாரம் செய்வார் என்று பாகவத சுலோகம் கூறுகிறது. அதன் அடிப்படையில்தான் மேலே சொன்ன விஷயங்கள் தெரிவிக்கப்பெற்றன.

பாகவதத்தில் கீழேவரும் சுலோகங்கள் ஸ்ரீசைதன்யரையே குறிப்பிடும் என்று வைஷ்ணவ ஆசிரியர்கள் சொல்கிறார்கள். "கலியுகத்தின் தோற்றத்தைப் பற்றி நிமி மன்னனுக்கு, காராபாஜா என்னும் முனிவர் கூறியிருப்பதைப் பார்ப்போம்: "வெண்மை நிறமுள்ள எந்த மஹாபுருஷருடைய நாவில் 'க்ரு', 'ஸ்நா' என்கிற எழுத்துக்கள் நித்தியவாசம் செய்கின்றனவோ, அவரைப் பகுத்தறிவுள்ள ஞானிகள் நாம சங்கீர்த்தனங்களால் துதிசெய்கிறார்கள். எப்பொழுதும், அங்கங்களுடனும், உபாயங்களுடனும், பார்சதங்களுடனும் கூடினவராகவே அந்த மஹாபுருஷரைப் பூஜிப்பார்கள்."

கலியுகத்தில் தெய்வத்தை அடைய நாம சங்கீர்த்தனம் ஒன்றே வழி என்பதைப் பிரகடனப் படுத்தியவர் ஸ்ரீசைதன்யரே. எனவே, சைதன்ய பாகவதத்தின் ஆரம்பத்தில் உள்ள பாடலிலேயே பகவத் நாம சங்கீர்த்தனத்துக்குத் தந்தை போன்றவர் என்று அவரைக் குறிப்பிடுவது முற்றும் பொருத்தமே. மேலே சொன்ன பாடலை ஸ்ரீசைதன்யருக்கு ஏற்றிச் சொல்கையில், நித்தியானந்தரையும் அத்வைதரையும் அங்கங்களாகவும் ஹரிதாசரை உபாங்கமாகவும் ஸ்ரீவாசர் போன்ற மற்றவர்களை பார்சதங்களாகவும் கிருஷ்ணதாசர்

வர்ணிக்கிறார். ஸ்ரீசைதன்யர் விழித்துக் கொண்டிருக்கும் போதெல்லாம் கிருஷ்ணனின் நாமத்தைச் சொல்லாமல் இருந்ததே இல்லை.

பாகவதத்தின் அடுத்த இரண்டு பாடல்களின் கருத்து: "ஓ! மன்னர் திலகமே! அந்த அந்த யுகத்துக்கு ஏற்பட்ட பெயரைக் கொண்டு ஸ்ரீஹரியை மக்கள் கொண்டாடுகிறார்கள். கலியுகத்தில், கிருஷ்ணனின் நாமம் எதையும் கொடுக்க வல்லது. எனவே, அறிவும் பக்தியும் உள்ள மக்கள் கலியுகத்தைப் பெருமையாகச் சொல்கிறார்கள். கலியுகத்தில் கிருஷ்ணனின் நாமத்தைத் திரும்பத் திரும்பச் சொல்வதுதான் மனிதனின் சமயமாகும் என்று பாகவதம் கூறுகிறது. பகவானே ஸ்ரீசைதன்ய ரூபம் கொண்டு இந்தக் கருத்தை வற்புறுத்துவதற்காக, தம்முடைய பக்தர்களுக்கிடையே, நம்பிக்கையையும் அன்பையும் உலகத்துக்கு உபதேசம் செய்யலானார்' மேலே சொன்ன பாகவத சுலோகத்தின் பொருளையும் ஸ்ரீசைதன்யரின் பொன் வண்ணத்தையும் நாம சங்கீர்த்தனத்தைப் பற்றி அவர் வெளியிட்ட பிரகடனத்தையும் வைத்து ஒப்பிட்டுப் பார்ப்பார்கள்.

விஷ்ணுவின் குணங்களை வியாசர் சொல்லிக்கொண்டே போகிறார். "பொன்னிற வண்ணத்தினர்; நல்ல வலிவும் வனப்பும் உள்ள உடல்; மணம் வீசும் சந்தனமும் மாலையும் அணிந்திருக்கிறார். உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தும் சாஸ்திர விதிகளையும் தடைகளையும் அநுசரிக்கும் சந்நியாசி."

முந்திய யுகங்களில் பகவான் செய்த வெவ்வேறு அவதாரங்களின் தோற்றங்களை அவ்வப்போது ஸ்ரீசைதன்யர் தம் சிஷ்யர்களுக்குக் காட்சி தந்திருக்கிறார். ஸ்ரீசைதன்யர் தெய்விக அம்சம் உள்ளவர் என்று நிலை நாட்டிய வரலாற்று ஆசிரியர்களுக்கு இதுவும் ஒரு சான்றாக அமைந்தது. ஆறு கரங்களுடன் கூடின திருக்கோலத்தையும் நான்கு கரங்கள் உள்ள விஷ்ணுவின் ரூபத்தையும் குழல் ஊதும் கண்ணன் வடிவையும் ஸ்ரீசைதன்யரிடம் சார்வபௌமர் கண்டிருக்கிறார். மீண்டும் ஸ்ரீவாசருக்கு சதுர்புஜ விஷ்ணுவாகவும், முராரி குப்தருக்கு ராமராகவும் வராஹராகவும் ஸ்ரீசைதன்யர் காட்சி தந்தருளியிருக்கிறார். கதை, சங்கு, சக்கரம், தாமரை, கலப்பை, பிரம்பு ஆகியவற்றை ஏந்திய ஆறுகரங்கள் கொண்ட

மூர்த்தியாகவும் நித்தியானந்தருக்குச் சேவையளித்திருக்கிறார். நவத்வீபத்தில் ஸ்ரீவாசரின் இல்லத்தில் சத்-பஹாரியா பாவ நிலையில் பல சிஷ்யர்கள் ஸ்ரீசைதன்யரிடம் பலவேறு விதமான தோற்றங்களைக் கண்டிருக்கிறார்கள். மற்றும் ரத யாத்திரை விழாவின்போது வெவ்வேறு ஏழு கோஷ்டிகளுடன் ஒரே சமயத்தில் தனித் தனியே ஸ்ரீசைதன்யர் நடனமாடித் தம்முடைய விசேஷ சக்தியை வெளிப்படுத்தினார் என்றும் சொல்லுகிறார்கள். நவத்வீபத்தில் தம் அன்னையார் அளித்த உணவை, பூரியில் இருக்கும்போதே உண்பதும் அவருடைய வழக்கமாக இருந்திருக்கிறது. ஸ்ரீசைதன்யர் உண்மையில் எங்கே இருந்த போதிலும், அவரிடம் பக்தி கொண்டிருந்த சிஷ்யர்கள் நவத்வீபத்தில் அன்னை சசிதேவியின் கிருகத்திலும், பானிஹாடியில் உள்ள ராகவரின் இல்லத்திலும் நித்தியானந்தரின் நடனத்திலும் ஸ்ரீவாசரின் வீட்டில் பாடப்பெறும் கீர்த்தனங்களிலும் ஸ்ரீசைதன்யர் இருப்பதாகவே நம்பினார்கள். ஸ்ரீசைதன்யர் மாயமாக இந்த உலகத்தைவிட்டு மறைந்ததிலிருந்து அவருடைய தெய்விகத் தன்மை பற்றிய கருத்து மேலும் பலத்தது.

ஸ்ரீசைதன்யரின் வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் அவருடைய தெய்வத் தன்மையைப் பற்றித் தங்கள் நூல்களில் வைஷ்ணவ ஆசிரியர்கள் எழுதியிருக்கிறார்கள். உயிரையிழந்த ஸ்ரீவாசரின் குழந்தையைத் தம்முடன் பேசும்படி அவர் செய்தார். பூரியில் கூண்டிசா ஆலயத்தில், அத்வைதரின் இறந்த மகனை மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பினார்; கடுமையான குஷ்டநோயால் பீடிக்கப் பெற்றிருந்த வாசுதேவர் என்பவரை அப்படியே கட்டித் தழுவி, நோயை முற்றும் போக்கினார் ; வாசுதேவ சார்வ பௌமரின் மருமகன் காலரா நோயால் மரண மடையும் நிலையில் இருந்தபோது அவர் உயிரைக் காப்பாற்றினார்.

தங்களுடைய தினசரி வழிபாட்டுக்குரிய குடும்ப தெய்வ விக்கிரகங்களின் பீடங்களில் ஸ்ரீசைதன்யரையும் அமர்த்தி வேத மந்திரங்களாலும் கோபால மந்திரத்தாலும் மலர்கள், துளசி, சந்தனம் இவற்றால் அத்வைதரும் ஸ்ரீவாசரும் வழிபட்டிருக்கிறார்கள். ஆனால் அவர் சந்நியாசியாகி, வங்காளத்தை விட்டுச் சென்ற பிறகு அத்தகைய முறையில் எவ்வித வழிபாட்டையும் அவர் ஏற்றுக்

கொண்டதாகச் சான்றுகள் எதுவும் காணவில்லை. பூரியில் ஸ்ரீசைதன்யரை அத்வைதர் வழிபட்டதாக, கிருஷ்ணதாசர் சொல்கிறார். அத்வைதர் விரும்பியது போல வெளிப்படையாக, ஸ்ரீசைதன்யரைத் தெய்வமாகக் கருதி அவருடைய பெருமையைப் பாராட்டத் தொடங்கினால் அவர் தங்களைக் கடுமையாகக் கடிந்து கொள்வார் என்று சிஷ்யர்கள் தயங்கினார்கள். இதனால்தான், தம்மை எவரும் தெய்வமாகக் கருதி வழிபட அநுமதிக்கவில்லை; தம்மைத் தெய்வம் என்று பிறர் சொல்வதை அவர் கேட்கவும் விரும்பவில்லை. ஆனால் அவரை அப்படி வழிபட வேண்டும் என்ற சிஷ்யர்களின் ஆசையைத் தணிக்க முடியவில்லை.

அடக்க முடியாத அவர்களுடைய மனோபாவம் வேறுவகையில் சென்று ஓரளவு திருப்தியைத் தந்தது. எல்லா இடங்களிலும் ஒரே காலத்தில் இருக்கக் கூடிய சக்தி ஸ்ரீசைதன்யரிடம் இருப்பதாகக் கருதி, ஸ்ரீசைதன்யர் பூரியில் இருக்கும்போது, வங்காளத்தில் உள்ள தங்கள் இல்லங்களில், அவருக்கு ஆகாரத்தை நரசிம்ஹானந்தர், சிவானந்தர் முதலியவர்கள் சமர்ப்பித்து வந்தார்கள். ஸ்ரீசைதன்யருடைய வாழ்நாளிலேயே, அவருடைய நேரிடையான சிஷ்யர்களான சிவானந்தர், கௌரதாசர், வாணிநாதர், ஜகதீச பண்டிதர், காசீசுவரர், மன்னன் பிரதாபருத்திரன் முதலியவர்கள் இன்னும் ஒரு படி மேலே சென்று தங்களுடைய தினசரி வழிபாட்டுக்காக, ஸ்ரீசைதன்யரின் பிம்பங்களையே தங்கள் இல்லங்களில் அமைத்துக் கொண்டார்கள்.

ஸ்ரீசைதன்யரின் மறைவுக்குப் பின்னர் ஐம்பது ஆண்டுகளில், அவருடைய கணக்கற்ற பிம்பங்கள் வழிபாட்டுக்காக, வங்காளத்திலும் ஓரிஸ்ஸாவிலும் மதுரையிலும் நிறுவப் பெற்றன. பொதுவாக ஸ்ரீசைதன்யரைக் கடவுளின் அவதாரம் என்றே அவருடைய சிஷ்யர்கள் நம்பினார்கள். வங்காளத்தில் நித்தியானந்தரும் அத்வைதரும், இவர்களுடைய சிஷ்யர்களும், மதுரையில் ரூபரும் சநாதனரும், மற்ற வைஷ்ணவ அறிஞர்களும் ஓரிஸ்ஸாவில் வக்ரேசுவர பண்டிதர், வாசுதேவ சார்வபௌமர், ராமானந்த ராயர், இன்னும் பலருடைய இடைவிடாத பிரசாரத்தாலும் மிகப் பெரிய அளவில் மேற்கொண்ட இயக்கங்களாலும் நடவடிக்கைகளாலும் ஸ்ரீசைதன்

யர் தெய்வத்தின் அவதாரமே என்னும் கருத்து மேலும் மேலும் வளர்ந்தது; மக்கள் மனத்திலே நன்ருக ஊன்றியும் விட்டது. மேலும் இத்தகைய வேலேகளைத் தொடர்ந்து ஸ்ரீநிவாசரும் நரோத்தமரும் மற்றவர்களும் வங்காளத்திலும், சியாமானந்தரும் ரசிகானந்தரும் அவர்களுடைய சிஷ்யர்களும் ஒரிஸ்ஸாவிலும் ஜீவ கோஸ்வாமியும் மற்றவர்களும் மதுரை பிருந்தாவனம், ஆகிய இடங்களிலும் செய்து வந்தார்கள். பிற்காலத்தில் வந்த வைஷ்ணவ ஆசாரியர்கள், ஸ்ரீசைதன்யர், தெய்வ அவதாரமே என்னும் நம்பிக்கை மேலும் மேலும் பரவுவதற்கு அதிகமாகக் காரியங்களைச் செய்தார்கள். பொதுவாகவே எல்லா ஹிந்துக்களும் ஸ்ரீசைதன்யரைத் தெய்வமாகவே ஏற்றுக்கொண்டு, வழிபட்டு வருகிருர்கள்.

பூரியில் உள்ள ஸ்ரீசைதன்யரின் உறைவிடம்: தம்முடைய பிற்கால வாழ்க்கையில் கிட்டத்தட்ட இருபத்து இரண்டு வருஷங்கள் ஸ்ரீசைதன்யர் பூரியிலேயே கழித்திருக்கிருர். எனவே, கௌடிய வைஷ்ணவர்களின் புனித ஸ்தலங்களில் பூரியே மிகச் சிறந்தது என்று சொல்லலாம். பூரியில் அவருடன் தொடர்பு பெற்ற பல இடங்களை மிகவும் அன்புடனும் கவனத்துடனுடன் மதித்துக் காப்பாற்றி வருகிருர்கள்.

இத்தகைய இடங்களில் எல்லாவற்றைவிட முக்கியமானதாக, கம்பீரா கோயிலேச் சொல்லலாம். தென்னுட்டில் இருந்து திரும்பி வந்ததும் காசி மிஸ்ரரின் தோட்ட வீட்டை உறைவிடமாக ஸ்ரீசைதன்யர் பெற்றிருந்தார். அங்கேதான் ஸ்ரீசைதன்யர் இரண்டு மாதங்களுக்கு மேல் வசித்து வந்தார். இந்த ஸ்தலம் இன்று ராதாகாந்த மடம் என்று வழங்கி வருகிறது.

தென்னுட்டுக்குச் சுற்றுப் பிரயாணம் புறப்படுவதற்கு முன்பு, வாசுதேவ பட்டாசார்யா சார்வபௌமருடைய அன்னையின் சகோதரியின் வீட்டில் ஒரு பகுதியிலும் கடற்கரையில் உள்ள ஒரு வீட்டிலும் ஸ்ரீசைதன்யர் வசித்தார். கொஞ்ச காலம் அவர் வசித்த இந்த இரண்டு வீடுகளும் எவை என்று தற்சமயம் கண்டுபிடிக்க இயலவில்லை. ஸ்ரீசைதன்யரின் மறைவுக்குப் பின்னர், காசிமிஸ்ரரின் தோட்ட வீடு, அவருடைய சிறந்த புனிதமான ஞாபகச்

சின்னமாக விளங்கவேண்டும் என்ற நோக்கத்துடன் வைஷ்ணவ மடமாக ஏற்படுத்தப் பட்டது.

ஸ்ரீசைதன்யரின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்த வக்ரேசுவர பண்டிதர் என்னும், வங்காள பக்தர், அந்தத் தோட்ட இல்லத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்டு, ஓரிஸ்ஸாவில் ஸ்ரீசைதன்யரின் தத்து வத்தைப் பரப்பும் பிரதான ஸ்தலமாக மாற்றினர்.

ஸ்ரீசைதன்யர் உபயோகித்து வந்த மெல்லிய மெத்தை, கமண் டலு ஆகியவை மிகுந்த கவனத்துடன் பராமரிக்கப் பெற்றிருக் கின்றன. அவற்றுக்குத் தினசரி பூஜைகளும் நடைபெறுகின்றன. ஸ்ரீசைதன்யர் தங்கி, தியானம், ஸ்மரணம் ஆகியவற்றைச் செய்து வந்த அந்தச் சிறிய அறை இன்று 'காம்பிர' என்று அழைக்கப் பெறுகிறது.

## 17

# பக்தி

ஸ்ரீசைதன்ய மகாப் பிரபுவின் வரலாற்றை முடிக்கும் முன்பு அவர் மேற்கொண்ட பக்தி நெறியைக் குறித்து ஒரு சிறு விளக்கம் தரவேண்டும் என்ற ஆவலை என்னுல் தடுக்க இயலவில்லை. அவருடைய ஒவ்வொரு சொல்லிலும், செயலிலும், இயல்பிலும், இயக்கத்திலும் பக்தி ஊடுருவியிருந்தது.

'பஜ' என்னும் சமஸ்கிருத மூலச் சொல்லுடன் 'க்தி' என்னும் விகுதியும் சேர்ந்து உருவான இந்தச் சொல்லுக்கு பகவானுக்குச் சேவை செய்வது என்று பொருள். மிகவும் அழகிய ஆண்டவனிடம் அன்பு கலந்த சேவை செய்வதே பக்தியாகும். மாயையின் தொடர்பிலிருந்து விடுபட்டு, ஏகாக்கிர சித்தத்துடன் ஐம்புலன்களின் அதிபதியிடம் ஆசையைச் செலுத்துவதே பக்தியாகும் என்று நாரத பாஞ்சராத்திரம் தெரிவிப்பதைக் காட்டி ரூபகோஸ்வாமி, பக்தியின் லட்சணம் இதுதான் என்று கூறுகிருர். பக்தி செய்பவரும் அதை ஏற்றுக் கொள்பவரும் ஒருவரோடு ஒருவர் இரண்டறக் கலக்கும் போது ஏற்படும் ஆனந்தத்தை நுகருவதற்காக, ஐம்புலன்களின் ஆத்மிக உணர்வைப் பெற்றிருப்பார்கள். பக்தியே ஒரு சாதனமாகவும் பயனுகவும் அமைந்துள்ளது. பக்தி உச்சநிலையை அடையும் போது பிரேமையாகிறது. முக்தி நிலையை எய்திய பின்னர் கூட, பக்தி செயலற்று விடுவதில்லை. அதனுடைய முழு லட்சியமும் இறைவனை அடையும் இன்பமே. இதில் பக்தனைப் பற்றிய பிரஸ்தாபமே இல்லை.

பிரேமை வேறு, காமம் வேறு ; ஒளிமிக்க சூரியனுக்கும் கரிய இருளுக்கும் உள்ள வித்தியாசம் இவ்விரண்டுக்கும் உண்டு. ஒன்று தங்கம் ; மற்றென்று இரும்பு. பக்தி தன்னிறைவு உள்ளது ; கர்மம், ஞானம், இவைகளுக்கு உட்பட்டதல்ல. சுய இன்பம் மட்டுமே கர்மவாதிகளின் லட்சியம்; பேதமற்ற பிரம்மத்தை அடைவதே அத்வைத ஞானிகளின் நோக்கம். பக்தியின் அநுபவத்தையும் நோக்கத்தை

யும் இந்த இரண்டு வழிகளுமே ஏற்றுக் கொள்வதில்லை. எனவே, அடிப்படையிலேயே அவற்றிலிருந்து பக்தி மாறுபட்டிருக்கிறது. இறைவனிடம் முழு மனத்துடன் செலுத்திய பக்திக்காக, பக்தன் பிரதிப் பிரயோசனமாக எதையும் எதிர்பார்க்கமாட்டான். கர்மம், ஞானம், மற்ற நம்பிக்கைகள் எல்லாவற்றிலிருந்தும் விடுபட்ட தூய்மையான பக்தியே கிருஷ்ணனின் சேவையில் இருக்கிறது என்கிறார் ஸ்ரீரூப கோஸ்வாமி. கர்மம், ஞானம் ஆகிய இருமுறைகளைப் பற்றி, திவ்ர கௌடிய வைஷ்ணவ இலக்கியம் முழுவதும் மிகவும் வன்மையாகக் கண்டித்திருப்பதை நாம் பார்க்கலாம். புக்தியிடத்தும் முக்தியிடத்தும் சபலம் இருக்கும் வரையிலும் எவருடைய உள்ளத்திலும் பக்தி மலராது என்று ரூபர் எடுத்துரைத்திருக்கிறார்.

கர்மமும் ஞானமும் நல்ல பயிரை அழித்துவிடும் பூண்டுகளைப் போன்றவை. எனவே, அவற்றை இதயத்திலிருந்து எடுத்துவிட வேண்டும். அப்போதுதான் பக்தி என்னும் மலர்க்கொடி தடையின்றி வளர வழி ஏற்படும் என்று ஸ்ரீகிருஷ்ணதாச கவிராஜர் புத்திமதி கூறுகிறார். பக்தியினால் ஏற்படும் ஆறு இயல்புகளைக் குறித்து ரூபகோஸ்வாமி எடுத்துரைத்திருக்கிறார்.

1. பக்தி எல்லாவகையான துன்பங்களையும் அழிக்கிறது.

2. எல்லா நன்மைகளையும் தரும் ஊற்றுபோல இருக்கிறது ('சுபதா').

3. மோட்சத்தைத் துச்சமாக மதிக்கச் செய்கிறது.

4. அபூர்வமான பொருள்கள் எல்லாவற்றிலும் மிக அபூர்வமான தன்மை உடையது பக்தி.

5. சிதரூத ஆனந்தத்தின் உறைவிடம்.

6. எப்பொழுதும் கிருஷ்ணனைக் கவருகிறது.

மாயையின் இயல்புகளை அழித்து, இறைவனின் ஆத்மிக உலகத்துக்கு அழைத்துச் சென்று அங்கே அன்பு செலுத்தவும் பணிவிடை செய்யவும் பக்திக்கு ஆற்றல் உண்டு. கர்மத்தின் துணையையோ ஞானத்தின் உதவியையோ அது என்றுமே நாடுவதில்லை. தன்னுடைய வளர்ச்சி முறைக்கும் அவை இரண்டும் கடும்

பகையாகவும் இருக்கின்றன என்றே பக்தி கருதுகிறது. பக்தி ஒன்றே நம்மை இறைவனிடம் அழைத்துச் செல்ல வல்லது; இறைவனைக் காணச் செய்யக் கூடியதும் அதுவே என்று 'மத்ர ஸ்ருதி' என்றும் நூல் வன்மையாகக் கூறுகிறது. வேதாந்த சூத்திரத்துக்கு உரை எழுதும் போது, பக்தி ஒன்றுக்கே இறைவன் கட்டுப்படுகிறான் என்று மாதவர் எழுதியிருக்கிறார்.

கர்மம், ஞானம், பக்தி இவற்றுக்கிடையே உள்ள வேறுபாடுகள்: கர்மம் என்பதற்கு, ஏதாவது பயன்தரும் செயலை மேற்கொள்வது என்று பொருள். அதனுடைய தத்துவ ரீதியான பொருளையும் பார்ப்போம். நம் உடலையும் மனத்தையும் காப்பாற்றுவதற்காகவும் அவற்றின் இன்பத்துக்காகவும் நாம் எதைச் செய்கிறோமோ அதன் விளைவுகளை அநுபவிக்கிறோம். மனிதன் பல எண்ணங்களை நினைக்கிறான். அப்படி எதையாவது நினைக்கும் போது, தன்னுடைய அறிவுச் சக்தியைப் பயன்படுத்தி, இதனால் உடலுக்கோ அல்லது மனத்துக்கோ சில பயன்களை ஏற்படுத்திக் கொள்கிறான். இப்படி அறிவுச் சக்தியை ஏதாவது ஒரு காரியத்தில் பயன் படுத்திக்கொள்வதைத்தான் அவனுடைய செயல் என்றோ கர்மம் என்றோ குறிப்பிடுகிறோம். இந்தக் கர்மற்றுக்கு அறம், பொருள், இன்பம் மூன்றும் தூண்டுகோல்களாக உள்ளன. இந்த உலகத்தில், நம் உடம்புக்கும் உள்ளத்துக்கும் இன்பமும் வசதியும் வேண்டும் என்று விரும்புகிறோம். இதுவே அடுத்த உலகத்திலும் தொடர்ந்து கிடைக்க வேண்டும் என்றும் ஆசைப் படுகிறோம். ஒரு செயலைச் செய்வதற்குக் காரணம் ஒன்று இருக்க வேண்டும்; பின்னர் அந்தச் செயலுக்கு ஒரு விளைவும் இருக்க வேண்டும். இந்தக் கொள்கைதான் கர்மம் என்னும் நியதியை நடத்திச் செல்கிறது. பேரின்பத்தை அடைவதற்காக ஓரளவு தியாகம் செய்வதே கர்மத்தின் பிரதான அம்சம். இப்படிக் கிடைக்கும் பயன்தான் நம்மைச் செயலாற்றக் காரணமாக இருக்கிறது.

மிகுந்த இன்பத்துடன் கூடிய கவலையற்ற வாழ்க்கையை அநுபவிக்கும் தேவர்கள் சுவர்க்கத்தில் இருக்கிறார்கள் என்று ஹிந்துக்கள் நம்புகிறார்கள். இந்த உலகத்தின்மேல் அவர்களுக்கு ஆதிக்கம் உண்டு என்றும் மக்கள் கருதுகிறார்கள். அவர்களைக்

கௌரவித்து பலி, ஹவிசு போன்றவைகளை அர்ப்பணித்துத் திருப்திப்படுத்தி நாம் சுவர்க்கத்தை அடையக்கூடும். ஆனால் நாம் இந்த உலகில் செய்த புண்ணியச் செயல்களுக்கு ஏற்பக் கொஞ்ச காலம்தான் அங்கே சகல இன்பங்களையும் அநுபவிக்க முடியும்.

இன்று நாம் செலவழிக்கும் சக்தி அனைத்தும் உண்மையில் சுவர்க்கத்தில் சேர்த்து வைக்கப் பெறுகிறது. அது நம்முடைய எதிர்காலத்தில் பயன்படுகிறது. இந்தச் சக்தியை நாம் சுவர்க்கத்தில் செலவு செய்த பிறகு, நாம் முன்பிருந்த நிலைக்கு வந்து விடுவோம்.

வேதத்தின் ஒரு பகுதி கர்மத்தைப்பற்றி விரிவாக எடுத்துரைக்கிறது. பூர்வ மீமாம்சையில் இதைப்பற்றி ஜாமினி தெளிவாகச் சொல்லியிருக்கிறார். கீதையின் முதல் ஆறு அத்தியாயங்கள் கர்மத்தைக் குறித்தே விளக்கம் தருகின்றன. கர்மத்தையே பற்றுவோர் சுவர்க்க இன்பத்தை நிரந்தரமாக அநுபவிக்க முடியாது. அவரவர்களுடைய கர்ம பயனுக்குரிய காலம் முடிந்ததும் அவர்கள் துன்பமும் துயரமும் நிறைந்த இந்த உலகத்துக்கு வந்து தான் ஆகவேண்டும். இவர்கள் சுவர்க்கத்திலோ இந்த உலகத்திலோ சாசுவதமான சாந்தியைப் பெறமுடியாது. சுவர்க்கம் என்பது இந்த உலகத்தைவிட மிக்க மேலானது என்பது உண்மையே. ஆனால் அங்கேயும் மாறுதல்கள் நிகழ்வது உண்டு. சுவர்க்க வாழ்வுக்கும் பூவுலக வாழ்வுக்கும் இன்பம் நுகர்வதில் அளவிலும் தன்மையிலும் தான் வித்தியாசம் காணப்படுகிறது. இந்த உலகத்தில் இந்த உடலோடு என்ன இன்பத்தை நுகருகிறோமோ, இதைவிட அதிகமான அளவிலும் உயர்ந்த முறையிலும் சூட்சும சரீரத்துடன் கொஞ்சகாலம் சுவர்க்கத்தில் இன்பத்தை அநுபவிக்கப் போகிறோம். எனவே, சுவர்க்கம் நம்முடைய நிலையான உறைவிடமாகாது. என்றைக்காவது ஒரு நாள் அதையும் விட்டு நாம் வெளியேறித் தானாக வேண்டும்,

ஆத்மிகம் ஒன்றுதான் நிலையானது. எவ்வித மாறுதலையும் அடையாதது. தம்முடைய நிலையான ஆத்மா வேறு; அந்த ஆத்மா உறையும் பஞ்ச பூதங்களால் ஆன சரீரம் வேறு. மனம், புத்தி, அகங்காரம் இவற்றால் ஆனது சூட்சும சரீரம். நம்முடைய

நோக்கங்களை அடைய வேண்டும் என்னும் ஆசைகளுக்கு ஏற்ப, பிறவிகளை எடுப்பது இந்தச் சூட்சும சரீரமே. நம்முடைய நிலையான ஆத்மா சலனமற்றது தான், ஆனால் தண்ணீர் வெளிப்புறப் பார்வைக்குப் பனிக்கட்டியாக மாறுவது போல ஆத்மா, சில சமயங்களில் வெளித் தோற்றத்துக்கு மாறுதல்களை அடைகிறது. பனிக்கட்டியாக இருந்த போதிலும் தண்ணீரின் சுயமான தன்மை பூரணமாக மாறுவதில்லை; உள்ளே உறைந்திருக்கிறது; திடத்தன்மை தண்ணீருக்கு ஏதோ ஒரு சமயத்தில் தான் ஏற்படுகிறது; இந்த குணம் ஜலத்தின் (சொந்த) ஸ்வபாவமல்ல.

ஐம்புலன்களால் உலக இன்பங்களை நுகருவது ஆத்மாவின் இயல்புக்கு ஏற்றதல்ல; இத்தகைய இன்பங்களில் பூலோகமாக இருந்தாலும் சுவர்க்கமாக இருந்தாலும் ஆத்மா ஈடுபடுவதே கிடையாது. சரீரம், உள்ளம் என்னும் இந்த இரண்டு ஆடைகளையும் களைந்து எறிந்தாலொழிய பகவானை நாம் அடைய முடியாது.

சூட்சும சரீரம் சுவர்க்கத்துக்குச் செல்வதாலோ அங்கேயிருந்து மீண்டும் திரும்பிப் பூவுலகத்துக்கு வருவதாலோ ஆத்மா எவ்வகையிலும் மாறுவதில்லை. ஓயாத ஜனன, மரணத்தை அடைந்து அதாவது சுவர்க்கத்துக்குச் செல்வதும் சிறிது காலத்துக்குப் பிறகு மீண்டும் பூவுலகத்துக்கு வருவதும் ஆகிய சம்சார சக்கரத்தில் அகப்பட்டுச் சுழன்று சலித்துப்போன சில ஞானிகள், "நாம் யார்? நம்முடைய வாழ்வுடன் பிணைந்துள்ள துன்பங்களுக்குக் காரணம் என்ன?" என்று விசாரணை செய்யலானார்கள்.

இதன் விளைவாகப் பல அறிஞர்கள் தோன்றினார்கள். இத்தகைய துன்பங்களுக்குக் காரணம் கர்மமேயாகும்; எனவே, அதைத் துறக்க வேண்டும் என்று தெளிந்து உரைத்தார்கள். இவர்களையே ஞானிகள் என்று மக்கள் அழைக்கிறார்கள். ஆனால் நம்முடைய சமுதாய வாழ்வில் எவரும் கர்மத்தைச் செய்யாமல் இருக்க முடியாது. சத் கர்மங்களால்தான் உலகம் சீராக இயங்கும். கர்மத்துடன் தொடர்பு இல்லாதிருந்தால் மக்களுடைய வாழ்வு நிச்சயம் பயங்கரமானதாகிவிடும். பொதுஜன வாழ்விலே ஓர் ஒழுங்கே இராமல் போய்விடும். மக்கள் சாதாரண நிலையைவிட மேம்பட்டவர்களாக இருந்தால் ஒழிய இத்தகைய ஞான நிலையை அடைய

முடியாது. உலக வாழ்வில் சாதாரண இன்பங்களில் விருப்பமோ பற்ருே இல்லாதவர்கள் மட்டுமே பின்பற்றக் கூடியது ஞான மார்க்கம்.

எல்லாவகையான துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் ஆசையே காரணம் என்பதை அறிந்த ஞானிகள், கர்மத்திலிருந்து நாம் விலகிக்கொள்ளவேண்டும் என்ற ஞான மார்க்கத்தைப் போதிக்கலானுர்கள். ஜைனர்களும் பௌத்தர்களும் ஞான மார்க்கத்தின் ஒரு வகையைச் சேர்ந்தவர்களே. உயிருள்ள வாழ்க்கையில் செயலற்றிருக்க முடியாது. ஏதாவது செயலாற்றியே தீரவேண்டும். எனவே, அப்படிச் செயலாற்றும் போது அதன் விளைவுகளாகிய இன்பங்களையும் துன்பங்களையும் அநுபவித்தே ஆகவேண்டும். எனவேதான் ஞானிகள், ஐம்புலன்களை அடக்கக் கடுமையான தவ வாழ்க்கையை மேற்கொள்கிருர்கள்.

ஜைனர்களும் பௌத்தர்களும் வாழ்க்கையில் இயக்க நிலையை விட ஜடநிலையையே விரும்புகிருர்கள். இந்த மதத்தினருக்கு ஒருவன் சித்தி அடைவதென்ருல் அவனுடைய ஆத்மா அழிந்து போய், சூன்ய நிலையை (நிர்வாணம்) அடைவதேயாகும்.

எட்டாம் நூற்ருண்டில் சங்கரர் அத்வைத தத்துவத்தை வழங்கினுர். புகழ்பெற்ற இந்த ஆசாரியர் காட்டிய வழியையே இப்பொழுது அநேக ஹிந்துக்கள் பின்பற்றுகிருர்கள். ஜீவன்கள், தாம் வெவ்வேறு என்று நினைப்பதால் உண்டாகும் துன்பங்களிலிருந்தும், கஷ்டங்களிலிருந்தும் தப்பவேண்டுமானுல், "பிரம்மம் ஒன்றே, வேறு ஒன்று இல்லை" என்னும் ஞானத்தை அடைவது தான் வழி. இதுவே ஸ்ரீசங்கரரின் அடிப்படையான கொள்கை. 'சர்வம் கல்விதம் பிரம்மம்' (சாந்தோக்கிய உபநிஷத் 3-14-1) 'தத்வமஸி', 'அஹம் பிரம்மாஸ்மி' போன்ற மகத்தான சுருதி வாக்கியங்களை அடிப்படையாகக் கொண்டே அவருடைய தத்துவம் அமைந்திருக்கிறது.

ஸ்ரீசங்கரரின் தத்துவத்தின்படி, வெவ்வேறு தனித் தனி ஜீவன்களே கிடையா. அவை யாவும் மாயை; பிரம்மம் ஒன்றுதான் உண்மை, அதைத் தவிர இரண்டாவதாக எதுவும் கிடையாது. பிரம்மத்துடன் ஐக்கியப்படும் ஜீவன்கள் பல உண்டு என்னும்

கொள்கையே மறைந்துவிடும். ஜீவன், தன்னுடைய தனித் தன்மையை இழப்பதில்தான் மோட்சம் இருக்கிறது. பிரம்மமே ஈசுவரனுகவும் ஜீவனுகவும் விளங்குகிறது—இந்த மாயைத் தத்துவத்தையே ஸ்ரீசங்கரர் வழங்கியுள்ளார். பிற்காலத்து வந்த அத்வைதிகள், பிரம்மத்தின் மறு தோற்றமே அவித்யை; அதுவே ஜீவன்களையும் மாயையும் தோற்றுவிக்கிறது என்ருர்கள். பிரம்மத்தைவிடச் சக்தி வாய்ந்தது ஒன்று இருக்கிறது. அதனுல் தான் பிரம்மம் மாறுதல் அடைகிறது என்று தோற்றும்படி சங்கரர் சொல்வதாகவே படுகிறது. அதாவது பிரம்மம் ஒன்று; அதைவிடச் சக்தி வாய்ந்தது ஒன்று. அதன் சக்தியாலேயே பலவாகின்றன என்பது. ஆனுல் சங்கரர் பிரம்மத்தைவிட உயர்ந்ததோ வேறு ஒன்ருே கிடையாது என்னும் தன் கொள்கையை மறுத்ததாகிவிடுகிறதே! மற்றச் சக்திகளின் துணையால் மாறுதல் அடையக்கூடியது என்ருல் அதைப் பிரம்மமாகக்கொள்ள முடியாதே. பிரம்மத்தின் தன்மையைக் கவனிக்காமல் சங்கரரின் கொள்கையை எப்படி ஏற்றுக்கொள்வது? தனித் தனி வஸ்துக்கள் உண்டு என்னும் திடமான உண்மையை நம்மால் மறுக்க முடியாதிருக்கலாம். கர்மவாதிகளையும் பௌத்தர்களையும் சங்கரர் ஒருங்கே கண்டிக்கிருர். உலகம் தொடர்ந்து இயங்குவதற்குக் கர்மம் காரணமாக இருக்கிறது. சங்கரரின் சுத்த ஞானம் இந்தக் கொள்கைக்கு மாருனது. ஜீவன்களுக்கும் பேதம் இல்லை என்றும் கூறும் சங்கரரின் கொள்கை சின்மாத்ரவாதம் எனப்படும். தெளிவாக விவரிக்க முடியாத சூன்யத்துடன் ஜீவன்கள் கலந்துவிடுகின்றன என்னும் பௌத்தர்களின் சூன்ய வாதம் அல்லது நிர்வாணம் அசின்மாத்ரவாதம் எனப்படும்.

மோட்சத்தை அடைவதற்காகப் பயிலும் ஞானத்துக்கும் இடமில்லாதபடி, ஜீவன் பிரம்மத்துடன் ஐக்யமாவதே விடுதலை அல்லது மோட்சமாகும். ஞானம் உள்ளவரையில் மோட்சத்தை அடைய முடியாது ; ஏனெனில் எவ்விதமான வேறுபாடும் இல்லாமல் பிரம்மத்துடன் ஐக்கியமாவதே மோட்சமாகும். ஆனுல் அறிபவனுக்கும் அறியப்படும் பொருளுக்கும் இடையே ஞானம் நிற்கிறது.

பிரம்மத்தைப் பற்றிய ஞானம் ஏற்படாதவரையில் மோட்சத்தை நாம் அடைய முடியாது. (ராதாகிருஷ்ணன், இரண்டாம் பாகம்

பக் : 645) சகுணப் பிரம்மத்தை வழிபடலாம் என்று சில சமயங்களில் சங்கரர் சொல்கிறுர். பந்தத்தில் உழலும் மக்கள், உருவத்துக்கும் குணத்துக்கும் அப்பாற்பட்ட பரம் பொருளை ஐம்புலன்களுக்கு உட்படுத்திக் கொள்வதற்காக, ஓர் உருவமாக எண்ணி வழிபடு கிறுர்கள். பிரம்மத்துடன் ஐக்கியமாகி, தங்களுடைய தனித் தன்மையைப் போக்கிக் கொள்வதற்கு, சகுணப் பிரம்மத்தை அவர்கள் சாதனமாகவே கொள்கிறுர்கள். வழிபடுபவனுக்கும் வழிபடும் தெய்வத்துக்கும் உள்ள பேதத்தை நீக்குவதே அவர்களுடைய இறுதி லட்சியமாகும். இத்தகைய முறையில் ஞானத்தை வளர்ப்பதோ வழிபடுவதோ அர்த்தமற்றதாகும். பகவானுடைய தன்மையையும் தன்னுடைய தன்மையையும் அழித்துக் கொண்டு பகவானுடன் போலித் தொடர்பு கொள்வதைத் தவிர இது வேறு ஒன்றும் அல்ல.

சங்கருடைய தத்துவம் கேவல அத்வைதம் எனப்படும், அதாவது ஜீவன் தன்னையே நசித்துக் கொண்டு பிரம்மத்தில் ஐக்கியமாவது என்பதாகும். வரம்புக்குட்பட்ட சிறு வஸ்து (ஜீவன்) பெரிதாகி, மகத்தில்—பிரம்மத்தில்—லயித்துவிடுகிறது. தன்னுடைய நிலையையும் பகவானின் நிலையையும் குறைத்துக் கொண்டு, ஆண்டவனுடன் கொள்ளும் போலி உறவைத் தவிர அது வேறு ஒன்றும் அல்ல ; பல தலங்களுக்கும் சென்று இறைவனை ஸ்தோத்திரம் செய்ததற்காகச் சாகும் போது பகவானிடம் சங்கரர் மன்னிப்புக் கேட்டதாகச் சொல்லப்படுகிறது (ராதாகிருஷ்ணன் பாகம் 2, பக். 652) இதிலிருந்து, எல்லாவற்றிலிருந்து விடுதலை பெற்ற மோட்சத்தை அவர் அடையவில்லை என்று தெரிகிறது. நிர்க்குணப் பிரம்மத்துக்கு சங்கரர், தாற்காலிகமான–மாயையான–ஓர் உருவத்தைத் தருகிறுர்; சாதகன் தன்னுடைய நிலையை இழந்து பரம் பொருளான பிரம்மத்துடன் ஐக்கியமாவதையே அவர் மோட்சம் என்கிறுர். அங்கே பக்திக்கு இடம் இல்லை; பக்திக்குரிய பொருளோ பக்தி செய்பவனே கிடையாது என்கிறுர் சங்கரர்.

குணங்களுக்கு அப்பாற்பட்டும், எல்லாவிடங்களிலும் நிறைந்திருக்கும் பரம்பொருளிலிருந்து வேறு வஸ்து (ஜீவன்) தோன்றும் எண்ணம் எப்படி ஏற்பட்டது என்று சங்கரர் விவரிக்கவில்லை. ஜீவன்—பிரம்மம் என்ற வித்தியாசக் கொள்கையிலிருந்து தாம் விடு

பட்டதாகவே அவர் சொல்லிக் கொள்கிறார். இல்லாவிட்டால் உபதேசம் செய்யக்கூடிய ஆசாரியராக இருப்பதற்கு இருக்க முடியாத நிலை ஏற்பட்டுவிடும்.

சங்கரரின் உபதேசத்தில் கூறியுள்ளபடி, சங்கரருக்கே பர பிரம்ம ஐக்கியம் ஏற்பட்டதா அல்லது அந்த உபதேசம் கொள்கை அளவிலேயே நின்றதா என்பதைப் பார்ப்போம். அவர் சொன்ன ‘அஹம் பிரும்மாஸ்மி’ என்னும் தத்துவத்தின் பிரகாரம் தம்முடைய வாழ்நாளில் அவர் பிரம்மமாகவில்லை என்பது தெளிவு. அவர் பிரம்மமாகி இருந்தால், இரண்டாவது மனிதருக்கு ஆசாரியர் என்ற நிலையில் உபதேசம் செய்திருக்க முடியாதே! அப்படிப் பிறருக்கு உபதேசம் செய்ய வேண்டுமானால் பிரம்மத்தைத் தவிர வேறு ஒன்றும் உண்டு என்னும் கருத்தைத் தழுவித் தானே ஆகவேண்டும். எனவேதான், அவர் மாயை என்னும் கொள்கையை ஏற்படுத்தினார். இதுவே நம்மைப் பரம் பொருளிலிருந்து பிரிக்கிறது என்கிறார் அவர்.

வாதம் செய்வதற்காகவே, அழிவற்றதென்று சொல்ல முடியாத மாயை என்னும் கொள்கையைத் தோற்றுவித்த காரணத்தால் சங்கரரையும் அவரைப் பின்பற்றுபவர்களையும் மாயாவாதிகள் என்று குறிப்பிடுகிறார்கள்.

ஞானத்திலிருந்தும் கர்மத்திலிருந்தும் அடிப்படையிலேயே பக்தி முற்றும் மாறுபடுகிறது. சங்கரர் கருதுவதுபோல, ஏதோ ஒரு லட்சியத்தை அடைவதற்கான மார்க்கமாகப் பக்தியைக் கருதக் கூடாது. லட்சியத்தை அடைந்ததும், அதன் வேலை முடிந்து விடுகிறது என்று கருதுவதும் தவறு. வைஷ்ணவ தர்மப்படி, மோட்சம் என்பது பிராகிருத பந்தங்களிலிருந்து விடுபட்டவனாய் ஒரு பக்தன் சூட்சும வடிவில் இறைவனுக்குப் பணி செய்வதேயாகும்.

பூரணனை அடையும் வழியைத் தவிர மற்றவகையில் கைவல்ய ஞானத்தை ஒத்தாற்போன்ற யோகத்திலிருந்தும் பக்தி மாறுபட்டுள்ளது. உடற்பயிற்சிகள், ஆசனங்கள் முதலியவை அடங்கிய யோக பாஷ்யங்களை யோகி அநுஷ்டிக்கிறான். இவற்றால் ‘அநிமா’,

'லகிமா' போன்ற பதினெட்டு வகையான சித்திகள் அவனுக்குக் கூடிவரும். பரமாத்மாவுடன் ஐக்கியமாவதற்குக் காரணமான கைவல்யமே யோக மார்க்கத்தின் கடைசி நிலையாகும். யோகிகளின் சக்தியாலோ பண்டிதர்களின் வாதத் திறமையாலோ பகவானை அடைவது துர்லபம் என்பது பக்தர்களின் திடமான கொள்கை. இறைவனுக்குச் சமமாக ஆவது அல்லது இறைவனோடு இறைவனுகக் கலந்து விடுவது போன்ற கருத்துக்களைப் பக்தர்கள் சகித்துக் கொள்வதில்லை, இத்தகைய அபிப்பிராயங்களைப் பூரண நம்பிக்கையுடன் எவராலும் பேச முடியாது என்றே அவர்கள் கருதுகிறார்கள்.

பக்தர்கள், கர்ம காண்டத்தைப் பின்பற்றுவர்களைப் போலப் பலவகையான கர்மங்களில் நம்பிக்கை வைப்பவர்கள் அல்ல ; பக்தி செய்வது ஒன்றையே பிரதானமாகக் கருதுபவர்கள். அறிவை மயக்கும் விரிவுரைகளால் அவர்கள் தூண்டப் பெறுவதும் இல்லை. கர்மம் செய்தே படிப்படியாக உயர்ந்த நிலையை அடைவதிலும் ஈடுபாடு இல்லாதவர்கள். ஜைனர்களையும் பௌத்தர்களையும் போல, தன்னைத்தானே வருத்திக் கொண்டு, கடுமையான தவ நெறிகளை மேற்கொள்வதும் இல்லை. உலகத்தில் போக போக்யங்களை அநுபவிப்பவர்களும் அல்ல ; அநுபவிப்பர்வகளாகத் தோற்றுபவர்களும் அல்ல : முற்றும் உலகையும் துறந்தவர்களும் அல்ல. (பிர. பூர்வ 11.93.125).

'பரம்பொருள் ஒன்றே, அவர் சர்வசுதந்திரம் உள்ளவன்' என்று பக்தர்கள் கருதுகிறார்கள். பரம்பொருளின் லீலாவிநோதமே மாயை என்பது பக்தனுடைய கொள்கை. சூரியனின் நிலையைப் பொறுத்தே அதன் கிரணங்கள் அமைவதுபோலவே யாவும் பரம்பொருளையொட்டி அமைகிறது. எல்லாம் பரம்பொருளின் நிழலாகும். எனவே, ஏகமேவ அத்வைதம் என்னும் கொள்கை ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இல்லை. (சை.ச. ம. 20. 109-111).

பரம் பொருளையும் மாயையும் ஒருங்கே பக்தன் காண்கிறான் என்று பாகவத புராணம் (1—7—4) இந்த நிலையைப் பற்றித் தெளிவாகக் கூறுகிறது, மாயை, ஜீவன் இவை இரண்டும் பரம்பொருளுடன் உள்ள நிலை இதுவே.

கௌடிய வைஷ்ணவர்கள் மூன்று வகையான சக்திகளை அறிமுகப்படுத்துகிறார்கள். 1. இறைவனின் இருப்பிடமான வைகுந்தம். இது அந்தரங்கம் எனப்படும்; 2. ததாஸ்த அல்லது ஜீவ சக்தி; இதன் விளைவாகத் தோன்றுவது 'ஜீவன்' என்பது; 3. மாயா சக்தி.

கௌடிய வைஷ்ணவ சித்தாந்தத்தின்படி இவை மூன்றும் தனித் தனியானவையாக இருந்தபோதிலும் மனித கற்பனைக்கு அப்பாற்பட்டவை. எனவே, இவற்றை 'அசிந்தயா-பேதா பேதம்' என்று ஜீவ கோஸ்வாமி குறிப்பிடுகிறார்.

இந்தச் சக்தித் தத்துவத்துக்கு ஸ்வேதாரண்ய உபநிஷத்தில் ஆதாரம் இருக்கிறது. (6–8; 1–3; 16, 4. 5) பிரம்ம சம்ஹிதை (44); பாகவதம் (11. 11. 33); விஷ்ணு புராணம் (முதல் பாகம் 12. 69; 6. 7, 61); விஷ்ணு ஸ்வாமி எழுதிய சர்வஞான சூக்தம் ஆகிய பல நூல்களிலும் இந்தக் கருத்துக்கு ஆதாரம் இருக்கிறது. பரம்பொருளின் ததாஸ்த அல்லது ஜீவசக்தியின் விளைவால் தோன்றிய ஜீவாத்மாக்களாகிய நாம், பரமாத்மாவிட மிருந்து பூரண மாக விடுபட்டு சுதந்திரமாக இயங்குவதில்லை. ஒருபுறம் பரமாத் மாவுக்கும் மறுபுறம் மாயைக்கும் இடையே ஜீவாத்மா இயங்குகிறது. நிர்விகார பிரம்மத்தால் நமக்கு இது ஏற்பட்டிருக்கிறது. நம் முடைய ஜீவாத்மா நிலை ஏற்படுவதற்காகப் பரம்பொருள் தனியாக எதுவும் செய்ய வேண்டியதில்லை. அதனுடைய சக்தி பரிணும வாதத்தாலேயே இந்த விளைவு ஏற்பட்டிருக்கிறது.

பிரம்மம் விகாரப்பட்டதன் விளைவாலேயே ஜீவன்கள் தோன்றி யிருக்கின்றன. பிரம்மத்துக்கு இயல்பாகவே எவ்விதச் சக்தி யும் இல்லை என்று ஞானிகள் சொல்கிறார்கள். பிரம்மமும் மாயையும் இணைந்ததால்—அதாவது பிரம்மம் விகாரமடைந்ததால் ஜீவன் தோன்றியது. விடுதலை (மோட்சம்) என்றால் அவித்யை நீங்கி, பிரம்மத்துடன் ஐக்கியமாவது. இதுவே ஞானிகள் தரும் விளக்கம்.

மோட்சம் என்று இருக்குமானல், அது நிரந்தமானதா, தாற் காலிகமானதா? இந்த மோட்சம் நிரந்தரமானதாக இருக்க முடி யாது. ஏனெனில் முன்பு போலவே பிரம்மம் அவித்யையுடனே மாயையுடனே சேரக்கூடிய சந்தர்ப்பம் மீண்டும் நேரலாம்.

மாயையோ, அவித்யையோ, பரம்பொருளின் லீலைகளில் ஒன்று ; எனவே, அவை பரம்பொருளை எவ்விதத்திலும் பாதிக்க மாட்டா என்பது வைஷ்ணவக் கோட்பாடு. ஆனால் பரம்பொருளின் சக்தியிலிருந்து தோன்றிய ஜீவன்களை மட்டும் அவை பாதிக்கும். எனவே, மாயைக்கும் ஜீவனுக்கும் உள்ள தொடர்பு, பரம்பொருளின் சாயலில் வரும் வரையில் நித்தியப் பரம்பொருளோ தன்னுடைய இரண்டு மாறுபட்ட சக்திகளாலும் பாதிக்கப்படாமல் இருக்கிறது. கர்மத்துக்கோ ஞானத்துக்கோ பக்தி மிகவும் நேரிடையானது என்பது தெளிவு. உடம்பாலும் உள்ளத்தாலும் இன்பம் பெறுவது கர்மவாதிகளின் லட்சியம். இவற்றை அடிமைப்பட்டிருக்கும் ஜீவாத்மாக்களின் மேல் மாயை செய்யும் செயல்கள் என்று பக்தர்கள் குறிப்பிடுவார்கள். சங்கர பகவத்பாதர் காட்டும் மோட்சத்தை வைஷ்ணவர்கள் விஷத்தைப் போலக் கருதி மிகவும் கண்டித்துள்ளார்கள். தம்முடைய வாழ்நாள் முழுவதும் ஸ்ரீசைதன்ய மகாபிரபு இந்தக் கொள்கையை எதிர்த்து வந்தார்.

மோட்சத்தைப் பற்றிய மாயாவாதக் கொள்கையை ஜீவ கோஸ்வாமி, 'சத்சந்தர்ப்ப' என்னும் நூலிலும் பலதேவ வித்யா பூஷணர் தம்முடைய நூல்களிலும் வன்மையாகக் கண்டித்திருக்கிறார்கள். 'பிரேம பக்தி சந்திரிகா' என்னும் நூலில் டாகுர் நரோத்தமர் எழுதுகிறார் : ''கர்மகாண்டமும் ஞானகாண்டமும் முழுவதும் விஷம் நிறைந்தவை. அவற்றை அமுதம் எனக் கருதிச் சிலர் அருந்தி விடுகிறார்கள். இதனால் அவர்கள் ஓயாமல் பல பிறவிகள் எடுத்துக் கொண்டே யிருக்கிறார்கள் ; அசுத்தமான உணவை உட்கொண்டவர்களுக்கு அவர்கள் ஒப்பாவார்கள் ; அவர்களுடைய வாழ்நாள் வீணே.'' மேலும் அவர், கர்மவாதிகள், ஞானிகள், யோகிகள், மற்ற தெய்வங்களை வழிபடுபவர்கள் இவர்களிடம் தொடர்பு கொள்ள வேண்டாம் என்றும் வைஷ்ணவர்களுக்கு எச்சரிக்கை செய்கிறார். இறைவனுக்குச் செய்யும் அன்புப் பணிவிடையால் ஏற்பட்ட மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதக்கும் பிரபோதானந்த சரஸ்வதி என்னும் அறிஞர்—ஸ்ரீசைதன்யரின் சமகாலத்தைச் சேர்ந்தவர்—கைவல்யத்தை நரகத்துக்குச் சமமாகச் சொல்கிறார். இறைவனிடம் பக்தர்கள் செலுத்தும் பக்தியினால்

விளையும் ஆனந்தம் என்னும் பாற்கடலின் ஒரு துளிக்குக் கூடச் சமானமாகாது, பேதமற்ற பிரம்மத்தை அடையும் தன்மை என்றும் அவர் சொல்கிறார்.

பாகவதத்தைப் பின்பற்றி, பகவானிடத்திலேயே பிரம்மம், பரமாத்மா என்னும் கருத்துக்களையும் கௌடிய வைஷ்ணவர்கள் இணைத்திருக்கிறார்கள். தங்களுடைய கொள்கையில் தாராள மனப் பான்மை இருப்பதற்காகவே அவர்கள் இப்படிச் செய்திருக்கிறார்கள். (தத்துவ சந்தர்பம் 5–7) பிரம்மம், பரமாத்மா, பகவான் யாவும் அத்வய ஞான—தத்துவத்தின் அதாவது பூரணமான பரம்பொரு ளின் மூன்று வெவ்வேறு பெயர்களாகும் என்பது கௌடிய வைஷ் ணவர்களின் கொள்கை. பரம்பொருளின் பார்வையில் இந்த மூன்றுக்கும் இடையே எவ்வித பேதமும் இல்லை. ஆனால் பரம் பொருளை அனுபவர்களின் பார்வையில் இந்த மூன்றுக்கும் இடையே ஓரளவு வித்தியாசம் இருக்கிறது.

தூரத்தில் ஒரு மலை இருப்பதாகக் கொள்வோம். வெவ்வேறு இடத்தில் மூன்று பேர் நின்று அதைப் பார்க்கிறார்கள். அவர்களில் ஒருவர் மலையின் அருகே நிற்கிறார். மற்றொருவர் சற்று எட்ட நிற்கிறார். இன்னொருவர் வெகு தூரத்திலிருந்து பார்க்கிறார். தூரத்திலிருந்து பார்ப்பவர் கண்ணுக்கு, தரைக்கு மேலே மேடு ஒன்று இருப்பதாகத் தோற்றும். அதன் மேல் என்ன இருக்கிறது என்பது தெரியாது. மூன்றாவது மனிதரைவிட மலைக்கு அருகில் நிற்கும் இரண்டாவது மனிதர், அந்த மலையின் மேல் மரங்கள் இருப் பதைக் காண்கிறான். மலைக்கு அருகில் நிற்கும் முதல் மனிதர், மலை முழுவதையும் நன்றாகப் பார்க்கிறான். மலையின் மேல் உள்ள மரங் களில் தொங்கும் பழங்கள், கற்கள், மண்ணின் நிறம் ஆகிய எல் லாம் அவன் கண்களில் தெளிவாகப்படுகின்றன.

இரண்டாவது, மூன்றாவது மனிதர்கள் கண்ட காட்சி தவ றானது அல்ல. ஆனால் தெளிவற்றது; விவரம் அற்றது; ஒரு தலைப்பட்சமானது. அதைப் போலவே பரம் பொருளின் தெளிவற்ற ஒரு பகுதித் தோற்றமே பிரம்மமும் பரமாத்மாவும். பரம்பொருள் பகவானாக இருக்கும் போது முழுப் பொலிவுடன் காட்சி தரு கிறான். கிரணங்கள் உச்சிச் சூரியனைக் காண முடியாதவாறு

கண்களைக் கூசச் செய்கின்றன அல்லவா ? உருவமும் அழகும் தன்னுள் பொதிந்துள்ள மகத்தான பெருமைமிக்க பகவானின் கதிரொளி போன்றது பிரம்மம். (சி. சி. எம். 20—159—2-6-27. தத்வ சந்தர்பம். 8.)

பகவானிடத்துத் தோன்றிய தூய்மையான அமைப்பே, உபநிஷத்துக்களில் பிரம்மமாகச் சொல்லப்படுகிறது.

கடோபநிஷத் (2—2—15) முண்டகோபநிஷத் (2—2—10), ஸ்வேதாஸ்வதார உபநிஷத் (7—14) ஈசோபநிஷத் (15—16) முதலியயாவும் பிரம்மத்தைப் பற்றிய இந்தக் கருத்தையே கூறுகிறது. அதனுடைய மகத்தான ஒளியிலேயே அதனுடைய ரூபம் மறைந்திருக்கிறது. பிரம்மத்தில் அவித்யை என்பதே கிடையாது. அது தூலமானது; தூய்மையானது; எளியது.

பூரணமாக அறிவதற்கு அடுத்த நிலையில் இருப்பது பரமாத்மா. இதுவே தூலமாகவும் சூட்சுமமாகவும் இருப்பது. இந்த விவகார உலகங்களைப் படைத்துக் காப்பாற்றுவதற்காக புருஷ விஷ்ணுவுடன் பரமாத்மா இணைகிறது (சி. சி. ஆதி. 5) நேரிடையாகத் தோற்று விட்டாலும், பரமாத்மாவே பதினுன்கு உலகங்களும் தோன்றுவதற்கு மூலகாரணமாகும். உலகத்தைக் காப்பாற்றுவதால் அவர் விஷ்ணு என்னும் பெயரைப் பெறுகிருர். விவகார உலகத்துக்கும் வைகுந்தத்துக்கும் இடையே விரஜை என்னும் கடல் சூழ்ந்திருக்கிறது. இந்த உலகத்தின் சத்வ, ராஜஸ, தாமஸ குணங்களிலிருந்து விடுபடுவதற்காக ஜீவாத்மா இங்கே நீராட வேண்டும். காரணப்திசாயி, கர்போதகசாயி, க்ஷீரோதகசாயி என்னும் மூன்றுவித சக்திகளால் விஷ்ணு இந்த உலகைப் படைத்துக் காப்பாற்றுகிருர். காரணமாக விளங்கும் அவர்—காரண அல்லது விரஜை என்னும் கடலில் சயனித்தபடியே தன் இச்சா மாத்திரத்தில் தன்னுடைய சக்தியாகிய மாயையில் உலகங்களைப் படைக்கிருர். கர்போதகசாயி என்னும் பெயரில் பகவான் சமஷ்தி விஷ்ணுவாக இருந்து இந்த உலகத்தைக் காப்பாற்றுகிருர். அவனிடத்திலிருந்து தான், உண்மையாகப் படைத்து, காத்து, அழிக்கும் பிரம்மா, விஷ்ணு (விஷ்ணுவின் குணவதாரம்) சிவன் ஆகியோர் தோன்றுகிருர்கள் ; எல்லா அவதாரங்களும் தோன்றுகின்றன.

புருஷ விஷ்ணுவின் மூன்ருவதான 'க்ஷீரோத' நிலை, எல்லா உயிர்களிடத்தும் வியஸ்தி விஷ்ணு (அந்தர்யாமி) வாக விளங்கு கிறது.

இந்த மூன்று நிலைகளாலும் உலகைப் படைத்துக் காப்பாற்றும் விஷ்ணுவுக்கு, உலகைக் கவிந்திருக்கும் மாயையுடன் எவ்விதத்திலும் தொடர்பு ஏற்படுவது இல்லை. உலகம், பகவானுடைய சக்தியாலே, மாயையிடம் தோன்றியது அல்லவா?

வெறும் ஜடமும் (சத்) உயிரும் (சித்) மட்டும் இருந்து, ஆனந்தம் இல்லாத இடத்தில் பக்தி இருக்காது.

பரமாத்மா, விஷ்ணு புருஷ என்னும் இந்தக் கொள்கையுடன் பாஞ்சராத்ரிக வ்யூக முறையையும் கௌடிய வைஷ்ணவர்கள் தங்கள் நெறியில் இணைத்துக்கொண் டிருக்கிருர்கள். பரம் பொருளான பகவானின் ஒரு சார்பான நிலையே பரமாத்மா. இந்தப் பகவானே எங்கும் நிறைந்தவர்; மாயையிலிருந்து விடுபட்டவர்; உயர்ந்த அழகும் நாமங்களும் கொண்டவர்: எல்லையற்ற செல்வமுடையவர்; எல்லாவற்றையும் தம்மிடம் கட்டுப்படுத்தி வைத்திருப்பவர் (விஷ்ணுபுராண 6—5—47) சத், சித், ஆனந்தம் யாவும் பரம் பொருளிடத்தில் பகவாஞகவே விளங்குகிறது. (சை. ச. ம 6—166, 167) பிரம்ம சம்ஹிதை (5-1) பாகவதம் (1—5—28) ஆகியவற்றைப் பின்பற்றியே பகவான் என்னும் தத்துவத்தை கிருஷ்ணனுடன் கௌடிய வைஷ்ணவர்கள் ஒன்றுபடுத்திச் சொல்கிருர்கள் (சைதன்ய சரிதாம்ருதம் அதி ; 2. 70, 94, 106).

கௌடிய வைஷ்ணவர்களின் பக்தி லட்சியத்துக்கு உரிய தெய்வம் விரஜையின் கோபால கிருஷ்ணன். இவரைத்தான் அகில ரசாம்ருத மூர்த்தி என்று ஸ்ரீரூப கோஸ்வாமி தம்முடைய நூலின் தொடக்கத்தில் ஒரு சுலோகத்தில் குறிப்பிட்டிருக்கிருர். கௌடிய வைஷ்ணவர்களின் இந்த ரசிக கொள்கை உபநிஷத்தில் உள்ள பரதத்துவத்தின் வளர்ச்சியே ஆகும். 'ரஸோவை ஸ'—உயர்ந்த உண்மை ரஸமே—என்று தைத்திரீய உபநிஷத்தில் வருகிறது. 'ரசமயமான உன்னுடைய அழகையும் வடிவத்தையும் காண்பிப்பாயாக!' என்று பிரம்மன்-பரமாத்மாவை உபநிஷத்தில் வேண்டுகிறது.

பாகவத புராணத்திலும் கௌடிய வைஷ்ணவ இலக்கியத்திலும் சிறப்பாகக் கூறப்படும் கிருஷ்ணன், உபநிஷத்தில் ரசத்தில் பிரம்ம–பரமாத்மாவை குறிப்பிடப் பட்டுள்ள தன் வளர்ச்சி நிலையின் கடைசிக் கட்டமேயாகும். பிரம்ம சம்ஹிதையின் 5-வது அத்தியாயத்தில் முதல் சுலோகத்திலேயே, பரிபூர்ணனை கிருஷ்ணனின் உண்மையான இயல்பு பற்றிய குறிப்பு இருக்கிறது. வேத காலத்திலிருந்த ஹிரண்யகர்பர்–உபநிஷத் காலத்திய பிரம்மம்–பொதுவான விஷ்ணுவின் தெய்வ அம்சம்–ஆகிய எல்லாவற்றையும் கிருஷ்ணனிடம் கௌடிய வைஷ்ணவர்கள் ஏற்றிக்கொண்டுள்ளார்கள். ஸ்ரீசநாதன கோஸ்வாமியின் 'பிருஹத் பாகவதாம்ருதம்' ஸ்ரீஜவி எழுதிய 'சந்தர்ப்பம்', என்னும் நூல், ஸ்ரீரூபரின் 'லகு பாகவதாம்ருதம்', ஸ்ரீகிருஷ்ணதாச கவிராஜரின் 'சைதன்ய சரிதம்' ஆகிய கௌடிய வைஷ்ணவ நூல்களில் பல்வகையான தெய்வ அம்சங்களைப்பற்றியும் கடைசியில் அவை பரிபூர்ணமான கிருஷ்ணனிடம் அமைவதையும் குறித்து விரிவாகக் காணலாம். வேதம், வேதாந்தம் இவற்றின் இறுதி லட்சியமே நான் என்று கீதையில் கிருஷ்ணன் கூறுகிறார். வேதத்தின் இறுதி லட்சியமே பரிபூர்ணமான கிருஷ்ணனே என்னும் இந்தக் கருத்தையே கௌடிய வைஷ்ணவ இலக்கியங்கள் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. பரம்பொருளான பகவானே, வெற்றிக் கடவுளான விஷ்ணுவாகவும் இன்பக் கடவுளான கண்ணனாகவும் தோன்றுகிறார். எல்லாத் தெய்வ அம்சங்களுக்கும் அவதாரங்களுக்கும் ஆரம்ப ஆதாரமாகக் கிருஷ்ணனே கொண்டாடப் படுகிறார்.

**கௌடிய வைஷ்ணவரீதியான பக்தியின் நோக்கம் :—** பொதுவாகப் பரம்பொருளான பகவான், மாதுரிய நிலையில் கண்ணனாகவும், ஐஸ்வர்ய நிலையில் ஸ்ரீநாராயணனாகவும் விளங்குகிறார். கௌடிய வைஷ்ணவ பக்தனின் சிறந்த தனித் தன்மை வாய்ந்த பக்திக்குக் காதல் தெய்வமான கண்ணனே லட்சியமாக இருக்கிறார். சூட்சும உலகின் கீழ்ப்பகுதியில் கோலோகம் என்னும் பரவியூமோவில் ஸ்ரீநாராயணன் ஆட்சி செலுத்துகிறார். இந்தக் கோலோகம் விரஜைக் கடலின் மறுபுறத்தில் பிரம்ம லோகத்தால் சூழப் பெற்றிருக்கிறது. இந்த விரஜையே விவகார உலகத்திலிருந்து சூட்சும

உலகத்தைப் பிரிக்கிறது. கோ லோகத்தின் மேற்பாகமே கிருஷ்ண னின் ராஜ்யமான கிருஷ்ண லோகம். இது மேலும் இரண்டு பிரிவு களாக உள்ளன. ஒன்று, பிருந்தாவனம்; மற்றொன்று துவாரகை, மதுரை என்னும் இரண்டு நகரங்கள்.

பிருந்தாவனத்தில் தெய்விகக் காதலின் லீலைகள் முழுவதையும் காணலாம். பரம் பொருளின் சுயம் ரூபமான, கிருஷ்ணன், கண் ணன் வடிவுடன் எல்லாவிதமான அழகுகளை ரூபங்களையும் கவரு கிருன். வைபவங்கள் பிரகாசத்துடன் இருக்கும்போது பல தேவனுகவும் வைபவ விலாசத்தில் மூல சங்கர்ஷனுகவும் தோற்றம் தருகிருர். பலதேவரும், நாராயணரும் தங்களுடைய விலாசத்தால் சதுர்வ்யூக நிலையில் இருப்பார்கள்.

இந்த உலகத்தின் படைப்புக்குக் காரணமான காரண-விஷ்ணு நாராயண அல்லது மகா சங்கர்ஷணரின் பாதித் தோற்ற றமே பகவானின் ராஜ்யத்தில் மிக உயர்ந்த தீவிர காதலுக்குரிய இடமாகப் பிருந்தாவனமே கருதப்படுகிறது. அங்கேதான் தெய்விக ஆயனுன கண்ணன் தன் காதல் லீலைகளைச் செய்து ஆனந்தத்தில் திளைத்திருக்கிருன், (லகு பாகவதாம்ருதம், பூர்வ காண்டம் 165).

க்ஷத்திரியனுன கிருஷ்ணன் மதுரையிலும் துவாரகையிலும் மன்னனுக ஆட்சி செலுத்தும் போது பிரபுவின் தன்மையில் உள்ள கண்ணனிடத்தில் காதல் தணிந்திருக்கிறது (சை. ச. 20. 176/178) துவாரகையில் கண்ணனிடத்திலும் சரி, பரவியூமோவில் நாராய ணனிடத்திலும் சரி, காதல் முழு உருவில் நிலவியிருக்காது. அந்த இடங்களில் கல்யாணமான மனைவிகள், பிரபுவான கிருஷ்ண னுக்குப் பணிவிடை செய்துகொண் டிருப்பார்கள். அங்கே அவர் களுடைய காதலும் கட்டுண்டிருக்கும்.

கௌடிய வைஷ்ணவர்களின் கோட்பாட்டின்படி, ஜீவன் களின் இன்பத்தை நாடி, பரமாத்மா இடைவிடாமல் வேட்கையுற்றி ருக்கும். பரமாத்மாவுக்கு எவ்விதத் தேவையோ ஆசையோ இருக் கக்கூடாது என்பது உண்மைதான். ஆனுல் அவனுடைய லீலா விநோதத்தால் அவன் அவ்விதம் விரும்புகிருன். எனவே, பக்தர்கள்

மேலும் முன்னேறி, சூட்சும காதல் உலகமான பிருந்தாவனத்தில் என்றும் இளமையோடிருக்கும் கிருஷ்ணனையே கிருகஸ்திரீயின் காதலைப் போல, லட்சியமாகக் கொண்டிருப்பார்கள். அங்கேதான் பக்தி பூரண நிலையை அடைகிறது.

பிருந்தாவனத்தில் உள்ள எல்லாப் பக்தர்களிலும் ராதிகையிடமே கௌடிய வைஷ்ணவர்கள் மிக உயர்ந்த விசுவாசம் செலுத்துகிறார்கள். கிருஷ்ணனுக்குப் பணிவிடை செய்வதைவிட, ராதிகாவுக்குச் சேவை செய்வதையே அவர்கள் பெரிதும் விரும்புகிறார்கள். ராதையும் கிருஷ்ணனும் ஐக்கியமாவதற்கு இருந்த ராதையின் தோழிகளாகவே பக்தி நிலையில் ஆகிவிடுகிறார்கள். கௌடிய வைஷ்ண இலக்கியத்தில் ஒரு பகுதி, இந்த நிலையையே வர்ணிக்கிறது.

கிருஷ்ணனின் லீலைகள் :— கிருஷ்ணனின் லீலைகள் இந்த உலகத்திலும் சூட்சும உலகத்திலும் நிகழ்கின்றன. இந்த உலகத்தில் நிகழ்வதற்குப் பிரகத லீலை என்றும் சூட்சும உலகத்தில் நிகழ்வதற்கு அபிரகத லீலை என்றும் பெயர். கால தேச வரையறை இல்லாமல் கிருஷ்ணனுடைய குழந்தைப் பருவம், குமரப் பருவம், வாலிபப் பருவம் யாவும் சூட்சும உலகத்தில் எப்பொழுதும் நிரந்தரமாக இருக்கின்றன. இந்த அபிரகத லீலை, கிருஷ்ணனுடைய சுய விருப்பத்தாலேயே, பூவுலகிலும் பிரகத லீலையாகத் தொடர்கிறது. லீலைகள் பரவவேண்டும் என்றும் பக்தர்களின் அன்புக்காகவும் இவற்றைப் பகவான் செய்கிறார். இதுவே பிரகத லீலையின் பிரதானமான காரணமாகும். தம்முடைய பக்தர்களை, கொடிய அசுரர்களின் துன்பங்களிலிருந்து விடுவிப்பதற்காக லீலைகளை மேற்கொள்வது இரண்டாவது காரணமாகும். இந்தச் சமயங்களில் விஷ்ணுவே கிருஷ்ணனாக வருகிறார்.

இந்த அவதார லீலையும் இந்த உலகில் சாசுவதமானதாகும். சூரியன் நிலையாக நிற்கும்பொழுது உலகம் சுற்றிக்கொண்டேயிருக்கிறது. அதனால் அது சில சமயங்களில் சூரியனைப் பார்க்கிறது; சில சமயங்களில் பூமி சூரியனைப் பார்ப்பதில்லை. ஆனால் உண்மையில் சூரியன் உதயமாவதும் இல்லை; அஸ்தமனமாவதும் இல்லை. இதைப் போலவே பிரகதலீலை–உலகின் ஓரிடத்

தில் மறைந்தாற் போல இருந்தாலும் மறுபுறத்தில் தோற்றம் தரு கிறது. உலகின் ஓரிடத்திலிருந்து வேறு இடத்துக்குச் செல்வது பிரகத லீலையில் இயலும்; அபிரகத லீலையில் இந்த மாற்றம் கிடையாது.

பிரகத லீலையின் இறுதியில் கிருஷ்ணன் தன் பக்தர்களிட மிருந்து பிரிந்து சென்று விடுகிருன். ஆனல் அபிரகத லீலையில் எப்பொழுதும் தன் தோழர்களுடன் கிருஷ்ணன் விளங்குகிருன். இது அவனுடைய யோகமாயை (பரமாத்மா சந்தர்பம்) யால் நிகழ் கிறது.

பரம்பொருளின் உயர்ந்த நிலே மாதுர்ய ரஸம். பகவான் கிருஷ்ணன், மானிட வடிவிலும், துவாரகை, மதுரை போன்ற சூட்சும உலக நகரங்களிலும், அவனுடைய லட்சிய பிரதேசமான பிருந்தாவனத்திலும் உறைகிருன். அவனுடைய உடல் வரம்பற்ற ஆனந்த ரஸ மயமானது. அது பாலகிருஷ்ண வடிவில் ஆழ்ந்திருக் கும். ஐந்து விதமான உறவு முறையால் பணி விடைகளே ஏற்றுக் கொள்ளும். பகவானின் கணக்கற்ற பக்தர்கள் இந்த ஐந்து உறவு நிலேகளில் ஏதாவது ஒன்றைச் சார்ந்திருப்பார்கள்.

கௌடிய வைஷ்ணவ பக்தியின் லட்சியமே ரச மயமான கிருஷ்ணனின் வழிபாடாகும். இந்த ரசம் ஐந்து அம்சங்கள் கொண்ட போதிலும் பொதுவாகச் சிருங்காரம் என்றே குறிக்கப் பெறும். இது முக்கியமாக, சம்போகம், விப்பிரலம்பம் என்று இரு வகைப்படும். சம்போகம் என்பது கிருஷ்ணனே அடைந்து அதனுல் உண்டாகும் ஆனந்தம். விப்பிரலம்பம் என்பது கிருஷ்ணனேப் பிரிந்ததினுல் உண்டாகும் விரகதாபம். கௌடிய வைஷ்ணவர்கள் விப்பிரலம்பத்தையே விரும்பி வருகிருர்கள்.

பக்தனின் உள்ளத்தில் தோன்றும் உத்வேகத்தைப் பொறுத்து, பக்தி இரு வகைப்படும். பக்தி நூல்களேப் படித்து அதன்படி கிரமமாக நடந்து அதன் விளேவாக இறைவனிடம் காதல் தோன்று வது ஒன்று. அதற்குப் பெயர் 'வைதி.' எவ்விதப் புறத் தூண்டுதலோ காரணமோ இல்லாமல், எவ்விதச் சுயநலமும் இன்றி இயற்கை யாகவே எழுவது 'ராகநுக-பக்தி' கௌடிய வைஷ்ணவர்களின்

உயர்ந்த வகையான பக்தி இதுவே. இறைவனிடம் அவர்களுக்கு இயற்கையாகவே பக்தி ஏற்படுகிறது இத்தகைய காதல் மிகவும் அபூர்வமாக வெகு சிலருக்கேதான் அமையும். எனவே 'வைதி–பக்தி' முறையை முதலில் பின்பற்றிக்கொண்டு, 'ராகாநுக பக்தி' தோன்றுவதற்காக உள்ளத்தைப் பக்குவப் படுத்திக் கொள்ள வேண்டும்.

கிருஷ்ணனிடம் உள்ள சிரத்தையிலிருந்துதான் பக்தி தோன்றுகிறது. இத்தகைய சிரத்தை தோன்றியவன் பூரண பக்திக்கான 64 முறைகளைக் கற்றுக் கொள்வதற்காகத் தன்னைவிட உயர்ந்த பக்தர்களை நாடுவான். இந்த 64 முறைகளில் முதன்மையானது முதலில் தன்னை ஓர் ஆசார்யனிடம் சமர்ப்பித்துக் கொள்வது (குரு பாதாச்ரய) எல்லோருமே 64 முறைகளையும் மேற்கொள்ள வேண்டும் என்று கட்டாயம் இல்லை. இந்த முறைகளை 9 ஆகவும் பின்னர் ஐந்தாகவும் சுருக்கி யிருக்கிறார்கள்.

1. சாதுக்கள், பக்தர்கள் ஆகியோர்களுடைய சூழ்நிலையிலும் சுற்றுப்புறத்திலும் இருந்து அவர்களுடன் பழகுவது.

2. கிருஷ்ணனின் நாமத்தை எப்பொழுதும் சொல்லிக் கொண்டே இருப்பது.

3. பாகவதத்தைக் கேட்டு அதில் சொல்லியிருக்கும் உண்மைகளையும் தத்துவங்களையும் உணர்ந்து கொள்வது.

4. மதுரையில் வசிப்பது

5. தீவிர நம்பிக்கையுடன் விக்கிரகங்களுக்கு வழிபாடு செய்வது.

இந்த ஐந்து செயல்களையும் கூடச் செய்ய இயலாதவர்கள் ஸ்ரீகிருஷ்ணனின் நாம ஜபம் செய்தால் போதும். இப்படி கிருஷ்ண நாமம் சொல்லும் போது கடுமையான 10 குற்றங்களைப் புரியக் கூடாது. பக்தி நம் உள்ளத்தில் ஊன்றி வளருவதற்கு, தர்ம நூல்களில் விலக்கியுள்ள செய்யத் தகாத சில காரியங்களைச் செய்யக் கூடாது. பெண்களுடன் தகாத நட்பு கொண்டவர்கள், கிருஷ்ணனிடம் நம்பிக்கை இல்லாதவர் ; அவனிடம் வெறுப்பு உள்ளவர்கள்

கர்மவாதிகள் ஞான மார்க்கத்தைப் பயில்பவர்கள் இவர்களையும் விலக்கிவிட வேண்டும். இந்தச் சாதனைகளின் காரணமாக எல்லாப் பாவங்களும் அழுத்தப்படுகின்றன; உலக பந்தங்களும் பற்றுக்களும் அகலுகின்றன. பின்னர் பக்தி, கிருஷ்ணனின் நாமத்தைக் கேட்கும் போதோ சொல்லும் போதோ மெய் சிலிர்க்கக்கூடிய ருசி நிலையை அடைகிறது. இதற்கு அடுத்த பக்திநிலை கிருஷ்ணனிடம் பற்று ஏற்படும் கட்டம். இதனைத் தான் சாதன பக்தி என்று சொல்லுகிறார்கள். பின்னர் பாவநிலை, ரதி, பிரிதி என்று சொல்லும் இறைவனிடம் கொள்ளும் ஆத்மிகக் காதல் நிலை. இந்த நிலையில் எவ்விதக் களங்கமும் இராது; முழுக்க முழுக்க இது ஆத்மிகமானது. இந்தப் பாவநிலை ஏற்படுவதற்கு முன்பு அந்தப் பக்தன் கீழ்க்காணும் மனநிலைகளை அடையவேண்டும்,

1. சாந்தி

2. அவியர்க்த காலம்—கடவுளைத் தவிர வேறு எந்த விஷயத்திலும் நேரத்தைக் செலவிடாதிருத்தல்.

3. விரக்தி—உலக காரியங்களில் பற்றின்மையும் வெறுப்பும் ஏற்படுவது.

4. மன சூன்யதா–சுய மதிப்பையோ கௌரவத்தையோ கருதாமல் இருப்பது.

5. ஆஷாவந்த—கடவுளின் கருணையில் பூரண நம்பிக்கை வைப்பது.

6. சமுத்காந்தா—இறைவனின் கருணையை நோக்கித் தீவிரமாகக் காத்திருப்பது.

7. நாம கான சதா ருசி—எப்பொழுதும் கிருஷ்ணனின் நாமத்தைப் பாடுவதிலேயே விருப்புடன் இருப்பது.

8. ஆசக்தி தத் குண வியாக்யானே—இறைவனின் புகழைப் பாடுவதில் உற்சாகம் கொள்வது.

9. பிரிதி தத் வாசஸ்திலே—இறைவன் உறையும் புனிதமான இடங்களில் வசிக்க வேண்டும் என்று ஆவல் கொள்வது. இந்தப் பாவ பக்தி நிலை மெல்ல மெல்ல ஊன்றி, பிரேம பக்தியாக மாறும்.

ஐந்து வகையான ரசங்களுக்கு ஏற்ப, அந்த அந்த பாவ நிலையில் பக்தர்கள் கிருஷ்ணனுக்குப் பணிவிடை செய்து அன்பு செலுத்து வார்கள்.

1. சாந்த–ரதி : உலக பந்தங்கள் எல்லாவற்றிலிருந்தும் விலகி, இறைவனிடம் பற்றும் பாசமும் நீங்காதவர்களாய், கிருஷ்ண னிடம் நம்பிக்கை வைத்து, சதா அவனையே நினைத்துக் கொண்டிருப் பவர்கள். இத்தகைய பக்தர்களுக்கு உதாரணம் சனகர், நவ யோகேந்திரர்கள் மற்றவர்கள்.

2. தாஸ்ய–ரதி : சித்ரகர், பத்ரகர் என்னும் இரண்டு பக்தர்களைப் போல, ஸ்ரீகிருஷ்ணனை எஜமானராகக் கருதி, அவருக்கு அவ்வப்போது வேண்டிய பணிவிடைகளைச் செய்வது.

3. சாக்கிய ரதி : ஸ்ரீகிருஷ்ணனை நண்பனாகக் கருதிப் பக்தி செலுத்துவது குசேலர் ; அர்ஜுனன்.

4. வாத்சல்ய ரதி : ஸ்ரீகிருஷ்ணனைத் தெய்விகக் குழந்தை யாக எண்ணி, அவனிடம் அன்பு செலுத்திப் பணிவிடை செய்யும் பக்திநிலை—நந்தன், யசோதை போன்றவர்கள்.

5. மதுர அல்லது உஜ்வல ரதி: ஓர் பெண் ஆடவனைக் காத லிப்பது போல் இறைவனைக் காதலனாகக் கருதி அவனிடம் மாறாகக் காதல் கொள்ளும் பக்தி நிலை.

பக்தியின் மிக உன்னதமான, சிகரம் போன்ற இந்த வளர்ச்சி நிலையைக் குறித்தே கௌடிய வைஷ்ணவ இலக்கியத்தில் அதிக மாகக் காணலாம். இந்தப் பகுதியே மிகவும் ரம்யமானது.

இந்த ஊஜ்வல ரதி நிலை இரண்டு வகைப்படும். பகவான் கிருஷ்ணனிடம் மிக அருகே நெருங்கிச் செல்லத் தடையாக உள்ள கௌரவம், மதிப்பு எதையும் லட்சியம் செய்யாத காதல் கேவல–ரதி. இந்தப் பக்தி நிலைக்கு, கிருஷ்ணனிடம் காதல் கொண்ட விரஜை யின் கோபிகைகளைச் சொல்லலாம்.

2. ஐஸ்வர்ய–மிஸ்ர ரதி–இது கிருஷ்ணனிடம் மதிப்பும் மரி யாதையும் வைத்துக்கொண்டு காதல் கொள்வது. துவாரகையிலும்

மதுரையிலும் வசித்த பக்தர்கள் இந்த முறையில் தான் கிருஷ்ண னிடம் பக்தி செலுத்தினுர்கள்.

பாவ நிலையிலிருந்து பிரேம நிலைக்கு மாறும் பக்தியைப் பிரேம பக்தி என்று சொல்வார்கள். கிருஷ்ணனிடம் பல்வேறு நிலையில் பக்தர்கள் பக்தி கொள்வார்கள். இந்த ஐந்து பக்தி நிலையையும் ஸ்தாயி பாவம் என்று குறிப்பிடுவார்கள். பிரேம பக்தி நிலையிலேயே சாந்த ரதி நின்றுவிடுகிறது. தாஸ்ய, சாக்ய, வாத்சல்ய, ஊஜ்வல மாதுர்ய நிலைகள் ராகத்தை நோக்கிச் செல்கின்றன. தாஸ்ய ரதி, ராகத்தைக் கடந்து செல்லாது. ராக நிலையில் ஊஜ்வல பாவத்தில் உள்ள பக்தன், பகவானை விட்டுச் சுற்றும் பிரிந்திருப்பதைத் தாள மாட்டான். மற்ற நிலையில் உள்ளவர்களும் இதைப் போலவே தான் கிருஷ்ணனை விட்டு இமைப்பொழுதும் நீங்குவதைச் சகித்துக் கொள்ள இயலாதவர்கள்.

ராகத்திலிருந்து அநுராக நிலையை அடையும்போது ஸ்ரீகிருஷ் ணன் எல்லையற்ற வனப்புடன் திகழுவான். சாக்ய, வாத்சல்ய நிலைகள் இங்கேயே நின்று விடுகின்றன. ஊஜ்வல ரதி நிலை கிருஷ்ணனை மணந்த மனைவியர்களின் பாவம் வரையில் செல்கிறது. கோபிகைகளின் ஊஜ்வல-மாதூர்ய ரதி இன்னும் ஒருபடி சென்று அதிருத மகாபாவ நிலையை அடைகிறது. இதற்குச் சிறந்த உதார ணம் கண்ணனிடம் ராதை கொண்ட காதல் நிலை.

இந்தக் காதல் நிலையைப் பற்றி இங்கே விவரிக்க இயலாது. அதிருத மகாபாவம் இருவகைப்படும்.

1. மதன நிலை: கிருஷ்ணனின் எதிரே இருக்கும்போது தோன்றும் பல்வகையான தோற்றங்கள்.

2. மோகனம்; கிருஷ்ணனை விட்டுப் பிரிந்து தவிக்கும் கோபிகைகளின் மன நிலை. இந்த நிலையில் இரண்டு பிரிவுகள்

1. பத்து வகையான சித்திரஜல்பம்.

2. திவ்யோன்மத்தம் என்னும் உத்குர்ண நிலை. இந்த நிலை யில், கிருஷ்ணனைப் பிரிந்ததால் பக்தன் பைத்தியம் பிடித்தது போன்று தீவிர வேதனைகளை அநுபவிப்பான். கிருஷ்ணனுடன்

ஐக்கியமாக வேண்டும், என்ற பக்தனுடைய தீவிர உணர்ச்சியைக் கட்டுப்படுத்த இயலாமல், தன்னுடைய உணர்ச்சி நிறைந்த காதலைத் தணிப்பதற்காக தன்னையே கிருஷ்ணனுகக் கருதி, தன் காதலியை அநுபவிப்பது போல ஒரு பிரமையை வரவழைத்துக் கொள்ள நேரிடும். ஸ்ரீசைதன்யர் தம்முடைய கடைசி வருஷங்களில் உத்குர்ண, சித்ர ஜல்ப என்னும் இரண்டு நிலைகளிலும் இருந்திருக்கிருர். பாகவதம் கோபிகைகளின் வாயிலாக, சித்ர ஜல்பத்தைப் பற்றி வர்ணித்திருக்கிறது.

சாந்த, தாஸ்ய முதலான ஐந்து அம்சங்கள் கொண்ட ரதி, ஸ்தாயிபாவ காதலாகும். பாவ பக்தியிலிருந்து மகாபாவ நிலையை அடைவதற்கு இதற்கு மேலும் சில தூண்டுதல்கள் அவசியமாக இருக்கின்றன. கட்டித் தயிரில் இனிமை சேர்க்கச் சர்க்கரையுடன் கருமிளகும், பச்சைக் கர்ப்பூரமும் சேர்ப்பது போல மகா பாவ நிலையை அடையச் சில கருவிகள் வேண்டியிருக்கின்றன.

கிருஷ்ணனின் காதல் மிகுவதற்கான இவை விபவம், அநுபவம், சாத்விகம், வியபிசாரிகம் என நான்கு வகைப்படும். விபவத்தில் இரண்டு பிரிவுகள். 1. ஆலம்வன, உத்திபன.

ஆலம்வன என்பது விஷய ஆலம்வன, அதாவது காதலிக்கப் பெறுபவராகிய கிருஷ்ணன், ஆச்ரய ஆலம்வன, காதல் தோன்றும் பக்தன் என்று இரண்டு வகைப்படும். காதல் தோன்றுவதற்கு இரண்டு ஆலம்வனங்களும் அவசியமாக இருக்க வேண்டும்.

கிருஷ்ணனுடன் தொடர்புள்ள லீலைகள், செயல்கள், குழல், சங்கீதம் போன்றவற்றின் தொடர்புகளால ஏற்படும் விளைவுகள் கிருஷ்ணனிடம் காதலைத் தோற்றுவித்து மிகுவிக்கும்.

உள்ளத்தில் ஏற்படும் காதல் நிலையை வெளிப்படுத்தும் ஆடல் பாடல் முதலிய 13 பிரிவுகளாக அநுபவத்தைப் பிரித்திருக்கிருர்கள்.

3. சாத்விகம்: இதில் வெளிப்படையாகத் தெரியும் இயல்புகள் எட்டு. பகவான் கிருஷ்ணன் எதிரே இருக்கும்போது மயக்கம், வியர்வை, துடிதுடிப்பு, கம்மிய குரல், உடம்பு நிறம் மாறுவது, நடுக்கம், கண்ணீர், மூச்சு சிறிது நேரம் நிற்பது. ஆகிய மெய்ப்பாடுகள் தோன்றும்.

4. வியபிசாரிகம் : கிருஷ்ணனின் பிரிவால் விரகதாபத்தில் இருக்கும்போது சொல்லாலோ செயலாலோ காதல் நிலை தெரிவது. இது 33 வகைப்படும் :—

1. தன்னையே இழிவாக பேசுவது, 2. மனத் தளர்ச்சியடைவது 3. விநயம், 4. தன்னையே வைது கொள்வது, 5. களைப்பு, 6. கர்வம், 7. பெருமிதம், 8. கவலை, 9. பயம், 10. இருதய தாபம், 11. ஆவேசம், 12. உடம்பு இழுத்துக் கொள்வது, 13. உடல் நலக்குறைவு, 14. தீர்மானத்துக்கு வரும் சக்தியை இழப்பது, 15. சாவை அடையும் ஆசை, 16. சோம்பல், 17. மயக்கம், 18. வெட்கம், 19. மனத்தில் உள்ளதை மறைக்க முயலுதல், 20. பழைய சம்பவங்களை நினைத்துப் பார்த்துக் கொண்டு இருப்பது 21. தர்க்கம் செய்வது, 22. எதிரொலிப்பது, 23. பிடிவாதம், 24. அமைதி, 25. சிரிப்பு, 26. விநோதமாக இருப்பது, 27. பயங்கரமாக இருப்பது, 28. பொறுமை இல்லாமல் இருப்பது 29. வெறுப்பு, 30. சலனபுத்தி, 31. தூக்கம், 32. சோர்வு 33. சதா விழித்திருப்பது.

பக்தியின் சாதாரண அடிப்படையிலிருந்து, மகாபாவ நிலையில் வைஷ்ணவ பக்தன் விரஜையின் கிருஷ்ணனுகிய பகவானுடன் தொடர்பு கொள்ளும்போது ஏற்படும் மெய்ப்பாடுகள் வரையில் இறைவனிடம் கொள்ளும் பக்தியின் வளர்ச்சியைப் பற்றிய முக்கியமான அம்சங்கள் எல்லாவற்றையும் மேலே விளக்கியிருக்கிறேம்.

# ஸ்ரீசைதன்யாவின் பிரமாண ஸ்லோகங்கள்

"கலே: பிரதமசந்தியாம் கௌராங்குஹம் மஹீதலே|
பாகிரதீதடெ ரம்யெப் விஷ்யாமி ஸசீ ஸுத: "

—பாத்ம புராணம்

"அஜாயத் வமஜாயத்வம ஜாயத்வம் ந ஸம் சய:
கலௌ ஸங்கீர்தனரம்பே பவிஷ்யாம ஸசீ ஸுத: "

—பவிஷ்ய புராணம்

"கோலோகஞ்ச பரித்யக்தா லோகாநாம் பரித்ராண காரணாத்
கலௌ கௌராங்க–ரூபேண லீலாலாவண்ய விக்ரஹம் "

—மார்க்கண்டேய புராணம்

"ஆஸன வர்ணாஸ்த்ர யொஹஸ்ய கிருண தொஹனுயுகம் தனு:
சுக்லொரக்த ஸ்ததா பீத இதானீம் கிருஷ்ணதாம் கத: "

—தசம ஸ்கந்தம் ஸ்ரீமத் பாகவதம்

ஸ்வர்ணதி–தீரமாஸ்தாய நவதீபே ஜனலயெ
தத்த்விர ஐகுலெ பிராப்தெ ஜநிஷ்யாமி–நிஜால யெ ||
பக்தியோக–பிரதானய லோக ஸ்யானு கிரஹாயச |
ஸந்யாஸி ரூபமா ச்சிரத்ய கிருஷ்ண சைதன்ய–நாமத்ரிக் ||

—ப்ருஹத வாமன புராணம்

"கோபாலம் பரிபாலநாய விரஜ புரெ லோகான
வஹன தாபரெ |
கௌராங்க: பிரயகீர்தன: கலியுக சைதன்ய நாமா ஹரி. "

—நரஸிம்ஹ புராணம்

"அஹம் பூர்ணெ வவிஷ்யாமி யுகஸந்தெள விசேஷத:
மாயாபுரெ நவத்வீபெ வாரமேகம் ஸசீ ஸுத:॥

—ஜாமல ।

"கிருஷ்ண வர்ணம் த்விஷா கிருஷ்ணம்
ஸாங்கொபாங்காஸ்தர பார்ஷதம்

—11 ஆம் ஸ்கந்தம், ஸ்ரீமத் பாகவதம்

தர்மஸ்மஸ்தாப நார்தாய விஹரிஷ்யாமி தைரஹம்
காலே நஷ்டம் வக்திபதம் ஸ்தாப யிஷ்யாமஹம் புன: ॥
கிருஷ்ண சைதன்ய கெளராங்கோ கெளர சந்த்ர: ஸசீ ஸுத: ।
பிரபு கெளரஹரி கெளரோ நமாமி பக்திதானி மே"

—அநந்த ஸம்ஹிதா ।



